# பதிப்புரை

நற்றமிழ் வளர்த்த நாவலராக, இக்கால நக்கீரராக விளங்கியவர் ச. சோமசுந்தர பாரதியார்! அவர்தம் பெயரால் தோற்றுவிக்கப் பெற்றதே எங்கள் 'நாவலர் புத்தக நிலையம்.'

இந்நிலையத்தின் முதல் வெளியீடாகச் 'சோழ குலவல்லி' என்னும் வரலாற்று நவீனத்தை வெளியிடுவதில் பெருமையடைகின்றோம். இந்நவீனம் 'குறிஞ்சி' இதழ் வாயிலாக, ஆயிரக்கணக்கான வாசகர்களின் உள்ளங்களைக் கவர்ந்த சிறப்புடையது. 'தென்பாண்டிவீரன்' முதலான சுவைமிக்க நவீனங்களைப் படைத்த திரு. ப. நெடுமாறன், எம். ஏ., சோழர், குந்தளர் ஆகியோரின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு, கற்பனைச் சுவையுடன் சோழ குலவல்லியை உருவாக்கியுள்ளார். இதனை வெளியிடும் உரிமையை எங்கட்கு அளித்த ஆசிரியர் திரு. ப. நெடுமாறன் அவர்கட்கு எங்கள் நன்றி உரியது.

தமிழ்ப் பெருமக்கள், சிறப்பாக நூல் நிலையத்தினர், கல்வித் துறையினர் இந்நூலை வாங்கி எங்கட்கு ஆதரவு நல்குமாறு வேண்டுகின்றோம்.

பசுமலை, நாவலர் புத்தக நிலையத்தினர்

28–11–1966

# முன்னுரை

கங்கை முதல் குமரி வரையிலும் அதற்கப்பால் ஈழம், காழகம், கடாரம், ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்கா சோகம், பப்பாளம், இலிம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், தமாலிங்கம், இலாமுரி தேசம், நக்கவாரம் ஆகிய கடல் கடந்த நாடுகளிலும் புலிக்கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்த வேளை. பல்லவரின் எருதுக்கொடியும் பாண்டியரின் கயற்கொடியும், சேரரின் விற்கொடியும் புலிக்கொடிக்குத் தாழப் பறந்து கொண்டிருந்தன. பணிய மறுத்த இராட்டிரகூடப் பேரரசு இருந்த இடம் தெரியாமல் அழிக்கப்பட்டது. பொங்கி வரும் பெருவெள்ளம் போல் தங்கு தடையின்றி எங்கணும் சோழப் பேரரசு விரிந்து பரந்து ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த வேளை.

அந்த வேளையில் சோழர் ஆதிக்கத்தை எதிர்த்து ஒருவன் போர்க்குரல் எழுப்பினான். நாடு, நகரங்களை இழந்த போதிலும் காடுகளிலும் மலைகளிலும் தங்கிச் சோழப் படையை எதிர்த்து இடையறாது இருபதாண்டுக் காலத்திற்கு மேலாகப் போரிட்டான்.

குந்தள குலத்திற்கும்— சோழ குலத்திற்கும் இடையே ஏற்பட்ட இந்தப் பகையைத் தீர்க்கப் பிறந்தாள் ஒருத்தி. தீராத வெம்பகை தீர, நாட்டில் அமைதி நிலவ அந்தத் தியாகவல்லி தந்த விலை மிகப்பெரிது, மிகப்பெரிது.

வரலாறும் இலக்கியமும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து நெஞ்சையள்ளும் நிகழ்ச்சிகளாக உருவெடுக்கின்றன. இந்தக் கதை உங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டால் அந்தப் பெருமை, வரலாற்றுச் சிறப்பு மிக்க கதாபாத்திரங்களையே சாரும். இந்தக் கதையிலே வரும் பெரும்பாலான கதாபாத்திரங்கள் கல்வெட்டுக்களிலும் காவியங்களிலும் அழியாத இடம் பெற்றிருப்பவர்கள். அவர்களைச் சந்திக்கத் துடித்துக் கொண்டிருக்கும் உங்களுக்கு இடையே நிற்க நான் விரும்பவில்லை. மேலே படியுங்கள்.

வரலாற்று உண்மைகளை மையமாகக் கொண்டு கற்பனையையும் கலந்து இந்தக் கதையை எழுதினேன். 'குறிஞ்சி' இதழில் இக்கதை தொடர்ந்து சுமார் ஒன்றரையாண்டு காலமாக வெளிவந்தது. வாசக நண்பர்கள் அவ்வப்போது எழுதிய பாராட்டுக் கடிதங்களின் மூலம்

இக்கதை அவர்களின் உள்ளங்களைக் கவர்ந்தது என்பதையறிந்தேன்.

பின்னர் நூல் வடிவில் இதனை வெளியிட எனது இனிய நண்பர் திரு. ச. சாம்பசிவம் அவர்கள் கேட்ட போது தட்டாமல் தந்தேன். தமிழ்காத்த நாவலர் திரு. சோமசுந்தர பாரதியார் அவர்களின் நினைவாகத் தோற்றுவிக்கப்பட்டிருக்கும் 'நாவலர் புத்தக நிலையத்'தின் வெளியீடாக இந்நூல் வெளிவருவது குறித்து மிகவும் மகிழ்கிறேன். எனக்கு அளிக்கப்பட்ட பெருமையாக இதனைக் கருதி அதன் உரிமையாளர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாய்க்குப் பின் தாயாக இருந்து என்னை வளர்த்தும் என் எழுத்தார்வத்தை ஊக்குவித்தும் வரும் எனது அன்புத் தமக்கையார் திருமதி. ச. உமையபார்வதி அவர்களுக்கு இந்நூலை அன்புக் காணிக்கையாக்குகிறேன்.

மதுரை, ப. நெடுமாறன்

24–11–1966.

# முதற்பாகம்
# தென்றல்
## 01. சோழகங்கம்

மேலைக் கதிரோனின் பொன்னொளியில் அந்த மாபெரும் ஏரியைக் காண நேரும் யாவரும் வியப்பினால் ஒருகணம் திகைத்துப் போவர். கண்ணிற்கெட்டிய தூரம் வரை வெறும் நீர்ப்பரப்பே காணப்பட்டது. அலைமாகடலென நிலையில்லாது அந்த ஏரி தத்தளித்துக் கொண்டிருந்தது. பொங்கியெழுந்த பேரலைகள் ஒன்றன்பின் ஒன்றாகத் திரண்டெழுந்து வந்து ஏரிக்கரையிலே மோதிச் சிதறின. பூம்புகாரைக் கொள்ளை கொண்ட கடலரசி பொங்கியெழுந்து கங்கைகொண்ட சோழபுரத்தையும் அள்ளியெடுத்துச் செல்ல வந்துவிட்டாளோ எனக் கண்டோர் ஐயுறும் வண்ணம் அந்தப் பேரேரி அலை வீசிக் கொண்டிருந்தது. அவ்வேரியின் கரைகள் நெடிதுயர்ந்து குன்று போல் நின்றன. ஏரிக்கரை நெடுகிலும் வளர்ந்தோங்கிய மரங்கள் நின்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

இந்த ஏரி வெட்டுவிக்கப்பட்டவிதமே ஒரு வரலாறாகும். “கங்கா நதியும் கடாரமும் கைக்கொண்டு சிங்காதனத்திருந்த செம்பியர்கோன்” எனக் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரால் வியந்துரைக்கப் பெற்ற வீரமன்னனான இராசேந்திர சோழன் தான் அடைந்த மாபெரும் வெற்றிகளின் நினைவாக அது வரை மன்னர் எவரும் எழுப்பியிராத நினைவுச் சின்னம் ஒன்றினை நிறுவத் திட்டமிட்டான்.

மன்னர்கள் தமது வெற்றியின் அறிகுறியாகக் கல்லாலும், மணியாலும், பொன்னாலுமான வெற்றித் தூண்களையே நிறுவுவது வழக்கம். ஆனால் மண்டலம் பல கைக்கொண்ட இந்த மாமன்னன் விந்தையான வெற்றித்தூண் ஒன்றினை நிறுவினான். இவனது மெய்க்கீர்த்தியைக் கூற வந்த திருவாவலங்காட்டுச் செப்பேடுகள் ‘நீர்மயமான வெற்றித்தூண்’ ஒன்றை இம்மன்னன் நிறுவினான் எனக் கூறுகின்றன.

குமரி முதல் கங்கை வரை தடை பல கடந்து படை நடாத்திக் களம் பல வென்ற இவ்வீரத்திருமகன் மாளவ நாட்டில் ஒரு

அதிசயத்தைக் கண்டான். இரு குன்றுகளுக் கிடையே போச மன்னனால் அமைக்கப்பட்டிருந்த ஏரியொன்றினைக் கண்டான். அவனது வீர உள்ளம் ஒருகணம் துள்ளிற்று.

அதன் விளைவாக மலைகளே இல்லாத சோழ வளநாட்டின் நிலப்பரப்பில் தென் வடக்காகப் பதினாறு கல் தொலைவிற்கு ஒரு மாபெரும் ஏரி எழுந்தது. குன்றனைய கரைகள் நாற்புறமும் சூழ்ந்து அதற்கு அரண் அமைத்தன. கங்கைக் கரையில் தன்னுடன் பொருது தோற்ற மன்னர்களின் தலையில் கங்கை நீர் நிறைந்த குடங்களை ஏற்றிக் கொணர்ந்து அவ்வேரியில் கொட்டுவித்துத் தனது வெற்றியின் சிறப்பைப் பாரறியச் செய்தான். கங்கை முதல் குமரி வரை பரந்து, அதற்கப்பால் ஈழம், காமுகம், கடாரம் வரை விரிந்து நீண்டிருந்த சோழப் பேரரசின் வெற்றிச் சிறப்பின் அறிகுறியாக அந்த ஏரிக்குச் 'சோழகங்கம்' எனப் பெயரிட்டான்.

சோழப் பேரரசின் வெற்றிச் செருக்கின் அழியாத சின்னமாக விளங்கிக் கொண்டிருந்த அந்த ஏரியின் மாலைத் தோற்றம் கண்டோரின் உள்ளங்களைக் கவர்ந்திழுத்துக் கொண்டிருந்தது. சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பெய்தாற் போல அந்த அழகிய காட்சிக்கு மேலும் அழகினை ஊட்டுவது போல ஓர் இனிய காட்சி அப்போது தென்பட்டது. கயல் துள்ளி விளையாடும் தெள்ளிய நீர்ப்பரப்பில் மெதுவாக அசைந்து ஒய்யாரமாக அழகிய அன்னமொன்று நீந்தி வந்து கொண்டிருந்தது. எழில் மிகுந்த இந்தக் காட்சியைக் காண நேரும் நமது இதயங்கள் ஒருகணம் செயலிழந்து நின்றுவிடுகின்றன. மாபெரும் ஏரியைத்தான் இம்மன்னன் எழுப்பினான்! இவ்வளவு பெரிய அன்னத்தை எங்கிருந்து பிடித்தான் என்பதை அறியாது நாம் திகைக்கின்றோம். சற்று அருகில் நெருங்கி உற்று நோக்குகின்றோம். ஆ! இப்போது உண்மை தெளிவாகப் புலப்படுகிறது. ஆம்! அது அன்னப் பறவையன்று! அதைப் போன்ற உருப்படைத்த அழகிய படகு என அறிகிறோம். ஏரி நீரில் ஒய்யாரமாக நீந்தி வரும் படகில் சில மடவன்னங்கள் அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் பூண்டுள்ள ஆடை ஆபரணங்கள் அவர்களை அரசகுலப் பெண்மணிகள் எனப் பறையறைந்து தெரிவிக்கின்றன. படகிலிருந்து இன்னிசையொலி எழுந்து ஏரிக் காற்றில் மிதந்து வந்து நமது செவிகளில் பாய்கின்றது. மெய்ம்மறந்து நிற்கிறோம். மயில் போன்ற சாயலாள் ஒருத்தி, தனது பவளச் செவ்வாயில் குழலைப் பொருத்தி இன்ப ஒலி எழுப்பிக் கொண்டிருந்தாள். மான் விழி

மங்கையொருத்தியின் செங்காந்தள் விரல்கள் முழவின் மீது நடனமிட்டுக் கொண்டிருந்தன. தேனார்மொழிப் பாவையொருத்தி யாழினைத் தனது தோளினில் சாய்த்து நரம்பினை மீட்டிய வண்ணம் சிலப்பதிகாரக் கானல் வரிப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தாள்.

**"திங்கள் மாலை வெண்குடையான்**
**சென்னி செங்கோல் அது ஓச்சிக்**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி.**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாது ஒழிதல் கயற்கண்ணாய்**
**மங்கை மாதர் பெருங்கற்பு என்று**
**அறிந்தேன் வாழி காவேரி.**
**மன்னும் மாலை வெண்குடையான்**
**வளையாச் செங்கோல் அது ஓச்சிக்**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாய் வாழி காவேரி.**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாது ஒழிதல் கயற்கண்ணாய்**
**மங்கை மாதர் பெருங்கற்புஎன்று**
**அறிந்தேன் வாழி காவேரி."**

பொன்னித் துறைவனை சோழ மன்னன் கங்கையையும் குமரியையும் கூடிய போதும் அவனுடன் ஊடிப் பிணங்காது கற்பெனும் பொற்புடன் சிறந்து விளங்கிய மங்கை நல்லாளாகிய காவேரியின் சிறப்பினைக் கூறும் கானல் வரிப் பாடல்களை அம்மங்கை பாடியதைக் கேட்டுக் கொண்டிருந்த மீனினங்கள் செயலற்றுப் போயின. வானத்தில் வட்டமிட்ட புள்ளினங்கள் அந்த இனிய கானத்தில் கட்டுண்டு மெய்ம்மறந்தன. வீசிய இளந்தென்றலும் சற்று நின்று கேட்டுச் சென்றது. மெதுவாக மறைந்து கொண்டிருந்த வெய்யோனும் அந்த இசையைப் பருகுவதற்காகவே தயங்கி நின்றவன் போலக் காணப்பட்டான்.

பாட்டு முடிந்தது. பாடியவள் தன் அருகில் அமர்ந்திருந்த மற்றொருத்தியை நோக்கினாள். அவளோ மேற்திசையில் மறைந்து கொண்டிருக்கும் கதிரோனை நோக்கிய வண்ணம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். முன்னவள் பின்னவளை நோக்கி "அக்கா" என அழைத்தாள்.

குரல் கேட்டுத் திரும்பிய மதுராந்தகி “பாடுவதை ஏன் நிறுத்திவிட்டாய்” என்றாள்.

“போங்கள் அக்கா! நீங்கள்தான் என் பாட்டைக் கேட்கவில்லையே” எனச் சிணுங்கினாள் முன்னவள்.

“அடி அசடே! மாங்குயில் கூவிடும் போது கேட்க மறுப்பவர் உண்டோ?”

“இப்படியெல்லாம் பேசி என்னை ஏமாற்றிவிட முடியாது. உண்மையில் உங்கள் உள்ளம் எங்கே போய் இருந்தது என்பது எனக்குத் தெரியும்” என்றாள் அந்தச் சின்னவள்,

இதைக் கேட்டதும் இளவரசி மதுராந்தகியின் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது. இருந்தாலும் அதை மறைத்துக் கொண்டு “அப்படியெல்லாம் உள்ளத்தை நெகிழவிடுபவள் நானல்லடி” என்றாள்.

“என்னிடமே மறைக்கிறீர்களே! உள்ளதைச் சொல்லிவிடட்டுமா” எனப் பயமுறுத்தினாள் மற்றவள்.

“மாதேவி, இதற்கெல்லாம் நான் அஞ்சமாட்டேன். எங்கே கூறு பார்க்கலாம்” என்றாள் மதுராந்தகி.

வீரமாதேவியின் விழிகளில் குறும்பு மிளிர்ந்தது. “அக்கா! உங்கள் உள்ளம் கங்கைகொண்ட சோழபுரத்தைக் கடந்து..” என நிறுத்தினாள்.

“ஏன் நிறுத்திவிட்டாய்? மேலே கூறு.”

“கடந்து, காற்றாகிய தேரில் ஏறி..”

“ஏறி எங்கே போய்விட்டது?”

“ஏறி, கடல் கடந்து கடாரம் சென்றுவிட்டது” என்று கூறிவிட்டுக் கலகலவென வீரமாதேவி சிரித்தாள். அவள் கூறியதன் உட்பொருளை உணர்ந்து கொண்ட அத்தனைப் பெண்களும் முல்லைப் பல்வரிசை காட்டி முறுவலித்தார்கள். நாணத்தால் சிவந்த தனது முகத்தைக் கரையை நோக்கித் திருப்பிய மதுராந்தகி “படகுத் துறையை நோக்கி யாரோ வருகிறார்களே” என்றாள். பேச்சை மாற்றவே அவள் அவ்விதம் கூறினாலும் உண்மையில் படகுத்

துறையை நோக்கி ஒருவன் விரைந்து வந்து கொண்டிருந்தான். படகு மெதுவாகக் கரையை நெருங்கிக் கொண்டிருந்தது.

# 02. கவி குமுதசந்திரன்

படகு கரையை நெருங்கிக் கொண்டிருந்தது. கரையில் காத்து நிற்பவர் யார் என்பது தெளிவாகப் புலப்பட்டது.

“அக்கா! அமுதத்தைத் தேடிக் குமுதம் வந்திருக்கிறது” என்றாள் வீரமாதேவி. படகிலிருந்த அத்தனைப் பெண்களும் கலகலவென நகைத்தார்கள். ஒருத்தியின் முகத்தில் மட்டும் செம்மை படர்ந்தது. போலிக் கோபத்துடன் அவள் மறுபக்கம் தலையைத் திருப்பிக் கொண்டாள்.

“மாதேவி! பார்த்தாயா அமுதவல்லியை! அவள் முகம் எப்படி வாடிவிட்டது” என்றாள் மதுராந்தகி.

“கரையில் இறங்கியவுடன் மலர்ந்துவிடும்” என்றாள் மாதேவி. மறுபடியும் அத்தனைப் பெண்களும் சிரித்தார்கள். படகும் துறையை அடைந்தது. கரையில் நின்ற கவி குமுதசந்திரனைக் கண்டதும் அந்தப் பெண்களின் சிரிப்பு இன்னும் அதிகமாயிற்று. தன்னைப் பார்த்து அந்தப் பெண்கள் சிரிப்பதைக் கண்ட குமுதசந்திரனின் திகைப்பு அதிகமாயிற்று. படகிலிருந்து இறங்கிய இளவரசி மதுராந்தகிக்கு அவன் வணக்கம் செலுத்தினான்.

“என்ன? குமுதசந்திரரே! வழக்கத்திற்கு மாறாக உமது முகம் மிகவும் மலர்ந்து காணப்படுகிறதே, மகிழ்ச்சிதரும் செய்தி ஏதேனும் உண்டா?” என வினவினாள் மதுராந்தகி.

“முழுமதியைக் கண்டால் குமுதம் மலர்வது இயல்புதானே! தங்களைக் கண்டதும்..” அவன் பேச்சை முடிப்பதற்குள் மாதேவி குறுக்கிட்டாள்.

“நிறுத்தும் கவிஞரே! வழக்கம் போலக் கூசாமல் பொய் பேசுகிறீரே! அக்காவைக் கண்டா உமது முகம் மலர்ந்தது?”

“பொய்யா! நானா! தேவி, பொய்யாமொழிப் புலவன் எனப் பெயர்பெற்ற என்னைப் பார்த்தா இவ்விதம் பொய்யன் எனக் குற்றம் சாட்டுகிறீர்கள்?”

“பொய்யாமொழிப் புலவனா? உமக்கு யார் அந்தப் பெயர் வைத்தார்கள்? வள்ளுவருக்கு அல்லவா அந்தப் பெயர் உரியது!”

“இல்லை தேவி! வள்ளுவருக்குப் பின்னால் எனக்கும் அது உரியதுதான். நமது வேங்கி இளவரசர் எனது புலமையை மெச்சி எனக்களித்த பட்டம் அது.”

“வேங்கி இளவரசர் உமக்குப் பட்டம் அளித்தாரா?”

“ஆமாம் தேவி! ஒருமுறை நானும் இளவரசரும் உலாவச் சென்றிருந்தோம். திடீரென அவர் இன்று மழை பெய்யுமா? எனக் கேட்டார். ஆம்! இன்று மழை பெய்யும் எனச் சட்டெனப் பதில் சொன்னேன். அன்று பாருங்கள்! உடனே மழை பெய்தது. வேங்கி இளவரசர் திகைத்துப் போனார். என் வாக்குப் பொய்க்காது என்பதை அவர் தெரிந்து கொண்டார்..”

“தெரிந்து கொண்டு உமக்குப் பொய்யாமொழி என்ற பட்டம் அளித்தாராக்கும்” என்றாள் மதுராந்தகி.

“மழை பெய் என்று இவர் கூறியவுடன் ஏன் மழை பெய்தது தெரியுமோ?” என மாதேவி கேட்டாள்.

“அது என்ன கதை?” என்றாள் மதுராந்தகி. குறும்புப் புன்னகையுடன் மாதேவி தொடர்ந்தாள்.

“தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை” என அந்தப் பொய்யாமொழி கூறிச் சென்றார். அதைப் போல இந்தப் பொய்யாமொழி என் தோழியை நித்தமும் தொழுது எழுகிறாரோ என்னவோ?” என்றாள்.

வீரமாதேவின் கதையைக் கேட்டு அங்கிருந்த அத்தனைப் பேரும் குலுங்கக் குலுங்க நகைத்தார்கள். தனது கோபத்தையும் மறந்து அமுதவல்லியும் சிரித்தாள்.

“இளவரசி! தாங்கள் இங்கிருப்பீர்கள் என்று தெரிந்தால்..” என இழுத்தான் குமுதசந்திரன்.

“வந்திருக்கவேமாட்டீர் இல்லையா. கேவலம் பெண்களைக் கண்டு நீர் பயப்படுகிறவர் என்பதால்தான் வேங்கி இளவரசர் உம்மைப் போர்க்களம் அழைத்துச் செல்லவில்லை போலிருக்கிறது” என்றாள் மாதேவி.

“இளவரசி! தங்கள் பேச்சின் சுவையில் வந்த காரியத்தை மறந்துவிட்டேன். இளவரசர் என்னைவிட்டுச் சென்றாலும் நான்

அவரைத் தேடிச் செல்ல முடிவு செய்துள்ளேன். தங்கள் அனுமதியைக் கேட்கலாம் என்றுதான் வந்தேன்.”

“என்ன? கடாரம் செல்லப் போகிறீரா?” என்றாள் மதுராந்தகி.

“ஆம்! இளவரசி! வேங்கி இளவரசரின் பிரிவு எனக்கு வேதனை தருகிறது. அடுத்த பௌர்ணமி அன்று நாகைத் துறைமுகத்திலிருந்து கலமொன்று கடாரம் செல்லவிருக்கிறதாம். அதில் நானும் செல்லலாம் என எண்ணியுள்ளேன்.”

“உண்மையில் இளவரசரைப் பார்ப்பதற்குப் போகிறீரா, அல்லது ஊர் சுற்றிப் பார்க்கப் போகிறீரா?” என்றாள் மாதேவி.

“உண்மைதான் இளவரசி! பல நாடுகளையும் சுற்றிப் பார்க்க வேண்டும். அங்கெல்லாம் புலிக்கொடி பறப்பதைக் காண வேண்டும் என்ற ஆசை. இந்தச் சந்தர்ப்பத்தைத் தவறவிட்டால் வேறு சந்தர்ப்பம் கிடைப்பது அரிது.”

“கடாரம் மட்டும் செல்கிறீரா? அல்லது காம்போஜமும் போவீரா?”

“இளவரசர் எங்கெல்லாம் செல்கிறாரோ அங்கெல்லாம் நானும் செல்வேன்.”

“எங்கு வேண்டுமானாலும் இருவரும் செல்லுங்கள். ஆனால் காம்போஜம் மட்டும் செல்ல வேண்டாம்” என்று மாதேவி கூறி நிறுத்தினாள்.

“ஏன் மாதேவி! காம்போஜம் என்ன அவ்வளவு பயங்கரமான நாடா?” என வினவினாள் மதுராந்தகி.

“ஆம் பயங்கரமான நாடுதான்” என்றாள் மாதேவி.

“இளவரசி! இந்தக் கவி குமுதசந்திரனைப் பற்றி என்ன வேண்டுமானாலும் எண்ணிக் கொள்ளுங்கள். ஆனால் வேங்கி இளவரசரைப் பற்றி அவ்விதம் எண்ணாதீர்கள். ஆயிரமாயிரம் வாள்களும் வேல்களும் மோதும் களத்தில் தன்னந்தனியாக நின்று போரிடுபவர் அவர். அவரா இந்தப் பயங்கரத்திற்கெல்லாம் பயப்படுபவர்.”

“வாள் வீச்சையும், வேல் வீச்சையும்விட அபாயகரமான பயங்கரம் அந்த நாட்டில் இருக்கிறது!”

“அப்படியென்ன பயங்கரம் இளவரசி!”

“விழிகளின் வீச்சைத்தான் சொல்கிறேன். காம்போஜ நாட்டுப் பெண்கள் அத்தனை அழகிகளாம்” என்று குறும்புடன் கூறினாள் மாதேவி.

மறுபடி அங்கே கலகலவென்ற ஒலி கிளம்பியது.

“நல்லது! குமுதசந்திரரே! நாளை அரண்மனையில் என்னைச் சந்தியுங்கள்” என்று கூறிவிட்டு முன் நடந்தாள் மதுராந்தகி. மற்றவர்கள் பின் தொடர்ந்தனர். கவி குமுதசந்திரன் மட்டும் அங்கேயே நின்றான். அமுதவல்லி மட்டும் திரும்பித் திரும்பிப் பார்த்த வண்ணம் சென்றாள். ஓயாது சுழலும் அவளது விழிகள் சங்கேத மொழியில் அவனிடம் ஏதோ பேசின. அதன் பொருளை உணர்ந்து கொண்டதன் அறிகுறியாக அவன் தலையசைத்தான்.

# ௦3. பூங்கோயில் நம்பி

கவி குமுதசந்திரன் எவ்வளவு நேரம் அப்படியே நின்றான் என்பது அவனுக்கே தெரியாது. மேற்றிசையில் கதிரவன் மறைந்து இருள் படரத் தொடங்கிய போதுதான் அவனுக்குத் தன் நினைவு வந்தது. படகுத்துறையில் அமர்ந்தான். அவனது ஏக்கப் பெருமூச்சின் எதிரொலி போலச் சில்லென்ற காற்று மெல்லென வீசியது.

அவன் நினைவு, கடந்த காலத்திற்குத் தாவியது. அடடா! என்ன அருமையான நாட்கள். இதே ஏரியில் நிலவொளியில் எத்தனமுறை படகில் இன்பப் பயணம் செய்திருக்கிறோம். வேங்கி இளவரசர் அருகில் இருப்பதே ஒரு தனி இன்பந்தான்.

சில வேளைகளில் இளவரசர் அதிராசேந்திரரும் கலந்து கொள்வார். இலக்கியச் சுவையை அனுபவித்துக் கொண்டே படகில் பயணம் செய்யும் போது பொழுது போவதே தெரியாது. அடிக்கடி இலக்கியச் சர்ச்சைகள் எழுந்துவிடுவதுண்டு. அப்போது வேங்கி இளவரசரின் பேச்சுக்கு முக்கனியின் சுவைகூட இணையாகாதே. அந்த மகிழ்ச்சியில் திளைத்துத் தான் பொழியும் கவிதைகளைத் தரமறிந்து பாராட்டுவதில் அவருக்கு இணையான ரசிகர் வேறு யார் இருக்க முடியும்?

அரச குலத்திலே பிறந்தாலும் இலக்கியத்தின் மீது அவர் கொண்டிருந்த அளவற்ற காதலுக்கு ஈடு இணைதான் ஏது? ஒன்றே ஒன்றினைத்தான் சொல்லலாம். ஆம்; இளவரசி மதுராந்தகி மீது அவர் கொண்டிந்த காதல்..!

இந்த நினைவு வந்ததும் சற்று நேரம் அவன் சிந்தனை தடைப்பட்டது. பெருமூச்சு ஒன்று அவனிடமிருந்து விடைபெற்றுச் சென்றது. மாலை வேளைகளில் எத்தனையோ முறை இந்த ஏரிக்கரைக்கு அவன் வேங்கி இளவரசருடன் வந்திருக்கிறான். இளவரசி மதுராந்தகியும் தனது தோழி அமுதவல்லியுடன் அங்கு வந்து சேருவாள். பிறகு என்ன? இளவரசரும் இளவரசியும் ஒருபுறம் கற்பனை உலகில் மிதந்து கொண்டிருப்பார்கள். மறுபுறம் அமுதவல்லியும் குமுதசந்திரனும் தங்கள் கனவுகளை நனவாக்கிக் கொண்டிருப்பார்கள்.

இளவரசி மதுராந்தகி வேங்கி இளவரசருக்கு மாமன் மகள் முறை வேண்டும். எனவே அவர்கள் ஒருவரையொருவர் விரும்பிக்

காதலித்தது இயற்கை. ஆனால் ஆசிரியரின் மகளான அமுதவல்லியின் மீது குமுதசந்திரன் எப்படியோ காதல் கொண்டான். எப்படியோ என்ன? அவனது தலைவரும் தோழருமான வேங்கி இளவரசர்தான் இதற்கும் காரணம். அவர் இளவரசி மதுராந்தகியைச் சந்திக்க அடிக்கடி இங்கு வந்தார். அவருடன் அவனும் வந்தான். இளவரசியுடன் அமுதவல்லியும் வந்தாள். இந்தக் காதல் நோய் இருக்கிறதே அது பொல்லாத தொற்று நோயாகும். இளவரசரையும் இளவரசியையும் பிடித்திருந்த இந்த நோய் உடன் வந்த அவர்களையும் தொற்றிக் கொண்டுவிட்டது. இவ்வாறு எண்ணிய போது அவனுக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்துவிட்டது.

அந்தச் சிரிப்புடன் அவனுக்குத் தன் நினைவும் வந்தது. ஆம்! நாளை அவன் ஆசிரியர் பூங்கோயில் நம்பிக்கு அரசவையில் சிறப்புகள் நடைபெறும். அவர் இயற்றிய 'வீரணுக்கவிஜயம்' என்னும் காவியத்தின் அரங்கேற்றம் அன்று முற்றுப் பெறுவதாக இருந்தது. வீரராசேந்திர சோழர் இளவயதில் பெற்ற வெற்றிகளைப் புகழ்ந்து இக்காவியத்தைப் பூங்கோயில்நம்பி இயற்றினார்.

இந்தக் காவிய அரங்கேற்றம் தொடங்கிய நாளில் இருந்து அது முற்றுப்பெறும் வரை குமுதசந்திரன் தன் ஆசிரியர் அருகிலேயே இருக்க வேண்டியதாயிற்று. எனவேதான் வேங்கி இளவரசர் கடாரம் சென்ற போது அவருடன் செல்ல அவனால் இயலவில்லை. அப்பாடா! ஒருவழியாக இக்காவியம் அரங்கேறி முடிந்தது. நாளையே புறப்பட்டுக் கடாரம் செல்லலாம். இந்த எண்ணம் அவனுக்குப் புத்துணர்ச்சியைக் கொடுத்தது.

அன்று அரசவையில் எள் போட்டால் எள் விழாதபடி கூட்டம் கூடியிருந்தது. படைத்தலைவர்கள், நாட்டு அதிகாரிகள், அமைச்சர்கள், சிற்றரசர்கள், அறங்கூர் அவையத்தார், கருமமராயத்தினர் ஆகிய பலரும் கூடியிருதனர்.

சிங்காதனத்திற்கு நேர் எதிரில் போடப்பட்டிருந்த ஆசனமொன்றில் பெரும்புலவர் பூங்கோயில் நம்பி அமர்திருந்தார். அவரின் இடப்பக்கத்தில் அடக்க ஒடுக்கத்துடன் கவி குமுதசந்திரன் அமர்ந்திருந்தான். வலப் பக்கத்தில் தீபங்குடி செயங்கொண்டார் அமர்ந்திருந்தார். அவரும் பூங்கோயில் நம்பியும் ஒருவருக்கொருவர் மெல் குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர்.

அப்போது திடீரென!

“ஆகவமல்லனை ஐம்மடி வென்கண்ட இராசசேகரர்! மகராசாதி ராசர் சோழச் சக்கரவர்த்தி வீரராசேந்திர சோழர் வருகிறார்! வருகிறார்!” என்ற இடி முழக்கம் போன்ற குரல் கேட்டது. அதைத் தொடர்ந்து சக்கரவர்த்தியும் இளவரசர் அதிராசேந்திரனும் உள்ளே நுழைந்தனர்.

சக்கரவர்த்தி சிங்காதனத்தில் அமர்ந்த பிறகே சபையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கியது. புலவர் பெருமக்கள் அமர்ந்திருந்த திக்கினைச் சக்கரவர்த்தி நோக்கினார். அக்குறிப்பினை உணர்ந்து கொண்ட செயங்கொண்டார் எழுந்து பேசத் தொடங்கினர்.

“சபையோர்களே! இன்றைய தினம் இந்தச் சபை எதற்காகக் கூட்டப்பட்டிருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். இருந்தாலும் சக்கரவர்த்தி அவர்களின் ஆணையின்படி அதை நான் உங்களுக்கு விளக்கக் கடமைப்பட்டுள்ளேன். எனது அருமைத் தோழரும் பெரும் புலவருமான பூங்கோயில்நம்பி நமது சக்கரவர்த்தி அவர்களின் வெற்றித் திறனைக் கண்டு வியந்து பாடிய வீரணுக்க சோழ விஜயம் என்னும் காவியம் இச்சபையில் அரங்கேற்றப்பட்டதை நீங்கள் அறிவீர்கள். அதையொட்டி அவருக்குச் சிறப்புச் செய்யவே இச்சபையைச் சக்கரவர்த்தி கூட்டியிருக்கிறார்” என்று கூறி முடித்தார்.

அவர் இவ்வாறு கூறி முடித்ததும் அருகில் அமர்ந்திருந்த *திருவாய்க் கேள்வி எழுந்தார்.

“சபையோர்களே! சக்கரவர்த்திப் பெருமான் அவர்கள் பூங்கோயில் நம்பியாரின் புலமையை மெச்சி அவருக்குப் பதினாயிரம் பொன்னும் திருவாரூரில் பத்துவேலி இறையிலி நிலமும் அளித்துள்ளார்” என்று அறிவித்தார்.

“வள்ளல் வீரராசேந்திர சோழர் வாழ்க!” என்ற வாழ்த்தொலி விண்ணைப் பிளந்த வண்ணம் எழுந்தது. பூங்கோயில்நம்பி தாம் காண்பது கனவா அன்றி நனவா என அறியாது திகைத்துக் கொண்டிருந்தார். கவி குமுதசந்திரனோ உற்சாக வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தான். மேன்மாடத்தில் இளவரசியுடன் இருந்து இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த குமுதவல்லியை நோக்கி உற்சாகமாகக் கையை ஆட்டினான்.

இந்த ஆரவாரமெல்லாம் அடங்கியதும் **திருமந்திர ஓலை நாயகம் எழுந்தார். திருவாய்க் கேள்வி கூறியவற்றை அப்படியே எழுதப்பட்ட

ஓலைச் சுவடிகளை ஒரு பொன் தட்டில் வைத்து மன்னர்பிரான் முன் நீட்டினார். அந்த ஓலைகளில் மன்னர் முத்திரையிட்டார்.

பிறகு திருவாரூர் ஊர்ச்சபையார் முன்வந்து சக்கரவர்த்தியை வணங்கினார்கள். அவர்களிடம் அந்த ஓலைகளைத் திருமந்திர ஓலை நாயகம் அளித்தார். சக்கரவர்த்தியின் ஆணையினை எந்நாளும் போற்றிக் காத்துவர அவர்கள் உறுதி எடுத்துக் கொண்டார்கள்.

பிறகு சக்கரவர்த்தி தனது ஆசனத்தைவிட்டு எழுந்து புலவர் பூங்கோயில் நம்பியை நோக்கிச் சென்றார். பொன் தட்டு ஒன்றில் இரத்தின ஆரம் ஒன்றினை ஏந்திய வண்ணம் அமைச்சரொருவர் சக்கரவர்த்தியைப் பின் தொடர்ந்தார்.

இளவரசன் அதிராசேந்திரன் அதைத் தடுத்து அந்தத் தட்டைத் தானே வாங்கிக் கொண்டான். சக்கரவர்த்தி தன்னை நோக்கி வருவதைக் கண்ட பூங்கோயில் கம்பி எழுந்து வணங்கினார். அவரது கழுத்தில் அந்த நவரத்தினமாலையை வீரராசேந்திர சோழர் அணிவித்தார். மீண்டும் "வள்ளல் வீரராசேந்திர சோழர் வாழ்க!" என்ற முழக்கம் எழுந்தது. புலவர் பெருமானும் புரவலர் பெருமானும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர்.

அப்போது வெளியே குதிரைகள் விரைந்து வரும் ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து தடதடவென யாரோ உள்ளே வரும் ஒலி கேட்டது. அனைவர் விழிகளும் வாயில் நோக்கித் திரும்பின.

வாயிலில் வந்து நின்ற வீரன் சுற்றும்முற்றும் பார்த்தான். சக்கரவர்த்தி நின்று கொண்டிருந்த இடத்தை நோக்கி நடந்தான். மெதுவாக நடந்து அவர் அருகில் வந்து வணங்கினான். என்ன என்று கேட்கும் பாவனையில் அவனை வீரராசேந்திரர் நிமிர்ந்து நோக்கினார்.

"மன்னர் பெருமானே! நான் வடக்கெல்லைக் காவல் படையைச் சேர்ந்தவன். இந்த ஓலையைத் தங்களிடம் சேர்ப்பிக்கும்படி தளபதி அனுப்பி வைத்தார்" என்று கூறி ஓலையை அவரிடம் அளித்தான்.

---

*திருவாய்க் கேள்வி:– அரசன் திருவாய் மலர்ந்தவற்றைக் கேட்டுத் திருமந்திர ஓலை நாயகத்திடம் அறிவிப்பார்.

**திருமந்திர ஓலை நாயகம்: திருவாய்க் கேள்வி கூறியவற்றை எழுதுபவர்.

ஓலையைப் படித்த சக்கரவர்த்தியின் கண்கள் ஒருகணம் விரிந்தன. மறுகணம் நிமிர்ந்து நோக்கின. “சபையோர்களே! இந்த நல்ல நாளில் எதிர்பாராத செய்தி ஒன்று கிடைத்திருக்கிறது. நல்லது. இன்று இரவு மந்திராலோசனை சபை கூடும்” என்று அறிவித்தார். சபை கலைந்தது. வந்த செய்தி எதுவாக இருக்கும் என்பதைக் குறித்துப் பலரும் பலவிதமாகப் பேசிக் கொண்டே வெளியேறினார்கள்.

# 04. நிலா முற்றம்

வானவெளியிலே உலா வந்து கொண்டிருந்தது வெண்ணிலவு. பால் போன்ற அந்த ஒளியிலே கங்கைகொண்ட சோழபுரத்தின் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் பளபளத்தன. கீழை நாடுகளில் அதைப் போன்ற பெரிய நகரம் எதுவும் அந்தக் காலத்தில் இருந்தது கிடையாது. பல்லவச் சக்கரவர்த்திகள் காலத்தில் சிறந்து விளங்கிய காஞ்சிமாநகரம் அழகிழந்து கிடந்தது. சளுக்கியர் தலைநகரமான வாதாபி அழிந்து போய்ப் பல நூற்றாண்டுகள் கழிந்துவிட்டன. கரிகாற்பெருவளத்தான் காலத்தில் சிறந்து விளங்கிய பூம்புகார் நகரின் எழிலும், சுந்தரசோழன் காலத்தில் சிறந்து விளங்கிய பழையாறை நகரின் பெருமையையும்விட மிக அதிகமான எழிலையும் பெருமையும் பெற்றுக் கங்கைகொண்ட சோழபுரம் சிறந்து விளங்கியது.

பீடும் பெருமையும் பெற்ற இந்தப் பெருநகரைப் போற்றிப் புகழ வந்த பெரும் புலவர் செயங்கொண்டார் 'கங்காபுரியின் மதிற்புரத்துக் கருதார்சிரம் போய் மிக வீழ' என்று கூறுகிறார். புலவர் ஒட்டக்கூத்தரும் கங்காபுரி என்றே சிறப்பித்து விக்கிரம சோழன் உலாவில் பாடியுள்ளார். வீரராசேந்திர சோழரின் மெய்க்கீர்த்திகளில் 'பெரும் புணற்றானாது கங்கை மாநகர்' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது இந்நகர்.

சீரும் சிறப்பும் பெற்ற இம்மாநகரின் நடுநாயகமாக விளங்கிக் கம்பீரமாக எழுந்து நின்றது 'சோழ–கேரள' மாளிகை. கேரளத்தின் மீது அடைந்த வெற்றியின் நினைவாக எழுந்த அம்மாளிகையில்தான் சோழச் சக்கரவர்த்தி வாழ்ந்தார். எனவே எதனுடைய அழகிற்கும் தோற்றப் பொலிவிற்கும் என்ன குறை இருக்க முடியும். சோழப் பேரரசின் செல்வச் செருக்கிற்கு எடுத்துக் காட்டாக அந்த மாளிகை விளங்கியது.

பொன் கவசம் தரித்த வீரர்கள் அம்மாளிகையின் வாயிலைக் காத்து நின்றார்கள். அவ்வீரர்கள் ஏந்தியிருந்த நீண்ட வேல்கள் நிலவின் ஒளியிலே பளபளவென மின்னின. இரவு வேளை என்ற போதிலும்கூட ஏவலாளர்களும் பணிப்பெண்களும் ஏந்தி நின்ற தீவர்த்திகளும், விளக்குகளும் அம்மாளிகையை ஒளி வெள்ளத்திலே ஆழ்த்தியிருந்தன. சிற்ப வேலைகள் மிகுந்து, பொன்னாலும்

மணியாலும் பொதியப் பெற்றிருந்த அம்மாளிகையின் வாயில்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கடந்து, பொங்கியெழும் வியப்பையும் திகைப்பையும் நமது நெஞ்சங்களில் தேக்கிக் கொண்டு உள்ளே செல்லுவோம்.

இதோ ஓர் அலங்கார வாயில் தென்படுகிறது. கட்கமும் கத்தியும் ஏந்திய பணிப்பெண்கள் அவ்வாயிளைக் காத்து நிற்பதில் இருந்து இது அந்தப்புர வாயில் என்று தெரிகிறது. எழிற் பாவைகளாக விளங்கும் அப்பணிப்பெண்களின் நடையிலே ஒரு பரபரப்புத் தென்படுகிறது. ஓசையெழாது மெதுவாக நடை பயிலுகிறார்கள். குயிலின் மெல்லிய குரலில் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்கிறார்கள். இவ்வளவு பரபரப்பிற்குக் காரணம் யாதாக இருக்க முடியும் என அறியத் துடிக்கிறோம்.

இளவரசன் அதிராசேந்திரன் உள்ளமும் அப்போது துடித்துக் கொண்டிருந்தது. நிலாமுற்றத்தில் வானத்தை வெறிக்கப் பார்த்துக் கொண்டு அவன் எதிரில் இளவரசி மதுராந்தகி அமர்ந்திருந்தாள். இன்னதெனச் சொல்லவியலாத ஒரு அமைதி அங்குக் குடிகொண்டிருந்தது.

அந்த அமைதியைக் கலைக்க விரும்பியவள் போல இளவரசி மதுராந்தகி பேசத் தொடங்கினாள்.

“தம்பி! மந்திராலோசனை சபையில் என்ன நடந்தது? எதற்காக இப்படி சோகத்தில் ஆழ்ந்திருக்கிறாய்?”

“சோகம் ஒன்றுமில்லை அக்கா! என்னை இன்னும் சிறு குழந்தையாகவே தந்தை கருதிக் கொண்டிருக்கிறார்.”

“தம்பி! அப்படியெல்லாம் நினைக்காதே! வீரசோழன் என்று நாடு நகரமெல்லாம் உன்னைப் புகழுகிறது. அப்பேர்ப்பட்ட தீரனை, இவ்விதம் சக்கரவர்த்தி எண்ணுவாரா? உன்னை அவர் போர்க்களத்திற்கு அழைத்துப் போகாததற்கு வேறு ஏதாவது காரணம் இருக்க வேண்டும்.”

“நீங்கள் என்னதான் கூறினாலும் எனதுள்ளத்தைச் சமாதானப்படுத்த முடியாது அக்கா. கடாரத்துப் போர் வந்த போது புறப்பட்டேன். அப்போதும் என்னைத் தடுத்து நிறுத்திவிட்டு விஷ்ணுவர்த்தனனை அனுப்பி வைத்தார். கடாரத்துக் காடுகளிலே வேங்கி இளவரசர் எத்தனே துன்பங்களை அனுபவிக்கிறாரோ?

அதுதான் போகட்டும் பரவாயில்லை. இதுவரை நடந்திராத பெரும் போர் வந்திருக்கிறது. சோழவள நாட்டின் பிறவிப் பகைவர்கள் படையெடுத்து வந்திருக்கிறார்கள். இந்த வேளையில்கூட என்னை வர வேண்டாம் எனத் தடுக்கின்றாரே. அதை எண்ணும் போதுதான் என் உள்ளம் வேதனைப்படுகிறது'' என்றான் அதிராசேந்திரன்.

''அருள்மொழி, கேட்டாயா! உன் புதல்வனின் வேதனைக் குரலை'' என்ற கம்பீரமான குரலைக் கேட்டு மதுராந்தகியும், அதிராசேந்திரனும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள்.

வீரராசேந்திர சோழச் சக்கரவர்த்தி கம்பீரமாக நின்று கொண்டிருந்தார். அவர் அருகில் தன் புதல்வனைக் கனிவுடன் பார்த்த வண்ணம் அருள்மொழி மகாராணி நின்று கொண்டிருந்தாள்.

# 05. தனயனின் கோபம்

பேச்சிலே தீவிரமாக ஆழ்ந்திருந்த தமக்கையும் தம்பியும், சக்கரவர்த்தியும் சக்கரவர்த்தினியும் வந்து நின்றதைக் கவனிக்கவில்லை. திடீரெனச் சக்கரவர்த்தியின் குரலைக் கேட்டதும் அவர்கள் திடுக்கிட்டுப் போயினர்.

“அப்பா, எப்போது வந்தீர்கள்?” எனக் கேட்ட வண்ணம் எழுந்து நின்ற இருவரையும் அமரச் செய்துவிட்டு வீரராசேந்திர சோழரும், அருள்மொழி நங்கையும் அருகிருந்த இருக்கைகளில் அமர்ந்தார்கள்.

“மதுராந்தகி, உன்னுடைய அருமைத் தம்பி உன்னிடம் என்னைப் பற்றி ஏதோ குறைப்பட்டுக் கொண்டிருந்தானே?” என்றார், வீரராசேந்திரர். அவர் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. மதுராந்தகி முகத்திலும் புன்னகை தவழ்ந்தது. அவள் மறுமொழி எதுவும் கூறவில்லை. இளவரசன் அதிராசேந்திரனோ மௌனம் சாதித்தான்.

இந்த அமைதியை எதிர்பார்த்தவர் போல வீரராசேந்திர சோழர் பேச ஆரம்பித்தார். “தேவி! இன்று உன் மகன் அவை நடுவே எவ்வளவு வேகமாக எழுந்து நின்றான் என்பதைக் கேள்” என்றார்.

“போதும், தந்தையும் மகனும் நாலுபேருக்கு நடுவில் சண்டையிட்டுக் கொண்டது எனக்கு என்னவோ பிடிக்கவில்லை” என்றாள் அருள்மொழி நங்கை. அவள் குரலில் தாயன்பு பெருக்கெடுத்தோடியது.

“அம்மா! நீயுமா இப்படிக் கூறுகிறாய். தந்தையுடன் சண்டையா இட்டேன். என்னையும் அழைத்துப் போகும்படி வேண்டியல்லவா நின்றேன்” என வருத்தம் தோய்ந்த குரலில் அதிராசேந்திரன் கூறினான். அவன் அவ்விதம் கூறியதைக் கேட்ட பெற்றவளின் உள்ளம் பதைத்தது.

“இராசேந்திரா, உன்னை நான் அவ்விதம் கூறுவேனா? நீங்கள் இருவரும் இந்தச் சிறு காரியத்திற்காக மனத் தாங்கல் கொண்டிருப்பது எனக்கென்னவோ பிடிக்கவில்லை” என்றாள் அருள்மொழி நங்கை.

“தேவி, நீ கூறியதில் தவறொன்றும் இல்லை. உன் மகன் சொல்லுவதிலும் குற்றமொன்றும் இல்லை. இந்த வேளேயைத்தான் எதிர்நோக்கிக் காத்திருந்தேன். அதிராசேந்திரனை நான் களத்திற்கு

அழைத்துச் செல்ல மறுத்ததற்குப் பல காரணங்கள் உண்டு. உங்கள் மூவருக்கும் சில காரணங்கள் தெரிந்திருக்கலாம். ஆனால் காரணங்கள் எல்லாவற்றையும் நீங்கள் அறிந்திருக்க முடியாது. அவைகளைச் சொல்ல வேண்டிய வேளை வந்திருக்கிறது. அதிராசேந்திரன் நாளைய தினம் இக்நாட்டை ஆளப்போகும் மன்னன். மதுராந்தகியோ வேங்கி நாட்டை ஆளப்போகும் மகாராணி. அருள்மொழி நங்கை தற்போது இந்நாட்டின் பேரரசி. பட்டத்து இளவரசனின் அன்னை. எனவே நீங்கள் மூவரும் நான் கூறப்போகும் சில உண்மைகளை அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. விரைவில் நான் போர்க்களத்திற்குப் போகப் போகிறேன். மீண்டும் இது போன்ற வேளை வாய்க்குமோ என்னமோ? நான் அறியேன். எனவே நான் கூறப்போவதைக் கவனமுடன் கேளுங்கள்" என்ற முன்னுரையுடன் வீரராசேந்திரர் தொடர்ந்தார்.

"பல்லாயிரம் வீரர்களும், யானைகளும், கணக்கிலடங்காக் குதிரைகளும் கொண்ட மாபெரும் பகைவர் படையைச் சோழப் பேரரசு எதிர்நோக்கி நிற்கிறது. பல ஆண்டுகளாகவே குந்தளர் தமது படையைப் பெருக்கிய வண்ணம் இருந்திருக்கிறார்கள். எட்டு முறை சோழர் படையால் தோற்கடிக்கப்பட்ட ஆகவமல்லன் ஒன்பதாம் முறையாகச் சோழவள நாட்டின் மீது படையெடுத்திருக்கிறான். குந்தளரின் நெஞ்சுத் துணிவை நாம் பாராட்டத்தான் வேண்டும். ஆனால் இங்கு நமது நிலைமை என்ன? நமது படையணிகளில் ஒரு பகுதி கடார மன்னனுக்கு உதவ கடல் கடந்து சென்றிருக்கிறது. உரோகண மலைக்காடுகளில் மறைந்து கொண்டு நமதாட்சிக்குட்பட்ட ஈழநாட்டில் உள்நாட்டுக் குழப்பத்தைத் தூண்டிவிட்டுக் கொண்டிருக்கும் விசயபாகு வேந்தனை அடக்க நமது படையணிகளில் மற்றொரு பகுதியைப் புலத்தி நகரில் நிறுத்தியிருக்கிறோம்.

பாண்டிய நாட்டில் நம்மை எதிர்த்து இடைவிடாது கலகம் செய்து வந்த பாண்டியன் வீரகேசரியையும் அவனது படையினரையும் இன்னும் முற்றிலும் நாம் அழித்து ஒழித்துவிடவில்லை. மதுரை நகரைக் கைப்பற்றி உனது ஒன்றுவிட்ட தம்பி கங்கைகொண்ட சோழனை, சோழ பாண்டியன் என்ற பட்டத்தோடு அரியணையில் அமர்த்தியிருக்கின்றோம் என்றாலும் நாம் அயர்ந்துவிடுவதற்கில்லை. வீரகேசரி சமயம் நோக்கிக் காத்திருக்கின்றான். குந்தள மன்னன்

ஆகவமல்லனுடன் அவன் தொடர்பு கொண்டிருப்பதாகக் கூடச் செய்தி கிடைத்திருக்கிறது.

வாய்ப்புக் கிடைத்தால் பாண்டியனுடன் கேரளன் சேர்ந்து கொள்வான். எல்லாவற்றிற்கும் மேலாகக் கீழைச் சளுக்கிய நாடு பேரபாயத்தில் சிக்கியுள்ளது. உனது மைத்துனன் விஷ்ணுவர்த்தனன் வேங்கியின் இளவரசன் என்றாலும் அது பெயரளவில்தான். அவன் பிறந்ததும் வளர்ந்ததும் கங்கைகொண்ட சோழபுரத்தில்தான். ஓடியாடி விளையாடியது காவிரிக் கரையில்தான். அவன் மட்டும் என்ன? அவன் தந்தை இராசராச நரேந்திரரும் அப்படித்தான். அவர் தந்தை விமாலாதித்தரும் அப்படித்தான். தந்தை நாடான வேங்கி நாட்டைவிடத் தாய்நாடான சோழவள நாட்டையே அவர்கள் விரும்பி வாழ்ந்தனர்.

வேங்கி நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் ஏற்பட்ட இந்த நெருக்கமான உறவைக் கெடுக்கப் பலர் முயன்றனர். குறிப்பாக மேலைச் சளுக்கியரான குந்தளர் இந்த வேலையில் தீவிரமாக ஈடுபட்டனர். தமது தாயத்தினரான வேங்கி மன்னர்களை நயமாகச் சொல்லியும் பயமுறுத்தியும் பார்த்தனர். இம்முயற்சியில் இறுதியில் தோல்வியே கண்டனர். இந்தப் பழங்கதை ஒருபுறமிருக்கட்டும்.

வேங்கி நாட்டின் மீது கோபங் கொண்ட ஆகவமல்லன் இரண்டாண்டுகளுக்கு முன் சாமுண்டராயன் தலைமையில் படையொன்றை அனுப்பியதையும் அப்படையை நமது எல்லைப்படை முறியடித்து விரட்டி வேங்கி நாட்டைக் காத்ததையும் நீங்கள் அறிவீர்கள்.

தந்தையை இழந்துவிட்டு இங்கு வந்து தங்கியிருந்த குலோத்துங்கனுக்கு அப்போது வயது வரவில்லை. காவிரி வளநாட்டைப் பிரிந்து செல்லவும் அவன் விரும்பவில்லை. அவனை அவ்விதம் கவர்ந்திழுக்கச் செய்த சக்தி இங்கு எதுதான் இருந்ததோ? எனக்குத் தெரியவில்லை.." இவ்விதம் வீரராசேந்திரர் கூறி வருகையில், அவரது கண்கள் மதுராந்தகியைக் குறும்பாக உற்று நோக்கின. அதிராசேந்திரனும் அருள்மொழி நங்கையும் நகைத்தார்கள். மதுராந்தகியோ நாணம் மேலிடத் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

வீரராசேந்திர சோழர் மேலும் தொடர்ந்தார். "இந்த நிலையில் விஷ்ணுவர்த்தனனின் சிற்றப்பனான விசயாதித்தனை அரசப்

பிரதிநிதியாக இருந்து ஆண்டு வரும்படி செய்தோம். இந்தச் செய்ந்நன்றியைக் கூட விசயாதித்தன் மறந்துவிடுவான் போல இருக்கிறது.”

“என்ன உண்மையாகவா?” எனக் குறுக்கிட்டான் அதிராசேந்திரன்.

“ஆம் மகனே. நமது ஒற்றர் படையினர் அவ்விதம் செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள். குந்தளரும் நாமும் பொருது கொண்டிருக்கும் இந்த வேளையில் வேங்கி அரசைக் கவர்ந்து கொள்ள விசயாதித்தன் திட்டமிட்டிருக்கிறானாம். சமயம் கிடைத்தால் தனது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக ஆகவமல்லனுடன் அவன் சேர்ந்தால்கூட நாம் வியப்படைவதற்கில்லை.”

“துரோகி செய்ந்நன்றி கொன்ற பாதகன்” எனக் கொதித்தான் அதிராசேந்திரன்.

“பொறு! இராசேந்திரா பொறு. ஆகவமல்லனுக்கு மட்டுமல்ல சோழர் படை பாடங்கற்பிக்கப் போவது. விசயாதித்தனுக்கும் சேர்த்துத்தான் பாடம் கற்பிக்கப் போகிறது.”

“என்னையும் அதில் சேர்த்துக் கொள்ளுங்கள் என்றுதானே நான் வேண்டுகிறேன். விசயாதித்தனுக்குப் பாடங் கற்பிக்கும் பொறுப்பையாவது எனக்களியுங்கள்.”

இளவரசனின் இந்த வேண்டுகோளைக் கேட்டதும் வீரராசேந்திர சோழரின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. “தேவி, கேட்டாயா உன் மகன் கூறுவதை! நான் சொல்லப் போவது இன்னதென்று முழுவதும் கேளாது இடைமறித்துப் பேசுவதைப் பார்த்தாயல்லவா” என்றார்.

“இராசேந்திரா, அவர் சொல்லுவதைத்தான் முழுவதும் கூறட்டுமே. அதற்குள் ஏன் அவசரப்படுகிறாய்” என அன்பொழுகக் கூறினாள் அருள்மொழிநங்கை. தாயின் கனிவான சொல்லைத் தட்ட முடியாமல் அதிராசேந்திரன் மௌனம் சாதித்தான். அவனது அமைதியைப் பாராட்டிவிட்டு வீரராசேந்திர சோழர் மேலும் பேச ஆரம்பித்தார். “இராசேந்திரா! இதுவரை நான் கூறியதைக் கவனமாகக் கேட்டாயல்லவா. சோழவள நாட்டின் நாற்புறமும் பகைவர்கள் நெருங்கியிருப்பதையும், நமது படைகள் கடாரத்திலும், ஈழத்திலும், பாண்டி மண்டலத்திலும் சிதறிக் கிடப்பதையும் உணர்ந்து கொண்டாய்

அல்லவா? வடக்கே நான் போர்க்களம் நோக்கிச் சென்றிருக்கும் வேளையில் வீரகேசரியும் விசயவாகுவும் துள்ளி எழுந்தால் அவர்களை அடக்க ஓர் ஆள் வேண்டுமல்லவா? மேலும் எட்டுமுறை தோற்றோடிய ஆகவமல்லன் இறுதி முறையாகப் பெரும் படையுடன் வந்திருக்கின்றான். அவனைத் தோற்கடித்தால் மட்டும் போதாது. அடுத்தடுத்துப் படையெடுக்கும் குந்தளரின் வலிமையை அறவே அழிக்க வேண்டும். ஆகவமல்லனின் ஆட்சியை முற்றிலும் ஒழித்து, குந்தள காட்டைச் சோழப் பேரரசுடன் இறுதியாக இணைத்துவிட வேண்டும். இவற்றையெல்லாம் செய்து முடிப்பது என்பது எளிதான செயலன்று. இவையெல்லாம் நிறைவேற நீண்ட காலம் ஆகலாம். அதுவரை சோழ நாட்டைப் பாதுகாக்கவும் போர்க்களத்திற்கு ஆயுதங்களையும் உதவிப் படைகளையும் அனுப்பிக் கொண்டிருக்கவும் பொறுப்பான ஓர் ஆள் இங்கிருக்க வேண்டுமல்லவா? எல்லாவற்றிற்கும் மேலாகப் போர்க்களத்தில் எனக்கு ஏதேனும் நேர்ந்துவிடுமானால் சோழ குலத்திற் குற்ற பழியைத் துடைக்கவும் புலிக்கொடியை உயர்த்தவும் ஒருவர் வேண்டுமல்லவா?" என வீரராசேந்திர சோழர் கம்பீரமான குரலில் கூறி வந்த போது "அப்பா!" என வேதனைக் குரலில் அலறினான் அதிராசேந்திரன்.

"போதும் நிறுத்துங்கள். இது என்ன பேச்சு. எனது மகன் தாங்கள் போர்க்களத்தில் இருந்து திரும்பி வரும்வரை கங்கைகொண்ட சோழபுரத்திலேயே இருப்பான். கவலைப்படாது போர்க்களத்திற்குப் போய்ப் பகைவரை வென்று வாகை சூடி வாருங்கள்" என நாத்தழுதழுக்கக் கூறினாள் அருள்மொழி நங்கை.

கண்களிலே கண்ணீர் மல்க எழுந்து நின்ற இளவரசனை வீரராசேந்திரர் தனது மார்புடன் தழுவிக் கொண்டார். இந்தக் காட்சியைக் கண்டு கொண்டிருந்த அருள்மொழி நங்கை, மதுராந்தகி இவர்களின் கண்களிலே முத்துக்கள் கோர்த்தன.

# 06. தமிழ்க் குடில்

காலைக் கதிரவனின் பொன்னொளி, மாந்தளிர்களின் இடையே ஊடுருவிச் சென்று பசும்புற்றரையில் படிந்தது. மாமரங்களின் மீது சாடி ஏறி, தத்தியும் துள்ளியும் ஒன்றையொன்று கவ்வியும் கடித்தும் விளையாடிக் கொண்டிருந்த அணில்கள் தொப்தொப்பென்று புல்தரையில் விழுவதும் மீண்டும் மரத்தில் ஏறுவதுமாக இருந்தன. ஆடி விளையாடும் அணில்களைப் பார்ப்பதிலும் அருகிலிருந்த கனியைக் கொத்துவதிலும் கிள்ளைகள் ஈடுபட்டிருந்தன. மாமரங்களின் உயரமான கிளைகளில் வீற்றிருந்த மாங்குயில்கள் தங்களையும், தங்களைச் சுற்றிலும் நடைபெறுபவைகளையும் முற்றிலும் மறந்தவைகளாக இன்ப கீதமிசைத்துக் கொண்டிருந்தன.

அமைதியும் அழகும் குடிகொண்டிருந்த அந்த மாஞ் சோலையின் நடுவே அங்கும் இங்குமாகச் சில குடில்கள் தென்பட்டன. அவற்றின் நடுநாயகமாகப் பெரிய குடில் ஒன்று திகழ்ந்தது.

இராசசபையில் அத்தனை பேருக்கும் நடுவில் தீபங்குடி செயங்கொண்டார் என்னும் புலவர் பெருந்தகையை அறிமுகப்படுத்தி வைத்ததை வாசகர்கள் மறந்திருக்கமாட்டார்கள் என எண்ணுகிறோம். ஆம்! எப்படி மறக்க முடியும்? புவிச் சக்கரவர்த்திக்கு ஈடாகத் திகழ்ந்த கவிச்சக்கரவர்த்தி அல்லவா? ஆம்! பிற்காலத்தில், முதலாம் குலோத்துங்கனின் பேரவையில் கவிச்சக்கரவர்த்தியாக வீற்றிருந்து, 'கலிங்கத்துப்பரணி'யைப் பாடிய அந்தப் புலவர் பெருமானைச் சந்திக்கத் தயாராகும்படி வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

அடங்காத வியப்புடன் மெதுவாக அந்தக் குடிலின் உள்ளே எட்டிப் பார்க்கிறோம். இருவர் அமர்ந்திருக்கிறார்கள். செயங்கொண்டாருடன் அமர்ந்திருக்கும் மற்றொருவர் யார்? ஆம்! புலவர் பூங்கோயில் நம்பி அமர்ந்திருக்கிறார். சற்றுத் தள்ளி அடக்க ஒடுக்கத்துடன் இருவர் நின்று கொண்டிருக்கிறார்கள். செயங்கொண்டாரின் சீடர்கள் போலும்.

"செயங்கொண்டாரே! எனது வேலை முடிந்துவிட்டது! நாளையே ஊருக்குக் கிளம்பலாம் என்றிருக்கிறேன்."

"நம்பி! அதற்குள் இவ்வளவு அவசரம் என்ன?"

“அரங்கேற்றம் முடியட்டும் என்றுதான் காத்திருந்தேன். அதுவும் ஒரு வழியாக இனிது நிறைவேறிவிட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக என்னை ஆட்டிப் படைத்து வந்த மற்றொரு கவலையும் நீங்கிவிட்டது.”

“அது என்ன கவலை?” என வியப்புடன் கேட்டார் செயங்கொண்டார்.

“என் மகள் அமுதவல்லியைப் பற்றிய கவலைதான்.”

“என்ன அவளுக்குத் திருமணம் நிச்சயமாகிவிட்டதா?”

“அதெல்லாம் ஒன்றுமில்லை. அப்படி ஏற்பாடு செய்தாலும் உங்களுக்குத் தெரியாமலா செய்வேன். தாயில்லா அந்தப் பெண்ணைக் கட்டிக்காத்து வளர்க்கும் பொறுப்பு என்னைவிட்டு நீங்கியிருக்கிறது. அந்தப் பொறுப்பை இளவரசி மதுராந்தகி ஏற்றுக் கொண்டிருக்கிறார். இனிக் கொஞ்சம்கூடக் கவலையில்லாது தமிழ்ப்பணியில் ஈடுபடலாம்.”

“இங்கேயே தங்கி ஈடுபடலாமே!”

“செயங்கொண்டாரே! உங்கள் அன்பிற்கு என் நன்றி. ஊரில் சில வேலைகளை அப்படியே விட்டு வந்துள்ளேன். அவற்றைச் செவ்வனே முடித்துவிட்டுத் திரும்ப வந்து சேருகிறேன். இடையறாத தமிழ்த் தொண்டில் ஈடுபட்டிருக்கும் உங்களையும் உங்கள் சீடர்களையும்விட்டுப் பிரிய எனக்கு மனமில்லை. விரைவில் உங்களிடமே திரும்ப வந்து சேருவேன்” என்றார்.

“பூங்கோயில் நம்பியார் எங்கே புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்?” என்ற கம்பீரமான குரல் கேட்டுப் புலவர்கள் இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர்.

வாயிலருகே வீரராசேந்திர சோழரும் இளவரசன் அதிராசேந்திரனும் நின்று கொண்டிருந்தனர். அவர்களைக் கண்ட புலவர்கள் இருவரும் திடுக்கிட்டு, தம் இருக்கைகளில் இருந்து எழுந்தனர். பேச்சில் அமிழ்ந்து போயிருந்த புலவர்கள் மன்னர் வந்ததைக் கவனிக்கவில்லை. எனவே திடுக்கிட்டுப் போயினர்.

“வர வேண்டும்! வர வேண்டும்! மன்னர் பெருமானே! வந்து இந்த ஆசனத்தில் அமர வேண்டும்” என இரு கை கூப்பி மன்னரைச் செயங்கொண்டார் வரவேற்றார். புன்னகை பூத்த முகத்துடன் அவர்

வரவேற்பை ஏற்றவராக மன்னர் ஆசனத்தில் அமர்ந்தார். அருகிருந்த மற்றொரு இருக்கையில் இளவரசன் அதிராசேந்திரன் அமர்ந்தான். புலவர்கள் இருவரையும் அமருமாறு மன்னர் சைகை செய்துவிட்டுப் பேசலானார்.

“பூங்கோயில் நம்பியாரே! நேற்று உமக்கு மேலும் பல சிறப்புக்கள் செய்ய எண்ணியிருந்தேன். ஆனால் அந்த எண்ணம் நிறைவேறவில்லை. நேரில் உம்மைச் சந்தித்துப் பேசலாம் என்று வந்தேன். ஆனால் நீரோ எங்கோ பயணமாகிக் கொண்டிருக்கிறீர் போலத் தெரிகிறது. ஒருவேளை இந்தத் தமிழ்க் குடிலின் வாழ்வு உமக்குக் கசந்துவிட்டதோ.”

“கரும்பு கசக்கிறது என யாராவது சொல்வார்களா? அதுவும் செங்கரும்பு போன்ற செயங்கொண்டாருடன் இருக்கும் வாய்ப்புக் கிடைப்பது பெரும்பேறல்லவா?”

“பின் எங்கே பயணம் புறப்பட்டீர்? நான்தான் போருக்குப் பயணமாகிக் கொண்டிருக்கிறேன். நீர் எங்காகிலும் வாதப்போர் புரியப் போகிறீரா?” எனக் கேட்டுவிட்டு மன்னர் சிரித்தார். அதைத் தொடர்ந்து அனைவரும் சிரித்தனர்.

“சக்கரவர்த்தி! தாங்கள் போருக்குப் புறப்படப் போவது உறுதிதானா?” என்றார் செயங்கொண்டார்.

“இதில் என்ன சந்தேகம் செயங்கொண்டாரே! காலமெல்லாம் காத்திருந்த போர் வந்திருக்கிறது. அப்படியிருக்கும் போது..” மன்னர் தம் பேச்சை முடிப்பதற்குள் செயங்கொண்டார் குறுக்கிட்டார்.

“மன்னிக்க வேண்டும். நீங்கள் போர்க்களத்திற்குப் போவது குறித்து நான் ஐயப்படவில்லை. தங்களை எதிர்த்துப் போர் புரியக் குந்தளர் வந்திருப்பது உறுதிதானா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.”

“செயங்கொண்டாரே! நீர் நினைப்பது போல இந்த முறை எளிதில் போர் முடிந்துவிடாது. இறுதி முறையாகப் போர் நடத்த வேண்டும் என்ற உறுதியுடன் ஆகவமல்லன் வந்துள்ளான். எனவே அவனை அறவே ஒழிப்பது வரை சோழர் படை ஓய்வுபெறப் போவது இல்லை. இதுவரை வரலாறு காணாத பெரும் போராகத்தான் இந்தப் போர் இருக்கும்.”

“சக்கரவர்த்தி! ஒரு வேண்டுகோள்!” என்றார் செயங்கொண்டார்.

“வேண்டுகோள் விடுக்க நல்லவேளை பார்த்தீர் செயங்கொண்டாரே! நான் போர்க்களம் நோக்கிப் புறப்படும் போதுதான நீர் உமது விருப்பத்தைக் கூற வேண்டுமா. நல்லது! கூறுங்கள்” என்றார் வீரராசேந்திரர். மற்றவர்கள் வியப்புடன் செயங்கொண்டாரை நோக்கினர்.

“எனது வேண்டுகோளைத் தங்கள் முன்னர் சமர்ப்பிக்க வேளை நோக்கிக் காத்திருந்தேன். அந்த வேளையும் வந்துவிட்டது சக்கரவர்த்திப் பெருமானே! அடியேனையும் போர்க்களத்திற்கு அழைத்துப் போக வேண்டும்” என்றார் செயங்கொண்டார்.

அவரது வேண்டுகோளைக் கேட்ட வீரராசேந்திர சோழர் திடுக்கிட்டுப் போனார். இளவரசன் அதிராசேதிரனும், புலவர் பூங்கோயில் நம்பியும் திகைத்துப் போயினர்.

“செயங்கொண்டாரே! நீர் என்ன விளையாடுகிறீரா? போர்க்களத்திற்கு வந்து என்ன செய்யப் போகிறீர்!” என்று திகைப்புடன் கேட்டார் வீரராசேந்திரர்.

“எழுத்தாணி பிடிக்கும் கை போர்க்களத்திற்கு வந்து என்ன செய்யப் போகிறது என நீங்கள் நினைப்பது எனக்குப் புரிகிறது. மன்னர் பெருமானே! நீண்ட நாட்களாக என் உள்ளத்தில் ஓர் ஆசை. ஆம்! பரணி ஒன்று பாட வேண்டும் என்ற என் மனோரதம் உங்களால்தான் நிறைவேற வேண்டும். சோழ நாட்டு வீரப்படைகள் தங்கள் தலைமையில் போர்க்களத்தில் ஆற்றும் தீரச்செயல்களை நேரில் கண்டு அவற்றை அழியாத பரணி இலக்கியமாகப் பாட வேண்டும் என விரும்புகிறேன். என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள அனுமதி தாருங்கள்” என்றார் செயங்கொண்டார்.

மன்னர் பெருமான் சற்று நேரம் அமைதியாகச் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு பேசத் தொடங்கினர்.

“செயங்கொண்டாரே! உமது விருப்பம் போற்றுதற்குரியதுதான். பெரும் புலவரான உமது வாயால் சோழப் படை புகழப்படும் வாய்ப்புக் கிடைப்பது அருமையானதுதான். என்றாலும் இந்த முறை உமது விருப்பத்தை நிறைவேற்ற இயலாமைக்காக வருந்துகிறேன். காரணத்தோடுதான் இவ்வாறு கூறுகிறேன். சோழர் படை இந்த முறை ஏற்றிருக்கும் பணி கடுமையானது. வஞ்சகப் போர் புரியும் குந்தளரைக் காடு, மேடு எனப் பாராது விரட்டிச் சென்று

வேட்டையாடி, பூண்டோடு அவர்களை நாசம் செய்த பின்னரே தாயகம் திரும்பத் திட்டமிட்டுள்ளேன். எனவே நான் செல்லும் இடமெல்லாம் உங்களையும் அழைத்துச் செல்வது என்பது இயலாது. சோழப் பேரரசு பெருமை பெற்றுத் திகழுவதற்குப் பல சிறப்புக்கள் காரணங்களாக உள்ளன. அவற்றுள் தலையாயது சோழ மன்னரின் அவைக்களப் புலவராக நீர் விளங்குவதுதான். எனவே உமக்கு ஏதேனும் நேர்ந்தால் அது சோழ நாட்டிற்குப் பேர் இழப்பாகும். இதற்காக நீர் கவலைப்பட வேண்டாம். உமது விருப்பத்தை எனது வீர மகன் அதிராசேந்திரன் நிறைவேற்றி வைப்பான். அவன் காலத்தில் உங்கள் விருப்பம் இனிது நிறைவேறும்" என்றார் மன்னர்.

வீரராசேந்திரர் கூறிய சொற்கள் செயங்கொண்டாரின் உள்ளத்தைத் தொட்டன போலும்! குரல் தழதழக்க அவர் "அப்படியே ஆகட்டும் சக்கரவர்த்தி!" என்றார்.

# 07. கங்கைகொண்டவனின் கனவு

ஏரிக்கரையை ஒட்டிச் சென்ற சாலையில் புழுதிப் படலத்தைக் கிளப்பிய வண்ணம் குதிரைகள் போய்க் கொண்டிருந்தன. புலிக்கொடி ஏந்திய வண்ணம் வீரன் ஒருவன் குதிரை மீது முன்னால் சென்று கொண்டிருந்தான். அவனைப் பின்தொடர்ந்து பல குதிரைகளில் வேல் தாங்கிய வீரர்கள் வந்தனர். இவர்களுக்குச் சற்றுப் பின்னால் இரு குதிரைகள் ஒய்யார நடை போட்ட வண்ணம் வந்து கொண்டிருந்தன.

ஆம்! சக்கரவர்த்தியும் இளவரசரும் தமிழ்க்குடிலில் இருந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள். அதிராசேந்திரன் முகத்திலிருந்த வாட்டம் இன்னும் நீங்கவில்லை. அதைக் கவனித்த வீரராசேந்திர சோழர் தமக்குள் ஒரு தடவை சிரித்துக் கொண்டார். பிறகு தொண்டையைக் கனைத்த வண்ணம் பேசத் தொடங்கினார்.

“அதிராசேந்திரா! இந்த ஏரிக்கரையில் இதே சாலையில் முன்பொரு முறை வந்த நினைவு எழுகிறது” என்றார். மறுகணம் அவர் நினைவு, கடந்த காலத்திற்குத் தாவியது. சற்று நேரம் அமைதியாக இருந்தார். பிறகு தொடர்ந்தார்.

“இப்படி நீயும் நானும் வருவது போலவே அன்றொரு நாள் இராசேந்திர சோழருடன் நானும் உன் பெரிய தந்தை இராசாதித்தரும் வந்து கொண்டிருந்தோம். கடல் கடந்த நாடுகளைப் பற்றி அவர் கூறிக் கொண்டிருந்தார். உன் முப்பாட்டனர் இராசராச சோழர் காலத்திலேயே அதாவது இராசேந்திர சோழர் இளவரசராக இருந்த போதே பெரும்படையுடன் கடல் கடந்து சென்றார். ஈழம், காழகம், கடாரம், காம்போஜம், ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், பப்பாளம், இலிம்பங்கம், இலாமுரி தேசம், நக்கவாரம் ஆகிய கடல் கடந்த நாடுகளையெல்லாம் வென்று அங்குப் புலிக்கொடியை நாட்டிய விவரங்களை அவர் சுவைபடச் சொல்லும் போது கேட்கும் பிணம்கூட வீர உணர்ச்சி பெற்றுத் துள்ளியெழும். அதுமட்டுமல்ல அதிராசேந்திரா, கங்கைகொண்ட சோழர் எனப் பெயர்பெற்ற உன் பாட்டனர் தாம் கண்ட கனவுகளையும் எங்களிடம் கூறினார். அடாடா! அவருக்குத்தான் எங்கள் மீது எவ்வளவு நம்பிக்கை!” இப்படிச் சொல்லும் போது வீரராசேந்திரரின் குரல் கம்மியது. நா தழுதழுத்தது.

“ஆனால் உங்களுக்குத்தான் என் மீது நம்பிக்கையில்லை” எனக் குறுக்கிட்டான் அதிராசேந்திரன்.

“பொறு அதிராசேந்திரா, பொறு! நான் கூறப் போவதை முழுவதும் கேட்டுவிட்டுப் பிறகு நீ பேசலாம். கங்கைகொண்ட சோழர் எத்தகைய கனவுகள் கண்டு கொண்டிருந்தார் தெரியுமா? அவருக்குத்தான் எத்தகைய தீர்க்கதரிசனம். கேள் அதிராசேந்திரா! கங்கை முதல் காவிரி வரையிலும் பல மன்னர்கள் படை நடாத்தி வெற்றிக் கொடி நாட்டியிருக்கிறார்கள். நம் சோழகுலத்தின் முன்னோர்களான கரிகாற் சோழரும், நெடுமுடிக்கிள்ளியும் இமயத்திலே புலிக்கொடி பொறித்துத் திரும்பியிருக்கிறார்கள். அவ்வாறே பாண்டியரும் சேரரும் செய்திருக்கிறார்கள். ஆனால் இதுவரை யாரும் செய்யாத செயலைச் செய்யக் கங்கைகொண்ட சோழர் திட்டமிட்டார்.

கங்கை முதல் காவிரி வரையிலும் கைப்பற்றிய நாடுகளையெல்லாம் ஒரு குடையின் கீழ்க் கொண்டு வரத் திட்டமாட்டார். ஒரே ஆட்சியின் கீழ் அத்தனை நாடுகளும் இருந்தால்தான் தமிழகம் ஒரு பேரரசாகத் திகழ முடியும் என அவர் கருதினார். கையகலமுள்ள இந்தத் தமிழ்நாட்டில் வேங்கடத்திலிருந்து குமரிசெல்வதற்குள் மூன்று நாடுகளையும் எண்ணற்ற குறுநில மன்னர்களையும் சந்திக்க நேரிடுகிறது. மூவேந்தர்களுக்குள் ஓயாது ஏற்பட்ட போர்களினால் தமிழகம் கலகலத்துப் போயிருந்தது. தமிழர்கள் ஒற்றுமையின்றிப் பிளவுண்டு கிடந்தனர். இந்த நிலையை மாற்றி ஒரே குடையின் கீழ் அத்தனை நாடுகளையும் கொண்டு வந்தால் தமிழகத்தின் வளம் ஓங்கும். தமிழகம் ஒரு பேரரசாகத் திகழும் என அவர் நம்பினார். நாளுக்கு நாள் பெருகிவரும் தமிழர் சமுதாயத்தை மற்றொரு சிக்கல் எதிர் நோக்கியிருந்ததையும் அவர் உணர்ந்தார். பெருகும் மக்கள் தொகைக்கு ஏற்பத் தமிழகம் தானாக விரியும் சக்தியுடையதா? அல்லவே! எனவேதான் கடல் கடந்த நாடுகளில் தமிழர்களைக் குடியேற்றவும் அந்த நாடுகளில் சோழர் ஆட்சியை நிறுவவும் அவர் திட்டமிட்டார். இதற்கு முதற்படியாக ஈழத்தில் தமிழர்கள் குடியேற்றப்பட்டனர். இன்னும் கிழக்கே பல தீவுகளைக் கைப்பற்றி அவற்றிற்குத் தமிழ்ப் பெயர்களை இட்டார். அந்த நாடுகளில் எல்லாம் தமிழர்களைக் குடியேற்றினால் தமிழர் சமுதாயம் விரிந்து பரந்து எங்கும் இருக்கும். தமிழ் கூறும் நல்லுலகின் எல்லையும் விரிவடையும். இந்தக் கனவைத்தான் அவர் அன்று எங்களிடம் கூறிக் கொண்டிருந்தார்.

இந்தக் கனவிற்கு இடையூறாக குந்தளர் வந்து முளைத்தனர். பாண்டியரும், பல்லவரும், சேரரும், இராட்டிரகூடரும் புலிக்கொடிக்குப் பணிந்துவிட்ட வேளையில் குந்தளர் மட்டும் பணிய மறுத்துப் போர்க்கொடி உயர்த்தினர். பக்கத்தில் வலுவான பகைவனை வைத்துக் கொண்டு கடல்கடந்து செல்வது எப்படி? எனவே கங்கைகொண்ட சோழர் தனது திட்டங்களை ஒத்தி வைத்துவிட்டுக் குந்தளரை ஒழிக்கும் பணியில் ஈடுபடலானார். இன்றைக்கு 60 ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கிய இந்தப் போர் இன்னும் முடிவடையாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அதுவும் கடந்த 20 ஆண்டுகளாக இப்போர் உக்கிரமாக நடைபெற்று வருகிறது.

பலமுறை தோற்கடிக்கப்பட்ட பின்னும் ஆகவமல்லன் அடங்கவில்லை. காடுகளில் ஒளிந்து கொண்டு படைதிரட்டிப் போர் புரிந்து வருகிறான். அவனை அறவே ஒழிக்கும் வரை சோழப் பேரரசுக்கு நிம்மதி கிடையாது. கங்கைகொண்ட சோழரின் கனவுகளை நிறைவேற்ற முடியாது. எனவேதான் இந்த முறை ஆகவமல்லனை அறவே ஒழிப்பது வரை சோழ நாடு திரும்புவதில்லை என உறுதி பூண்டிருக்கிறேன். அந்த உறுதியை நிறைவேற்ற நீ எனக்கு உதவ வேண்டும்" என்றார் வீரராசேந்திரர்.

உணர்ச்சிவசமாக வீரராசேந்திர சோழர் கூறி வந்ததைக் கேட்டு வந்த அதிராசேந்திரன் "கட்டளை இடுங்கள் அப்பா! நான் என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறுங்கள். உடனே செய்கிறேன்" என்றான். அவன் குரலின் உருக்கம் இழைந்தோடியது.

"அதிராசேந்திரா! சோழப் பேரரசை விரிவடையச் செய்து அதைக் கட்டிக் காப்பதில் எங்கள் காலம் கழிந்துவிட்டது. கங்கைகொண்ட சோழரின் கனவுகளை நிறைவேற்ற எங்களால் இயலவில்லை. உன் காலத்திலாவது அவை நிறைவேற வேண்டும் என நான் விரும்புகிறேன்" என்றார்.

"இதை நீங்கள் சொல்ல வேண்டுமா! அது என் கடமையாயிற்றே" என்றான் அதிராசேந்திரன்.

"அதற்காகத்தான் உன்னைப் போர்க்களத்திற்கு வர வேண்டாம் என்று கூறுகின்றேன். கங்கைகொண்ட சோழரின் கனவுகள் என்னால் நிறைவேறாவிட்டாலும் என் மகன் காலத்திலாவது நிறைவேற்றப்பட வேண்டும் என விரும்புகிறேன். மகனே! நிறைவேற்றுவாயா?" என்றார் வீரராசேந்திரர்.

“நிறைவேற்றுவேன் அப்பா! நிறைவேற்றுவேன்!” என வாக்குக் கொடுத்தான் அதிராசேந்திரன். தந்தையின் விழிகளிலும், மகனின் விழிகளிலும் நீர் தேங்கி நின்றது.

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது.

“அதிராசேந்திரா! இன்றைக்குப் பத்தாம் நாள் நான் போர்க்களம் நோக்கிப் புறப்படுகிறேன். எப்போது திரும்புவேனோ தெரியாது. அதுவரை இந்தச் சோழப் பேரரசைக் கட்டிக்காக்கும் பொறுப்பு உன்னுடையது. அதை மறந்துவிடாதே. அந்தக் கடமையை நீ செவ்வனே செய்வாய் என்பதில் எனக்குத் துளியளவும் ஐயமில்லை. ஆனால் உன்னைப் பாதுகாத்துக் கொள்வாயா என்பதில்தான் எனக்கு ஐயம். சோழப் பேரரசின் எதிர்காலம் உன் கையில்தான் இருக்கிறது. வாழையடி வாழையாக வந்த செம்பியன் குலத்தை வளரச் செய்ய நீ ஒருவன்தான் இருக்கிறாய், மகனே! அதை மறந்துவிடாதே. குந்தளச் சதிகாகாரர்களின் மூலம் உனக்கு ஏதேனும் நேர்ந்துவிடுமானால் அதை என் இதயம் தாங்கிக் கொள்ளாது” என்றார் வீரராசேந்திரர்.

“அப்பா! நீங்கள் வீணாகக் கவலைப்பட வேண்டாம். போர்க்களத்திலிருந்து நீங்கள் திரும்பி வரும்வரை கவனமாக இருப்பேன். உங்கள் விருப்பத்திற்கு மாறாக நடக்கத் துணியமாட்டேன்” என்றான் அதிராசேந்திரன்.

அவன் கூறிய மறுமொழியைக் கண்டு வீரராசேந்திரர் திருப்தி அடைந்தவராகக் காணப்பட்டார். அந்த மனநிறைவுடன் அவர் தமது பேச்சைத் தொடங்கினர்.

“நமது படைகளை ஏற்கெனவே ஒன்று திரட்டிக் காஞ்சியில் நிறுத்தி வைத்திருந்தது இப்போது எவ்வளவு நல்லதாகப் போயிற்று. குந்தளரின் படையெடுப்பை எதிர்பார்த்தே ஓராண்டு காலத்திற்கு முன்பு இதைச் செய்தேன். திடீரெனச் சோழ நாட்டின் மீது படையெடுப்பதாக எண்ணிக் கொண்டு வந்து கொண்டிருக்கும் ஆகவமல்லன், இவ்வளவு விரைவில் நாமும் படைதிரட்டி எதிர்ப்போம் எனக் கனவிலும் கருதியிருக்கமாட்டான்” என்றார் வீரராசேந்திரர்.

தந்தையின் முன்யோசனையைக் கண்டு வியந்த அதிராசேந்திரன் “அப்பா! சோழர் படைக்குத் தலைமை தாங்கும் பெருமையை யாருக்கு அளிக்கப் போகிறீர்கள்?” என்றான்.

“இதில் என்ன சந்தேகம்! எனது தந்தை இராசேந்திர சோழரின் காலத்திலிருந்து இன்றுவரை குந்தளருடன் நடைபெற்ற போர்களில் எல்லாம் கலந்து கொண்ட மாவீரரும் தற்போது கங்க நாட்டு மன்னராக விளங்குபவருமான எனது அருமைத் தோழர் மதுராந்தகத் தமிழ்ப் பேரரையருக்குத்தான் அந்தப் பெருமையை அளிக்கப் போகிறேன்” என்றார் வீரராசேந்திரர்.

“நானும் அப்படித்தான் நினைத்தேன் அப்பா!” என்றான் அதிராசேந்திரன்.

“அவர் அநேகமாக நாளை இங்கு வந்து சேருவார் என எண்ணுகிறேன்” என்றார் வீரராசேந்திரர்.

“அவர் மீது எனக்கு மிகவும் பொறாமையாக இருக்கிறது அப்பா!”

“பாவம்! அவர் மீது ஏன் பொறாமைப்படுகிறாய்?”

“பின் என்ன அப்பா! வரலாற்றில் இடம் பெறப் போகும் இந்தப் போரில் சோழர் தளபதியாக விளங்கும் பெருமை அவருக்கு. போரில் கலந்து கொள்ளக் கூட முடியாத நிலைமை எனக்கு.”

ஆற்றாமை தொனிக்க அதிராசேந்திரன் கூறியதைக் கேட்ட சோழச் சக்கரவர்த்தி கலகலவெனச் சிரித்தார். வேண்டா வெறுப்பாக அந்தச் சிரிப்பில் இளவரசனும் கலந்து கொண்டான்.

# ௭. மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர்

பொன்னி வளநாட்டின் பெருமாட்டி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவளாக அமர்ந்திருந்தாள். பொன்னி வளநாட்டின் பெருமாட்டி என்று நாம் இங்கே குறிப்பிடுவது வீரராசேந்திர சோழரின் தமக்கையான அம்மங்கைதேவியையேயாகும். அவனிபுரந்த இராசேந்திர சோழரின் செல்வத் திருமகள், வேங்கி மன்னர் இராசராச நரேந்திரரின் இதயாசனத்தில் ஏறி வீற்றிருந்து அரசு செலுத்திய பேரரசி, கதைகளும் காவியங்களும் புகழும் மாவீரன் முதற் குலோத்துங்கனை ஈன்றெடுத்த அன்னை என்ற பெருமைகளுக்கு உரியவராய்த் திகழ்ந்த இந்தப் பெருமாட்டி, பொன்னி வளநாட்டின் மக்களின் பேரன்பிற்கு உரியவராய்த் திகழ்ந்தார். இராசராச சோழரின் புதல்வியாகிய குந்தவையும் வேங்கி இளவரசனை விமலாதித்தனும் காதல் கொண்டு கடிமணம் புரிந்து கொண்ட கதை நாட்டு மக்களின் உள்ளத்திலே ஆழமாகப் பதிந்திருந்தது. அந்தக் காதலரிருவரும் கருத்தொருமித்து வாழ்ந்து பெற்றெடுத்த அரும் புதல்வன் இராசராச நரேந்திரனும், இராசேந்திர சோழர் பெற்றெடுத்த தீதில்லாத் திருமகளான அம்மங்கைதேவியும் காதல் கொண்டனர். மன்னர் பெம்மானின் புதல்வி தன் அம்மான் புதல்வன் மீது கொண்ட காதல் இனிது நிறைவேறியது. பின்னர் வேங்கி அரியணையில் இருவரும் வீற்றிருந்து செங்கோலோச்சிக் கருங்கலி கடிந்து இனிது வாழ்ந்தனர். என்றாலும் அவர்கள் உள்ளம் சோழவள நாட்டையே நாடியது. இராசராச நரேந்திரன் பிறந்தது வேங்கியில் என்றாலும் அவன் சோழத் திருநாட்டில்தான் வளர்ந்தான்.

பொன்னியாற்றின் பூம்புனலில் மூழ்கி, வளமிக்க அதன் கரையோரங்களில் கைகோர்த்து உலவி, அசைந்தாடி வரும் தென்றலிலே திளைத்து, இன்பத் தமிழிலே அமுதப்பண் பாடி மகிழ்ந்திருப்பதையே இருவரும் விரும்பினர். எனவே வேங்கி நாட்டில் அவர்கள் வாழ்ந்த காலத்தைவிட அதிகமான காலத்தைக் கங்கைகொண்ட சோழபுரத்தில் கழித்தனர். சோழ அரசகுலத்தின் அன்பிற்கும், அரவணைப்பிற்கும், சோழ வளநாட்டு மக்களின் ஆதரவிற்கும் நடுவிலே வாழ்ந்த இந்தக் காதலரின் வாழ்வைச் சோக மேகம் கவ்வியது. வேங்கி மன்னர் இராசராச நரேந்திரர் சிறிது காலம் நோய்வாய்ப்பட்டிருந்து பின்னர்க் காலஞ்சென்றார். தனது அன்புத்

துணைவி அம்மங்கைதேவியையும், அருமைப் புதல்வன் விஷ்ணுவர்த்தனனையும் விட்டு அவர் பிரிந்த போது சோழ வளநாடே கலங்கியது. அம்மங்கைதேவியின் துயர் அளவிட்டுரைக்க முடியாத அளவுக்கு வளர்ந்த வண்ணம் இருந்தது. என்றாலும் மறக்குடி வழிவந்த மகள் அல்லவா? தனது துயரைச் சிறிது சிறிதாகத் தணித்துக் கொண்டு தனது புதல்வன் விஷ்ணுவர்த்தனனை வளர்ப்பதில் ஈடுபட்டாள். இருவரும் கங்கைகொண்ட சோழபுரத்திலேயே தங்கியிருந்தனர். வேங்கி அரச பரம்பரையைப் பிடித்திருந்த நோய் விஷ்ணுவர்த்தனனையும் பற்றியது. ஆம்! தந்தை நாட்டைவிடத் தாய்நாடே அவனைக் கவர்ந்திழுத்தது. வேங்கியின் இளவரசனாக முடிசூட்டப்பட்ட பிறகும் கூட அவன் வேங்கியில் தங்கி வாழ விரும்பவில்லை. தனது சிற்றப்பன் விசயாதித்தனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுச் சோழ வளநாட்டிலேயே தங்கினான். பொன்னி வளநாடு மட்டும் அவனைக் கவர்ந்திருக்கவில்லை. கன்னியொருத்தியும் அவனைக் கவர்ந்திழுத்தாள். வீரராசேந்திர சோழரின் தமையனார் இரண்டாம் இராசேந்திர சோழர் பெற்றெடுத்த திருமகளான இளவரசி மதுராந்தகி அவனது மனதில் குடிகொண்டாள்.

கவின் மிக்க காதல் கன்னியையும் பொழில் சூழ்ந்த பொன்னியையும் படைத்த சோழ வளநாட்டைப் பிரிந்து செல்ல விஷ்ணுவர்த்தனனின் உள்ளம் எங்ஙனம் துணியும்?

இந்த இளங்காதலர் இருவருக்கும் விரைவில் திருமணம் முடித்துவிட வேண்டுமென வீரராசேந்திரரும் அம்மங்கைதேவியும் முடிவு செய்திருந்தனர். ஆனால் அதற்குள் போர் குறுக்கிட்டதனால் திருமணம் தடைப்பட்டது. போர்க்களப் பயிற்சியைப் பெற வேண்டும் என்பதற்காக விஷ்ணுவர்த்தனனை, வீரராசேந்திரர் கடாரத்திற்கு அனுப்பி வைத்திருந்தார்.

போர்க்களம் புகுந்திருக்கும் தனது மகன் வெற்றி வீரனாகத் திரும்பி வந்து, மதுராந்தகியை மணந்து, வேங்கி அரியாசனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்தப் போகும் நாட்களை நினைத்த வண்ணம் கனவுலகில் சஞ்சரித்த அம்மங்கைதேவி, யாரோ அழைக்கும் குரல் கேட்டுத் திரும்பினாள்.

எதிரில் பணிப்பெண் ஒருத்தி நின்றாள். "தேவி, தங்களைச் சந்திக்க மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர் வந்திருக்கிறார்" என்றாள்.

“யார்? கங்க மன்னரா! உடனே அழைத்து வா” என்று கூறிய அம்மங்கைதேவியின் சொற்களிலே விரைவும், கனிவும் காணப்பட்டன.

ஆம்! அவளுடைய கணவர் இராசராச நரேந்திரருக்கும் அவளுடைய முத்த தமையனார் இராசாதிராசருக்கும் மிக நெருங்கிய நண்பராக விளங்கியவரும், பல்வேறு போர்க்களங்களிலே சோழப் படைகளின் மாதண்டநாயகராக முன்னின்று போரிட்டு வெற்றிவாகை சூடிய பெருவீரரும், சோழ நாட்டு மாவீரர்களில் முதன்மைபெற்று விளங்குபவரும். தனது பெருவீரத்திற்குரிய பரிசாகக் கங்க நாட்டைப் பெற்று, அதன் மன்னராக முடிசூடியவரும், ‘பஞ்சநதிவாணன், மதுராந்தகத் தமிழ்ப்பேரரையன்’ எனச் சோழ மன்னர்கள் வியந்தளித்த பட்டங்களைப் பெற்றவருமாகிய சோணாட்டுத் தண்டல் நாயகர்கட்குத் தலைவர் வந்திருக்கும் போது, அம்மங்கைதேவி பரபரப்படைந்ததில் வியப்பென்ன இருக்க முடியும்?

கம்பீரமான தோற்றத்துடன், பெருந்தளபதிக்குரிய ஆடையணிகளை அணிந்து பொலிவுடன் திகழ்ந்த பஞ்சநதிவாணனாகிய மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர் பணிவுடன் உள்ளே நுழைந்து அம்மங்கைதேவிக்கு வணக்கம் செலுத்தினார்.

“வருக! தமிழ்ப் பேரரையரே, வருக! அமருக” என அன்புகனிய வரவேற்றாள் அம்மங்கைதேவி.

“ஆம் தேவி, தங்களைச் சந்தித்து நெடுங்காலமாகிவிட்டது.”

“கங்கபாடிக்குச் சென்றதில் இருந்து எங்களை மறந்தே போய்விட்டீர்.”

“தங்கள் அன்புள்ளத்தை மறப்பதா? தேவி! இதென்ன இப்படிக் கூறுகிறீர்கள். எல்லையோரக் காவற்பணியை மேற்கொண்டவனுக்கு ஓய்வுதான் ஏது?”

“ஆம் தளபதியாரே! நீர் கூறுவதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது. அவர் இருந்திருந்தால் உங்களைக் காண நேர்ந்ததற்குப் பெருமகிழ்ச்சியடைந்திருப்பார்” என்றாள் அம்மங்கைதேவி. இதைக் கூறும் போது அவளது குரல் தழதழத்தது. இருவரின் நினைவும் இராசராச நரேந்திரரின்பால் திரும்பியதால் அங்குச் சிறிது நேரம் அமைதி நிலவியது.

தனது துக்கத்தை மறைத்துவிட்டு அம்மங்கைதேவி மேலும் பேச ஆரம்பித்தாள். "நாளையதினம் மன்னருடன் நீரும் போர்க்களம் நோக்கிச் செல்வீர் அல்லவா?"

"ஆம் தேவி. அதற்காகத்தானே விரைந்து வந்தேன். போர்க்களம் நோக்கிச் செல்வது எங்களுக்கு நிலாச்சோறு உண்ணுவது போன்ற இன்பம் பயப்பது அல்லவா!"

"ஏதேது ஒருவர் தவறாது அனைவரும் போர்க்களம் நோக்கிச் சென்றுவிடுவீர்கள் போல இருக்கிறதே?"

"ஆம் தேவி, இதற்கு முன் சோழ வளநாடு கண்டறியாத பெரும் போர் வந்திருக்கிறது. பன்முறை நம்மால் தோற்கடிக்கப்பட்டு நாடு நகரங்களை இழந்த ஆகவமல்லன் மீண்டும் பெரும்படையுடன் தினவெடுக்கும் சோழர் படைகளுக்கு இரைதர வந்திருக்கிறான். வெற்றி அல்லது வீர மரணம் எனச் சூளுரைத்திருக்கிறான். அவனை அடியோடு அழித்தாலன்றிச் சோழப் பேரரசின் எல்லையில் அமைதி நிலவாது என்ற சூழ்நிலை பிறந்திருக்கிறது. சுருக்கமாகக் கூறினால் பிறவிப் பகைவன் வந்திருக்கிறான். இந்த வேளையில் களம் நோக்கிச் செல்லத் தயங்குபவர் யாராவது இருக்க, முடியுமா?"

"ஆம் பேரரையரே! நீர் கூறுவது உண்மைதான். ஆனால் எனக்கென்னவோ இவையெல்லாம் பிடிக்கவில்லை. போர் என்றாலே வெறுப்பாகத் தோன்றுகிறது. அவர் இருந்த போதும் போரை வெறுத்தொதுக்கினார்."

"தேவி! தங்களின் உள்ளமும், தங்கள் கணவரின் உள்ளமும் பண்பட்ட உள்ளங்களாகும். அரசகுடியில் பிறந்த போதிலும் தங்கள் கணவர் கொண்டிருந்த சில கொள்கைகள் போற்றுதற்குரியனவாகும். ஆனால் தாயகத்திற்கு ஆபத்து நேரிடும் போது இரத்தத்தைக் கண்டு அஞ்சுவதும் பிணமலைகளைக் கண்டு மலைப்பதும், இரக்கங்காட்டுவதும் முடியாததொன்றாகும். அதுவும் குந்தளரிடம் இரக்கம் காட்டுவது.."

"வீரர்களுக்குரிய மொழியை நீர் கூறுகின்றீர். ஆனால் இந்தப் போர் குறிப்பாகக் குந்தளருக்கும், சோழருக்கும் ஏற்பட்டுள்ள பெரும்பகை என்னால் உண்டானது என்பதை எண்ணும் போதும் இந்தப் பகையின் விளைவாகக் குவிக்கப்பட்ட பிணமலைகளையும், பெருக்கெடுத் தோடிய குருதி வெள்ளத்தையும், நிணச்சோற்றையும்

எண்ணும் போதும் எனது இதயத்தைச் சோகம் கவ்வுகிறது. சோர்வு என்னை ஆட்கொள்ளுகிறது.''

``தேவி! இதென்ன பேச்சு. நாடும் நகரமும் இதை ஏற்றுக்கொள்ளுமா? அன்புருவமான உங்களாலா இந்தப் போர் உருவாயிற்று. அல்ல தேவி, அல்ல. அகம்பாவமும், ஆணவமும் நிறைந்த ஆகவமல்லன் இந்தப் போரை உருவாக்கினான். அதன் பலனை இன்று அனுபவிக்கிறான். அதற்கு நாம் ஏன் வருத்தமடைய வேண்டும்.''

``நீர் என்னதான் கூறினாலும் எனது உள்ளம் அமைதியடைய மறுக்கிறது'' என்றாள் அம்மங்கைதேவி.

இதற்கு ஏதோ பதில் கூற முயன்ற மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் யாரோ வரும் அரவங்கேட்டுத் திரும்பினார். இளவரசி மதுராந்தகி வந்து கொண்டிருந்தாள். தளபதியும், தனது அத்தையும் ஏதோ பேசிக் கொண்டிருப்பதைக் கண்டு தயங்கி நின்றாள்.

``மதுராந்தகி, ஏன் தயங்குகின்றாய்? நமது தளபதிதானே இருக்கிறார். உள்ளே வா'' என அன்பொழுக அம்மங்கைதேவி அழைத்தாள்.

``நான் நினைத்து வந்த காரியம் தங்கு தடையின்றி நிறைவேறிவிடும். இளவரசியாரிடம் எனது வேண்டுகோளைக் கூற விரும்பியிருந்தேன். இளவரசியாரும் இங்கு வந்துவிட்டார்கள்'' என்றார் தமிழ்ப்பேரரையர்.

``ஆம் பேரரையரே! பேச்சுவாக்கில் நீர் வந்த காரியத்தைக் கேட்க மறந்துவிட்டேன்'' என்றாள் அம்மங்கைதேவி.

``ஒன்றுமில்லை தேவி. ஒரு சிறு விருப்பம். அதை நிறைவேற்றித் தர வேண்டும்.''

``சோழ நாட்டின் மாதண்டநாயகர் விரும்பியது எது நடைபெறாமல் போயிருக்கிறது. தயக்கமின்றிக் கேளுங்கள் பேரரையரே'' என்றாள் அம்மங்கைதேவி. அவரது விருப்பம் என்னவாக இருக்க முடியும் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆவல், மதுராந்தகி, அம்மங்கைதேவி ஆகிய இருவரின் கண்களிலும் காணப்பட்டது.

``ஒன்றுமில்லை தேவி! போர்க்களத்திற்குச் செல்லும் நான் எப்போது திரும்பி வருவேன் என்பது எனக்குத் தெரியாது. எனவே

எனது பேத்தியைத் தங்களிடம் அடைக்கலமாக ஒப்புவித்துவிட்டுச் செல்ல விரும்புகிறேன்” என்றார்.

“இதற்குத்தானா இவ்வளவு பீடிகை! உமது பேத்தி இனி என்னுடைய புதல்விதான். எங்கே அவள்? முதலிலேயே ஏன் உள்ளே அழைத்து வரவில்லை” என அன்பொழுக அவரைக் கண்டித்தாள் அம்மங்கைதேவி. தனது புதிய தோழியைக் காணும் ஆவலுடன் மதுராந்தகியின் கண்கள் அங்கும் இங்கும் சுழன்றன.

“இல்லை தேவி! அவளைத் தற்சமயம் இங்கு அழைத்து வரவில்லை. படைகளோடு புறப்பட்டு வந்த என்னுடன் அவளும் வந்தாள். நடுவழியிலே அவளுக்கு நடுக்குச்சுரம் ஏற்பட்டுவிட்டது. நாளைய தினம் இங்கிருந்து படையணி கிளம்பப் போவதால் நான் முன்னதாகவே வந்துவிட்டேன். அவள் இன்னும் ஓரிரு நாட்களில் இங்கு வந்து சேருவாள்” என்றார் பேரரையர்.

அவரது கடமையுணர்ச்சியைக் கண்டு வியந்த அம்மங்கைதேவி, “நல்லது பேரரையரே! கவலை கொள்ளாது நீர் செல்லலாம். அவளை நானும் மதுராந்தகியும் கண்ணின் இமை போலக் காத்து வருவோம். அவளின் பெயர்..”

“தாயற்ற அவளின் பெயர் புவனமாதேவி என்பதாகும். உங்கள் பாதுகாப்பில் இருக்கும் போது அவளுக்கு என்ன குறை? என்று தனது நன்றியை மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் தெரிவித்துக் கொண்டார்.

# 09. படை புறப்பாடு

சேவல் கூவிட, எழுந்த செங்கதிரோன் திகைத்தான். மேற்கொண்டு செல்ல வேண்டியதை மறந்தான். தனது பொன்னொளியில் கங்கைகொண்ட சோழபுரம் எழில் பெற்றுத் திகழுவதை அவன் பலமுறை கண்டு பரவசமடைந்தது உண்டு என்றாலும் அன்று அதிகாலையில் அம்மாநகரம் அளித்த தோற்றம் அவனை வியக்கச் செய்தது.

மாடங்கள் தோறும் புலிக்கொடிகள் பறந்து கொண்டிருந்தன. மாவிலைகளும், மகர தோரணங்களும் வீதிகளை அலங்கரித்தன. தெருக்கள் யாவும் திருவிழாக்கோலம் பூண்டன. ஒவ்வொரு வீட்டின் முகப்பும், முற்றமும் மகளிரின் கைவண்ணம் பெற்று, பொன்வண்ணம் எவ்வண்ணமோ அவ்வண்ணம் திகழ்ந்தன.

மகளிரும் சிறுவர்களும் புத்தாடைகளைப் பூண்டு, அணிகளை அணிந்து உப்பரிகைகளிலே மலர்க் கூடைகளை ஏந்தி நின்றனர். ஓவிய மையூட்டப் பெற்ற அவர்களது காவியக் கண்கள் சாலை நெடுகிலும் சுழன்று திரிந்தன. நேரம் ஆக ஆக அவர்களிடையே பரபரப்பு மிகுந்தது. ஆம். இன்று சோழர் படை பகைவர் பூமியை நோக்கிக் கிளம்பும் நன்னாள். சோழ நாட்டு மாவீரர்களையும் மன்னரையும், களம் சென்று வாகைசூடி வாருங்கள் என வழியனுப்ப மக்கள் தயாராகிக் கொண்டிருந்தனர்.

அதோ போர்முரசு ஒலிக்கத் தொடங்கிவிட்டது. சிறிது நேரத்தில் சோழர் படை பாடிவீடு நோக்கிப் புறப்பட்டுவிடும். அப்பப்பா! அரண்மனை முன் எவ்வளவு மகத்தான அணிவகுப்பு. யானைப் படைகளும், குதிரைப் படைகளும், காலாட் படையினரும் திரண்டு நிற்கிறார்கள். அவர்கள் உயர்த்திப் பிடித்திருந்த வேல்கள் ஆதவனின் பொன்னொளியிலே பளபளத்தன. சோழர் படையில் ஒரு சிறு பகுதிதான் இது. பெரும்பகுதி கோட்டைக்கு வெளியே தயாராக அணிவகுத்துக் காத்திருக்கிறது என்பதை அறியும் போது நமது திகைப்பு மேலும் அதிகமாகிறது. குதிரைகளின் கனைப்பும், யானைகளின் பிளிறலும், அவ்வப் போது வீரர்கள் எழுப்பிய முழக்கங்களும் ஒன்றாக இணைந்து அங்கு ஒரு பேரிரைச்சலை உருவாக்கியிருந்தன.

இந்தப் படையணியை நாமும் சிறிது பார்வையிடுவோம். இதோ வேலும் கையுமாகக் களம் புகத் துடிதுடித்து நிற்கிறார்களே, இவர்கள் தாம் இராசராசத் தெரிந்த வலங்கை வேளைப்படையினர். அதோ அங்கே பளபளக்கும் கவசம் பூண்டு புன்னகை பூத்த முகத்தோடு அணிவகுத்து நிற்கிறார்களே, அவர்கள்தாம் பெருவீரன் பராந்தக சோழன் பெயரைத் தாங்கிய பராந்தக கொங்கவாளப் படையினர். பிடரிமயிரைச் சிலிர்த்த வண்ணம் நிலையில்லாது போர்க் களத்தில் பாயத் துடிதுடித்துக் கொண்டிருப்பவை போலக் காட்சியளிக்கிறதே குதிரைப் படை, அதுதான் நிகரிலி சோழத் தெரிந்த உடநிலை குதிரைச் சேவகப்படையாகும். இவர்கள் எப்போதும் அரசனுடன் இருப்பர். தங்கள் உயிரைக் கொடுத்தாவது மன்னனைக் காப்பர். அவர்கள் முகங்களில்தான் எவ்வளவு உறுதி குடிகொண்டிருக்கிறது. இதோ இங்கே வாளும் வேலும் தாங்கிச் செருக்களத்துச் சீயங்களாகக் காட்சியளிப்பவர்கள்தாம் சிறுதனத்து வடுகக்காவலர் ஆவர். அதோ அங்கே முன்னணியில் நிற்பது மும்முடிசோழத் தெரிந்த யானைப் படையாகும். கருங்குன்றுகள் வரிசையாக நிற்பது போல யானைப் படை அணிவகுத்து நின்றது. பகலவனின் பொன்னொளியிலே அவற்றின் முகபடாங்கள் பளபளத்தன. அந்த அழகில் நமது உள்ளத்தைப் பறிகொடுத்த வண்ணம் நிற்கிறோம்.

திடீரென அரண்மனை முகப்பில் ஏதோ சலசலப்பு ஏற்படுகிறது. கொம்புகளை ஊதிய வண்ணமும், முரசுகளை முடக்கிய வண்ணமும் கட்டியக்காரர்கள் வருகிறார்கள். எங்கும் அமைதி பரவுகிறது. பரவுகின்ற அமைதியைக் கிழித்த வண்ணம் கம்பீரமான குரலொன்று எழுகிறது.

**“வீர சோழர்**
**இராசராசநரேந்திரர்**
**இராசாசிரியர்**
**சகலபுவனாசிரியர்**
**பரமபட்டாகரர்**
**இரவிகுலதிலகர்**
**சோழகுல சேகரர்**
**பாண்டிய குலாந்தகர்**
**ஆகவமல்ல குலகாலர்**
**இரட்டராசகுலகாலர்**
**ஆகவமல்லன ஐம்மடி வென்கண்டராசசேகரர்**

**மகாராசா திராசர்**
**வீரராசேந்திர சோழர்!**
**வருகிறார்! வருகிறார்! வழிவிடுங்கள்.”**

இந்தக் குரலைத் தொடர்ந்து ஆயிரமாயிரம் குரல்கள் “வாழ்க! வாழ்க!” என முழங்கின.

அரண்மனை வாயிலில் மன்னர் காட்சி தந்ததும் கூடியிருந்தோரின் ஆரவாரம் அதிகமாயிற்று. மன்னரைத் தொடர்ந்து இளவரசன் அதிராசேந்திரன் காட்சி தந்தான். படையினரின் உற்சாகம் பெருகிற்று. “இளவரசர் அதிராசேந்திரர் வாழ்க!” என்ற வாழ்த்தொலி கிளம்பிற்று. மன்னரைத் தொடர்ந்து அரசி அருள்மொழிநங்கை, அம்மங்கைதேவி, இளவரசி மதுராந்தகி, இளவரசி வீரமாதேவி ஆகியோரும் அமைச்சர்களும் வந்தனர்.

வாயிலில் நின்ற வண்ணம் மன்னர் ஒருமுறை தனது கண்களைச் சுழலவிட்டார். மறுகணம் தனது அருகே வாட்டமடைந்த முகத்துடன் நிற்கும் அதிராசேந்திரனைக் கனிவுடன் உற்று நோக்கினார். “அதிராசேந்திரா! இன்னமும் உன் ஏக்கம் தீரவில்லை போலிருக்கிறதே!”

வீரராசேந்திரர் இவ்விதம் கூறியதும் அதிராசேந்திரன் பதிலொன்றும் கூறாது தலையைக் குனிந்து கொண்டான். அவன் அவ்விதம் திரும்புவதைக் கண்டு மன்னரின் முகத்தில் புன்னகை அரும்பியது. கண்கள் கலங்க அருகில் நின்ற அரசியின் பக்கம் அவர் திரும்பினார். “தேவி! இளவரசனைப் பார்த்தாயா? இன்னமும் குழந்தையுள்ளத்தோடு இருக்கிறான். அவனைத் தேற்ற எனக்குப் பொழுதில்லை. அவனைத் தேற்றும் பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கின்றேன். நான் சென்று வரட்டுமா?” என்றார்.

“வாகைசூடி வெற்றி வீரராகத் திரும்பி வாருங்கள்” என விழிகளில் நீர் பெருக அருள்மொழிநங்கை கூறிவிட்டுக், கையில் வைத்திருந்த ஆத்திமாலையை வீரராசேந்திரர் கழுத்தில் அணிவித்து விடைகொடுத்தாள். இந்த உருக்கமான காட்சியைக் கண்டு அருகில் நின்றவர்களின் நெஞ்சுகள் நெகிழ்ந்தன.

“அதிராசேந்திரா! நான் கூறியவற்றை மறந்துவிடாதே” என மன்னர் கூற “அவ்விதமே நடந்து கொள்வேன். கவலை கொள்ளாது சென்று வாருங்கள்” என இளவரசன் விடைகொடுத்தான். மற்றும்

சூழ்ந்து நின்ற அனைவரிடமும் மன்னர் விடைபெற்ற வண்ணம் விரைந்து சென்று பட்டத்து யானை மீது ஏறி அமர்ந்தார். மறுகணம் தாரைகள் அதிர்ந்தன. துந்துபிகள் முழங்கின. மேல்மாடத்தில் நின்ற அரண்மனைப் பெண்டிர் மலர்களைத் தூவினர். எங்கணும் வாழ்த்தொலி எழுந்தது. பெருங்கடல் பெயர்ந்தது எனப் படை புறப்பட்டது. வழிநெடுகிலும் மலர்மழை பொழிந்தது. உற்சாக வெள்ளம் கரைபுரண்டு ஓடிற்று. வெற்றிவேல் வீரவேல் என்ற முழக்கங்கள் எங்கும் எழுந்தன. இந்தக் கோலாகலக் காட்சியைக் கண்ட வண்ணம் அகிராசேந்திரன் மெய்ம்மறந்து நின்றான்.

# 10. சாலையில் சந்திப்பு

தணலால் தகித்துப் போன உடலைத் தண்கடலில் குளிர்விக்க மாலைக் கதிரவன் விரைந்து சென்று கொண்டிருந்தான். மேற்றிசையில் அவன் மறைவதற்குள் முந்திவிட முனைவது போலப் பல்லக்கொன்று அந்தச் சாலையில் விரைந்து சென்று கொண்டிருந்தது.

வெகுதொலைவில் மங்கலாகக் கங்கைகொண்ட சோழபுரத்தின் கோபுர விமானம் தெரிந்தது. தலைநகரை நோக்கிச் சென்ற அந்த ராஜபாட்டை அன்று வழக்கத்திற்கு விரோதமாக ஆள் நடமாட்டமற்று வெறிச்சோடிப் போய்க் கிடந்தது. அந்தப் பல்லக்கும், அதற்குக் காவலாக அருகில் கடந்து சென்ற சில வீரர்களும் தவிர வேறு யாரும் அங்குக் கண்ணுக்கெட்டிய தூரம்வரை தென்படவில்லை.

மாலை நேரமாதலால் பல்லக்கின் விதானம் சுருட்டிக் கட்டப்பட்டிருந்தது. பல்லக்கினுள்ளே இளம் பெண்ணொருத்தி அமர்ந்திருந்தாள். கயலெழுதி, வில்லெழுதிக், கார் எழுதிக், காமன் செயல் எழுதித் தீர்ந்த திங்கள் முகத்தினளாய் அமர்ந்திருக்கும் அந்தப் பேரழகி நீண்ட தூரப் பயணத்தினால் சோர்வுற்றவளாகக் காணப்பட்டாள்.

ஆனால் அந்தச் சோர்வினூடே மகிழ்ச்சியும் காணப்பட்டது. அவளது கருவிழிகள் ஓயாது சுழன்று கொண்டிருந்தன. சோழ வளநாட்டின் நீர்வளமும் நிலவளமும் அவளது உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டன போலும். தனது கரிய கண்களை அகல விரித்து அடிக்கடி தன் வியப்பை வெளிக்காட்டினாள். பல்லக்கின் அருகில் நடந்து வந்து கொண்டிருக்கும் தோழியிடம் அடிக்கடி தனது குதூகலத்தைப் போல வெளிக்காட்டிக் கொண்டு வந்தாள். சோழ வளநாட்டில் புகும்போதே இவ்வாறு எழில் தவழுகிறதே. இன்னும் போகப்போக, அதுவும் பொன்னியாற்றின் கரை நெடுகிலும் எவ்வளவு கண்கொள்ளாக் காட்சிகள் நிறைந்திருக்கும் என எண்ணிய போது அவளுக்குத் திகைப்பாக இருந்தது.

சோழ வளநாட்டின் வளங்குறித்தும், பொன்னியாற்றின் எழில் குறித்தும் அவள் எத்தனையோ இலக்கியங்களில் படித்திருக்கிறாள். பலர் சொல்லக் கேட்டிருக்கிறாள். ஆனால் நேரில் காணும் வாய்ப்பு இதுவரை அவளுக்குக் கிட்டியதில்லை. இப்போது கிட்டப் போகிறது.

பொன்னி வளநாட்டின் பேரெழிலைப் பருகுவதோடு மட்டுமல்ல. நாடு, நகரமெல்லாம் வியந்து போற்றும் சோழ இளவரசிகளான மதுராந்தகி, வீரமாதேவி ஆகியோரின் நட்பு அவளுக்குக் கிடைக்கப் போகிறது. சோழ சாம்ராஜ்யத்தின் இளவரசிகளின் நட்புக் கிடைப்பது என்றால் சாமான்யமானதா? அவர்களைக் கண்டு மகிழுவதே பெரும்பேறாயிற்றே.

இளவரசி மதுராந்தகியின் மதிநுட்பத்தைப் பற்றி அவள் மிகக் கேள்விப்பட்டிருக்கிறாள். ஆம், இளவரசி மதுராந்தகி பெற்றிருந்த இலக்கியப் புலமை அந்த நாளில் மிகப்பிரசித்தி பெற்றிருந்தது. கவிச்சக்கரவர்த்தியான சயங்கொண்டாரின் தலைமாணவியாக அவள் திகழ்ந்தாள். அத்தகைய இளவரசியின் அருகில் இருக்கப் போவதை எண்ணிய போது அவள் உள்ளம் சிலிர்த்தது.

மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர் தமது பேத்தியைச் செல்லமாக மட்டும் வளர்க்கவில்லை. இலக்கியப் பித்தையும் அவளுக்கு ஊட்டியே வளர்த்து வந்தார். அவளும் ஓரளவிற்குத் தமிழில் தேர்ச்சி பெற்றுத் திகழ்ந்தாள். பாட்டனிடம் குடிகொண்டிருந்த தமிழ்க் காதல் பேத்தியையும் அரவணைத்துக் கொண்டது.

போருக்குப் புறப்படுவதற்கு முன்பு அவளைக் கங்கைகொண்ட சோழபுரத்தில்விட்டுச் செல்வது என மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர் முடிவு செய்தார். தமது பேத்தியின் பாதுகாப்பை மட்டும் எண்ணி அவர் இந்த முடிவிற்கு வரவில்லை! அவளது கல்வியையும் கருத்தில் கொண்டுதான் இத்தகைய முடிவு செய்தார். இந்த முடிவைப் புவனமாதேவியிடம் அவர் கூறிய போது அவளும் அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டாள். பாட்டனின் பிரிவு ஒருபுறம் வேதனை தந்த போதிலும், மறுபுறத்தில் இளவரசி மதுராந்தகியின் மூலம் கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டாரிடம் கல்வி பயிலக் கிடைக்கப் போகும் வாய்ப்பு அவளுக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

இவ்வாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்த புவனமாதேவிககுத் திடீரென மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர் கூறிய மற்றொன்று நினைவிற்கு வந்தது. அவளால் சிரிப்பை அடக்க முடியவில்லை. கல கலவென சிரித்தாள். அருகில் வந்த தோழி திகைத்தாள்.

“என்னம்மா, திடீரெனச் சிரிக்கிறீர்கள்” என்றாள்.

தோழியின் கேள்வி கண்டு புவனா தன் நினைவு பெற்றாள். ‘சே! என்ன பைத்தியக்காரத்தனம். சாலையில் இப்படிச் சிரித்தால்

பார்த்தவர்கள் என்ன நினைக்கமாட்டார்கள்' எனத் தன்னையே கடிந்து கொண்டவளாக "ஒன்றுமில்லை" என மழுப்பினாள்.

ஒன்றுமில்லை என்று சொன்ன போதிலும் மீண்டும் அவள் உள்ளம் பாட்டன் கூறிய வார்த்தைகளைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

"புவனா! இதைக் கேள். இளவரசிகளுடன் உனக்குப் பழக்கம் இருக்க வேண்டும் என்பதற்காகவோ சயங்கொண்டாரிடம் நீ தமிழ் பயில வேண்டும் என்பதற்காகவோ மட்டும் உன்னைக் கங்கைகொண்ட சோழபுரம் அனுப்பவில்லை. எனக்கோ வயதாகிக் கொண்டிருக்கிறது. உனக்கேற்ற நாயகன் ஒருவனைத் தேடிப்பிடித்து உன்னை அவன் கையில் ஒப்படைக்க வேண்டும் என விரும்புகிறேன். அதற்காகவும் உன்னைக் கங்கைகொண்ட சோழபுரம் அனுப்புகிறேன்" என்றார்.

"தாத்தா! கங்கைகொண்ட சோழபுரத்தின் கடைத் தெருவில் பொன்னும், மணியும், அகிலும், ஆரமும் கொட்டிக் கிடப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேனே தவிர நீங்கள் சொல்வது போல நாயகர்கள் கொட்டிக் கிடப்பதாகக் கேள்விப்பட்டதில்லையே" எனக் கூறிவிட்டுக் கலகலவெனச் சிரித்தாள்.

"புவனா! நீ சிறு குழந்தை. உனக்கொன்றும் தெரியாது. எல்லைக் காவல் வேலையில் மூழ்கியிருக்கும் என்னைத் தேடி யார் வரப்போகிறார்கள். ஆனால் தலைநகரைத் தேடிப் பலரும் வருவார்கள். இளவரசிகளின் அரவணைப்பில் நீ இருக்கும் போது அவர்களே உனக்கேற்ற நாயகன் ஒருவனைத் தேடிப் பிடித்துத் திருமணம் செய்து வைப்பார்கள்."

"வைப்பார்கள்! வைப்பார்கள்! அந்த இளவரசிகளே இன்னும் என்னைப் போலக் கன்னிகளாக இருக்கிறார்கள். ஒருவேளை நானே அவர்களுக்கு நாயகர்களைத் தேடிப் பிடித்தாலும் பிடிப்பேன்" என்று குறும்புடன் கூறினுள் புவனா.

"யாரம்மா கண்டது! நீ தேடிப் பிடிப்பாயோ! அவர்கள் தேடிப் பிடிப்பார்களோ அல்லது உன்னைத் தேடி அந்த நாயகனே வரப் போகிறானோ" என்றார் மதுராந்தகத் தமிழ்ப் பேரரையர்.

"அந்த நாயகன் குதிரை மேல் வருவானா? யானை மேல் வருவானா? எப்படி வருவான் தாத்தா?"

“எப்படியாவது வருவான். உனக்கென்று ஒருவன் இனிமேலா பிறக்கப் போகிறான்? விரைவில் வந்து உன் கொட்டத்தை அடக்குவான் பார்!”

பாட்டனுடன் தான் நிகழ்த்திய பேச்சை எண்ணிப் பார்த்த போது அவளுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது. அதுவும் குதிரை மேல் வருவானா? யானை மேல் வருவானா? எனத் தான் கேட்டதை எண்ணிய போது அவளால் சிரிப்பை அடக்கவே முடியவில்லை.

அவள் சிரித்து வாய் மூடுவதற்குள் எங்கிருந்தோ குதிரைகள் வரும் ஒலி கேட்டது. புவனமாதேவி திடுக்கிட்டுப் போனாள்.

ஆம்! எதிரில் புழுதியைக் கிளப்பிக் கொண்டு இரு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. குதிரை மேல் வருபவர்கள் யாராக இருக்கும்? தலைநகருக்கு எத்தனையோ பேர் போவார்கள். யார் எவர் என்று அறிந்து கெண்டிருக்க முடியுமா? இவ்வாறு அவள் எண்ணமிட்டுக் கொண்டிருந்த போதே குதிரைகள் நெருங்கி வந்துவிட்டன.

இரண்டு இளைஞர்கள் குதிரைகளின் மேல் அமர்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் ஆடை ஆபரணங்களைப் பூண்டு கம்பீரமாகத் தோற்றமளித்தான். வீரமும் திருவும் அவன் முகத்தில் குடிகொண்டிருந்தன. ஒய்யாரமாக அவன் குதிரை மீது வந்த காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாக இருந்தது. அருகில் வந்தவன் அவனது தோழன் போலும்.

குதிரையில் வந்த வீர இளைஞனது விழிகள் புவனாவைக் கண்டன; அவளது மதி முகத்தில் தோய்ந்தன; வேல் விழிகளைச் சந்தித்தன. ஒருகணம் தயங்கி நின்றன. மறுகணம் அந்த விழிகளின் வீச்சைச் சமாளிக்க முடியாமல் திணறின.

இந்தக் கணநேரத்தில் பல்லக்கும் குதிரையும் ஒன்றையொன்று கடந்தன. பொங்கியெழும் ஆவளை அடக்க முடியாமல் புவனா திரும்பிப் பார்த்தாள். அவனும் திரும்பினான். மறுகணம் எங்கிருந்தோ நாணம் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டது. தலை கவிழ்ந்தவளாகத் திரும்பிக் கொண்டாள்.

# 11. புயலில் சிக்கிய பூவை

“குமுதசந்திரா! அந்தப் பல்லக்கில் போவது யாராக இருக்கும்?” என்றான் அதிராசேந்திரன்.

“யாரோ ஓர் அழகிய பெண் போலத் தெரிகிறது, இளவரசே!” என்றான் குமுதசந்திரன்.

“அதுதான் தெரிகிறதே! அந்தப் பெண் யார் என்றுதான் கேட்டேன்?”

“பிறபெண்களைப் பற்றி விசாரித்து அறிந்து கொள்ளும் வழக்கத்தை இதுவரை நான் மேற்கொள்ளவில்லை இளவரசே! வேண்டுமானால் இப்போதே போய் விசாரித்து வரட்டுமா?”

“குமுதசந்திரா! உன் குறும்புத்தனம் உன்னைவிட்டுப் போகாது போல் இருக்கிறது. அந்தப் பெண்ணைப் பார்த்தால் இந்தப் பக்கத்திற்கே புதியவள் போலத் தெரிகிறதே! ஒருவேளை உனக்கு ஏதேனும் தெரியுமா என்று கேட்டால் கேலி செய்கிறாயே?”

“இளவரசே! ஒன்று கேட்கிறேன். கோபித்துக் கொள்ளமாட்டீர்களே!”

“கேள் குமுதசந்திரா! தைரியமாகக் கேள்.”

“இந்தப் பக்கத்திற்கு அந்தப் பெண் புதியவள் என்பது எப்படி இளவரசே உங்களுக்குத் தெரிந்தது. சில விநாடிகளுக்குள் அதை எப்படி இளவரசே தெரிந்து கொண்டீர்கள். கணநேரத்திற்குள் உங்கள் கவனத்தைக் கவர்ந்துவிட்ட அந்தப் பெண் பாக்கியசாலிதான். எத்தனையோ இளவரசிகள் தவங்கிடந்தும் அவர்களின் முகங்களை ஏறிட்டுக்கூடப் பார்க்க மறுத்துவிட்ட சோழ இளவரசரையே ஏறிட்டுப் பார்க்குமாறு செய்த அந்தப் பெண் உண்மையில் பாக்கியசாலிதான்.”

குமுதசந்திரன் கூறியதைக் கேட்ட அதிராசேந்திரன் கலகலவென நகைத்தான்.

“குமுதசந்திரா! உன்னைக் கவிஞன் என நீ அழைத்துக் கொள்வதை இதுவரை நான் ஏற்றுக் கொண்டதில்லை. அதை இப்போது ஏற்றுக் கொள்கிறேன். உனது கற்பனைத் திறன் நான் எதிர்பார்த்ததைவிட மிக அதிகமாக இருக்கிறது.”

“அப்பாடா! இளவரசே! உங்கள் வாயால் நான் கவிஞன் எனப் புகழப்பட வேண்டும் என விரும்பினேன். சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசரே என்னைக் கவிஞன் என ஒப்புக் கொண்ட பிறகு வேறு பாராட்டு வேண்டியதில்லை. இது போதும். இளவரசே! இப்போதே அமுதவல்லியிடம் போய்..”

“பொறு! பொறு! புலவர் மகளிடம் போய் என்ன செய்யப் போகிறாய்?”

“புலவர் மகளின் கொட்டத்தை ஒடுக்கிவிட்டு வருகிறேன். அவளுடைய தந்தையைச் சக்கரவர்த்தி பாராட்டியதில் இருந்து அவளுக்குத் தலைகால் தெரியவில்லை. அந்தக் கர்வத்தில் என்னைப் பார்த்து நீயும் ஒரு கவியா? எனக் கேட்டுவிட்டாள். அந்த அவமானத்தைப் பொறுக்க முடியாமல் துடித்துக் கொண்டிருந்தேன்.”

“கேவலம்! ஒரு பேதைப்பெண் ஏதோ சொல்லிவிட்டாள் என்பதற்காகவா துடித்துப் போனாய்?” என்றான் அதிராசேந்திரன் கிண்டலுடன்.

“இளவரசே! உங்களுக்கு இன்னும் அந்த அனுபவம் ஏற்படவில்லை. யார் கேலி செய்தாலும் பொறுத்துக் கொள்ளலாம்! காதலி கேலி செய்தால் அது சுருக் எனத் தைக்கும்” என்றான் குமுதசந்திரன்.

“ஓகோ! அப்படியா! இந்த உண்மை எனக்குத் தெரியாது. ஒருவேளை விஷ்ணுவர்த்தனனுக்குத் தெரிந்திருக்கும்.”

“நீங்களும் விரைவில் தெரிந்து கொள்வீர்கள்” என்று கூறி நகைத்தான் குமுதசந்திரன்.

அவன் கூறியதன் உட்பொருளைப் புரிந்து கொண்ட அதிராசேந்திரன் “கண்டதும் காதல் கொள்ளும் பித்தன் நானல்ல. அந்தப் பெண்ணைப் பற்றி ஏதோ நான் கேட்கப் போக, நீ கதைகட்டத் தொடங்கிவிட்டாய்” என்றான்.

இவ்விதம் கேலியாக உரையாடிக் கொண்டே வந்த அவர்கள் தங்கள் தலைக்கு மேல் நிகழ்ந்து கொண்டிருந்த ஒரு மாற்றத்தைச் சற்றும் கவனிக்கவில்லை. ஆம்; வானத்தில் கருமேகங்கள் சூழ்ந்து கொண்டிருந்தன. பெருமழை பெய்யப் போவதன் அறிகுறியாகச் சில்லென்ற காற்று வீசத் தொடங்கியது. மனிதர்களைவிடக்

குதிரைகள் இயற்கையை உணர்வதில் சிறந்தவை அல்லவா? எனவே அவைதம் உடல்களைச் சிலிர்த்தன.

அதைக் கவனித்த குமுதசந்திரன் "இளவரசே! இன்று நம் புலவர் பெருமானைச் சந்திக்க இயற்கை அன்னை அனுமதிக்கமாட்டாள் போலத் தெரிகிறதே" என்றான்.

"என்ன சொல்லுகிறாய் குமுதசந்திரா?" என்று கூறிய அதிராசேந்திரன் அண்ணாந்து பார்த்தான்.

பொட்டென மழைத்துளி ஒன்று அவன் முகத்தில் பட்டுத்தெறித்தது.

"நல்லது! குமுதசந்திரா! அருகில் தங்குவதற்கு ஏதேனும் இடமிருக்கிறதா?"

"வரும் வழியில் ஒரு பாழும் மண்டபத்தைப் பார்த்தோமே அதைத் தவிரத் தங்குவதற்கு வேறு இடம் இல்லை."

"அப்படியானால் அங்கேயே செல்வோமே" என்று கூறிய வண்ணம் குதிரையைச் சடாரெனத் திருப்பினான் அதிராசேந்திரன். குதிரை விரைந்து ஓடத் தொடங்கிற்று. பெருமுயற்சியுடன் அவனைப் பின் தொடர்ந்து தனது குதிரையைக் குமுதசந்திரன் செலுத்தினான்.

சிறிது தூரம் அவர்கள் போவதற்குள் பெருமழை பெய்யத் தொடங்கிவிட்டது. பற்றாக்குறைக்குச் சூறாவளிக் காற்றும் சேர்ந்து கொண்டு அவர்களின் வேகத்தைத் தடைப்படுத்தியது.

"இளவரசே! இப்படித் தெப்பமாக நனைந்துவிட்டீர்களே!" எனப் பரிதவித்தான் குமுதசந்திரன்.

"மழையில் நனைவதும் உற்சாகமாகத்தான் இருக்கிறது" என்றான் அதிராசேந்திரன்.

"ஒரு குடையின் கீழ் இந்த உலகை எல்லாம் ஆட்சி செய்யும் உங்களுக்கு இந்த மழையில் பிடித்துக் கொள்ள ஒரு குடை கிடைக்கவில்லையே!" என அங்கலாய்த்தான் குமுதசந்திரன்.

கடும் மழையிலும் குமுதசந்திரனின் குறும்புப் பேச்சு அவனைவிட்டு நீங்காதது கண்டு சிரித்தான் அதிராசேந்திரன்.

அந்தப் பாழும் மண்டபத்தை அவர்கள் நெருங்கிய போது நன்றாக இருட்டிவிட்டது. இருட்டுவதற்காகவே காத்திருந்தது போல அடைமழை பெய்யத் தொடங்கிற்று. சோவென இடைவிடாது பெய்த

அந்தப் பெருமழையில் குதிரைகள் தடுமாறின. பெரும் சிரமத்துடன் குதிரைகளை அவர்கள் செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

அப்போது பளிச் என ஒரு மின்னல் மின்னியது. அந்த மின்னலொளியில் கண்ட பயங்கரமான காட்சி அவர்களின் குருதியை உறையச் செய்தது.

ஆம்; சற்றுமுன் சாலையில் அவர்கள் கண்ட பல்லக்கின் மேல் பெரு மரமொன்று விழுந்து கிடந்தது. தீனக்குரலில் பலர் அலறும் சப்தமும் கேட்டது.

# 12. பயங்கர இரவு

அந்த இரவுதான் எத்தகைய பயங்கர இரவு. சோவெனப் பெய்த பெருமழையுடன், விர் என வீசிய சூறாவளிக் காற்றும் சேர்ந்து கொண்டது. காற்றிலும் மழையிலும் சிக்கிய மரங்கள் படாதபாடுபட்டன. நீண்ட நெடுங்காலமாக அந்தச் சாலைக்கு நிழலளித்து வந்த பெருமரங்கள் இயற்கையின் கோரத்தாண்டவத்திற்கு எளிதில் இரையாயின.

அப்படிப் பெருமரமொன்று வேரோடு சாய்ந்த போதுதான் கண்ணிமைக்கும் நேரத்தில் அந்த விபத்து நிகழ்ந்துவிட்டது. ஆம்! பெருமழை பெய்யத் தொடங்கியவுடன் இனித் தொடர்ந்து பயணம் செய்ய முடியாது என்பதை உணர்ந்த புவனமாதேவி தூரத்தில் தெரிந்த பாழடைந்த மண்டபத்தில் ஒதுங்குமாறு ஆணையிட்டாள். அவ்விதமே ஒதுங்கிய பல்லக்குத் தூக்கிகள் அம்மண்டபத்தின் அருகே பல்லக்கை மெதுவாக இறக்கினர். பல்லக்கிலிருந்து இறங்குவதற்காக எழுந்த புவனா எதிரில் பயங்கரமான காட்சியைக் கண்டு திடுக்கிட்டவளாய் ‘வீல்’ எனக் கத்திக் கொண்டு பின்னல் சாய்ந்தாள். அருகில் இருந்தவர்கள் திகைத்துத் திரும்புவதற்குள் அந்தப் பெருமரம் வேரோடு சாய்ந்து அவர்களை அப்படியே அமுக்கியது. பாழடைந்த மண்டபத்தின் மீது பாதியும், தரையில் பாதியுமாக அந்தப் பிரமாண்டமான மரம் விழுந்தது.

மரம் சாய்வதைப் பார்த்தவுடனேயே மிரண்டு போன புவனா மயக்கமடைந்தாள். அவளைத் தாங்கிக் கொள்ள ஓடிய தோழியின் தலையில் மரக்கிளை ஒன்று இடித்து வீழ்த்தியது. அவ்வாறே மற்றவர்களும் அந்த மரத்தின் அடியில் சிக்கிக் கொண்டு வெளியே வர இயலாத நிலையில் அபயக்குரலைக் கிளப்பினர்.

அந்தக் காரிருளில், கடும் மழையில் அவர்களின் அபயக்குரல் யாருக்கு எட்டப் போகிறது? யார் உதவிக்கு வரப் போகிறார்கள்?

மயங்கி விழுந்த புவனாவின் முகத்தில் மழைத்துளிகள் பட்டுத் தெறித்தன. சிறிது சிறிதாக அவளுக்கு உணர்வு வந்து கொண்டிருந்தது. அரை மயக்கத்தில் இருந்த அவள் காதுகளில் ஏதோ ஒலிகேட்டது. குதிரைகள் வரும் ஒலி. ஆம்! குதிரைகள் கனைக்கும் சப்தமும் கேட்கிறது. ஒருவேளை! ஒருவேளை! வழியில் சந்தித்தோமே! அந்தச் சுந்தர இளைஞர் வருகிறாரா? அவராக

இருந்தால் எப்படி இருக்கும்? அந்தத் துன்ப வேளையிலும் இன்பம் இழையோடுகிறது.

பளிச் என மின்னலொன்று மின்னிக் கண்ணைப் பறிக்கிறது. படார் எனப் பேரிடி ஒன்று இடிக்கிறது. மறுகணம் புவனா மயக்கமடைகிறாள். மழையில் தள்ளாடி வந்த குதிரைகள் இரண்டும் நிறுத்தப்படுகின்றன. இருவர் கீழே குதித்து இறங்குகின்றனர். தள்ளாடித் தடுமாறிய வண்ணம் சாய்ந்து கிடந்த மரத்தை நெருங்குகின்றனர். அங்கொன்றும் இங்கொன்றுமாக வேதனைக் குரல்கள ஒலித்தனவே தவிர அவை எங்கிருந்து வருகின்றன எனபதை அவர்களால் கண்டு பிடிக்கவே முடியவில்லை.

"குமுதசந்திரா! யாரேனும் பிழைத்துக் கிடக்கிறார்களா என்று பார்."

"இளவரசே! அப்படியொன்றும் நேர்ந்திராது. நல்லவேளையாக மரத்தில் பாதி மண்டபத்தின் மீது கிடக்கிறது."

பளிச் என மறுபடியும் மின்னலொன்று மின்னிக் குமுதசந்திரன் கூறியது உண்மைதான் என்பதை நிரூபித்தது.

பல்லக்கில் வந்த பேரழகி தரையில் கிடப்பதையும், அவள் மீது மரம் விழுந்துவிடாது பல்லக்கின் வளைமரம் தடுத்து நிறுத்தி இருப்பதையும், அந்த மங்கிய மின்னலொளியில் அதிராசேந்திரன் பார்த்தான். மறுகணம் தனது உடைவாளை உருவிக் கிளைகளையும், கொப்புகளையும் வெட்டி வீழ்த்திய வண்ணம் அந்த அழகி கிடந்த இடம் நோக்கி முன்னேறினான். குமுதசந்திரன் அவனைப் பின் தொடர்ந்தான்.

ஆனால் அவர்கள் மேற்கொண்ட செயல் அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. சோவெனப் பெய்த மழை அவர்களின் முன்னேற்றத்தைத் தடுத்தது. எப்படியோ சமாளித்துப் புவனாவை நெருங்கினான் இளவரசன்.

அல்லித்தண்டு போலத் துவண்டு கிடந்த அவளை மெதுவாகத் தூக்கிய வண்ணம் அருகில் இருந்த மண்டபத்திற்குள் சென்றான். அங்கிருந்த மேடையில் அவளைப் படுக்க வைத்தான். மூச்சு வருகிறதா என மெதுவாக மூக்கினருகில் தொட்டுப் பார்த்தான். நல்லவேளை மூச்சு வருகிறது. அப்பாடா! இனி மற்றவர்களைக் கவனிப்போம்!

இந்தக் காரிருளில் மீண்டும் மற்றவர்களைக் காப்பாற்றும் வேளையில் இளவரசனும் குமுதசந்திரனும் இறங்கினர்.

ஒவ்வொருவராக மீட்டுக் கொண்டு வந்து அந்த மண்டபத்தில் கிடத்தினர். புவனாவின் தோழிக்கும் பல்லக்குத் தூக்கிகளில் இருவருக்கும்தான் பலத்த காயம் ஏற்பட்டிருந்தது. இருந்தாலும் அவர்களுக்கெல்லாம் உடனடியாக மருத்துவ உதவி அளித்தாக வேண்டும். இதற்குள் நடுச்சாமமாகிவிட்டது. மழையும் சற்றுக் குறைந்தது.

“ஐயா! நீங்கள் இங்கேயே இருந்து இவர்களைக் கவனித்துக் கொள்ளுங்கள். நான் சென்று உதவிக்கு ஆட்களை அழைத்து வருகிறேன்” என்றான் குமுதசந்திரன்.

“நல்லது! குமுதசந்திரா! ஒரு மருத்துவரையும் உடன் அழைத்து வா!” என்றான் அதிராசேந்திரன்.

“அப்படியே ஆகட்டும்” என்று கூறிவிட்டு அந்த நடுச்சாமத்தில் தட்டுத் தடுமாறிய வண்ணம் குதிரை மீது குமுதசந்திரன் கிளம்பினான்.

தலைநகருக்குச் சென்று உதவிக்கு ஆட்களை அழைத்துக் கொண்டு அவன் திரும்புவதற்குள் எப்படியும் பொழுது புலர்ந்துவிடும். அதுவரை என்ன செய்வது? என யோசித்தவனாகப் புவனாவின் அருகில் இளவரசன் அமர்ந்தான்.

வானத்தில் கருமேகங்கள் சிறிது சிறிதாகக் கலைந்து கொண்டிருந்தன. அங்கொன்றும் இங்கொன்றுமாக விண்மீன்கள் தலைகாட்டத் தொடங்கின. மழைக்குப் பயந்து ஒளிந்திருந்த சந்திரனும் மெதுவாகத் தலைகாட்டத் தொடங்கினான். அத்துடன் அவன் நிற்கவில்லை. அந்த இருண்ட மண்டபத்தில் என்ன நடக்கிறது என்பதை அறியத் துடிப்பவன் போலக் கள்ளத்தனமாக உள்ளே எட்டிப் பார்த்தான்.

அந்த மங்கிய நிலவொளியில் புவனமாதேவி படுத்திருந்த காட்சி, ஏதோ கனவுலகத்தை நினைவுபடுத்தியது. அலங்கோலமாக மயங்கிக் கிடக்கும் நிலையிலும் அவளின் அழகு சுடர்விட்டுப் பிரகாசித்தது.

பிறபெண்டிரை ஏறிட்டும் பாராத சோழ குலத்தின் பரம்பரைப் பண்பாடு அதிராசேந்திரனின் உடலிலும் ஊறியிருந்தது. இதுவரை அவனும் பிறபெண்டிரை ஏறிட்டுப் பார்த்தவனும் அல்லன். சோழப்

பேரரசின் வருங்கால முடிமன்னனின் கழுத்தில் மணமாலை சூடிப் பட்டத்தரசியாவதோடு மட்டுமல்ல அவனது இதய அரசியாகவும் மாற எத்தனையோ அழகிய மங்கையர் துடித்தனர். இமயம் முதல் குமரிவரை இருந்த எத்தனையோ மன்னர்கள் தங்களது அருமருந்தன்ன செல்விகளை அதிராசேந்திரனுக்குக் கரம்பிடித்துக் கொடுக்க முயன்றனர். ஆனால் என்ன காரணத்தினாலேயோ சோழ இளவரசன் மணப் பேச்சுக்களைத் தட்டிக்கழித்து வந்தான். அவனது வீர உள்ளம் போர்க்களங்களைக் காணத் துடித்ததே தவிர மணக்களங்களைக் காணத் துடிக்கவில்லை. வேலின் கூர்மையைப் பார்க்கும் போது சிலருக்கு வேல் விழி மாதரின் நினைவு தோன்றும். ஆனால் அதிராசேந்திரனது வீர உள்ளமோ வேறுவிதமாக எண்ணும். மதங்கொண்ட மத்தகத்தின் முகபடாத்தைக் கிழித்து ஊடுருவ இந்தக் கூர்மை போதுமா என்றுதான் அவன் சிந்திப்பான்.

அப்பேர்ப்பட்ட வீரத்திருமகனின் உறுதியை இந்தப் பேதைப் பெண் பொடிப்பொடியாக்கித் தகர்த்துவிடுவாள் போல இருந்தது. சித்திரப்பாவையாக, பொற்பதுமையாக மயங்கிக் கிடக்கும் அந்தப் பேரழகி அவனையும் மயங்க வைத்தாள்.

அவளது அழகை அள்ளிப் பருகிய வண்ணம் மெய்மறந்த நிலையில் இருந்த அவனுக்குத் திடீரென ஒரு நினைவு வந்தது. திடுக்கிட்டவனாக எழுந்தான். ஆம்! காயம்பட்டுக் கிடந்த மற்றவர்கள் கதி என்ன ஆனது? எப்படி இருக்கிறார்கள்? என்ற எண்ணந் தோன்ற எழுந்து சென்று பார்த்தான். மங்கிய நிலவொளியில் அவன் கண்ட காட்சி பரிதாபகரமாக இருந்தது.

காயங்களிலிருந்து குருதி பெருகியோட அவர்கள் வேதனையுடன் முனகிக் கொண்டிருந்தார்கள். தனது மேல் உத்தரியத்தை எடுத்துப் பல துண்டுகளாக இளவரசன் கிழித்தான். மண்டபத்தின் மூலையிலேயே கிடந்த பழைய மண்சட்டியொன்றினை எடுத்து, வெளியே ஓடையென ஓடிக் கொண்டிருந்த மழை நீரை நிரப்பினான்.

காயமடைந்தவர்களின் அருகில் அமர்ந்து ஒவ்வொருவரின் காயங்களையும் கழுவித் துடைத்துக் கட்டத் தொடங்கினான். இடையிடையே அவர்கள் பேசியதில் இருந்து அந்தப் பேரழகி யார் என்பதை அறிந்த போது அவன் இதயமே நின்றுவிடும் போலிருந்தது. 'மாவீரர் மதுராந்தகத் தமிழ்ப் பேரரையின் பேத்தியா இவள்! சோழப் பேரரசுக்கு அவர் செய்துள்ள மாபெரும் தொண்டுகளுக்கு நன்றி

செலுத்த இப்போதாவது வாய்ப்புக் கிடைத்ததே! ஆனால் தான் யார் என்பதை அறிந்தால் தனது உதவியை நிச்சயம் அவர்கள் ஏற்க மறுத்துவிடுவார்கள். பயபக்தியுடன் எழுந்து நின்று மரியாதை செலுத்தத் தொடங்கிவிடுவார்கள். கூடாது. கூடவே கூட்டாது! தான் யார் என்பதை இறுதிவரை வெளிப்படுத்தவே கூடாது.’

# 13. பொழுது புலர்ந்தது

பொழுது மெதுவாகப் புலர்ந்து கொண்டிருந்தது. இரவில் பெய்த மழையில் சிக்கி நடுங்கிப் போயிருந்த புள்ளினங்கள் புதிய தெம்புடன் குரலிசைத்துக் கொண்டிருந்தன. மண்டபத்தின் தூண் ஒன்றில் சாய்ந்த வண்ணம் அரைத் தூக்கத்தில் இருந்த அதிராசேந்திரன் விழித்துக் கொண்டான். சுற்று முற்றும் கவனித்தான். அனைவரும் ஆயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். மெதுவாகப் புவனமாதேவியின் அருகில் சென்றான். அவளது அழகிய விழிகள் இன்னும் மூடியே இருந்தன. ஒருவேளை மயக்கம் இன்னும் தெளியவில்லையோ என எண்ணியவனாக அவள் முகத்தருகில் கையை நீட்டினான். அவளது குவளைக் கண்கள் மெதுவாக விரிந்தன. ஒருகணம் இளவரசனின் முகத்தை உற்று நோக்கின. மறுகணம் தான் காண்பது கனவா அன்று நனவா என்பதை அறியாது விழித்தன.

ஆனால் தன் முகத்தைப் பார்த்தவாறே அந்த இளைஞன் மெய்மறந்து நிற்பதைக் கண்டவுடன் தான் காண்பது கனவுதான் என்பதை அவள் உணர்ந்தாள். அதை உணர்ந்த மறுகணமே எங்கிருந்தோ வெட்கம் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டது. சரேலென எழுந்து உட்கார்ந்தாள். அவள் எழுவதைக் கவனித்த இளவரசன் "பெண்ணே! பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. உன்னைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் பத்திரமாக இருக்கிறார்கள்" என்றான்.

அப்போதுதான் அவளுக்கு முன்னிரவு நடைபெற்ற கோர நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது. தான் மயங்கிய வேளையில் கேட்ட குதிரைக் காலடிச் சத்தமும் நினைவுக்கு வந்தது.

இந்த வீர வாலிபர்தான் தன்னையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் காப்பாற்றியவர் என்பதை அறிந்த போது அவளுள்ளத்தில் நன்றியைவிட மகிழ்ச்சி பெருகியது.

"ஐயா! உங்கள் உதவிக்கு எப்படி நன்றி சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை. முன்பின் தெரியாத எங்களிடம் தாங்கள் காட்டிய அன்பிற்கு என்றென்றும் நாங்கள் கடமைப்பட்டுள்ளோம்" என்றாள்.

குயிலினுமினிய குரலில் அவள் பேசியதைக் கேட்ட அதிராசேந்திரன் கனவுலகில் மிதந்தான். அப்போது தொலைவில்

ஏதோ சந்தடி கேட்டது. அது என்ன என்பதை அறிய இருவரும் மண்டபத்தின் வாயிலில் வந்து நின்றனர். தொலைவில் குதிரைகள் விரைந்து வரும் ஒலி கேட்டது.

வருவது குமுதசந்திரனாகத்தான் இருக்க வேண்டும். அவன் வந்தால் நிச்சயமாக நம்மை இன்னார் என்பதை வெளிப்படுத்திவிடுவான். எனவே வழியிலேயே அவனை எச்சரிக்க வேண்டும் எனத் தீர்மானித்த அதிராசேந்திரன் புவனாவின் பக்கம் திரும்பி “யார் வருகிறார்கள் என்பதை அறிந்து வருகிறேன்” என்று கூறிவிட்டுக் குதிரை மீதேறி விரைந்தான்.

அவன் போவதைக் கவனித்துக் கொண்டிருந்த புவனாவின் நெஞ்சத்தில் என்றுமில்லாத ஒரு கிளுகிளுப்பு ஏற்பட்டது. அவன் தலைமறையும் வரை பார்த்துக் கொண்டே இருந்தாள். ஒரு தடவையாவது அவன் திரும்பிப் பார்க்கமாட்டானா? என்ற சபலம் அவளுக்கு! ஆனால் அந்தச் சுந்தர இளைஞனோ சற்றும் திரும்பிப் பார்க்கவில்லை.

சற்று நேரத்தில் அந்த மண்டபத்தின் முன்பு குதிரை வீரர்கள் பலர் சூழத் தேர் ஒன்று வந்து நின்றது. தேரில் இருந்து மருத்துவர் ஒருவர் கைப்பெட்டியுடன் இறங்கினார். அவரும் மற்றொரு இளைஞனும், மண்டபத்தின் உள்ளே புகுந்தனர்.

உள்ளே நுழைந்தவர்களைப் பார்த்த வண்ணம் புவனா திகைத்து நின்றாள். இந்த இளைஞன் யார்? இவனை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே? ஆம்! நேற்றுக் குதிரையில் எதிரில் வந்தவர்களில் இவனும் ஒருவன். தன்னைக் காப்பாற்றியவனின் நண்பன்.

அவளது திகைப்பைப் புரிந்து கொண்ட அந்த இளைஞன் பேசத் தொடங்கினான்.

“அம்மணி! மன்னிக்க வேண்டும். என்னைக் கவி குமுதசந்திரன் என்பார்கள். ஆபத்தில் சிக்கிய தங்களை மீட்டுப் போவதற்காகவே வந்துள்ளேன். இவர் மருத்துவர். தங்களுக்கு ஏதேனும்..”

“எனக்கொன்றுமில்லை. மரம் விழுந்த அதிர்ச்சியில் சற்று மயக்கம் ஏற்பட்டது. இப்போது தெளிந்துவிட்டது. இவர்களுக்குத்தான் மருத்துவம் பார்க்க வேண்டும்” எனக் கூறினாள் புவனா.

மருத்துவரும் மற்றவர்களைக் கவனிக்கலானார். புவனமாதேவியோ அளவு கடந்த வியப்பில் ஆழ்ந்திருந்தாள். வருபவர்கள் யார் என்பதை அறிந்துவரப் போன அந்த இளைஞன் ஏன் இன்னும் திரும்பவில்லை? என்ற கேள்வி அவளைக் குடைந்து கொண்டிருந்தது. அடிக்கடி வாயிற்புறம் நோக்கிக் கொண்டிருந்தாள். அவளது தவிப்பைக் கண்ட குமுதசந்திரன் மனதிற்குள் சிரித்துக் கொண்டான்.

“அம்மணி! மன்னிக்க வேண்டும். ஒன்று சொல்ல மறந்துவிட்டேன். அவசர வேலை இருப்பதாகக் கூறிவிட்டுத் தளபதி போய்விட்டார். இதைத் தங்களிடம் தெரிவிக்கச் சொல்லியிருந்தார். நான் மறந்துவிட்டேன்” என்றான்.

“தளபதியா! எந்தத் தளபதி?” என்றாள் புவனா.

“கோட்டைக் காவல் தளபதி! அவர்தான் உங்களைக் காப்பாற்றியவர்” என்றான் குமுதசந்திரன்.

“ஓகோ” என்றாள் புவனா வியப்பினால். அவள் விழிகள் சற்று விரிந்தன.

“அம்மணி! தாங்கள்..” என இழுத்தான் குமுதசந்திரன்.

“மதுராந்தகத் தமிழ்ப் பேரரையரின் பேத்தி. என் பெயர் புவனமாதேவி.”

இவ்வளவு நேரம் அவளைத் திகைப்பில் ஆழ்த்தி வேடிக்கை பார்த்த குமுதசந்திரன் திடுக்கிட்டுப் போனான். அவனை அறியாது அவனிடம் பயபக்தி குடியேறியது. சோழப் பேரரசின் சக்கரவர்த்திக்கு அடுத்த இடத்தில் இருப்பவரின் பேத்தியல்லவா! அதை உணர்ந்ததும் அவனது வேடிக்கைப் பேச்சுக்கள் அவனிடமிருந்து விடைபெற்றன.

ஒருவேளை இளவரசருக்கு இந்த உண்மை தெரியாதோ? அதனால்தான் தன்னை இன்னான் என வெளிக்காட்டாமல் இருக்கும்படி ஆணையிட்டுச் சென்றாரோ? என எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மனதைக் குழப்பிக் கொண்டான் குமுதசந்திரன்.

இதற்குள் மருத்துவர் தனது வேலையை முடித்தார். புவனமாதேவியும் அவளது தோழியும் தேரில் ஏறி அமர்ந்தனர் காயமடைந்தவர்களைக் குதிரைகள் மீது ஏற்றினர். பிறகு அனைவரும் தலைநகரம் நோக்கிப் பயணமாயினர்.

# 14. தோழி

ஒருபுறம் நெடிதுயர்ந்த ஏரிக்கரை. மறுபக்கம் சலசலவென உருண்டோடும் நீரோடை. இவற்றின் நடுவே வளைந்து நெளிந்து செல்லும் அந்தச் சாலையில் தேர் ஒன்று விரைந்து சென்று கொண்டிருந்தது.

எழிலரசிகளான மூவர் அந்தத் தேரில் அமர்ந்திருந்தனர். அரசிளங்குமரிகளைத் தாங்கிச் செல்லுகிறோம் என்ற பெருமிதத்தோடு தேரை இழுத்த வெண்புரவிகள் விரைந்து ஒய்யார நடை போட்டன.

தேரிலே அமர்ந்திருந்தவர்கள் ஏற்கனவே நமக்கு அறிமுகமானவர்கள். இடது ஓரத்தில் அமர்ந்திருக்கும் அந்தப் பேரழகி யார்? ஓயாது சுழலும் அவளது கருவிழிகளைக் கண்டு நாம் செயலற்றுவிடுகிறோம். எறிவளைகள் ஆர்ப்ப இருமருங்கும் ஓடும் அவளது கறைகெழுவேற் கண்களோ, நெடிதுயர்ந்த ஏரிக்கரையைக் கண்டு வியப்பில் அமிழ்ந்திருந்தன.

“குன்றனைய இக்கரையை எப்படியக்கா எழுப்பினார்கள்?!” என்றாள் அவள். அவளது குரலில் வியப்பும் திகைப்பும் கலந்து போட்டியிட்டன.

“புவனா, நீ இந்தப் பக்கத்திற்கே புதியவள். ஆகையால் இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டாய். நீ மட்டும் என்ன? கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வரும் வெளிநாட்டினர் யாவரும் இந்தக் கேள்வியைக் கேட்கிறார்கள். கடல் கடந்த நாடுகளில் இருந்து வரும் யவனர்களும், சீனர்களும், சிங்களவர்களும் இந்த ஏரியைக் கண்டதும் திகைத்துப் போகிறார்கள். செயல் திறனை இழந்து மெய்ம்மறந்து போகிறார்கள். இந்த ஏரியின் கரைகள் எழுப்பப்படும் பொழுது பார்த்திருந்தால் அவர்களின் நெஞ்சங்கள் வியப்பினால் நின்றே போயிருக்கும்!” என்றாள் இளவரசி மதுராந்தகி.

புவனமாதேவியின் அழகிய கண்கள் மேலும் சற்று விரிந்தன. அவளது வியப்பைக் கண்ட மதுராந்தகி பேசவாரம்பித்தாள்.

“புவனா! எங்கள் பாட்டன் கங்கைகொண்ட சோழரைப் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். அப்போது நான் மிகச் சிறு குழந்தை. அப்போது இந்த ஏரியின் வேலை வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இந்த வேலையை மேற்பார்வையிட அடிக்கடி இராசேந்திர சோழர் வருவது வழக்கம். அப்போது பாட்டனாருடன் நானும் அவரும் வருவோம்.."

இதுவரை அமைதியாக இருந்த குறும்புக்காரியான வீரமாதேவி குறுக்கிட்டாள். "அவர் என்று சொன்னால் புவனவிற்கு எப்படியக்கா தெரியும்!" என்று கேட்டுவிட்டுக் கலகலவென நகைத்தாள். மதுராந்தகியின் மதி முகத்திலே செம்மை படர்ந்தது.

"சீ! குறும்புக்காரி! ஏதடா வழிநெடுகிலும் ஒன்றும் பேசாமல் வருகிறாள் என்று பார்த்தேன். இருக்கட்டும். உனக்கென்று ஒருவன் வராமலா போகப் போகிறான். அப்போது பேசிக் கொள்கிறேன்" என்றாள்.

"எப்படி இருந்தாலும் எனக்கென்று வருபவன் வேங்கி இளவரசரைப் போல் ஏமாற்றுக்காரனாக இருக்கமாட்டான்."

"ஏனடி அப்படிக் கூறுகிறாய். அவர் உன்னை ஏமாற்றினாரா?"

"என்னை ஏமாற்ற நினைத்தால் விடுவேனா? உன்னைப் போன்ற அப்பாவியைத்தான் சிறுவயதில் இருந்தே ஏமாற்றி மயங்க வைத்துவிட்டார். நீயோ அந்த மையலில் மூழ்கி அவரை நினைத்து நினைத்து உருகிக் கொண்டிருக்கிறாய். அவரோ, கடாரம் என்ன? காம்போஜம் என்ன? என்று உன்னைப் பற்றிய நினைவே இல்லாது நாடுவிட்டு நாடு சென்று கொண்டிருக்கிறார்."

மதுராந்தகியின் முகத்திலே புன்னகை தவழ்ந்தது. "சரி! நான்தான் ஏமாந்தவள். நீயாக இருந்தால் என்ன செய்திருப்பாய்?"

"நானாக இருந்தால் என்ன செய்திருப்பேன் தெரியுமா? அவர் காதைப் பிடித்துத் திருகி 'கடாரமா! இதோ நானும் வருகிறேன். காம்போஜமா! இதோ நானும் புறப்படுகிறேன்' எனக் கூடவே புறப்பட்டிருப்பேன்."

தமக்கையும் தங்கையும் இவ்விதம் கேலி செய்து கொள்வதைக் கண்டு சிரித்த வண்ணம் இருந்த புவனமாதேவி குறுக்கிட்டாள்.

"மாதேவிக்கு எப்போதும் கணவனைப் பிரிய மனமிருக்காது போல இருக்கிறதே. 'முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது பைந்தொடிப்

பேதை நுதல்' என்று மாதேவியை வைத்துத்தான் வள்ளுவர் கூறினார் போலத் தோன்றுகிறது'' என்றாள்.

"நன்றாகச் சொன்னப் புவனா. இன்று இப்படிப் பேசுபவர்கள் நாளை அப்படித்தான் இருப்பார்கள்'' என்று கூறி மதுராந்தகி நகைத்தாள்.

வீரமாதேவி நாணம் மேலிடத் தலையைக் குனிந்து கொண்டாள். 'புவனா! நீயும் அக்காளுடன் சேர்ந்து கொண்டாய் அல்லவா!' என்று சொல்லுவது போல அவளது கருவிழிகள் பரிதாபகரமாகப் புவனமாதேவியை நோக்கின.

மதுராந்தகி தனது கதையைத் தொடர்ந்தாள். "கேள்! புவனா! அலைமா கடல் என நீர் ததும்பும் இந்த இடம் அன்று பொட்டலாக விளங்கியது. அந்தப் பொட்டலிலே ஆயிரமாயிரமானோர் வேலை செய்து கொண்டிருந்த காட்சி இன்றும் என் மனக்கண் முன் வந்து நிற்கிறது. எறும்புகள் சாரை சாரையாகச் செல்வது போலப் பல்லாயிர மக்கள் தங்கள் தலைகளிலே மண் சுமந்து வந்து இந்த ஏரிக்கரையை அமைத்தனர். அதைவிடச் சிறப்பானது என்னவென்றால் வங்கம், கடாரம், சிங்களம் ஆகியவற்றிலிருந்து வந்த மக்களைக் கொண்டு இந்த ஏரி அமைக்கப்பட்டதாகும். இந்தச் செய்தியைக் கேட்டு நீ திகைப்பது எனக்குப் புரிகிறது. ஆம்! இராசேந்திர சோழர் கங்கைவரை படையெடுத்துச் சென்று வெற்றிக் கொடி நாட்டியதை நீ அறிவாய். இந்த நாடே அறியும். கங்கையும், கடாரமும் கைக்கொண்டு திரும்பிய அந்தச் செம்பியர்கோன் பல்லாயிரம் பகைவர்களைப் போர்க் கைதிகளாகப் பிடித்து வந்திருந்தார். பாறாங்கல்லைப் பிளந்து எடுத்துப் பகைவன் தலையிலே ஏற்றிக் கொண்டு வந்தானெனச் சிலப்பதிகாரம் செப்புகிறது. ஆனால் அதைவிடச் சிறப்பான செயல் ஒன்றைக் கங்கைகொண்ட சோழர் செய்து முடித்தார். தமிழர் வீரத்தை இழித்தும் பழித்தும் பேசிப் போர் தொடுத்த பகைவர்களை வென்றடக்கி அவர்களைச் சிறைப்படுத்திச் சோழ வளநாட்டிற்குக் கொண்டு வந்து இந்த ஏரியை அமைக்கச் செய்தார். தனது ஒப்பற்ற வெற்றிகளின் சின்னமாக இந்த மாபெரும் ஏரியை அமைத்த இராசேந்திர சோழர் தனது எண்ணத்தை நிறைவேற்றினார். தனது வீரத்தை இதன் மூலம் வெளிப்படுத்திய அந்த மாவீரர், தனது நெஞ்சின் ஈரத்தையும் வெளிப்படுத்தினார். 'சோழகங்கம்' என்ற இந்த ஏரி அமைக்கப்பட்டவுடன் போர்க் கைதிகளனைவரும்

விடுதலை செய்யும்படி ஆணை பிறப்பித்தார். அவர்கள் தகுதிக்குத் தக்கவாறு பொன்னும் பொருளும் கொடுத்து அவரவர்கள் நாட்டுக்கு அனுப்பி வைத்தார். அவரது வள்ளற்றன்மையை அவர்கள் வாயார வாழ்த்தி விடைபெற்றுச் சென்றார்கள்."

இதையெல்லாம் கேட்கக் கேட்கப் புவனமாதேவியின் உள்ளத்தில் சோழ குலத்தைப் பற்றிப் பெருமதிப்புக் குடிகொண்டது. இராசேந்திர சோழரது பெருமையையும் தொன்மைமிக்க சோழகுலத்தின் புகழைப் பற்றிய பல செய்திகளையும் அவளது பாட்டன் கூறக் கேட்டிருக்கிறாளென்றாலும் சோழகங்கத்தை நேரிலே கண்டு, அதைப் பற்றிய வரலாற்றைக் கேட்ட பிறகு அவளது உள்ளத்தில் சோழ குலத்தைப் பற்றிய பெருமதிப்பு மேலும் வளர்ந்தது. இத்தகைய புகழ்பெற்ற சோழகுல இளவரசிகளுடன் தொடர்பு கொள்ளும் பேறு தனக்குக் கிட்டியது குறித்து அவளது உள்ளம் பெருமிதமடைந்திருந்தது. தங்களின் கீழ்ப்பணிபுரியும் ஒரு மாதண்ட நாயகனின் பேத்தி என்ற அளவில் தன்னைக் கருதாது தங்களது அருமைத் தோழியாக ஏற்றுக் கொண்டு நட்புப் பாராட்டும் சோழ இளவரசிகளின் சிறந்த பண்பைக் கண்டு அவளது உள்ளம் வியந்தது. வேங்கி அரசியும், வீரராசேந்திரரின் தங்கையுமான அம்மங்கைதேவி தன்பால் செலுத்தும் தாயன்பை எண்ணிய போது அவளது விழிகளில் நீர் கசிந்தது. பெற்றோரை இழந்து பாட்டனின் பேராதரவில் வளர்ந்து வந்த புவனமாதேவி, பாட்டனைப் பிரிந்த துக்கத்தை மறந்திருந்தாள் என்றால் அதற்கு அம்மங்கைதேவியின் தாயன்பும், மதுராந்தகி, வீரமாதேவி ஆகியோரின் நட்புமே காரணங்களாகும.

இதற்குள் தேர் ஒரு மாந்தோப்பில் புகுந்தது. ஆம்! கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டாரின் தமிழ்க்குடிலுக்கு இளவரசிகள் வந்து சேர்ந்தனர். தேர் வந்து நிற்கும் ஓசையைக் கேட்டு வெளியில் வந்த சயங்கொண்டாரும் அவரது மாணவர்களும் சோழ இளவரசிகளை வரவேற்கத் தயாராகினர்.

# 15. புதிய மாணவி

இவ்விதம் ஆசிரியர் சயங்கொண்டார் தங்களை வரவேற்க வந்து நிற்பதைக் கண்ட இளவரசிகள் மூவரும் தேரை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்கினர்.

“வரவேண்டும்! வரவேண்டும்!” என்று வரவேற்றபடியே அவர்களைச் சயங்கொண்டார் உள்ளே அழைத்துச் சென்று அமரச் செய்தார். பின்னர் மதுராந்தகியின் பக்கம் திரும்பி, “தேவி! இந்த ஏழைப் புலவனை மறந்தே போய்விட்டீர்களே!” என்றார்.

“கவிச்சக்கரவர்த்தியாரே! இது என்ன வார்த்தை! சோழ வளநாடே உங்களால் பெருமை பெற்றிருக்கிறது. அப்படிப்பட்ட புலவர் பெருமானை நாங்கள் மறப்பதா? அங்ஙனம் எண்ணிவிட வேண்டாம். இந்தப் போர் குறுக்கிட்டதில் இருந்து பல அலுவல்கள் தடைப்பட்டுப் போயின.”

“நீங்கள்தான் அப்படியென்றால்.. அடிக்கடி ஏதாவது பாடங்கேட்க வரும் இளேயதேவியார் கூட முன்போல் வருவதில்லை” என்றார் சயங்கொண்டார்.

வீரமாதேவி வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள். அவளது நிலையைப் புரிந்து கொண்டவள் போல மதுராந்தகி பேச ஆரம்பித்தாள்.

“இல்லை ஐயா! நான் வந்தாலன்றிப் புறப்படமாட்டேன் என அவள் பிடிவாதமாக வர மறுத்துவிட்டாள். எனக்கோ அலுவல்கள் பல இருந்தன. எனவே நான் வர முடியாது போயிற்று. இனி வீரமாதேவி அடிக்கடி வருவாள். ஏனெனில் அவளுக்கு ஒரு புதிய தோழி கிடைத்திருக்கிறாள். உங்களுக்கு ஒரு புதிய மாணவி கிடைத்திருக்கிறாள்” என்றாள்.

அதுவரை புவனமாதேவியைக் கவனிக்காமலிருந்த சயங்கொண்டார் அவள் பக்கம் திரும்பி, “மன்னிக்க வேண்டும் தேவி, இந்தப் பெண்மணி..” என இழுத்தார்.

“மாதண்டநாயகர் மதுராந்தகத் தமிழ்ப் பேரரையரின் பேத்தி. உங்களிடம் தமிழ் பயில வந்திருக்கிறாள். மாணவியாக ஏற்றருள வேண்டும்” என்றாள் மதுராந்தகி.

இந்தக் குறிப்பையுணர்ந்த புவனமாதேவி சயங்கொண்டாரை வணங்கினாள்.

“பல்லாண்டு வாழ்க!” என்று சயங்கொண்டார் வாழ்த்திவிட்டு “நானே வந்து காண வேண்டும் என எண்ணிக் கொண்டிருந்தேன். உங்களது பாட்டனாரும் நானும் வெகுநாளைய நண்பர்கள். என்னிடமும் வந்து சொல்லிவிட்டுத்தான் அவர் போருக்குச் சென்றார்” என்றார்.

“ஏதேது ஒருவரையும் பாக்கி வைக்காமல் எல்லோரிடமும் சென்று தமது பேத்தியைக் கவனித்துக் கொள்ளும்படிச் சொல்லிவிட்டுப் போயிருப்பார் போலிருக்கிறதே!” என்றாள் மதுராந்தகி.

“போங்கள் அக்கா!” என்று கூறிவிட்டு நாணத்தினால் தலையைப் புவனா கவிழ்த்துக் கொண்டாள். “பின் இருக்காதா? அவரும் நானும் கொண்டிருந்த நட்பு என்ன சாதாரணமானதா? இலக்கிய நட்பு என்றுதான் அதைக் கூற வேண்டும். தமிழின் மீது அவர் கொண்டிருந்த பற்று வேறு யாருக்கும் இருந்திருக்க முடியாது. வாளும் வேலும் வீசத் தெரிந்த படைத்தளபதியாக மட்டுமல்லாமல் தமிழ் நூல்களைக் கற்றுத் துறைபோகிய புலவராகவும் அவர் விளங்கியதைக் கண்டு இராசாதிராச சோழரே வியந்தார். அவரைப் பாராட்டுமுகத்தான், ‘மதுராந்தகத் தமிழ்ப் பேரரையன்’ என்ற சிறப்புப் பட்டமும் அளித்தார். அந்தத் தமிழ்ப் பெருமகனின் பேத்திக்கு ஆசிரியராக விளங்க நான் என்ன பேறு பெற்றேனோ?” என்றார்.

“ஐயா! அப்படியெல்லாம் கூறாதீர்கள்! உங்களை ஆசிரியராகப் பெற்ற நான்தான் பெரும்பேறடைந்தவள் ஆவேன்” எனப் புவனமாதேவி அடக்கத்துடன் கூறினாள். பின்னர் அவர்களது பேச்சு வேறு பக்கம் திரும்பியது. போர்க்களத்திற்குச் சென்றிருக்கும் மன்னரைப் பற்றியும் களம் காணத் துடிதுடித்துக் கொண்டிருக்கும் இளவரசன் அதிராசேந்திரனைப் பற்றியும் அவர்கள் சிறிது நேரம் பேசினார்கள்.

“போர்க்களத்தைப் பற்றிய சிந்தனையில் மூழ்கிப் போய் இருக்கும் இளவரசர் இந்தத் தமிழ்க் குடிலையே மறந்துவிட்டார். வேங்கி இளவரசர் இருக்கும் போதாவது அவருடன் இங்கு அடிக்கடி வருவார். இப்போது அவரும் கடாரம் போய்விட்டார்” என்றார் சயங்கொண்டார்.

“மன்பதை காக்கும் மன்னர்குடியில் பிறந்தவர்கள் போர்க்களம் என்றால் பின்வாங்கிவிட முடியுமா? களம் நோக்கிப் புறப்படும் வேளை வந்தவுடன் அவர்கள் யாவற்றையும் மறந்து போவது இயல்புதானே?” என்றாள் மதுராந்தகி.

“நீங்கள் என்னதான் கூறினாலும் இந்தப் புலவனது பேதையுள்ளம் அமைதியடைய மறுக்கிறது. கடந்து போன நாட்களை எண்ணி எண்ணி ஏங்குகிறது. வேங்கி இளவரசரும் நீங்களும் என்னிடம் தமிழ் படித்த நாட்கள் நினைவிற்கு வருகின்றன. ஆம்! தேவி! ஒன்று மட்டும் கூறுவேன். அரசகுடியில் பிறந்தவர்களில் நமது வேங்கி இளவரசரைப் போலத் தமிழின் மேல் பற்றுக் கொண்டவரை நான் கண்டதும் இல்லை. கேட்டதும் இல்லை” என்று ஒரே பரவசமாகக் கூறினார் சயங்கொண்டார்.

மதுராந்தகியின் உள்ளம் அந்த இன்ப நாட்களை எண்ணியது. ஆகா! அந்த நாட்கள் இனித் திரும்பி வருமா? அகநானூற்றின் சிறப்பை ஆசிரியர் கூறிக் கொண்டிருக்கையில், இவர்களது விழிகள் ஓராயிரம் அகநானூறுகளை இயற்றிக் கொண்டிருக்கும். கள்ளத்தனமாக அடிக்கடி ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளும் போது இதழோரத்திலே நெளிந்தோடும் புன்னகையின் ஒளியிலே கலித்தொகைக் காதற் காட்சிகள் தோன்றி மறைந்து கொண்டிருக்கும். இந்த இனிய நாட்களுக்குக் காலம் ஒரு முற்றுப்புள்ளியை வைத்தது. ஆம்! வேங்கி இளவரசனாக விஷ்ணுவர்த்தனன் முடிசூட்டப்பட்ட பிறகு அரசியல் அலுவல்களில் அதிகமாகப் பங்குபெற வேண்டியதாயிற்று. மதுராந்தகிக்கும் வேறு பல அலுவல்கள் ஏற்பட்டுவிட்டன. எனவே முன்பு போல் அவர்கள் அடிக்கடி சந்திக்க முடியாது போயிற்று. இவற்றையெல்லாம் எண்ணிய போது அந்த ஏந்திழையாளின் உள்ளம் கடந்து போன நாட்களுக்காக ஏங்கியது. இவ்விதம் இன்ப நினைவுகளில் ஆழ்ந்து போயிருந்த மதுராந்தகியை வீரமாதேவியின் குறும்புப் பேச்சு, தன்னிலைக்குக் கொணர்ந்தது.

“ஐயா! அதென்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள். வேங்கி இளவரசர் மட்டும்தான் தமிழ்ப் பற்று மிக்கவரா? அண்ணன் அதிராசேந்திரனுக்குத் தமிழ்ப் பற்றில்லையா?” என்றாள்.

இதைக் கேட்ட மற்ற மூவரின் முகத்திலும் புன்னகை அரும்பியது. திடுமெனப் பிறந்த இந்தக் கேள்வியைக் கேட்டதும் சயங்கொண்டார் முதலில் திகைத்தார். பின்னர்ச் சமாளித்த வண்ணம் பேசலானார்.

“இளவரசி! இதென்ன பேச்சு? மகத்தான சோழப் பேரரசைக் கட்டியாளுவதற்கே நமது இளவரசருக்கு நேரம் போதவில்லை. அப்படி இருக்கும் போது தமிழ் இலக்கியங்களைப் புரட்ட அவருக்கு ஒய்வு ஏது என்ற எண்ணத்தில் அப்படிக் கூறினேன்” என்றார்.

“தம்பிக்குத்தான் அரசியல் வேலைகள் அதிகமிருப்பதால் தமிழ் படிக்கப் பொழுதில்லாமல் போகிறது. இவளுக்கு என்ன வேலை கேளுங்கள். இப்படிக் குறும்புத்தனமாகப் பேசிக் கொண்டிருப்பதில் பொழுதைக் கழித்துக் கொண்டிருக்கிறாள்” என்றாள் மதுராந்தகி.

“சரியான தோழி கிடைக்காததால் இளவரசி தமிழ்ப் படிக்க வரமுடியாது போயிற்று. நான் வந்துவிட்டேன் அல்லவா? இனிமேல் பாருங்கள்!” என்று புவனமாதேவி குறுக்கிட்டுத் தனது தோழிக்காகப் பரிந்து பேசினாள்.

“அந்தக் குறும்புக்காரிக்குச் சரியான தோழிதான் கிடைத்திருக்கிறாள்” என்றாள் மதுராந்தகி.

“அத்தானைப் பற்றி நான் ஏதேனும் கூறினால் அக்காளுக்கு வரும் கோபத்தைப் பார்த்தாயா” எனப் புவனமாதேவியின் காதருகில் மாதேவி முணுமுணுத்தாள். அப்படிக் கூறுவதைவிட அவள் அவ்விதம் முணுமுணுப்பதைப் போல நடித்தாள் என்று கூறுவதே பொருந்தும். ஏனெனில் மெல்லிய குரலில் அவள் கூறிய இரகசியம் அனைவருக்கும் கேட்டது. வீரமாதேவியின் இந்தக் குறும்பைக் கண்டு அனைவரும் கலகலவென நகைத்தார்கள்.

# 16. காதல் மாகாவியம்

வேங்கி இளவரசன் விஷ்ணுவர்த்தனனும், சோழ இளவரசி மதுராந்தகியும், ஒருவர் மீது ஒருவர் அளவு கடந்த காதல் கொண்டிருந்தனர் என்றால் அதில் ஒன்றும் வியப்பில்லை. அம்மான் மகன் மேல் சோழர் பெம்மான் புதல்வி அன்பு கொள்வது இயற்கைதான். எனினும் இந்தக் காதல் காவியத்தில் ஒரு சிறப்பு இருந்தது. தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் அழியாத காதல் காவியமாக அது திகழ்ந்தது. இந்த வரிகளைப் படிக்கும் நண்பர்கள் திகைக்கலாம். எள்ளி நகையாடலாம். ஆனால் பொன்னி வளநாட்டு மன்னர்களின் வரலாற்றைக் கூறும் ஏடுகளைப் புரட்டிப் பார்த்தோமானால் இந்த உண்மையை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

வேற்றரசருடன் அதிகமான அளவில் மணவினைத் தொடர்பு கொண்ட பெருமை, முடியுடை மூவேந்தருள் புலிக்கொடிப் புரவலர்களுக்கே உரியது. அந்தப் பெருமையைச் சோழ குலத்திற்கு அளித்து அதன் மூலம், பிறந்த நாட்டிற்கும், புகுந்த நாட்டிற்கும் இடையே நட்புறவைச் சோழ குலத்தில் உதித்த இளவரசிகள் ஏற்படுத்தினர். குமரிமுதல் இமயம்வரை விரிந்து பரந்து கிடந்த பேரரசைக் கட்டியாண்ட மன்னர் பரம்பரையிலே தோன்றிய இந்த மாதரசிகள், தங்களின் கீழ் ஆட்சி செலுத்திய சிற்றரசர்களைக் காதலித்துக் கைப்பிடித்துக் கொண்ட நிகழ்ச்சிகள் வியப்பையும் திகைப்பையும் ஊட்டுவனவாகும்.

'பொற்கோட்டு இமயத்துப் புலி பொறித்து மண் ஆண்ட மன்னன் வளவன் மதில் புகார் வேந்தன்' எனச் சிலம்பு புகழ்ந்து கூறும் கரிகாற்பெருவளத்தான் பெற்றெடுத்த அருந்தவப் புதல்வியான ஆதிமருதி, வஞ்சிநகரச் சிற்றரசனான ஆட்டணத்தியைக் காதலித்துக் கடிமணம் புரிந்து கொண்ட காதை, கேட்கக் கேட்கத் தெவிட்டாத காதற் கவிதையாகும்.

'வெங்கோல் வேந்தன், தென்னன் நாடும்—ஈழமும் கொண்ட திறல் செங்கோற் சோழன்' எனப் புகழப்படும் பராந்தக சோழனின் புதல்வியான வீரமாதேவி இராட்டிரகூட இளவரசனாகிய கோவிந்த வல்லவரையனைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டு, அதன் மூலம் சோழர்—இராட்டிரகூடர் உறவை வளர்த்ததைப் பற்றியும் வரலாறு புகழ்ந்து கூறுகிறது.

'மதுரை கொண்ட கோப்பரசேகரிவர்மன்' எனப் புகழப்படும் மேதகு நந்திபுரி மன்னன், மாதவித்தொங்கல் மணிமுடி வளவன் சுந்தர சோழனின்' புதல்வியும், எத்திசையும் புகழ்பரப்பி இனிது வாழ்ந்த பேரரசன் இராசராச சோழனின் தமக்கையும் ஆன குந்தவைப் பிராட்டி கீழைச் சளுக்கிய மரபில் வந்த சிற்றரசனும், சோழர் படைத்தலைவனுமாக விளங்கியவனுமான வல்லவரையன் வந்தியத்தேவனைக் காதலித்துக் கடிமணம் புரிந்த நிகழ்ச்சியும் இதற்கு மற்றொரு எடுத்துக்காட்டாகும்.

இராசராச சோழனின் புதல்வியான குந்தவை வேங்கி நாட்டு இளவலான விமலாதித்தன் மீது கொண்ட காதல் அமரகாதலாகும். வேங்கி நாட்டின் அரசுரிமையை இழந்து, இராசராசரின் உதவி வேண்டி சோழ வளநாட்டிற்கு வந்து சேர்ந்த விமலாதித்தனை, சோழ இளவரசி காதலித்த போது நாடே திகைப்பில் ஆழ்ந்தது. ஆனால் அரும்பெறல் மன்னனாகிய இராசராசனோ சற்றும் தயங்காது இருவருக்கும் மணமுடித்து வைத்து, வேங்கி நாட்டின் அரியணையில் இருவரையும் ஏற்றுவித்து ஆதரித்தான்.

இந்த அமரகாதலர்களின் அன்பில் விளைந்த ஆரமுதான இராசராச நரேந்திரன் தனது அம்மான் இராசேந்திர சோழனின் புதல்வியான அம்மங்கைதேவி மீது காதல் கொண்டான். விபரம் தெரிந்த நாளிலிருந்து வேங்கி இளவரசனைத் தனது கணவனாக வரித்துக் கொண்ட அம்மங்கைதேவியோ வேறு யாரையும் ஏறிட்டுப் பார்க்கவும் மறுத்தாள். இமயம் முதல் ஈழம் வரை கட்டியாண்ட பேரரசன் இராசேந்திர சோழன் பெற்றெடுத்த அந்தத் திருமகளைக் கைப்பிடிக்க மன்னாதி மன்னர் பலர் போட்டியிட்டுக் காத்திருந்தனர். ஆனால் அவளோ இராசராச நரேந்திரனையே தனது நாயகனாக வரித்துக் கொண்டாள்.

இதன் விளைவாகத்தான் குந்தளரின் கொடும்பகை சோழகுலத்திற்கு ஏற்பட்டது என்பதை நாம் ஏற்கனவே அறிந்திருக்கிறோம்.

இத்தகைய மாதரசிகளின் வழி வந்த மதுராந்தகி தனது மாமன் மகன் மீது காதல் கொண்டதில் வியப்பில்லை அல்லவா? விஷ்ணுவர்த்தனன் வேங்கியில் பிறந்தவன் என்றாலும் அவன் வளர்ந்தது எல்லாம் காவிரிக்கரையில்தான்.

விஷ்ணுவர்த்தனன் தோற்றத்தில் தனது பாட்டன் இராசேந்திர சோழனை ஒத்திருந்தான். இராசேந்திர சோழரின் பட்டமகிஷியும், விஷ்ணுவர்த்தனனின் பாட்டியுமான வானவன் மாதேவி, தனது மகள் வயிற்றுப் பேரனாகிய விஷ்ணுவர்த்தனன் மீது யாது காரணத்தாலோ அளவற்ற அன்பு கொண்டு இருந்தாள். தனது கணவரின் பெயரை அவனுக்குச் சூட்டி மகிழ்ந்தாள். என்றாலும் வேங்கி அரசகுடும்பத்து வழக்கப்படி பின்னர் அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்ற பெயர் அளிக்கப்பட்டது. விஷ்ணுவர்த்தனின் தாய்மாமன்மார்களான இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன் ஆகியோரும் அவன் மீது அளவற்ற அன்பு செலுத்தினர். இவ்விதம் சோழ அரச குலத்தின் செல்லப்பிள்ளையாக விளங்கிய விஷ்ணுவர்த்தனன், தனது தந்தை நாடான வேங்கியை அறவே மறந்து போனான். அவனது தந்தையான இராசராச நரேந்திரர் இறந்த போது, விஷ்ணுவர்த்தனனுக்குத் தக்க வயது வராத காரணத்தால், அவனது சிற்றப்பனான விசயாதித்தன் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டு வேங்கியை ஆண்டு வந்தான். அதன் பின்னர் இளவரசனாக முடிசூடிய பிறகுங்கூட விஷ்ணுவர்த்தனன் வேங்கி செல்ல விரும்பவில்லை.

**“பூவார்சோலை மயில் ஆலப்**
**புரிந்து குயில்கள் இசைபாடக்,**
**காமர் மாலை அருகு அசைய**
**நடந்தாய் வாழி காவேரி.”**

என இளங்கோவடிகளால் சிறப்பித்துக் கூறப்படும் காவேரிக் கரையைவிட்டுப் பிரிந்து செல்ல அவன் உள்ளம் எவ்விதம் துணியும்? எல்லாவற்றிற்கும் மேலாக மற்றொரு காந்த சக்தி அவனைக் கவர்ந்திழுத்துக் கொண்டிருந்தது. அது எது என்பதை நாம் விளக்கத் தேவையில்லை. நண்பர்கள் இதற்குள் புரிந்து கொண்டிருப்பார்கள்.

ஆம்! பொழிலாடும் பொன்னிவள நாட்டின் எழிலாடும் கன்னி! இரண்டாம் இராசேந்திரன் பெற்றெடுத்த பெருந்தவப் புதல்வி மதுராந்தகி அவனது இதயாசனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தாள். தனது பெயரிலேயே தேன்மணங் கமழச் செய்த அந்தத் தேனிதழாளுக்கு அடிமையான பிறகு வேங்கி வளநாட்டின் அரியணையில் ஏற அவனுக்கு ஏது உரிமை? இல்லை. அவனது உள்ளந்தான் அதற்கு இசையுமா? செம்புலப் பெயல் நீர் போலக்

கலந்த அன்புடை நெஞ்சத்தினராய் விளங்கிய இவ்விரு காதலருக்கும் மணமுடித்து வைக்க வீரராசேந்திரர் திட்டமிட்டார். ஆனால் அடுத்தடுத்து ஏற்பட்ட போர்களால் இவர்களின் திருமணம் தடைப்பட்டுப் போயிற்று.

இதற்கிடையில் கடாரத்து மன்னனான விசயோத்துங்கவர்மன் தனது அரசுரிமையைப் பகைவர்பால் இழந்து பரிதவித்து நின்றான். கலமேறிக் கடல் கடந்து, கங்கைகொண்ட சோழபுரம் வந்து வீரராசேந்திரரின் தாள் பணிந்து, நின்றான். அவனுக்கு உதவி செய்ய ஒரு படையை விஷ்ணுவர்த்தனன் தலைமையில் வீரராசேந்திரர் அனுப்பி வைத்தார்.

வீரராசேந்திரரின் இந்தச் செய்கையைக் கண்டு அனைவரும் திகைத்துப் போயினர். களம்பல கண்ட திண்தோள் வீரர் பலர் மாதண்டநாயகர்களாகச் சோழர் படையில் பணியாற்றிக் கொண்டிருக்கும் போது, அவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பாமல் சோழ குலத்தின் செல்லப்பிள்ளையாய் விளங்கிய வேங்கி இளவரசரை மன்னர் தேர்ந்தெடுத்து அனுப்பியது கண்டு அனைவரும் வியந்தனர். போர்க்கள அனுபவம் சிறிதுமில்லாத விஷ்ணுவர்த்தனனைக் கடல் கடந்த நாட்டிற்குப் போரிட அனுப்ப வீரராசேந்திர சோழர் முடிவு செய்த போது பலர் அதைத் தடுக்க முயன்றனர். அவர்களின் யோசனைகளையெல்லாம் மன்னர் கேட்கவில்லை.

இளவரசி மதுராந்தகியை அழைத்துத் தனது முடிவை மன்னர் வெளியிட்டார். அவர் எதிர்பார்த்தது போல மதுராந்தகியும் அந்த முடிவைத் தயக்கமின்றி ஒப்புக்கொண்டாள். செந்தமிழ்ப் பொழிலில் கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டாருடன் உலவித் திரிந்து, தமிழ்த் தென்றல் தரும் இன்பத்தை நுகர்ந்தும், காவிரிக்கரையில் காதல் புனலிடை மூழ்கி, மதுராந்தகியுடன் மகிழ்ந்து திரிந்தும் பாயும் வேங்கையும், கொல்லும் களிறும் நிறைந்த கானகத்திடைத் தனது மைத்துனன் அதிராசேந்திரனுடன் புகுந்து வேட்டையாடி வீரம் விளைவிப்பதுமாகக் காலத்தைப் போக்கி வந்த விஷ்ணுவர்த்தனனுக்கு இந்தச் செய்தி அளவற்ற மகிழ்ச்சியை அளித்தது. மாமனின் ஆணையை அவன் தயக்கமின்றி ஏற்றுக் கொண்டான். ஆனால் இளவரசன் அதிராசேந்திரன் மட்டும் அதை வன்மையாக எதிர்த்தான். நானே செல்வேன் எனத் தனது

தந்தையிடம் மன்றாடினான். அவர் அதை ஏற்க மறுத்த பிறகு தானும் செல்ல வேண்டுமென வேண்டிக் கொண்டான்.

நாளை வேங்கி நாட்டை ஆளப்போகும் மன்னனுக்குப் போர்க்கள அனுபவம் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும், வேங்கி நாட்டு மன்னனை ஒரு விளையாட்டுப் பிள்ளையாகக் கருதியிருப்பவர்களுக்கு அவனது வீரம் புரிய வேண்டும் என்பதற்காகவும் அவனை அனுப்புவதாக மன்னர் கூறினார். சோழ அரியணையில் ஏறப்போகும் அதிராசேந்திரனுக்குப் போர்க்களம் செல்ல வேறு பல சந்தர்ப்பங்கள் காத்துக் கிடக்கின்றன என்று கூறி அதிராசேந்திரனை மன்னர் சமாதானப்படுத்தினார்.

கடல் கடந்து சென்ற காதலனின் நினைவு எந்நேரமும் மதுராந்தகியை வருத்திக் கொண்டிருந்தது. விஷ்ணுவர்த்தனனைப் பற்றிய இன்ப நினைவுகளில் அவள் தனது வருத்தத்தை ஒருவாறு மறந்திருந்தாள். அரசியல் பணிகள் பல குறுக்கிட்டு அவளின் கவலையை ஓரளவு மறக்கச் செய்திருந்தன. கவலைகள் அதிகமாகும் வேளையில் அவள் தனது ஆசிரியரை நாடிச் செல்வது வழக்கம். அந்த முறையில் அவள் தற்போது செயங்கொண்டாரைத் தேடிவந்தாள். பழைய நிகழ்ச்சிகளைச் செயங்கொண்டார் நினைவு கூர்ந்த போது அவளை இன்பமும் துன்பமும் ஒருங்கே அரவணைத்துக் கொண்டன. காதலனின் நினைவு அவளுக்கு இன்பத்தைத் தந்தது. அவனது பிரிவு அவளுக்குத் துன்பத்தை அளித்தது. அந்தத் துன்பம் விரைவில் இன்பமாக மாறப் போகிறது என்பதை அவள் அப்போது உணர்ந்திருக்கவில்லை.

# 17. கிளு கிளுத்த இதயம்

சோழர் தம் தலைநகர் அன்று இரண்டாம் முறையாக அழகுறுத்தப்பட்டிருந்தது. வீரராசேந்திர சோழர் போர்க் களம் நோக்கிப் புறப்பட்டுச் சென்ற போது கங்கைகொண்ட சோழபுரத்து மக்கள் தங்கள் வீடு வாயில்களை அலங்கரித்து விழாக் கொண்டாடினார்கள். அதைப் போலவே இன்றும் விழாக்கோலம் பூண்டு வெற்றிவாகை சூடிவரும் வேங்கி இளவரசனைச் சந்திக்கத் தயாராகிக் கொண்டிருந்தனர்.

இளவரசன் விஷ்ணுவர்த்தனன் கோட்டைவாயிலுக்கு வந்து சேர்ந்ததும், மதில் மேல் முரசங்கள் அதிர்ந்தன. துந்துபிகள் முழங்கின. பல்லியங்கள் ஆர்த்தன. கோட்டைக் கதவுகள் படீரெனத் திறந்து கொண்டன.

உள்நுழையும் தனது அருமை மைத்துனனை வரவேற்க இளவரசன் அதிராசேந்திரனும், மற்றவர்களும் மலர் மாலைகளுடன் காத்திருந்தனர். அகழிப் பாலத்தில் விஷ்ணுவர்த்தனின் குதிரை நுழைந்தது. அதைக் கண்டதும் அதிராசேந்திரன் தனது குதிரையிலிருந்து கீழே குதித்தான்.

“விஷ்ணுவர்த்தனா!” என்று கூறிய வண்ணம் முன்னோக்கிச் சென்றான். நீட்டிய கரங்களுடன் தன்னை நோக்கி வரும் இளவரசனைக் கண்டதும் விஷ்ணுவர்த்தனன் தனது குதிரையினின்றும் குதித்திறங்கி ஓடினான்.

கோட்டை வாயிலின் நடுவிலே இளவரசர்கள் இருவரும் சந்தித்தனர். மறுகணம் அன்பு பெருகிட இருவரும் அணைத்துக் கொண்டனர். “நலந்தானே” என ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டனர். அவர்களின் கெழுதகை நட்பைக் கண்டு சுற்றிலும் நின்றவர்கள் வியந்து பாராட்டினர்.

மறுபடியும் இருவரும் தங்கள் குதிரைகள் மீது ஏறிக் கொண்டு நகரினுள் புகுந்தனர். சாலையின் இருமருங்கிலும் கூடி நின்ற மக்கள் “கடாரம் கைக்கொண்ட கோமகன் வாழ்க! வாழ்க!” என முழங்கினர்.

மேல்மாடங்களிலும், உப்பரிகைகளிலும் கூடி நின்ற பெண்கள், இரண்டு இளவரசர்கள் மீதும் மலர்களைத் தூவி வாழ்த்தினர்.

உற்சாக வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. அரண்மனையை நெருங்க நெருங்க மக்கள் திரள் அதிகமாகிக் கொண்டே வந்தது.

தங்கள் அன்பிற்குப் பாத்திரமான வேங்கி இளவரசன் மீது, சோழவள நாட்டின் எதிர்கால மருமகன் மீது அம்மக்கள் கொண்டிருந்த பற்று இந்த விழாவின் மூலம் நன்கு வெளியாயிற்று. சோழ வளநாட்டு மக்கள் தன்மீது பேரன்பை அள்ளிச் சொரிவதைக் கண்டு விஷ்ணுவர்த்தனின் உள்ளம் நெகிழ்ந்தது. அருகில் வந்து கொண்டிருந்த தனது மைத்துனனை நன்றியுணர்ச்சியுடன் நோக்கினான். இளவரசன் அதிராசேந்திரனோ அவனை நோக்கிப் புன்னகை பூத்தான். 'ஓகோ! இதெல்லாம் உனது ஏற்பாடுதானோ?' எனக் கேட்பது போல் விஷ்ணுவர்த்தனனின் விழிகள் அவனை நோக்கின. 'ஆம்! ஆம்! என்னை இங்குத் தனியாக நிறுத்தி வைத்துவிட்டுப் போர்க்களம் நோக்கிப் போனாய் அல்லவா! அதற்கு இதுதான் சரியான தண்டனை' என்று இளவரசன் அதிராசேந்திரனின் விழிகள் அதற்குப் பதில் கூறின.

இதற்குள் அவர்கள் அரண்மனையின் முகப்பை நெருங்கிவிட்டார்கள். அரண்மனையின் மேன்மாடத்திலே மங்கை நல்லார் பலர் கரங்களில் மலர்க்கூடையை ஏந்திய வண்ணம் காட்சி தந்தனர். விஷ்ணுவர்த்தனின் விழிகள் அவசர அவசரமாக யாரையோ தேடி அலைந்தன. தேடிய இடத்தைக் கண்டு பிடித்து அங்கேயே சரண்புகுந்தன. ஆம்! இளவரசி மதுராந்தகியின் முகத்தாமரையில் அவனது விழி வண்டுகள் மொய்த்தன. தேனைப் பருகின. அங்கேயே மயங்கி விழுந்தன.

தனது காதலனைக் கண்ட இளவரசி மதுராந்தகியும், அதே நிலையை அடைந்தாள். தனது கரத்திலிருந்த மலர்க் கூடையை விஷ்ணுவர்த்தனனை நோக்கிக் கவிழ்த்தாள். அதைத் தொடர்ந்து மற்றப் பெண்களும் மலர்களைத் தூவினர்.

ஆனால் மதுராந்தகியின் அருகில் நின்ற புவனமாதேவி மட்டும் திகைத்த வண்ணம் நின்றாள். அருகில் நின்ற பெண்கள் மலர்களை அள்ளித் தூவுவதோ, அல்லது மக்களின் மகிழ்ச்சி ஆரவாரமோ அவளின் கவனத்தைக் கவர்ந்ததாகத் தெரியவில்லை. தான் எங்கிருக்கிறோம் என்ன செய்கிறோம் என்பதையே அவள் மறந்து நின்றாள்.

ஆ! அது யார்? விஷ்ணுவர்த்தனனுக்கு அருகில் புன்னகை பூத்த முகத்துடன் குதிரை மீது அமர்ந்து வருபவர் யார்? அன்று விபத்திலிருந்து நம்மைக் காப்பாற்றியவர் அல்லவா? அவரைக் கண்டதும் ஏன் இந்தப் பேதையுள்ளத்தில் மகிழ்ச்சி அலைமோதுகிறது. அதோ அவரும் ஏறிட்டுப் பார்க்கிறார். மறுகணம் புன்னகை பூக்கிறார். ஆனால் அதற்குள் மக்கள் திரள் அவரைச் சூழ்ந்து கொண்டு மகிழ்ச்சி ஆரவாரம் செய்கிறது.

“இளவரசர் அதிராசேந்திரர் வாழ்க!” என்ற முழக்கம் விண்ணை எட்டுகிறது.

இளவரசரா? அதிராசேந்திரரா? தலைசுற்றுகிறது புவனாவிற்கு. அருகில் நின்ற வீரமாதேவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறாள். தன்னிலை பெறச் சிறிது நேரம் பிடிக்கிறது. அதற்குள் இளவரசர்கள் இருவரும் அரண்மனைக்குள் நுழைகின்றனர். மேல்மாடத்தில் இருந்த பெண்களும் கீழிறங்கத் தொடங்குகின்றனர்.

“மாதேவி!” என அழைத்தாள் புவனா.

“என்ன புவனா?”

“குதிரை மீது இன்னொருவர் வந்தாரே அவர் யார்?”

“எந்தக் குதிரைமீது எவர் வந்தார்?”

“வேடிக்கை போதும்! வேங்கி இளவரசருக்கு அருகில் வந்தாரே அவர் யார்?”

இதைக் கேட்டதும் மாதேவி கலகலவென நகைத்தாள்.

“உண்மையாகவே கேட்கிறாயா புவனா?” என்றாள்.

“ஆம்! உண்மையில்தான் கேட்கிறேன்.”

“அடி! அசடே! அவர்தானடி என் அண்ணன்.”

புவனாவின் இதயம் ஒருகணம் நின்று போனது. அவள் நினைவு எங்கோ தாவியது. நாடு நகரமெல்லாம் புகழும் இளவரசர் அதிராசேந்திரர் இவர்தானா? விபத்திலிருந்து தன்னைக் காப்பாற்றியவர் இந்த வீராதி வீரர்தானா? இந்த நினைப்பு வந்த போது அவளது இதயம் கிளுகிளுத்தது. இன்னதென விவரிக்க இயலாத ஒருவகை இன்பம் அவள் உள்ளத்தில் குடிபுகுந்தது.

# 12. சேரல்! மடவன்னம்!!

**"ஆசு அற விளங்கிய அம்தீம் தண்கதிர்**
**வெள்ளி வெண்குடத்துப் பால் சொரிவதுபோல்**
**கள்அவிழ் பூம்பொழில் இடை இடைச் சொரிய."**

என, மேகலை பாட வந்த சாத்தனார் கூறிய கனவுக் கவிதை நனவாகிக் கொண்டிருந்தது. சோழர்தம் அரண்மனையை ஒட்டியிருந்த அந்தப் பூம்பொழில் அந்த இரவு வேளையில் எழில் பெற்றுத் திகழ்ந்தது. வெண்ணிலவின் தண்கதிர்கள் அந்தச் சோலையில் படிந்து அழகு கூட்டிய காட்சி எதையோ நினைவூட்டியது. நீலத் துகில் உடுத்த கோலவான் மங்கை, தனது கரங்களில் வெள்ளி வெண்குடமொன்றை ஏந்தி வந்து, அந்தப் பூம்பொழிலில் பாலைச் சொரிந்து கொண்டிருப்பது போல, நிலவொளி அந்தச் சோலையெங்கும் படிந்திருந்தது.

அந்தச் சோலையின் நடுவே அமைந்திருந்த பளிங்கு மேடை வெண்ணிலவின் ஒளியுடன் போட்டியிட்டுக் கொண்டிருந்தது. இந்தப் போட்டிக் கிடையில் மூன்றாவதாகப் போட்டியிட மற்றொரு திங்கள், தனது தண்கதிர்களைப் பரப்பியவாறு வந்து கொண்டிருந்தது. ஆம்! இளவரசி மதுராந்தகி மெதுவாக அன்னமென நடந்து வண்ணப் பளிங்கு மேடையை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அந்தச் சோலையின் நடுவே சலசலவெனப் புரண்டோடும் சிற்றோடையின் இனிய ஒலி அவளது சிலம்பொலியுடன் போட்டியிட்டது. ஓடைக்கரையிலே உறக்கம் வராது திரிந்து கொண்டிருந்த அன்னமொன்று தனது தலைவி வரவை உணர்ந்து கொண்டு விரைந்து வந்தது. பளிக்கு மேடையை நோக்கிச் சென்ற மதுராந்தகியைப் பின்தொடர்ந்து வந்த அன்னம், அவள் நடையுடன் போட்டியிட முயல்வது போலக் காட்சி அளித்தது.

கனவுலகக் கவிதைக் காட்சி போலத் தோற்றமளிக்கும் நனவுக் காட்சியைக் கண்டு மெய்ம்மறந்து நிற்கிறோம். அப்போது கணீரென மற்றொரு குரல் செடி மறைவில் இருந்து கிளம்பி நம்மைத் திடுக்கிடச் செய்கிறது.

**"சேரல் மடவன்னஞ் சேரனடை யொவ்வாய்**
**சேரல் மடவன்னஞ் சேரன்டை யொவ்வாய்**
**ஊர்திரைநீர் வேலி உழக்கித் திரிவாள்பின்**

**சேரன் மடவன்னஞ் சேரனடை யொவ்வாய்!"**

இசையுடன் இவ்வாறு பாடியவாறு செடிமறைவில் இருந்து வெளிப்பட்ட உருவத்தைக் கண்டவுடன் மதுராந்தகியின் முகத்தில் செம்மை படர்ந்தது. மறுமொழியொன்றும் கூறாது சென்று பளிங்கு மேடையில் அமர்ந்த அவளைப் பின்தொடர்ந்து அவளருகே விஷ்ணுவர்த்தனன் அமர்ந்தான்.

"ஆகா! இளங்கோவடிகள் பாடிய பாடலின் பொருளை இன்றுதான் உணர்ந்து கொண்டேன். ஏ! அன்னமே! இந்த மடவன்னத்தின் மென்னடையுடன் உன்னடையொவ்வாது. வீணாக ஏன் இவளைச் சுற்றித் திரிந்து போட்டியிட முயலுகிறாய். தோற்றோடித் திரும்பிச் செல்" என அன்னத்தை நோக்கிக் கூறினான். அவன் குரலில் குறும்பு மிளிர்ந்தது. இதைக் கேட்ட மதுராந்தகியின் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

"அன்னமே! நீ ஏன் இங்கிருந்து போக வேண்டும்? உன்னைப் போகச் சொல்ல இவர் யார் என்று கேள். உனக்கும் எனக்கும் பகை மூட்டிவிடும் இவர் இத்தனை நாட்களாக எங்கே போயிருந்தார் என்று கேள்!"

"அன்னமே! இதற்கு நான் பதில் கூற வேண்டும் என்று நினைக்கிறாயா! உனது தோழியின் நெஞ்சைப் போல உனது நெஞ்சும் கடினமாகிவிட்டதா! உங்கள் நடைமட்டும்தான் மென்மையானதா? உங்கள் உள்ளங்கள் ஏன் வன்மையாக இருக்கின்றன?"

"அன்னமே! அவரது உள்ளம்தான் வன்மையாகிவிட்டது என்பதை எடுத்துக் கூறு. போர்க்களம் நோக்கிப் போனவர் ஒரேயடியாக இந்தப் பேதையை மறந்து போனது ஏன் என்று கேள்?" தழதழத்த குரலில் மதுராந்தகி இவ்வாறு கேட்ட போது விஷ்ணுவர்த்தனன் உள்ளம் நெகிழ்ந்து போனான்.

"மதுராந்தகி! இதென்ன பேச்சு! உன்னை நான் மறப்பதா? கணப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காது உறையும் உன்னை நான் மறந்து எப்படி உயிர் வாழ்வேன். கனவிலும், நனவிலும் ஓயாது உன்னைப் பின் தொடர்ந்த என்னை, நீதான் போர்க்களம் நோக்கிப் போகச் சொன்னாய். எந்தப் பவளச் செவ்வாயைத் திறந்து என்னைப்

போகச் சொன்னாயோ அதே பவளச் செவ்வாயால் என் மீது குற்றம் சாட்டுகிறாய்.."

"அத்தான்! பேதையொருத்தி அறியாது செய்த குற்றத்திற்காகவா இவ்வளவு பெரிய தண்டனை. பிரிவுத் துன்பத்தைப் போல வேறு கொடுந்துன்பம் இல்லை என்பதை எனக்கு உணர்த்திவிட்டீர்களே!"

"எனக்கு மட்டும் அந்தத் துன்பம் இல்லையென்றா எண்ணுகிறாய். கலமேறிக் கடலில் செல்லும் போது, கோலவானிலே உன் மதிமுகத்தைக் காண்பேன். நீலத் திரைக்கடல் உன்னை நினைவுறுத்தும். புரண்டெழும் அலைகளின் ஊடே துள்ளியெழும் மீன்கள் உன் விழிகளை என்னெதிரே கொண்டு வந்து நிறுத்தும். கடாரத்தின் காடு மேடுகளிலே சுற்றித் திரிந்த போதும், களங்களிலே போரிட்டுக் கொண்டிருந்த போதும், ஓயாது ஒளியாது உன்னைப் பற்றிய சிந்தனைதான் எனது உள்ளத்திலே இடம் பெற்றிருந்தது. உன்னைக் காண எனது கண்கள் துடித்தன. எனது வாய் உன்னோடு பேசி மகிழத் துடித்தது. எனது உள்ளம் உன்னைத் தேடி ஓடி வந்து சரணடைந்துவிட்டது. எனது உடல் மட்டும் அங்கு இயந்திரம் போல இயங்கிக் கொண்டிருந்தது. ஒருவாறாகக் கடாரத்துப் போர் முடிந்ததும் உன்னைக் காண விரைந்து புறப்பட்டேன். கலத்தை வேகமாகச் செலுத்தும்படி மாலுமிகளுக்கு ஆணை பிறப்பித்தேன். காற்று மெதுவாகத்தானே வீசுகிறது என்ன செய்வது என அவர்கள் கைகளைப் பிசைந்தார்கள். நான் காற்றைச் சபித்தேன். சுழன்றடிக்கும் புயல் ஒன்று கிளம்பி வந்து என்னைத் தூக்கிச் சென்று உன்னருகில் சேர்க்காதா என ஏங்கினேன்.

"நாகைத் துறைமுகத்தில் வந்திறங்கியதும் உடனே குதிரை மீதேறி விரைந்து புறப்பட்டேன். எனது அவசரத்தைக் கண்டு உடன் வந்தவர்கள் திகைத்துப் போனார்கள். ஆனால் என் மனத் துடிப்பை அவர்கள் எப்படி அறிவார்கள். பாய்ந்து சென்ற எனது குதிரையைப் பின் தொடர்ந்து வந்த வீரர்கள் திணறிப் போனார்கள். குதிரையோ நுரைதள்ளிய வண்ணம் பறந்து கொண்டிருந்தது. அதற்கு முன்னதாக எனது உள்ளம் சிறகடித்துச் சென்று கொண்டிருந்தது.

"இவ்வளவு விரைந்து வந்த என்னை உன் தம்பி கோட்டை வாயிலில் தடுத்து நிறுத்திவிட்டான். வரவேற்பு ஏற்பாடு என்ற பெயரால் என் வேகத்திற்கு அணை போட்டுவிட்டான். இறுதியாக

அரண்மனை மாடத்தில் உனது மதிமுகத்தைக் கண்ட பிறகுதான் எனது வேகம் அடங்கிற்று.”

“நான் மட்டுமென்ன வேடிக்கையாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தேனா? எப்படியோ துணிந்து உங்களைப் போர்க்களம் நோக்கிப் போகச் சொல்லிவிட்டேன். பின்னர் நான் செய்த பெருந்தவற்றை உணர்ந்து கொண்டேன். பிரிவுத் துன்பம் என்னை வதைத்தது. தங்கை மாதேவியின் குறும்புப் பேச்சும், தம்பி அதிராசேந்திரனின் அன்புப் பேச்சும், அத்தையின் ஆதரவு மொழியும், எனது வேதனையை வளர்த்தன. இலக்கியங்களில் படித்த ‘பிரிவாற்றாமை’ ‘பிரிவுழிக் கலங்கல்’ என்பவற்றின் பெரும் பொருளை அப்போதுதான் உணர்ந்து கொண்டேன். கடாரத்துக் கானகங்களில் சுற்றித் திரிந்த உங்களைச் சுற்றி எனது உள்ளம் வட்டமிட்ட வண்ணம் இருந்தது. எப்போது காண்போம் என எனது உள்ளம் துடித்து ஏங்கியது. இந்தப் பெருந் தண்டனையை விதிக்கும் அளவிற்கு இந்தப் பேதை என்ன தவறு புரிந்துவிட்டாள்” எனக் கூறி அப்படியே விஷ்ணுவர்த்தனனின் மார்பில் மதுராந்தகி சாய்ந்து கொண்டாள். அவள் விழிகளில் நீர் பெருகிற்று. தனது மார்பில் சாய்ந்த அவளை அணைத்த வண்ணம் “மதுராந்தகி! இது என்ன பிதற்றல். வாகை சூடிவாருங்கள் என வாழ்த்தி வழியனுப்பிய நீயா இப்படிப் பேசுகிறாய். மறக்குடி வழி வந்த உனது நாவா இவ்விதம் கூறுகிறது. மன்பதை காக்கும் மன்னர் குடியில் பிறந்த பிறகு களம் என்றால் கைகட்டிக் கொண்டு இருக்க முடியுமா? பிரிவுத்துன்பம் இருப்பது இயற்கைதான். ஆனால் நீ ஒரேயடியாகக் கலங்கிவிட்டாய். நீ கலங்குவதைக் கண்டு எனது நெஞ்சமும் கலங்குகிறது” என்றான்.

“அத்தான்! நீங்கள் என்னதான் கூறினாலும் எனது நெஞ்சு அமைதியடைய மறுக்கிறது. மறக்குடி வழிவந்தவள்தான். என்றாலும் எனது உள்ளத்தின் உரம் பிரிவு என்றதும் ஓடி ஒளிந்து கொண்டதே. நான் என்ன செய்வேன்” என்றாள்.

“மதுராந்தகி! இதோ என்னைப் பார். நீண்ட நாள் கழித்து மீண்டும் வந்திருக்கிறேன். உனது சுந்தரத் திருமுகத்தில் பளிச்சிடும் புன்னகையைக் கண்டு வெகு காலமாகிவிட்டது. எங்கே உன் முல்லைப் பல் வரிசையைக் காட்டி முறுவல் செய் பார்க்கலாம். மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்த வேண்டிய நேரத்தில் எதை எதையோ

பேசி வேதனையில் ஆழ்வதில் என்ன பயன்?" என்று கூறி அவளது மதிமுகத்தைத் தன்னிரு கைகளாலும் தூக்கிப் பிடித்தான்.

விழிகளில் பெருகிய நீரைத் துடைத்த வண்ணம் மதுராந்தகியும் புன்னகை பூத்தாள்.

அதுவரை தனது தலைவியின் அருகே நின்ற அன்னம் இனி நமக்கு இங்கு என்ன வேலை என எண்ணுவது போலத் திரும்பிச் சென்றது.

# 19. அன்புடை நெஞ்சந்தாங் கலந்தனவே.

**'சிலைத் தோள் ஆடவர்**
**செருவேல் தடக்கையர்**
**கறைத்தோல் மறவர்**
**கடுந்தேர் ஊருநர்**
**வெண்கோட்டு யானையர்**
**விரைபரிக் குதிரையர்..'**

என வீரத் தமிழ் மறவர்களைக் குறித்து இலக்கியங்கள் வர்ணிக்கின்றன. அத்தகைய வீர மரபிலே வந்த இளவரசன் அதிராசேந்திரன் எல்லாவகைப் போர் முறைகளிலும் தேர்ச்சி பெற்றுப் பேராற்றல் படைத்த பெருவீரனாகத் திகழ்ந்தான். விவரம் தெரிந்த நாளிலிருந்து வீரத்தை அவன் துணையாக்கிக் கொண்டானே தவிர வேறெதையும். துணையாக்கிக் கொள்ளவில்லை. அவனது சிந்தனையும் செயலும் வீர விளையாட்டுக்களையே சுற்றிச் சுழன்றன. வெயில் கதிர் விழுங்கிய துகில் கொடியாம் புலிக்கொடி பகைவர் நாடுகளில் பறப்பதைக் கண்டு அவன் பரவசமடைந்தது உண்டு. ஆனால் வெண்ணொளி வீசும் வான்மதி: முகத்தினரைக் கண்டு அவன் என்றுமே மயங்கியதில்லை.

செருக்களத்தில் வீரர்களுக்கு வெறியூட்டும் இடிக்குரல் முரசும், வடித்தோல் கொடும் பாறையும் அவன் செவிகளுக்கு இன்பம் ஊட்டுவனவாக அமைந்திருந்தன. ஆனால் மகரயாழும், வேய்ங்குழலும், முழவும் கலந்து எழுப்பும் இன்னிசையோடு தேனினைப் பெய்து மயிலனைய சாயலார் குயிலினுமினிய குரலில் இசைக்கும் தீந்தமிழ்ப்பண் அவன் உள்ளத்தைத் தொட்டதே இல்லை.

நெய்யூட்டப்பட்டுப் பளபளக்கும் நெடுவேலின் ஒளி அவனைக் கவர்ந்திழுத்திருக்கிறது. ஆனால் அதனினும் மிக்க ஒளி வீசும் வேலனைய விழிகள் அவனை மயக்கியது கிடையாது.

வெண்ணிலவு வீசிடும் வேளையிலே காவிரிக் கரையிலே, காதலிளம் பெண்ணுடன் கூடி, மகிழ வேண்டிய வயதிலே அவன் வேலெறிந்து வேழத்தை வீழ்த்துவதிலும், வாள்வீசி வரிப்புலியைக் கொல்வதிலும் தனது காலத்தைச் செலவிட்டுக் கொண்டிருந்தான்.

இளவரசனின் இந்த உறுதியைத் தகர்த்தெறியக் கங்கணம் கட்டிக் கொண்டு வந்தவள் போலப் புவனமாதேவி வந்து சேர்ந்தாள். சீறிப் பாய்ந்து வரும் வேல்களுக்கஞ்சாது, போரிட்டு எத்தனையோ களங்களில் வாகை சூடிய அதிராசேந்திரன் புவனாவின் விழிவீச்சுக்கு முன் நிற்க முடியாது திணறினான். அந்த மதிமுகத்தாளின் புன்னகையிலே தன் உள்ளத்தைப் பறிகொடுத்தான். புவனாவின் நிலையும் அப்படித்தான் இருந்தது.

கங்கநாட்டு மாளிகையில் தனது பாட்டனிடம் நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறுநூறு, ஒத்த பதிற்றுப்பத்து, ஓங்குபரிபாடல், கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகை, காதலோவியமாகத் திகழும் அகம், வீர ஓவியமாகத் திகழும் புறம், நெஞ்சையள்ளும் சிலம்பு, சிந்தாமணி, மேகலை முதலிய பைந்தமிழ் நூல்களைக் கற்று, குறளின்பத்தில் திளைப்பதில் தனது காலத்தைச் செலவிட்டு வந்தாள். தமிழின் மீது தணியாத பற்றுக் கொண்ட பேரரையர் தமது பேத்தியைச் செந்தமிழ்ச் செல்வியாக வளர்த்திருந்தார். அவளையொத்த பெண்கள் அம்மானை ஆடியும், பந்தாடியும், வட்டாடியும், பொழிலாடி மகிழ்ந்தும் புனலாடித் திளைத்தும் காலத்தைப் போக்கிக் கொண்டிருந்த போது அவள் பைந்தமிழ்த் தேனைப் பருகுவதில் ஈடுபட்டிருந்தாள்.

அலைமாகடல் நடுவே அமைதியாகச் சென்று கொண்டிருந்த கலமானது திடீரென வீசிய புயலால் அலைக்கப்படுவது போல இருவரது உள்ளங்களும் அமைதியை இழந்து தத்தளித்தன. இன்னதென அறிய முடியாத ஒருவகை உணர்ச்சி இருவரையும் ஆட்கொண்டது. இருவரும் தங்கள் உள்ளங்களை எவ்வளவோ கட்டுப்படுத்த முயன்றனர். எனினும் மதகுடைத்துப் பாயும் வெள்ளமெனக் காதலுணர்ச்சி பொங்கிப் பெருகியோடியது.

நாட்கள் பல நகர்ந்தன. இருவரின் உள்ளங்களும் நெருங்கிப் பின்னிப் பிணைந்தன. ஆசிரியர் சயங்கொண்டாரின் இல்லத்திலும், அரண்மனையிலும் அவ்வப்போது இருவரும் சந்திக்க வாய்ப்புக் கிடைப்பது உண்டு. ஆனால் பலர் சூழ்ந்திருக்கும் போது விழிகளால் பேசிக் கொள்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? வாய் திறந்து பேச இருவரும் துடித்தனர்.

ஒரு நாள் அந்திமாலைப் பொழுதில் அந்த வாய்ப்புக் கிட்டியது. மாலைக் கதிரோன் தன் பொன்னொளியை வீசியவாறு மெதுவாக

மறைந்து கொண்டிருந்தான். அரண்மனையைச் சுற்றியிருந்த சோலை அந்த மாலை வேளையில் எழில் பெற்றுத் திகழ்ந்தது.

அந்தப்புர மகளிரின் உபயோகத்தில் இருந்த அந்தச் சோலை ஆள் நடமாடமற்று வெறிச்சோடியிருந்தது. அந்தச் சோலையின் நடுவே அமைந்திருந்த பளிங்கு மேடை மீது தந்தச் சிலையெனப் புவனமாதேவி அமர்ந்திருந்தாள். ஏதோ கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவள் தன்னை மறந்தவளாக அமர்ந்திருந்தாள். அப்போது அருகில் யாரோ நடந்து வரும் அரவம் கேட்டுத் திரும்பினாள். அவளால் தன் விழிகளேயே நம்ப முடியவில்லை. ஆம்! இளவரசன் அதிராசேந்திரன் நின்று கொண்டிருந்தான். அவனும் அவளை அங்கு எதிர்பார்த்திராதவன் போலத் திகைத்து நின்றான். என்ன பேசுவது என்றே இருவருக்கும் புரியவில்லை. ஆனாலும் ஏதாவது பேச வேண்டும் என இருவரது இதயங்களும் துடித்தன. பெண்மைக்கே இயல்பான நாணம் புவனமாதேவியின் வாயைத்தான் தடுத்தது. ஆனால் அவளது விழிகள் பேசின. அவளது தடுமாற்றத்தைக் கண்ட அதிராசேந்திரன் பேசத் தொடங்கினான்.

“எதிர்பாராது இங்கு என்னைக் கண்டதும் திகைத்துவிட்டீர்கள் போல இருக்கிறது.”

“ஆம் இளவரசே..! இல்லை..!” என நாத்தடுமாறிய வண்ணம் புவனா திணறினாள்.

“தங்களுக்கு இங்குக் குறையொன்றும் இல்லையே! தங்கள் பாட்டனாரிடம் இருந்து எனக்கு ஒரு ஓலை வந்திருக்கிறது.”

“இல்லை இளவரசே, தங்களின் அன்புத் தமக்கையாரது மேற்பார்வையில் இருக்கும் எனக்கு என்ன குறை வந்துவிடப் போகிறது.”

“நல்லது! குறை யாதேனும் இருந்தால் உடனே எனக்குத் தெரியப்படுத்துங்கள். தங்கள் பாட்டனாருக்குச் சோழகுலம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது” என்று கூறிவிட்டு அவ்விடத்தைவிட்டு அதிராசேந்திரன் அகன்றான்.

இன்னும் சிறிது நேரம் பேச இருவரின் உள்ளங்களும் துடித்தன என்றாலும் கன்னிப்பேச்சு அல்லவா? வெட்கம் இருவரையும் தடுத்தது.

அதிராசேந்திரன் சென்ற பிறகு வெகு நேரம் வரையிலும் புவனா தன்னினைவு பெறவேயில்லை. ஆகா! எவ்வளவு பெரிய பேரரசின் பட்டத்திளவரசர். கேவலம் அவரின் கீழ்ப்பணியாற்றும் ஒரு மாதண்டநாயகரின் பேத்திக்கு எவ்வளவு மரியாதை காட்டுகிறார். அவர் மட்டுமென்ன? இளவரசி மதுராந்தகியும், இளவரசி வீரமாதேவியும் அவளிடம் செலுத்தும் அன்பிற்கு இணையாக ஏதேனும் இருக்க முடியுமா? அரசகுலத்தவர் என்ற மமதை சிறிதும் இல்லாது தங்களது உயிர்த்தோழியாகத் தன்னை ஏற்ற அவர்களது பண்பை எண்ணிப் புவனமாதேவி வியந்தாள்.

மறுபடியும் அவளது சிந்தனை இளவரசன்பால் திரும்பியது. ஒவ்வொரு தடவையும் தன்னைப் பார்க்கும் போது அவரின் பொல்லாத விழிகள் ஏதேதோ பேசுகின்றனவே. அவற்றின் பொருள் எதுவாக இருக்க முடியும்? இவ்வாறு எண்ணிய போது அவள் முகத்தில் செம்மை படர்ந்தது. அவளையறியாமல் எங்கிருந்தோ வெட்கம் வந்து அவளைச் சூழ்ந்து கொண்டது. பொதிகையிலே பிறந்து, நறுமணப் பொழிலிலே தவழ்ந்து வந்த தென்றல் அவள் உடலில் மட்டுமல்ல உள்ளத்திலும் ஒரு இன்ப உணர்ச்சியைப் பரப்பியது.

# 20. இரகசியம்

“அமுதா! ஏ.. அமுதா!” மெல்லிய குரலில் கிசுகிசுத்தான் குமுதசந்திரன். அமுதவல்லியோ பதில் ஒன்றும் கூறாது பூக்குடலையுடன் விரைந்து போய்க் கொண்டிருந்தாள்.

“அ—மு—தா..” என மறுபடியும் அவன் அழைத்தான். அவன் குரலில் அழுத்தம் தொனித்தது. அவளோ அதைச் சற்றும் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. அருகிலிருந்த முல்லைக் கொடியிலிருந்து மலர்க் கொத்து ஒன்றை வெடுக்கெனப் பறித்துத் தன் குடலையில் போட்டாள். தன் நெஞ்சையே அவள் திருகிக் குடலையில் போடுவது போன்ற உணர்வு குமுதசந்திரனுக்கு. இடமோ அந்தப்புரத்தைச் சேர்ந்த சோலை. அங்கு நுழைந்ததே பெரும் தவறு. காவலர்களிடம் எப்படியோ கூத்தாடிக் கெஞ்சி உள்ளே புகுந்திருக்கிறான். இப்படி அரும்பாடுபட்டு எவளைத் தேடி உள்ளே வந்தானோ அவள் அவனிடம் பேச மறுக்கிறாள். என்ன செய்வது என்றே அவனுக்குத் தெரியவில்லை.

ஒரு எட்டில் அவள் அருகில் போய் நின்றான். மலர் கொய்ய முயன்றவளின் மணிக்கரத்தைப் பற்றிக் கொண்டு “அமுதா, என் மீது கோபமா” என்றான்.

“கையைவிடுகிறாயா! இல்லை காவற்காரர்களைக் கூப்பிடட்டுமா?” என்றாள் அவள்.

“ஐயோ! நான் என்ன திருடனா? நீ காவற்காரனைக் கூப்பிடுவதற்கு?”

“ஆம்! ஆம்! நீ திருடன்தான்” என அழுத்தம் திருத்தமாக உச்சரித்தாள் அந்த வனிதாமணி.

“பெண்ணே! நான் எதை, யாரிடம், எப்போது திருடினேன்?”

“அதைச் சொல்லித்தான் ஆகவேண்டுமோ?”

“சொல்லாவிட்டால் விடமாட்டேன்.”

“இதென்ன வம்பு? கையைவிடப் போகிறாயா இல்லையா?”

“விடமாட்டேன் விடமாட்டேன்! விடவேமாட்டேன்.”

“ஒரு பெண்ணிடம் வந்து வம்பு செய்கிறாயே! கொஞ்சங்கூட வெட்கமில்லை.”

“அச்சமும் நாணமும் பெண்களுக்குத்தான். ஆண்களுக்கு இல்லை. அதை முதலில் தெரிந்து கொள்.”

“அதைத்தான் முதலிலேயே தெரிந்து கொண்டேனே. போர்க்களத்திற்குப் போகத் தைரியமில்லை. அந்தப்புரச் சுவரேறி வந்து குதித்துப் பேதையொருத்தியின் கையைப் பிடித்து இழுப்பதில் இருந்தே அச்சம் யாருக்கு இருக்கிறது என்பது தெரிந்துவிட்டதே.”

“பெண்ணே! அதிகமாகப் பேசுகிறாய், பெண் என்பதால் மன்னிக்கிறேன். பிழைத்துப் போ!”

“பேச்சில் ஒன்றும் குறைச்சலில்லை.”

“பின் எதில் குறைச்சல்? அழகில் குறைவா? ஆண்மையில் குறைவா? அறிவில் குறைவா? புகழில் குறைவா? எதில் குறைவு?” என்று கூறிய வண்ணம் தலையை நிமிர்த்தி இராஜ பார்வை பார்த்த வண்ணம் குமுதசந்திரன் நின்றான்.

இதுதான் சமயமென அவன் பிடியிலிருந்து விடுபட்ட அமுதவல்லி “தலையில்தான் குறைச்சல்” என்று கூறிய வண்ணம் அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள். புள்ளி மானெனத் துள்ளி ஓடும் அவளை விரட்டிய வண்ணம் தொடர்ந்து ஓடினான் குமுதசந்திரன்.

சோலையின் நடுவே இருந்த பளிங்கு மேடையருகே போய் நின்றாள் அமுதா. மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க அவள் அருகே போய் நின்றான் குமுதசந்திரன். அவன் தோற்றத்தைக் கண்டு கலகலவென நகைத்தாள் அமுதா.

“அப்பாடா! நல்லவேளை, உண்மையாகவே என் மீது கோபம் கொண்டிருப்பதாகவே நினைத்தேன்” என்றான் குமுதசந்திரன்.

“பின் என்ன? நீதான் ஒரேயடியாக என்னை மறந்து போனாயே.”

“அமுதா! என்ன வார்த்தை இது. உன்னை நான் மறப்பதா?”

“நேற்று வருவதாகச் சொல்லிவிட்டுப் பின் ஏன் வரவில்லை?”

“வருவதற்கு எவ்வளவோ முயன்றேன். முடியவில்லை. வேங்கி இளவரசர் என்னைவிட்டால்தானே நான் இங்கே வரலாம்.”

“அரசகுலத்தின் சகவாசமே இப்படித்தான்” என அலுத்துக் கொண்டாள் அமுதா.

“நானும் ஒரு வாரமாக உன்னைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன். நீதான் என்னை மறந்துவிட்டாலும், உன்னைத் தேடி ஆசிரியரின் இல்லத்திற்கு வந்துவிடுவது எனத் தீர்மானித்தேன். ஆனால் ஆசிரியர் வீடு செல்லும் நினைப்பே இளவரசிகளுக்கு எழவில்லை. அதுவும் கங்க நாட்டு இளவரசி வந்த பிறகு அவர்கள் வெளியுலகையே மறந்து போனார்கள். நானும் வெட்கத்தைவிட்டு இரண்டு மூன்று முறை ஆசிரியர் வீட்டை நினைவுபடுத்திப் பார்த்தேன். ஆனால் அவர்கள் அசைவதாகத் தெரியவில்லை. நீயாவது வருவாய் என நாள்தோறும் இங்கு வந்து காத்துக் கிடப்பேன். ஆனால் நீயோ வருவதே இல்லை. ஆஸ்தான கவி ஆகிவிட்டாய். வேங்கி இளவரசரின் உற்ற தோழனாக வேறு ஆகிவிட்டாய். இனிமேல் உனக்கு என் நினைவு இருக்குமா?” என்றாள் அமுதா. அவளது மலர் விழிகளின் ஓரத்தில் பனித்துளிகள் முகிழ்த்தன. அதைக் கண்ட குமுதசந்திரன் பரபரப்படைந்தவனாக “அமுதா! என்ன இது சிறு குழந்தை மாதிரி” என்று கூறியவனாக அவளது விழிகளைத் துடைத்து அருகிருந்த பளிங்கு மேடையில் அமரச் செய்து தானும் அமர்ந்து கொண்டான். சற்று நேரம் அமைதியாகக் கழிந்தது.

“அமுதா! உன்னைக் காண வேண்டும், கண்டு எவ்வளவோ பேச வேண்டும் என்ற ஆசையுடன் ஓடோடி வந்தேன். மகிழ்வுடன் இருக்க வேண்டிய வேளையில் இப்படிக் கலங்கலாமா?”

“என்ன செய்வது? உன்னைக் காணாவிட்டால் என் இதயம் வெடித்துவிடும் போலிருக்கிறது.”

“குமுதா! கவலைப்படாதே! இனிமேல் அடிக்கடி சந்திக்கச் சந்தர்ப்பம் கிடைக்கும்.”

“அது எப்படி?” எனத் தன் அழகிய விழிகளை அகல விரித்த வண்ணம் அமுதா கேட்டாள்.

“வேங்கி இளவரசர் இனி என்னை அடிக்கடி தேடமாட்டார்.”

“ஏன்?”

“உன்னைப் போன்ற ஒரு பெண்ணுக்கு அவர் பதில் சொல்ல வேண்டியிருப்பதால்தான்.”

அவன் கூறியதின் பொருளை உணர்ந்து கொண்ட அமுதவல்லி கலகலவென நகைத்தாள்.

“முழுவதுமாக மகிழ்ந்துவிடாதே. வேங்கி இளவரசருக்கு வேறு வேலை இருந்தாலும், நம் இளவரசர் அதிராசேந்திரர் இது போன்ற வம்புகளில் இன்னும் சிக்கவில்லை. வேங்கி இளவரசர் என்னவிட்டாலும் இவர் விடமாட்டார்.”

“அந்தக் கவலை உனக்கு வேண்டாம்” என்றாள் அமுதவல்லி. ஏதோ ஒரு பெரிய ரகசியத்தைத் தெரிந்து கொண்ட தொனி அவள் குரலில் ஒலித்தது.

“அமுதா! நீ என்ன சொல்லுகிறாய்?” எனத் திகைத்த வண்ணம் குமுதசந்திரன் கேட்டான்.

“எல்லாம் சரியாகத்தான் சொல்லுகிறேன். அருகில் வா, மிக இரகசியமான விஷயம். யாருக்கும் தெரியக் கூடாது.”

அவள் சொல்லப் போவதை இன்னதென அறியத் துடிக்கும் நெஞ்சத்துடன் அவளருகில் நெருங்கி உட்கார்ந்தான் குமுதசந்திரன். அவளோ சற்றும் முற்றும் ஒரு தடவை பார்த்து மெல்லிய குரலில் “நமது இளவரசர் ஒரு பெண்ணைக் காதலிக்கிறார்” என்றாள். அளவு கடந்த வியப்பினால் குமுதசந்திரனின் இதயம் ஒருகணம் நின்று போனது. பெண்களை ஏறிட்டுக்கூடப் பார்க்கும் வழக்கமில்லாத இளவரசர் ஒரு பெண்ணைக் காதலிக்கிறாரா? அப்படியானால் அந்தப் பாக்கியசாலி யாராக இருக்க முடியும். அவன் திகைப்பு அடங்குவதற்குள் அமுதவல்லி தொடர்ந்தாள்.

“என்ன அப்படியே திகைத்துவிட்டாய். நான் நேற்று என் இரு கண்களாலும் பார்த்தேன்.”

“எதைப் பார்த்தாய்?”

“இளவரசரும் அந்தப் பெண்ணும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்.”

“எங்கே?”

“இங்கேதான். இதோ நாம் அமர்ந்திருக்கும் இதே மேடையில்தான். நேற்று வழக்கம் போலப் பூப்பறிக்க இங்கு வந்தேன். வந்த இடத்தில்

இளவரசர் ஒரு பெண்ணுடன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். மெதுவாகச் செடிகளுக்குப் பின்னால் மறைந்து கொண்டு பார்த்ததில் அந்தப் பெண் யார் என்பது தெரிந்தது.”

“அந்தப் பெண் யார்?” என ஆவலுடன் துடித்தான் குமுதசந்திரன்.

“யாராக இருக்கும் என்பதை நீதான் சொல்லேன் பார்க்கலாம்” என அவனின் ஆவலுக்குத் தூபம் போட்டாள் அமுதா.

குமுதசந்திரன் சற்று யோசித்தான். இளவரசரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்தப் பேரழகி யாராக இருக்க முடியும். ஒருவேளை! பளிச் என அவன் உள்ளத்தில் ஒரு நினைவு தோன்றி மறைந்தது.

“அமுதா! நீ கூறும் பெண் கங்க இளவரசியா?”

“ஆம். சரியாகச் சொல்லிவிட்டாயே! அது எப்படி உனக்குத் தெரிந்தது?” என்றாள் அமுதவல்லி.

“புயலில் இருந்து புவனமாதேவியை இளவரசர் மீட்ட கதையை அவளிடம் கூறினான் குமுதசந்திரன்.

“அன்று ஏற்பட்ட தொடர்புதான் இன்று காதலாக மலர்ந்திருக்க வேண்டும்” எனக் கூறினான்.

“அது போகட்டும், இந்தக் காதலைப் பற்றி நீ என்ன நினைத்திருக்கிறாய்?” என அமுதவல்லி கேட்டாள்.

“என்ன நினைப்பதா? நன்றாக வளரட்டும். குமுதசந்திரன்—அமுதவல்லி காதலைப் போல் நாளுக்கு நாள் உரம் பெற்று வளர்ந்தோங்கட்டும்.”

“போதும்! உன் கேலி! எனக்கென்னவோ இது பிடிக்கவில்லை.”

“அமுதா! இதென்ன பேச்சு. உனக்கு ஏன் பிடிக்கவில்லை?”

“நமது காதல் வேறு. அரசகுலத்தவர் காதல் வேறு. ஏழைப் புலவனின் மகள் மற்றொரு ஏழைப் புலவனைக் காதலித்து மணம் புரிவதை யாரும் தடை செய்யமாட்டார்கள். ஆனால் சோழ சாம்ராஜ்யத்தின் சிங்காதனத்தை அலங்கரிக்க வேண்டிய இளவரசர், ஒரு படைத்தலைவனின் பேத்தியைத் திருமணம் செய்வதற்கு எத்தனையோ தடைகள் எழும். அதை நினைக்கும் போதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது.”

“புவனமாதேவி சாதாரணப் பெண் அல்லவே. சோழ சாம்ராஜ்யத்தின் மாதண்டநாயகராகப் பணிபுரியும் மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் பேத்தி அல்லவா? இந்த சோழ சாம்ராஜ்யத்திற்குப் பேரரையர் செய்த சேவை என்ன சாமான்யமானதா? கங்கைகொண்ட சோழரின் காலத்திலிருந்து இடையறாது இந்த சாம்ராஜ்யத்தின் மேன்மைக்காகப் பாடுபட்டவர் அல்லவா? அவரின் சேவையை மெச்சி கங்கநாட்டின் மன்னராக அவரை அரசர் ஆக்கினரே, அப்பேர்ப்பட்டவரின் பேத்தி நம் இளவரசருக்குத் தகுதியற்றவள் என்றா எண்ணுகிறாய்?”

“அப்படியொன்றும் நான் சொல்லவில்லையே. தங்கமான குணம் படைத்த நம் இளவரசருக்கு எல்லா வகையிலும் கங்க இளவரசி தகுதியானவள்தான். ஆனால் நாட்டார் இதை ஒப்ப வேண்டுமே.”

“நாட்டார் ஏன் ஒப்பமாட்டார்கள். இரண்டு பேரையும் ஜோடியாகப் பார்த்தால் போதும். அப்படியே மயங்கிப் போய் ஒத்துக் கொள்வார்கள்.”

குமுதசந்திரன் கூறியதைக் கேட்ட அமுதவல்லி சிரித்தாள். “எப்படியோ எல்லாமே நல்லபடியாக நடந்தால் சரிதான்” என்றாள்.

“பயப்படாதே அமுதா! இந்த குமுதசந்திரன் இருக்கிறவரையில் எல்லாமே நல்லபடியாக நடக்கும்” எனக் கூறினான் குமுதசந்திரன்.

“போதுமே! உன் தற்பெருமை. உன்னையும், உன் எஜமானர் வேங்கி இளவரசரையும் போலப் பெண்ணடிமைகளாக விளங்காது நம் இளவரசர் இருந்தாரே என மகிழ்ந்து கொண்டிருந்தேன். அவரும் ஒரு பெண்ணுக்கு அடிமையாகிவிட்டார்” என்றாள் அமுதவல்லி.

“என்ன சொன்னாய்?” என்று கேட்ட வண்ணம் அவளின் கன்னத்தைப் பிடித்துச் செல்லமாகக் கிள்ளினான் குமுதசந்திரன்.

# 21. கடல் கடந்த கதை

சிரித்துப் பேசி மகிழ்வதற்கு அவர்கள் இருவருக்கும் எத்தனையோ செய்திகள் காத்துக் கிடந்தன. மைத்துனர்கள் அல்லவா? எனவே ஒருவரையொருவர் கேலி செய்த வண்ணம் அந்தச் சாலையில் குதிரை மீது சென்று கொண்டிருந்தனர்.

விஷ்ணுவர்த்தனும், அதிராசேந்திரனும் ஒத்த வயதினர் மட்டுமல்லர், ஒருமித்த உள்ளத்தினருமாவர். மைத்துனர் என்ற உறவு முறையால் மட்டும் அவர்கள் பிணைக்கப்படவில்லை. ஒத்த கருத்துப் படைத்த நெருங்கிய நண்பர்களாகவும் அவர்கள் விளங்கினர். தரணியெங்கணும் புலிக் கொடியை நாட்டித் தமிழகத்தின் வீரத்தை நிலைநிறுத்த வேண்டும் என்ற மகத்தான இலட்சியத்தை இருவரும் கொண்டிருந்தனர். வீரத்துடிப்பு மிக்க அதிராசேந்திரனுக்கு, விவேகம் நிறைந்த விஷ்ணுவர்த்தனின் துணை மிகத் தேவையானதாக இருந்தது.

இந்த இரு இளவரசர்களின் இணைபிரியாத நட்பை நாடு வியந்து பாராட்டியது. தமிழகத்தின் பெருமை இவர்களால் மேலும் உயரப் போகின்றது என அனைவரும் நம்பினர்.

இத்தகு கெழுதகை நட்புப் பூண்ட வேங்கி இளவரசனும், சோழ இளவரசனும், கவிச்சக்கரவர்த்தி செயங்கொண்டாரின் இல்லம் நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். குதிரைகள் மெதுவாக ஒய்யார நடைபோட்ட வண்ணம் சென்றன. கடல் கடந்த நாடுகளில் தான் கண்ட காட்சிகளைக் குறித்து உற்சாகமாக வர்ணித்துக் கொண்டிருந்தான் விஷ்ணுவர்த்தனன்.

“அதிராசேந்திரா! பொன்னியாறு பெருக்கெடுத்தோடும் இந்தச் சோழ வளநாட்டில்தான் நீர் வளமும், நில வளமும் மண்டிக் கிடக்கிறது என நான் கருதியிருந்தேன். ஆனால் கடாரத்திலும், காம்போசத்திலும், அதற்கப்பாலுள்ள சொர்ண தீவிலும் காவிரியைப் போலப் பல பெரு நதிகள் பெருக்கெடுத்தோடுகின்றன. காவிரிக் கரையில் மண்டிக் கிடந்த காடுகளை வெட்டித் திருத்தி நாடாக்கினார்கள் நம் முன்னோர்கள். ஆனால் அந்த நாடுகளில் இன்னும் பெருங்காடுகள் மண்டிக் கிடக்கின்றன.

கடாரத்து மன்னனுக்கு உதவி செய்ய நமது படைகள் வருகின்ற செய்தியை அவனது எதிரிகள் எப்படியோ அறிந்து கொண்டு மலைப்பகுதியில் சென்று மறைந்து கொண்டனர். எனவே அவர்களைத் துரத்திச் செல்ல வேண்டியதாயிற்று. இருள் மண்டிக் கிடந்த அந்தக் காடுகள்தான் எவ்வளவு பயங்கரமானவை. இந்த நாட்டில் நான் பார்த்திராத பல கொடிய மிருகங்களை அங்குக் கண்டேன். அப்போது உன்னை நினைத்துக் கொண்டேன்."

"என்ன? மிருகங்களைக் கண்டதும் என் நினைவு வந்ததா?" என்றான் அதிராசேந்திரன். அவன் குரலில் போலிக் கோபம் தொனித்தது. இதற்கு விஷ்ணுவர்த்தனன் சிரித்துக் கொண்டே பதில் கூறத் தொடங்கினான்.

"கோபித்துக் கொள்ளாதே! காவிரிக்கரை காடுகளில் சிறுத்தைகளையும், காட்டுப் பன்றிகளையும், கரடிகளையும் வேட்டையாடி வேட்டையாடி சலித்துப் போன நீ அங்கு எனக்கருகில் இருந்திருந்தால் நல்ல வேட்டை கிடைத்திருக்குமே என எண்ணிக் கொண்டேன். இறுதியாக மலைக் குகைகளில் பதுங்கியிருந்த எதிரிகளை ஒருவாறாக ஒழித்துக்கட்டினோம். பிறகு கடாரத்தரசனுக்கு முடிசூட்டிய பிறகு நமது படைகள் வடக்கு நோக்கிப் புறப்பட்டன. அங்கிருந்து இலங்காசோகம் என்ற நகரை அடைந்தோம். அங்கிருந்த மக்கள் எங்களை உற்சாகமாக வரவேற்றனர். தமிழ் நாட்டைச் சேர்ந்த வணிகர்கள் இதற்கு முன்பு அந்நகருக்கு வந்திருக்கிறார்களாம். எனவே அம்மக்கள் சோழ நாட்டைப் பற்றி மிக நன்றாகத் தெரிந்து வைத்திருந்தனர்.

இதற்குப் பிறகு மாயிருடிங்கம், மாபப்பாளம் ஆகிய நகர்களின் வழியாகக் காம்போச நாட்டை அடைந்தோம். காம்போச நாட்டின் மன்னனான ஹர்ஷவர்மர் எங்களை எல்லையிலேயே வரவேற்றார். நமது பாட்டனார் இராசேந்திர சோழரின் நண்பரல்லவா? எனவே அவரது அன்பான உபசரிப்பை ஏற்றுக் கொண்டு அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தோம். அங்கிருந்து புறப்படுமுன் ஒளிவீசும் அதிசயக் கல் ஒன்றினை அவர் பரிசளித்தார். அவரது அன்பு என் இதயத்தைக் கவர்ந்தது. இதுவரை தரை வழியாகப் பயணம் செய்த நாங்கள் அத்திட்டத்தை மாற்றினோம். காம்போச நாட்டிலிருந்து கடல்வழிப் பயணத்தைத் தொடங்கினோம். *சொர்ணத்தீவினை

*சொர்ணத்தீவு இன்று சுமத்ரா என்று அழைக்கப்படுகிறது.

நோக்கி எங்களது கலங்கள் விரைந்தன. செல்லும் வழியில் அகிலுக்குப் பெயர்பெற்ற தக்கோலத் துறைமுகத்தில் சிறிது தங்கினோம். தமிழகத்தோடு வாணிகத் தொடர்புடைய அந்நகரில் தமிழ் நாட்டு வணிகர்கள் பலரைச் சந்தித்தோம். சொர்ணத் தீவை நமது கலங்கள் நெருங்கிய போது நான் பிரமித்துப் போனேன். காலை இளம் வெயிலில் அந்த அழகிய தீவு தங்கத்தீவாகவே காட்சியளித்தது. நமது முன்னோர்கள் அதற்குச் சொர்ணத்தீவு என்று பெயர் வைத்தது சரிதான். சொர்ணத் தீவில் தமிழ் வணிகர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அத்தீவில் உள்ள மலையூர், பண்ணே ஆகியவை தமிழ்நாட்டு நகரங்களைப் போல் காட்சி தந்தன.

திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற தமிழ் வணிகக் குழு அங்கு வணிகம் செய்து வருகிறது. அவர்களும் அவர்களது குடும்பத்தினரும், நமது படைகளுக்கு அளித்த உற்சாகமான வரவேற்பு மகத்தானதாக இருந்தது. கடல் கடந்த அந்த நாடுகளில் வாழும் அவர்களின் அன்பு வலையில் இருந்து விடுபடுவது எளிதாக இல்லை. பிறகு அங்கிருந்து ஒருவாறாகக் கிளம்பி மாநக்கவாரம் தீவுகளை அடைந்தோம். தென்னஞ் சோலைகள் நிறைந்த அந்தத் தீவுகளில் சிறிது தங்கிவிட்டுத் தாயகம் திரும்பினோம்" என்று நிறுத்தினான் விஷ்ணுவர்த்தனன்.

அடங்காத ஆர்வத்துடனும் அளவில்லாத வியப்புடனும் அவன் கூறுவதைக் கேட்டு வந்த அதிராசேந்திரன் பெருமூச்சுவிட்ட வண்ணம் "விஷ்ணுவர்த்தனா, நீ மிகவும் கொடுத்து வைத்தவன். இந்த இளவயதிலேயே கலமேறிக் கடல் கடந்து சென்று உன் வீரத்தை நிலைநிறுத்திவிட்டு வந்திருக்கிறாய். ஆனால் நானோ சோழ இளவரசன், சோழப் பேரரசின் தென்திசை மாதண்டநாயகன் என்ற பட்டங்களைச் சுமந்து கொண்டு ஆடலையும், பாடலையும் கண்டு, கேட்டுக் களித்து வீண் பொழுது போக்கிக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"இதென்ன வீண் பேச்சு. நீ சொல்லுவதை உலகம் ஒப்புமா? சின்னஞ்சிறு வயதிலேயே பாண்டிய நாட்டுப் போர்க்களத்தில் நீ காட்டிய வீரத்தைக் கண்டு நாடே வியந்து பாராட்டியது. மக்கள் அன்று முதல் உன்னை 'வீர சோழன்' என்று அழைக்கத் தொடங்கினார்கள்" என்றான் விஷ்ணுவர்த்தனன்.

“வீரசோழன் என்று பட்டம் பெற்று என்ன பயன்? உன்னைப் போன்றவர்கள் கேலி செய்வதற்குத்தான் அது பயன்படுகிறது.”

“அதிராசேந்திரா! எதிர்காலத்தில் நீ மகத்தான செயல்களை ஆற்றவிருக்கிறாய். அதற்குள் ஏன் இப்படி நொந்து கொள்கிறாய்?”

“அப்படி எல்லாம் ஒன்றுமில்லை. குந்தளப் போருக்கு என்னைச் சக்கரவர்த்தி அழைத்துச் செல்ல மறுத்ததிலிருந்து என் உள்ளம் சோர்ந்து போய்க் கிடக்கிறது.”

“சக்கரவர்த்தி செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் தக்க காரணம் இருந்தேதான் தீரும்.”

“சரி சரி! அது போகட்டும். உன் கதையைப் பாதியிலேயே நிறுத்திவிட்டாயே.”

“ஆம் அதிராசேந்திரா! கடல் கடந்த இந்த நாடுகளில் வாழும் மக்கள் விசித்திரமானவர்கள். ஆடலிலும், பாடலிலும் தங்கள் காலத்தைப் போக்குபவர்கள். நமது நாட்டில் குரவைக் கூத்து ஆடுவதைப் போல அந்நாட்டுப் பெண்கள் மலர் மாலைகளைச் சூடிய வண்ணம் அற்புதமான நடனம் ஒன்று ஆடுகிறார்கள். அந்த நடனத்தைப் பார்த்தால் நிச்சயமாக நீ மயங்கித்தான் போவாய்” என்றான் விஷ்ணுவர்த்தனன்,

“போதும்! போதும்! உன்னைப் போலப் பெண்களைக் கண்டு மயங்குபவன் நானல்ல” என்றான் அதிராசேக்திரன்.

இளவரசர்கள் இருவரும் கலகலவென நகைத்தார்கள். மறுபடியும் விஷ்ணுவர்த்தனன் தொடர்ந்தான்.

“கேள்! அதிராசேந்திரா! அந்நாட்டுத் துறைமுகங்களில் மற்றொரு அதிசயத்தைக் கண்டேன். அத்துறைமுகங்களில் சுங்க வரிகள் வசூலிக்கப்படுவதே இல்லை. பொருள்களின் ஏற்றுமதியும் இறக்குமதியும் எத்தகைய தங்கு தடங்கலும் இன்றி நடைபெறுகின்றன. வரி இல்லாததால் பொருள்களும் மலிவாகக் கிடைக்கின்றன. சக்கரவர்த்தி போர்க்களத்தில் இருந்து திரும்பியதும் முதல் வேலையாகச் சுங்கவரியை நீக்கிவிடுமாறு அவரைக் கேட்டுக் கொள்ளப் போகிறேன்.”

“விஷ்ணுவர்த்தனா! நீ கூறுவது புதுமையாக இருந்தாலும், மிக நல்ல யோசனையாக இருக்கிறது. அந்த நாடுகளின் ஆட்சி முறையில் இன்னும் என்ன கண்டாய்?” என்றான் அதிராசேந்திரன்.

இவ்வாறு பேசிக் கொண்டே சயங்கொண்டாரின் இல்லத்தை நெருங்கிய அவர்கள் அரண்மனைத் தேர் ஒன்று அங்கு நிற்பதைக் கண்டு வியப்படைந்தனர். ஒருவேளை இளவரசிகள் வந்திருக்கின்றனரோ என்ற ஐயம் இருவருக்கும் எழுந்தது. மதுராந்தகியைச் சந்திக்கப் போகிறோம் என்ற மகிழ்ச்சி பொங்க விஷ்ணுவர்த்தனன் உள்ளே நுழைந்தான்.

தன் உள்ளம் கவர்ந்த அழகு முகத்தை மீண்டும் சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்காதா என ஏங்கிய வண்ணம் அதிராசேந்திரன் பின் தொடர்ந்தான். முன்னவன் தோற்றான். பின்னவன் வென்றான்.

# 22. சக்கரவர்த்தியின் ஓலை

மதுராந்தகியை எதிர்பார்த்து உள்ளே புகுந்த விஷ்ணுவர்த்தனனை வீரமாதேவியின் குறும்புப் புன்னகை வரவேற்றது. தேடி அலையும் விழிகளுடன் உட்புகுந்த அதிராசேந்திரனை இமைகள் படபடக்க இரு கருவிழிகள் வரவேற்றன. ஆம்! அதிராசேந்திரனைத் தனது விழிகளால் அளவெடுத்த புவனா மறுகணம் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

“வெற்றி வாகை சூடிய வேங்கி இளவரசே வருக! வருக! தங்கள் வரவால் இந்த எளிய குடில் பெருமையடைகிறது” என்றாள் வீரமாதேவி. அவள் குறும்பு அனைவரையும் நகைக்க வைத்தது.

தன் அன்பிற்குரிய மாணவர்கள் இருவரையும் ஆசிரியர் சயங்கொண்டார் பரிவுடன் வரவேற்றார்.

“ஐயா! கடாரம் கைக்கொண்ட கோமகனை இப்படி எளிமையாகவா வரவேற்பது?” என்றாள் வீரமாதேவி.

“அப்படியே ஆகட்டும் அம்மா! உன் விருப்பப்படியே வரவேற்கிறேன்” என்று கூறிய சயங்கொண்டார் விஷ்ணுவர்த்தனன் பக்கம் திரும்பி “அலைகடல் நடுவுட் பலகலம் செலுத்தி, குளிறு தெண்டிரைக்குரைக் கடாரம் கைக்கொண்ட ஏந்தலே வருக! வருக!” எனக் கவிதை நடையில் வரவேற்றார்.

இதைத் தொடர்ந்து அனைவரும் கலகலவென நகைத்தனர்.

“மாதேவி இங்கு இருப்பது தெரிந்தால்..” என இழுத்தான் விஷ்ணுவர்த்தனன்.

“ஆம்! வந்திருக்கமாட்டீர்கள். தமக்கையைத் தேடி வந்த இடத்தில் தங்கையைக் காண நேர்ந்தால் ஏமாற்றமாகத்தான் இருக்கும்” என்றாள் வீரமாதேவி.

இவர்கள் இவ்விதம் நகையாடிக் கொண்டிருக்கையில் மறுபுறம் நாடகமொன்று நடைபெற்றுக் கொண்டிருந்தது. வந்தது முதல் இளவரசன் அதிராசேந்திரனது விழிகள் புவனாவைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவளும் அந்த வேலையில் ஈடுபட்டிருந்தாள் என்பதை நம்மால் நிச்சயமாகக் கூற முடியாவிட்டாலும் ஒன்றை மட்டும் உறுதியாகக் கூற முடியும்.

புவனமாதேவியின் கள்ள விழிகள் இளவரசனின் ஒளி பொருந்திய விழிகளே நேருக்கு நேர் சந்திப்பதிலும் மறுகணம் வெட்கத்தினால் மறுபக்கம் திரும்புவதுமாக இருந்து வந்தன.

பொல்லாத குறும்புக்காரியான வீரமாதேவியின் விழிகளுக்கு இந்த நாடகம் தப்பவில்லை. விஷ்ணுவர்த்தனனை விட்டுவிட்டுத் தன் அண்ணன் மீது கணை தொடுக்கத் தொடங்கினாள்.

“அண்ணா! என்ன இது! எனது தோழியை விழுங்குவது போல அப்படிப் பார்க்கிறாய்?” என்றாள்.

திடுமெனப் புறப்பட்ட இந்தக் கேள்வி அதிராசேந்திரனைத் திடுக்கிட வைத்தது.

“ஒன்றுமில்லை, அதாவது..” எனத் தடுமாறினான் இளவரசன்.

“புரிகிறது அண்ணா! புரிகிறது. இவள் யாரென்று தெரியாமல் நீ தடுமாறுவது புரிகிறது. இவள் வேறு யாருமல்ல. நமது மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் அருமைப் பேத்தி. இவள் பெயர் புவனமாதேவி.”

“ஆம்! இளவரசே! தமிழ்ப்பேரரையரின் பேத்தியின் தமிழ்ப் புலமையைக் கண்டு நானே வியந்து போனேன்” எனச் சயங்கொண்டார் பாராட்டினார்.

தனது தோழியும், ஆசிரியரும் சேர்ந்து இளவரசன் முன்னிலையில் தன்னைப் புகழ்வதைக் கண்ட புவனமாதேவி நாணத்தால் தலையைக் கவிழ்ந்து கொண்டாள்.

“என்னைப் பற்றிய பேச்சுப் போதும்” என அவளது விழிகள் வீரமாதேவியைக் கெஞ்சின. ஆனால் அவளோ, அதை இலட்சியம் செய்ததாகத் தெரியவில்லை.

“அண்ணா! இவள் இங்கு வந்ததிலிருந்து என்னை ஓயாமல் நச்சரித்துக் கொண்டிருந்தாள். எதற்காகத் தெரியுமா? ‘ஏனடி மாதேவி, உன் அண்ணன் பெரிய வீரராமே. வீரசோழன் என நாடு நகரமெல்லாம் அவரைப் புகழுகிறதாமே. அவர் எப்படி இருப்பார். கறுப்பா? சிவப்பா? கட்டையா? நெட்டையா?’ என்றெல்லாம் கேட்டு என்னைத் துளைத்துவிட்டாள். நல்லவேளையாக அன்று வேங்கி இளவரசருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு ஊர்வலத்தில் நீயும் கலந்து கொண்டாய். அப்போது உன்னை அவளுக்குக் காட்டினேன்” என்று குறும்பாகக் கூறிவிட்டு புவனமாதேவியின் பக்கம் திரும்பி “புவனா!

அன்று தொலைவில் இருந்து பார்த்தாய். இதோ என் அண்ணன் அருகிலேயே இருக்கிறான், நன்ருகப் பார்த்துக் கொள்" என்றாள். இதைத் தொடர்ந்து அந்தக் குடிலில் எழுந்த சிரிப்பொலி அந்த மாஞ்சோலை முழுவதிலும் பரவி எதிரொலித்தது.

# இரண்டாம் பாகம்

## 23. பகைவர் பாசறை

தனது கரையில் நிகழப் போகும் கோர நிகழ்ச்சிகளை எண்ணிப் பெருமூச்சுவிட்ட வண்ணம் அமைதியாகத் துங்கபத்திரையாறு ஓடிக் கொண்டிருந்தது. அதன் வடகரை நெடுகிலும் கண்ணிற்கு எட்டிய தூரம் வரையிலும், வரிசை வரிசையாகப் பாடி வீடுகள் அமைக்கப்பட்டிருந்தன. நள்ளிரவு நேரமாதலால் ஆங்காங்கே சுள்ளிகள் குவிக்கப்பட்டு எரியூட்டப் பெற்றிருந்தன. அதைச் சுற்றிக் கும்பல் கும்பலாகப் படை வீரர்கள் குழுமியிருந்தனர். பலர் பாடிக் கொண்டிருந்தனர். சிலர் உரையாடி மகிழ்ந்து கொண்டிருந்தனர். நிகழப் போகும் பெரும் போரைக் குறித்துச் சிலர் விவாதித்துக் கொண்டிருந்தனர். இடையிடையே யானைகள் பிளிறும் சப்தமும் குதிரைகள் கனைக்கும் ஒலியும் எழுந்து கொண்டிருந்தன.

இந்தப் பாடிவீடுகளின் நடுநாயகமாக ஒரு அழகிய கூடாரம் விளங்கியது. கூடாரத்தின் உச்சியில் வராகக் கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது. கூடாரத்தைச் சுற்றிலும் வேலேந்திய வீரர் பலர் காத்து நின்றனர். அவர்கள் அவ்விதம் கவனமுடன் காத்து நிற்பதிலிருந்து கூடாரத்தினுள்ளே முக்கியமானவர்கள் பலர் கூடியுள்ளனர் என்று தெரிய வருகிறது. ஆம்; குந்தள நாட்டு மன்னனும் பேராற்றல் படைத்த பெருவீரனுமாகிய ஆகவமல்ல சோமேசுவரனின் பாசறைக்குத்தான் நாம் வந்து சேர்ந்திருக்கிறோம்.

மாளவநாட்டு மன்னனும் வடமொழிக் காவியங்களில் பெரிதும் பாராட்டப்படும் மாவீரனுமான போஜ மகாராசனைத் தோற்கடித்து அவனது தலைநகரமான தாராபுரியைக் கைக்கொண்டு வெற்றிவாகை சூடியவனும், கடல் போன்று பரந்த படை பலம் கொண்ட சோழப் பேரரசை எதிர்த்து இருபதாண்டு காலமாக உறுதியுடன் போராடி வரும் வீரனும், இராட்டிரகூட சிங்காதனத்தைத் தவிடு பொடியாக்கி அவர்களது பேரரசைத் தனதாட்சியின் கீழ்க் கொண்டு வந்த தீரனும், குந்தள அரசகுலத்தில் இவனைப் போன்று பேராற்றல் படைத்த பெருவீரன் இதுவரை தோன்றியதில்லை என பில்கணர் போன்ற கவிகளால் பாராட்டப் பெற்றவனும், வடக்கே நர்மதையாற்றிலிருந்து தெற்கே கிருஷ்ணையாறு வரை வராகக் கொடியைப் பறக்கவிட்டவனுமாகிய குந்தள நாட்டு மன்னன் ஆகவமல்ல

சோமேசுவரனைச் சந்திக்கத் தயாராகும்படி வாசகர்களை வேண்டிக் கொள்ளுகிறோம்.

பட்டுத் துணியால் விதானம் அமைக்கப்பட்டிருந்த அந்தக் கூடாரம் முத்துச்சரங்களாலும், மணி விளக்குகளாலும் அழகுறுத்தப்பட்டிருந்தது. கூடாரத்தின் நடுவே அமைக்கப்பட்டிருந்த சிங்காதனத்தின் மீது கம்பீரமாக ஆகவமல்லன் அமர்ந்திருக்கின்றான். பசித்த வேங்கையின் பார்வையைப் போல அவனது கண்களில் கடுமை தேங்கி நிற்கிறது. பல களங்களில் கலந்து கொண்டு முன்னின்று போரிட்டதின் விளைவாக அவனது உடலெங்கணும் வடுக்கள் காட்சியளித்தன. வாளை உறையிலிடாது இருபதாண்டு காலத்திற்கு மேலாக போராடி வரும் அந்த மாவீரனைக் கண்டதும் நமது உள்ளத்தில் அச்சங்கலந்த மதிப்புக் குடியேறுகிறது.

ஆகவமல்லனின் வலப்புலத்தில் இளவரசன் சோமேசுவரன் அமர்ந்திருக்கின்றான். அவனருகே அடலேறு போல அவன் தம்பி விக்கிரமாதித்தன் அமர்ந்திருக்கின்றான். அவனது முகம் என்ன காரணத்தினாலேயோ வாட்டமடைந்துள்ளது.

சோழ அரசர்கள் மீது பகை கொண்ட காரணத்தால் ஆகவமல்லனோடு சேர்ந்து கொண்டுள்ள கங்கன், துளம்பன், காடவர் கோன், வைதும்பராயன் ஆகிய மன்னர்களும் அங்கு அமர்ந்துள்ளனர். கங்கபாடியும், துளம்பபாடியும், வாணகப்பாடி நாடும் சோழர்களால் கைப்பற்றப்பட்டுவிட்டதால் இந்நாட்டு மன்னர்கள் அனைவரும் ஆகவமல்லனின் உதவியை நாடி வந்து அவனுடன் சேர்ந்து கொண்டிருந்தனர்.

குந்தளப் படையின் சாமந்த நாயகர்களும், தானைத் தளபதிகளும் அங்குக் கூடியிருந்தனர். அவர்களின் உரையாடலில் இருந்து அவர்கள் ஏதோ ஒரு முக்கிய திட்டத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கின்றார்கள் எனத் தெரிய வருகிறது.

ஒற்றர்படைத் தலைவன் கங்காகேத்தன் எழுந்து பேசினான்:

“சோழர் படை புறப்பட்டுவிட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது அரசே.”

“நல்லது கங்காகேத்தா! இன்னும் எத்தனை நாட்களில் சோழர் படை இங்கு வந்து சேரும் என்று கருதுகிறாய்?”

“தங்குதடையின்றி சோழர் படை பயணம் செய்யுமானால் இன்னும் பத்து நாட்களில் துங்கபத்திரையை அது அடையும்.”

“துங்கபத்திரையைச் சோழர் படை அடையும் வரை நாம் ஏன் காத்திருக்க வேண்டும்?” என விக்கிரமாதித்தன் குறுக்கிட்டான். அவனது குரலில் வேகம் ததும்பிற்று.

ஆகவமல்லனின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

“விக்கிரமாதித்தா! தற்போது வீரம் துணைபுரியாது. விவேகம்தான் துணைபுரியும். களைத்து வரும் சோழர் படையைத் துங்கபத்திரையின் கரையிலே மீளா நித்திரையில் ஆழ்த்துவதுதான் நமது திட்டம்.”

“வீரத்தை வீரத்தால்தான் வெல்ல வேண்டும். விவேகத்தால் வெல்ல முடியாது என்பதைக் கடந்த காலம் நமக்கு அறிவுறுத்தியிருக்கிறது. எனவே..” என விக்கிரமாதித்தன் பேசி வருகையில் அவனது அண்ணன் சோமேசுவரன் குறுக்கிட்டான்.

“இளங்கன்று பயமறியாது என்பதற் கிணங்கத் துள்ளிக் குதிக்கின்றாய். வீரத்தைப் புகழ்ந்து விவேகத்தை இகழ்ந்து ஏதேதோ பேசுகிறாய். வாளைச் சுழற்ற நீ கற்றுக் கொள்வதற்கு முன்னாலேயே வாளேந்திப் போர் புரிந்த மாவீரர்கள் பலர் இந்த அவையிலே அமர்ந்திருக்கிறார்கள். நரைத்த முடியும், முதிர்ந்த அனுபவமும் கொண்ட அவர்களது திட்டத்தை அரும்பு மீசை படைத்த நீ பழிக்கிறாய். குந்தள நாடு தந்த தீரர், சாளுக்கியப் பெரும் படையின் தளபதி, மாவீரர் மதுவணன் இங்கு அமர்ந்திருக்கிறார். அவர் என்ன களம் கண்டறியாத கோழையா?”

“அண்ணா, இதென்ன பேச்சு? வாளெடுத்து வீசவும், வேலெடுத்துச் சுழற்றவும் எனக்குக் கற்றுத் தந்த இந்த மாவீரர்களை அவ்விதமெல்லாம் நான் கூறுவேனா? ஏதோ எனக்குத் தோன்றியதைச் சொன்னேன்” என்றான் விக்கிரமாதித்தன்.

தனது புதல்வர்கள் இருவரும் இவ்வாறு பலர் நடுவில் வாதம் புரிவது ஆகவமல்லனுக்குப் பிடிக்கவில்லை. எனவே அவன் இடையில் குறுக்கிட்டான்.

“போதும்! உங்கள் விவாதத்தை நிறுத்துங்கள்” என்றான். தந்தையின் குரலில் காணப்பட்ட கோபத்தை உணர்ந்து கொண்ட புதல்வர்கள் இருவரும் வாயை மூடிக்கொண்டார்கள். பிறகு சபையை

நோக்கி ஒருமுறை விழிகளைச் சுழலவிட்ட ஆகவமல்லன் “சோழருக்கு உதவ வேங்கி மன்னன் விசயாதித்தன் படை திரட்டி வருவதாகச் செய்தி கிடைத்ததே. அது சம்பந்தமாக மேற்கொண்டு ஏதேனும் செய்திகளை நமது ஒற்றர்கள் கொண்டு வந்திருக்கிறார்களா?” என்றான்.

இதுவரை அமைதியாக உட்கார்ந்திருந்த தளபதி மதுவணன் எழுந்து நின்றன். “ஆம்! அரசே! குந்தள நாட்டின் கிழக்கு எல்லையோரத்தில் படையுடன் காத்திருக்கும்படி விசயாதித்தனுக்குச் சோழர்கள் ஆணை பிறப்பித்திருக்கிறார்கள். அதற்கிணங்க அவனும் படைதிரட்டி வருவதாகத் தெரிகிறது. ஆனால் குந்தளப் போரில் சோழருக்கு உதவில்லை. அதற்குப் பதிலாக வேங்கி நாட்டிற்குச் சுதந்திரமும், தனது பரம்பரையினருக்கு ஆளும் உரிமையும் அளிக்க வேண்டும் எனச் சோழருக்கு அவன் ஓலை அனுப்பியிருக்கிறானாம். இதற்குச் சோழர் இணங்க மறுத்தால் சுதந்திரப் பிரகடனம் செய்யவும் திட்டமிட்டிருப்பதாகக் கேள்வி” என்றான் மதுவணன்.

இதைக் கேட்ட ஆகவமல்லன் கலகலவென நகைத்தான். “வேங்கைகள் மோதிக் கொள்ளும் நேரத்தில் நரி இரத்தம் குடிக்கப் பார்க்கிறதா? நல்லது. சோழ வேங்கைக்குப் பாடம் கற்பித்துவிட்டு வேங்கி நரிக்கும் நல்ல பாடம் கற்பிப்போம்” என்றான்.

ஒற்றர் படைத்தலைவன் கங்காகேத்தன் மெதுவாக எழுந்து “மன்னவா! துங்கபத்திரையாற்றில் கடந்த சில நாட்களாக வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது” என்றான்.

“ஆம், கங்காகேத்தா! அதனால் என்ன? மழை பெய்தால் வெள்ளம் பெருகுவது இயற்கைதானே” என்றான் ஆகவமல்லன்.

“இல்லை அரசே! இயற்கைக்கு மாறாக நடந்திருக்கிறது. மழை நம்மை முந்திவிட்டது. ஐப்பசியில் பெய்ய வேண்டிய அடைமழை புரட்டாசித் தொடக்கத்திலேயே ஆரம்பமாகிவிட்டது. மேற்கே மலைகளில் பெருமழை பெய்வதாக ஒற்றர்கள் செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள். எனவே..” என இழுத்தான் கங்காகேத்தன்.

“எனவே நமது படையெடுப்பைத் தள்ளிப்போடச் சொல்கிறாயாக்கும். யாருக்கும் தலைவணங்காத ஆகவமல்லன் மழையின் காரணமாக முன் வைத்த காலைப் பின்னுக்கு வைத்தான் என்றால் உலகம் கைகொட்டி நகைக்கும். கேளுங்கள்

சபையோர்களே! இங்கே கூடியிருப்பவர்களில் பெரும்பாலோர் கடந்த இருபது ஆண்டு காலமாக என்னுடன் தோளோடு தோளாக நின்று போராடி வருகிறீர்கள். போர்க்களத்திலேயே பெரும்பாலும் நமது வாழ்நாளைக் கழித்திருக்கிறோம். பலமுறை நாம் சோழரிடம் தோற்றாலும் சோர்வடைந்ததில்லை. ஒவ்வொரு தடவையும் ஏற்படும் தோல்வி நம்மை மறுபடியும் களத்திற்கு அழைத்துச் சென்றிருக்கிறதே தவிர மனம் உடையச் செய்ததில்லை. ஆனால் இந்தத் தடவை அத்தகைய நிலை நமக்கு ஏற்படாது" என்று கூறி ஆகவமல்லன் நிறுத்தினான். சபையில் அமைதி குடிகொண்டிருந்தது. அங்கே இருந்தவர்கள் கற்சிலைகளாகச் சமைந்து போய் அமர்ந்திருந்தார்கள். அடுத்து ஆகவமல்லன் சொல்லப் போவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். சபையினரின் மனப்போக்கை ஓரளவு ஊகித்து அறிந்து கொண்ட ஆகவமல்லன் கம்பீரமான குரலில் தொடர்ந்தான்.

"ஆம்! அத்தகைய நிலை நமக்கு மீண்டும் ஏற்படாது. இந்த துங்கபத்திரை ஆற்றங்கரையில் நாம் பகைவரை வெல்ல வேண்டும். அல்லது நாம் பிணங்களாக இங்கேயே வீழ வேண்டும். இதைத் தவிர வேறு திட்டம் எதுவும் இம்முறை கிடையாது" என்றான்.

இதைக் கேட்ட சபையினர் உணர்ச்சியால் பொங்கியெழுந்து "ஆகவமல்ல சோமேசுவரர் வாழ்க!" என முழங்கினார்கள். உணர்ச்சியால் உந்தித்தள்ளப்பட்ட இளவரசன் விக்கிரமாதித்தன் எழுந்தோடி வந்து தனது தந்தையைத் தழுவிக் கொண்டான்.

# 24. சோமேசுவரன் சூழ்ச்சி

“தேவநாதா! விக்கிரமாதித்தன் பேசியதைக் கேட்டாயல்லவா? கற்றுத் தேர்ந்தவன் போல ஏதேதோ பேசினான். மன்னரும் அதற்கு மதிப்புத் தருகிறாரர்.”

“ஆம்! இளவரசே! எல்லாவற்றையும் கேட்டுத் கொண்டிருந்தேன். பிறரைத் துச்சமாக மதித்துத் தங்கள் தம்பி பேசினார். நமது தளபதி மதுவணருக்குக்கூட அதனால் சிறிது வருத்தம்.”

“ஆமாம்! ஆமாம்! அவரது முகமாறுதலை நான் கவனித்தேன். எனவேதான் இடையில் புகுந்து விக்கிரமாதித்தனைக் கண்டித்தேன். துங்கபத்திரைக்குத் தெற்கேயும் கோதாவரிக்கு வடக்கேயும் சென்றறியாத சிறுவனின் யோசனையை எனது தந்தை ஏற்றுக் கொள்கிறார். நாடறிய இளவரசுப் பட்டம் சூட்டப்பெற்ற என்னை எதிலாவது அவர் கலந்தாலோசிக்கின்றாரா? கிடையாது. அதுதான் போகட்டும். நமது தளபதிகளையாவது அவர் கலந்தாலோசிப்பது உண்டா? அதுவுங் கிடையாது. இருபது ஆண்டு காலமாக இரத்த ஆற்றைப் பெருக்கெடுத்து ஓடும்படி செய்து வருகிறார். எதற்காக? தனது முரட்டுப் பிடிவாதத்தை நிறைவேற்றுவதற்காக, குந்தளப் படைகளைப் பலியிட்டு வருகிறார்..”

“ஆம்; இளவரசே! நாட்டு மக்கள் இப்போதே முணுமுணுக்கத் தொடங்கிவிட்டார்கள். மன்னரின் போர் வெறி என்று தணியும் என வினவுகிறார்கள். நமது படை வீரர்களிடையேயும் அதிருப்தி பரவி வருகிறது..”

“தேவநாதா! மெதுவாகப் பேசு! அதோ அந்த மணல் மேட்டில் அமர்ந்து பேசலாம்..”

நள்ளிரவில், இவ்வாறு பேசிய வண்ணம் இரண்டு உருவங்கள் துங்கபத்திரை ஆற்றங்கரையில் அமர்ந்தன. மங்கிய நிலவொளி அவர்கள் மீது படுகிறது. ஆம்; இளவரசன் சோமேசுவரனும் அவனது நண்பன் தளபதி தேவநாதனும் அமர்ந்திருக்கிறார்கள். மெதுவான குரலில் பேசத் தொடங்குகிறார்கள்:

“தேவநாதா! நாம் அன்று போட்ட திட்டம் கருவிலேயே உள்ளதா? அல்லது உருப்பெற்றுவிட்டதா?”

“இளவரசே! அதைப் பற்றிக் கூறுவதற்காகத்தான் உங்களைத் தனியே அழைத்து வந்தேன். அதற்குள் பேச்சு வேறு பக்கம் திரும்பிவிட்டது.”

“தேவநாதா! மதுவணரைச் சந்தித்துப் பேசினாயா?”

“ஆம், இளவரசே! நேற்று முன்தினம் அவரைச் சந்தித்தேன். மெதுவாகப் பேச்சுக் கொடுத்து அவரது நோக்கத்தைத் தெரிந்து கொண்டேன்.”

“மதுவணர் என்ன எண்ணுகின்றார்? நம்முடைய நோக்கத்திற்கு ஆதரவளிப்பாரா?” என்றான் சோமேசுவரன். அவன் குரலில் ஆர்வமும் ஆசையும் போட்டியிட்டு வெளிக் கிளம்பின.

“ஆம் இளவரசே! வாணாளெல்லாம் வாளை உறையிலிடாது போரிட்ட மாவீரர் மதுவணர்கூட சலிப்படைந்திருக்கிறார். மன்னரிடம் தமது எண்ணத்தை வெளியிடத் தயங்குகிறார். மெல்லவும் முடியாது விழுங்கவும் முடியாது திண்டாடும் நிலை அவருக்கு ஏற்பட்டிருக்கிறது. தயங்கித் தயங்கித் தனது எண்ணத்தை என்னிடம் அவர் கூறினார். உடனே நான் இளவரசரும் அவ்விதமே எண்ணுகின்றார் எனக் கூறினேன். இதைக் கேட்டதும் மதுவணர் திகைத்துப் போனார். ‘என்ன.. யார்? எந்த இளவரசர்?’ என்றார். ‘நாளை அரசுக் கட்டிலில் அமரப் போகும் இளவரசர் சோமேசுவரர்தான் இத்தகைய எண்ணம் கொண்டிருக்கிறார். குந்தள நாட்டு மக்களைப் பேரழிவில் இருந்து காக்க உறுதி பூண்டிருக்கிறார். அதற்கு உங்கள் ஒத்துழைப்பை வேண்டுகிறார்’ என்றேன். இதைக் கேட்டதும் மதுவணர் சிறிது நேரம் சிந்தனையிலேயே ஆழ்ந்தார். பிறகு ‘இவற்றையெல்லாம் நான் எப்படி நம்புவது?’ என்றார். ‘தங்கள் ஐயத்தைப் போக்க இளவரசரே நேரில் வருவார்’ என்றேன். பிறகு மற்ற தளபதிகளையும் கலந்தாலோசித்து ஒரு முடிவிற்கு வருவதாக மதுவணர் கூறினார். நாளை மறுநாள் நள்ளிரவில் துங்கபத்திரை ஆற்றின் நடுவில் இருக்கும் திட்டில் இரகசியக் கூட்டம் ஒன்று நடத்துவது என்றும், அங்கு நமது திட்டத்தைப் பற்றி ஆலோசனை செய்வது என்றும் முடிவு செய்தோம். தங்களை அந்தக் கூட்டதுதிற்கு அழைத்து வரும்படி என்னிடம் மதுவணர் கூறினார்” என்றான் தேவநாதன்.

“அருமையான காரியம் செய்தாய் தேவநாதா. நீ செய்திருக்கும் இந்த உதவியை என்றுமே மறக்கமாட்டேன்” என மகிழ்ச்சிப் பெருக்கால் கூவிய சோமேசுவரன் திடீரென “ஆமாம்! தேவநாதா! நமது இரகசியத்தை மதுவணர் காப்பாற்றுவார் அல்லவா?” எனக் கேட்டான்.

“இதென்ன கேள்வி இளவரசே! மதுவணர் இனி என்றும் நமது துணைவராக இருப்பார். அதில் சற்றும் ஐயம் கொள்ள வேண்டாம்” என்றான் தேவநாதன்.

“அது சரி தேவநாதா! ஒற்றர் படைத்தலைவன் கங்காகேத்தனைச் சந்தித்தாயா?”

“ஆம்! இளவரசே! கங்காகேத்தன் தனது முழு ஆற்றலையும் உங்களுக்காக அர்ப்பணிக்கத் தயாராக இருக்கிறான்” என்றான் தேவநாதன்.

தேவநாதன் இவ்விதம் கூறியதும் சோமேசுவரன் அளவற்ற மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளியெழுந்து அவனை அணைத்துக் கொண்டான். அமைதி நிலவிய அந்த ஆற்றங்கரைப் பகுதியில் அவர்களது சிரிப்பொலி நீண்ட தூரத்திற்கு எதிரொலித்தது.

# 25. தந்தையும் மகனும்

இவ்விதம் இவர்கள் உரையாடி மகிழ்ந்து கொண்டிருந்த வேளையில் துங்கபத்திரை ஆற்றின் கரையோரமாக இரண்டு வெண்புரவிகள் மெதுவாக நடைபோட்ட வண்ணம் சென்று கொண்டிருந்தன. அவைகளின் மீது கம்பீரமாக இருவர் அமர்ந்திருந்தனர். அங்கு நிலவிய அமைதியைக் கலைத்த வண்ணம் குதிரைகளின் குளம்படியொலி மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. வானவெளியில் உலா வந்து கொண்டிருந்த சந்திரன் மேகத்திரளில் மறைவதும் பின்னர்த் தோன்றுவதுமாக இருந்து வந்தான். அந்த ஆற்றங்கரையில் வீசுவதற்கு அஞ்சியோ என்னவோ காற்று கூட நின்றுவிட்டிருந்தது. பயங்கரமாக நிலவிய இந்த அமைதியைக் கண்டு விக்கிரமாதித்தன் வெறுப்படைந்தான். அருகில் வரும் தந்தையின் முகத்தை உற்று நோக்கினான். ஆனால் ஆகவமல்லனோ ஆழ்ந்த சிந்தனையில் அமிழ்ந்திருந்தான். துங்கபத்திரையாற்றின் தோற்றம் அவனுக்குப் பழைய நிகழ்ச்சிகளை நினைவுபடுத்தியதோ என்னவோ? தெரியவில்லை. ஆகவமல்லனின் முகம் சலனமற்றுக் காணப்பட்டது. அந்த அமைதியைக் கலைக்க விக்கிரமாதித்தன் விரும்பவில்லை என்றாலும் எவ்வளவு நேரந்தான் இந்த மோனநிலையைப் பொறுத்துக் கொள்ள முடியும்? எனவே விக்கிரமாதித்தன் குறுக்கிட்டான்.

“அப்பா!” என அழைப்பதைக் கண்டு திடுக்கிட்ட வண்ணம் ஆகவமல்லன் திரும்பினான்.

“விக்கிரமாதித்தா! என்ன? எதற்காக அழைத்தாய்?”

“ஒன்றுமில்லயப்பா! வழக்கமாக ஏதாவது பேசிய வண்ணம் வருவீர்களே. இன்று ஒன்றும் பேசாது வருகிறீர்களே. ஒருவேளை என் மீது ஏதாவது கோபமா?”

“அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. விக்கிரமாதித்தா, எனக்குக் கோபம் வரும்படி நீ என்ன செய்தாய்? நான் கோபங் கொண்டு வெகுநாட்களாகிவிட்டன. அதுவும் நீ பிறந்த பின் நான் யாரிடமும் கோபங் கொண்டதே இல்லை. ஒரே ஒருமுறை எனது வானாளிலேயே தகாத கோபம் கொண்டேன். அதன் விளைவை இன்னும் அனுபவிக்கிறேன். தமிழகத்தைச் சேர்ந்த புலவர் பெருமானாகிய வள்ளுவர் திருக்குறள் என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். அந்த நூலை எனது இளவயதில் படித்திருக்கிறேன். அதில் சினத்தைப்

பற்றி என்ன கூறுகிறார் தெரியுமா? ‘தன்னைத்தான் காக்கிற் சினங் காக்க காவாக்கால்; தன்னையே கொல்லும் சினம்’ என்றார். அந்த மூதுரையை ஒரே ஒருமுறை எனது வாணாளில் மறந்தேன். அதன் விளைவை இன்னும் காணுகின்றேன். அப்படியிருக்க உன் மீது நான் ஏன் சினங்கொள்ளப் போகிறேன்” என்றான் ஆகவமல்லன்.

தந்தையின் குரலில் இழைந்தோடிய உருக்கத்தையும், விரக்தியையும் கண்ட விக்கிரமாதித்தனின் உள்ளம் பதறியது.

“அப்பா! எதையே கூறி உங்கள் உள்ளத்தைப் புண்படுத்திவிட்டேன். என்னை மன்னியுங்கள்” என்றான் விக்கிரமாதித்தன்.

“அப்படியெல்லாம் நீ தவறாக ஒன்றையும் கூறிவிடவில்லை. துங்கபத்திரை ஆற்றங்கரையைக் கண்டதும் எனது உள்ளத்தில் கடந்தகால நிகழ்ச்சிகள் தோன்றின. எனது மனப்புண்ணைக் கிளறின. அதன் விளைவாக ஏதேதோ பேசுகிறேன்.”

“அப்பா! ஏதோ ஒன்று உங்கள் உள்ளத்தில் இருந்த வண்ணம் உறுத்திக் கொண்டே இருக்கிறது. நீண்ட காலமாக எதையோ நினைத்த வண்ணம் வருந்தி வருகிறீர்கள். அதைப் பற்றிப் பலமுறை உங்களிடம் கேட்க நான் எண்ணியதுண்டு. ஆனாலும் நீங்களாகக் கூறுவீர்கள் என்று எதிர்பார்த்து அந்த எண்ணத்தைப் பல முறை அடக்கிக் கொண்டிருக்கிறேன். அப்பா! உங்கள் துயரத்தில் நானும் பங்கு பெறக் கூடாதா? அதற்குக்கூட அருகதையற்றவனாகவா என்னைக் கருதுகிறீர்கள்?”

இவ்விதம் நெஞ்சை நெகிழ்விக்கும் குரலில் விக்கிரமாதித்தன் வேண்டிக் கொண்டதைக் கண்ட ஆகவமல்லனின் விழிகள் நீர்த்திரையிட்டன. மறுகணம் அதை மறைத்த வண்ணம் பேச ஆரம்பித்தான்.

“விக்கிரமாதித்தா! நீ கூறுவது உண்மைதான். உன்னிடம் கூறாது வேறு யாரிடம் அதைக் கூறப் போகிறேன். எனது இளவயதில் ஒருமுறை எனது உள்ளத்தில் அன்புச்சுனை ஊற்றெடுத்தது. எதிர்பாராத விதமாக அதைச் சுனை தூர்க்கப்பட்டது. அதன் பிறகு நீண்ட காலம் வரை எனது உள்ளம் வரண்டு போய்க் கிடந்தது. உனது தாயை நான் மணந்து வாழ்க்கை நடத்திய காலத்திலும், உனது அண்ணன் சோமேசுவரன் பிறந்த போதும் எனது உள்ளக்

கதவுகள் மூடியே கிடந்தன. நீ உனது தாயின் கருவில் இருக்கும் போது வியப்பான நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. காட்டில் வேட்டையாடச் சென்றிருந்த நான் ஒரு அழகான யானைக் குட்டியைப் பிடித்து வந்திருந்தேன். குட்டியாக இருந்த போதிலும் அது யாருக்கும் அடங்க மறுத்தது. ஒரு நாள் மாலையில் கட்டறுத்துக் கொண்டு ஓடி அரண்மனைப் பூங்காவினுள் நுழைந்துவிட்டது. பூங்காவில் உள்ள பளிங்கு மேடையில் உனது தாய் தனியே அமர்ந்திருந்திருக்கிறாள். விரைந்து வரும் யானையைக் கண்ட காவலர்களும் பணிப்பெண்களும் அஞ்சி, சிதறியோடிவிட்டனர். உனது தாயை நோக்கி விரைந்து வந்த யானை என்ன காரணத்தினாலேயோ அப்படியே நின்றுவிட்டது. உனது தாயின் அன்பு வழியும் விழிகளைக் கண்ட அந்த வேழம் மெய்ம்மறந்து நின்றுவிட்டதோ என்னவோ? இந்தச் செய்தியைக் கேட்ட நான் பதறிப் போய் விரைந்து வந்தேன். நான் கண்ட காட்சி எனக்கு வியப்பையும் திகைப்பையும் ஒருங்கே அளித்தது. சாதுவான பசுப்போல அந்த யானை உன் தாயருகே மண்டியிட்டுக் கிடந்தது. அவளோ அதற்குக் கனிகளை அளித்த வண்ணம் இருந்தாள். திகைத்த வண்ணம் நின்ற என்னைக் கண்டு உனது தாய் புன்னகை பூத்தாள். "தேவி! பயந்து போய்விட்டாயா?" என்றேன். இயற்கையில் உனது தாய் மிகக் கோழை. அஞ்சிய உள்ளம் படைத்தவள். ஆனால் அவள் அளித்த பதில் எனது உள்ளத்தைத் தொட்டது. "நான் எதற்காக அஞ்சப் போகிறேன். மாவீரரின் மனைவியான என்னைக் கண்டு அஞ்சி இந்த யானை மண்டியிடாவிட்டாலும் எனது வயிற்றில் வளர்ந்து வரும் வீரப்புதல்வனைக் கண்டு அஞ்சியாவது மண்டியிட்டிருக்கும்" என்றாள். வேடிக்கையாக அவள் அவ்விதம் கூறிய போதிலும், அந்தச் சொற்களில் ஏதோ பொருள் பொதிந்து இருப்பதாக எனக்குத் தோன்றியது. பிறகு அவள் அந்த யானைக்குப் புட்பகப்பிடி எனப் பெயரிட்டாள். இருவரும் சிறிது நேரம் அதைப் பற்றிச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தோம். சற்றுமுன் நீ கேட்ட கேள்வியை அவள் கேட்டாள். நான் மௌனம் சாதித்தேன். எனது முகமாற்றத்தைக் கண்ட அந்தப் பேதை வருந்தினாள். "பிரபோ! கேட்கக்கூடாததைக் கேட்டுவிட்டேனா?" என்றாள். "இல்லை தேவி! உனக்கில்லாத உரிமை வேறு யாருக்கு இருக்கிறது. என்றாலும் எனது உள்ளத்தைக் குடைந்து கொண்டிருக்கும் இரகசியங்களை வெளியிட இன்னும் வேளை வரவில்லை. வேளை வரும் போது

கூறுகின்றேன்" என்றேன். அதற்கு அந்தப் பெண்ணின் நல்லாள் கூறிய சொற்கள் இன்னும் எனது காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன."

"அரசே! உங்கள் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் எண்ணங்களை அறிய நான் என்றுமே ஆசைப்பட்டது கிடையாது. உங்களது இதயத்தில் எனக்கொரு சிறிய இடமிருந்தால் போதும். அதுவே நான் பெற்ற பெரும் பாக்கியம் என எண்ணி மகிழ்வேன். ஆனால் ஒன்று மட்டும் கூறுவேன். எனது வயிற்றில் வளர்ந்து கொண்டிருக்கும் இந்த வீரப் புதல்வன் உங்களது எண்ணங்களை நிறைவேற்றுவான். அதைக் காண நான் இருக்கிறேனோ? இல்லையோ?" என்றாள்.

"அவள் இன்று இல்லை. ஆனால் நீ இருக்கிறாய். நீ பிறந்தாய், எனது உள்ளத்திலே அன்புச்சுனை ஊற்றெடுத்தது. நீ வளர, வளர எனது உள்ளத்தில் நம்பிக்கை வளர்ந்தது. எனது எண்ணங்களை உன்னிடம் கூறப் பலமுறை துடித்திருக்கிறேன். வேளை நெருங்கட்டும் பிறகு கூறுவோம் என எண்ணிக் காலத்தைக் கடத்தி வந்தேன். அந்த வேளை இப்போது நெருங்கி வந்திருக்கிறது. எனவே, மகனே! நான் சொல்லப் போவதைக் கவனமுடன் கேள்" என்ற பூர்வப் பீடிகையுடன் ஆகவமல்லன் தனது இதயத்தைத் திறந்துகாட்டத் தொடங்கினான்.

# 26. புலிப் போத்து

புலிகேசி போன்ற பெருவீரர்கள் தோன்றிய சாளுக்கிய குலம் பிற்காலத்தில் தனது வலிமையை இழந்து, அடங்கிக் கிடந்தது. பல்லவர்களும், அவர்களுக்குப் பின் பாண்டியர்களும், இராட்டிரகூடர்களும் சளுக்கியப் பேரரசின் வலிமையைக் குறைத்து அதைச் சின்னஞ்சிறு நாடாக ஆக்கியிருந்தார்கள்.

இங்ஙனம் பண்டைப் பெருமையை இழந்து புகழ் குன்றிக் கிடந்த சளுக்கிய குலத்தில் தைலபன் தோன்றினான். சளுக்கியரின் வீரப்புகழ் சுடர்விட்டுப் பிரகாசிக்க ஆரம்பித்தது. வளர்ந்து வரும் சோழப் பேரரசின் பலமான தாக்குதலால் நிலைகுலைந்திருந்த இராட்டிரகூடச் சிங்காதனத்தைத் தகர்த்துத் தவிடுபொடியாக்கிய பெருமை தைலபனையே சாரும். தைலபனுக்குப் பின் அரசு கட்டிலில் ஏறிய சத்தியாசிரியனும் அவனுக்குப் பின் அரியணையேறிய சயசிம்மனும் பேராற்றல் படைத்த பெருவீரர்களாகத் திகழ்ந்தனர். சரிந்து போன சளுக்கிய குலத்தின் புகழை நிலைநிறுத்த முயன்றனர். நாளுக்கு நாள் குந்தள நாட்டின் பரப்பு விரிவடைந்தது. துங்கபத்திரையாற்றிற்கும் தெற்கே வராகக் கொடியைப் பறக்கவிடக் குந்தளர் முயன்றனர். தமிழகத்தில் அப்போது புலிக்கொடி அரசு செலுத்திக் கொண்டிருந்தது. மீனக்கொடியும், விற்கொடியும், யாழ் கொடியும், ரிஷபக் கொடியும் புலிக் கொடிக்குத் தலை வணங்கித் தாழப் பறந்து கொண்டிருந்தன.

சோழ குலத்தின் பொற்காலம் அப்போதுதான் தொடங்கியிருந்தது. தமிழகம் கண்டறியாத மாவீரர்களைச் சோழ குலம் தோற்றுவித்துக் கொண்டிருந்தது. பாண்டிய நாட்டுப் பொதிகையிலும், ஈழ நாட்டு உரோகணத்திலும் தமது வெற்றிச் சின்னத்தைப் பொறித்த புலிக்கொடி புரவலர் படை வடக்கே இமயத்தில் தமிழன் பெருமையை நிலைநாட்டப் புறப்பட்டுக் கொண்டிருந்தது. புலிக்கொடிக்குத் தலைவணங்க மறுத்த மன்னர்களின் மணிமுடிகள் உருண்டோடிக் கொண்டிருந்தன.

இந்த வேளையில்தான் குந்தளர்கள் வீறு கொண்டெழுந்து தங்கள் எல்லையை விரிவாக்க முயன்றனர். குந்தள மன்னனான சத்தியாசிரியன் காலத்தில் குந்தளப் படைகள் துங்கபத்திரை ஆற்றிற்குத் தெற்கே முதன் முறையாக அடியெடுத்து வைத்தன.

அப்போது சோழ குலத்தின் அரியணை ஒரு மாவீரனைத் தாங்கியிருந்தது. பாண்டிய குலோசன், கேரளாந்தகன், சிங்களாந்தகன், தெலுங்க குலகாலன் எனப் பகைவர்கள் அஞ்சி நடுங்கும் சிறப்புப் பெயர்களைத் தன் வீரத்தால் சூடியவனும் நிகரிலி சோழன், சயங்கொண்ட சோழன், சோழேந்திர சிங்கன், மும்முடிச் சோழன் எனப் பலவாறு நாட்டு மக்களால் பாராட்டப் பெற்றவனும், செம்பியர்தம் தொல்குடியின் பெருமையைப் பாரறியச் செய்தவனுமாகிய இராசராச சோழன் அரியணையில் வீற்றிருந்தவேளை. இவன் காலத்தில் சோழ நாட்டின் எல்லையில் அடியெடுத்து வைக்கத் துணிந்த குந்தளப் படைகளுக்கு நேர்ந்த கதியைக் கண்ட சத்தியாசிரியன் கதிகலங்கிப் போனான். அதன் பிறகு பதினாறு ஆண்டுகள் வரை குந்தளர் அடங்கிக் கிடந்தனர். பொன்னித்துறைவனை எதிர்க்க அவர்களுக்குத் துணிவு பிறக்கவில்லை.

சத்தியாசிரியனுக்குப் பிறகு குந்தள அரியணையில் அமர்ந்த சயசிங்கன் தனது தந்தை கற்ற பாடத்தை மறந்து சோழ நாட்டின் மீது படையெடுத்தான். கங்கையும் கடாரமும் கொண்ட கோப்பர கேசரிவர்மனை இராசேந்திர சோழனுடன் சயசிங்கன் பொருத வேண்டியதாயிற்று. இரு தரத்துப் படைகளும் முயங்கி என்னுமிடத்தில் சந்தித்தன. கடல் போன்று பரந்த சோழர் படை நடுவில் கலமெனக் குந்தளர் படை சிக்குண்டது. புயலெனக் கிளம்பிய இராசேந்திர சோழனின் வீரத்தால் குந்தளர் படை அலைக் கழிக்கப்பட்டுச் சீரழிக்கப்பட்டது. சயசிங்கன் நாட்டையிழந்து காட்டிற்குள் ஓடி ஒளிய நேர்ந்தது. குந்தள நாட்டைச் சோழர் படை சூறையாடியது.

காட்டிலே மறைந்து, சயசிங்கன் வாழ்ந்த போது சோமேசுவரன் அறியாப் பாலகனாக இருந்தான். அறுசுவை உண்டியருந்தி அரண்மனையிலே வளர வேண்டிய தனது புதல்வன் கானிலே உறைந்து காய்கனிகளைத் தின்று வாழ வேண்டியிருந்ததை எண்ணி எண்ணிச் சயசிங்கன் வருந்தினான். கானகத்திலே வாழ்ந்த போது சோமேசுவரன் அடைந்த இன்னல்கள். அவன் அனுபவித்த துயர்கள் எல்லாம் சேர்ந்து அவனது உள்ளத்தில் உரமேற்றியிருந்தன. தனது தந்தையும், தானும், தன் தன்னைச் சேர்ந்தவர்களும், நாட்டை இழந்து காட்டிலே வாழ்வதற்குக் காரணமானவர்களைப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம் அவனது இளம் உள்ளத்தில் ஆழமாகப்

பதிந்துவிட்டிருந்தது. நாட்கள் பல கடந்தன. ஆண்டுகள் பல உருண்டோடின.

கானகத்திலிருந்த வண்ணம் பெரும்படை ஒன்றைத் திரட்டிக் கொண்டு தங்களது நாட்டை மீட்கத் தந்தையும் தனயனும் கிளம்பினர்! குந்தள நாட்டின் ஒரு பகுதியை மீட்டனர், புதியதொரு தலைநகரை உருவாக்கிக் கலியாணபுரம் என்று பெயரிட்டனர். அங்கிருந்து கொண்டு தங்கள் நாட்டின் எல்லையை அவர்கள் விரிவடையச் செய்து வந்தனர்.

இளவரசன் சோமேசுவரன் பேராற்றல் படைத்த பெருவீரனாகத் திகழ்ந்தான். புலிப்போத்து எனத் திகழ்ந்த இந்த மாவீரன் தன்னுடைய இளமையிலேயே செயற்கரும் செயல்கள் பல புரிந்தான்.

மாளவ நாட்டு மன்னனும், பல காவியங்களின் நாயகனாகத் திகழ்ந்து புகழொளி பரப்பியவனும் மாவீரனுமாகிய போச மன்னனைத் தோற்கடித்து அவனது தலைநகரமான தாராபுரத்தைக் கைப்பற்றி வாகை சூடிய சோமேசுவரனின் வீரத்தைக் கண்டு நாடே வியந்து பாராட்டியது.

மாசு படிந்து கிடந்த வராகக் கொடியை மீண்டும் பட்டொளி வீசிப் பறக்கச் செய்த இந்த வீரமன்னனைக் குந்தள நாட்டு மக்கள் ஆகவமல்லன் எனப் பெயரிட்டுப் பாராட்டினர். போர்த் தொழிலில் வல்லவனாகத் திகழ்ந்தமையால் அவனுக்கு ஆகவமல்லன் என்ற பெயரைக் கற்றறிந்த சான்றோர் சூட்டி மகிழ்ந்தனர். சிலை போன்ற உடலமைப்பை அவன் பெற்றிருந்த காரணத்தால் பாமரமக்கள் அவனை ஆகவமல்லன் எனப் போற்றினர். நாளடைவில் அவனது இயற்பெயர் மறைந்தது. ஆகவமல்லன் என்ற பெயரே எங்கும் நின்று நிலவுவதாயிற்று.

தமது வட எல்லையை விரிவடையச் செய்த குந்தளர் தெற்கே தமது எல்லையை விரிவடையச் செய்யத் தயங்கினர். குந்தள மன்னனான சயசிங்கன் சோழரிடம் கற்ற பாடத்தை இன்னும் நினைவில் வைத்திருந்தான். ஆனால் இளங்கன்று பயமறியாமல் துள்ளியது. இளவரசன் ஆகவமல்லன் சோழருடன் போரிடத் துடித்தான். மாளவ நாட்டு மன்னனான மாவீரன் போச மகாராசனைத் தோற்கடித்ததால் உண்டான வெற்றிப் போதை அவனது தலையைக் கிறுகிறுக்கச் செய்திருந்தது. அந்த மயக்கத்தில் சோழ குலத்தின் வீரத்தைப் புரிந்து கொள்ள அவன் மறுத்தான். வளவர்தம் குடியின் வீறளிப்பேன் என வெஞ்சினம் கூறினான். குந்தள நாட்டுத்

தளபதிகளும் ஆகவமல்லனின் வீரத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தனர். ஆனால் சயசிங்கன் இவர்களது எண்ணத்திற்கு இணங்க மறுத்து வந்தான்.

குந்தளரின் இந்த எண்ணத்தை ஏற்கனவே இராசேந்திர சோழன் அறிந்திருந்தான். குந்தளர் படை எந்த வேளையிலும் சோழ நாட்டில் நுழையலாம் என்ற அபாயம் இருந்ததால் காஞ்சியில் தனது புதல்வன் இராசாதிராசன் தலைமையில் ஒரு பெரும்படையை நிறுத்தி வைத்திருந்தான்.

இருதரப்புப் படைகளும் பொருதுவதற்குத் தயாராகிக் கொண்டிருந்தன.

# 27. கருகிய மொட்டு

மூளவிருந்த இந்தப் பெரும் போரைத் தடுத்து நிறுத்தப் பலர் முயன்றனர். சோழர் தொல்குடியுடனும், குந்தள மன்னர் பரம்படையுடனும் நட்புறவு கொண்டிருந்த கடம்ப குல மன்னனான சயகேசி இந்த முயற்சியில் பெரும் பங்கு கொண்டான்.

களிறு பெற்றெடுத்த போதகம் என விளங்கிய இராசாதி இராசனையும், புலிப்போத்து என விளங்கிய ஆகவமல்லனையும் நட்பால் பிணைக்க வேண்டுமெனச் சயகேசி உறுதி பூண்டான். ஏனெனில் தென்னகத்தின் வரலாறு கண்டிராத மாவீரர்களாக இருவரும் திகழ்ந்தனர். இந்த இருபெரு வீரர்களையும் இணைப்பதன் மூலம் தென்னகத்தில் அமைதி நிலவச் செய்ய வேண்டுமெனச் சயகேசி திட்டமிட்டான்.

இதன் விளைவாக இரு இளவரசர்களும் காஞ்சி மாநகரில் முதன் முறையாகச் சந்தித்தனர். நட்புறவு கொண்டு அளவளாவினர். இரு நாட்டு மக்களும் எல்லையற்ற களிப்புக் கடலில் ஆழ்ந்தனர்.

வீரரை வீரர் மதித்தல் இயல்பு. எனவே சோழ குலத் தோன்றலான இராசாதிராசன், தன்னையொத்த வீரனான ஆகவமல்லனைக் கண்ட போது பெருமகிழ்ச்சியடைந்தான். ஆகவமல்லனும் அவ்வாறே அவனிடம் அன்பு செலுத்தித் தனது நாட்டிற்கு வரும்படியழைத்தான்.

இந்த அழைப்பிற் கிணங்க இராசாதிராசன், குந்தள நாட்டின் தலைநகராகிய கலியாணபுரத்திற்கு வருகை தந்தான். விழாக்கோலம் பூண்டிருந்த கலியாணபுரம் சோழ இளவரசனுக்கு மாபெரும் வரவேற்பையளித்தது. தங்களது புதிய தலைநகரத்தை இராசாதிராசனுக்குக் காண்பிப்பதில் ஆகவமல்லன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தான். பின்னர்ச் சோழ இளவலின் அழைப்பிற்கு இணங்க ஆகவமல்லன் கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வருகை தந்தான்.

அம்மாநகரின் தோற்றமே அவனைக் கிறுகிறுக்க வைத்தது. சீரும் செல்வச் சிறப்பும் மிகுந்த அந்த நகரைப் பற்றி அவன் கேள்விப்பட்டதுண்டு. ஆனால் நேரிலே கண்ட போது ஆகவமல்லன் வியந்தான். கலியாணபுரத்தைச் சுட்டிக்காட்டிப் பெருமையடித்துக் கொண்ட பேதமையை எண்ணி வெட்கினான். தனது வெட்கத்தை

வாய்விட்டு வெளியில் சொன்னான். செல்வங் கொழிக்கும் சோழ வளநாட்டின் சிறப்பு அவனைக் கவர்ந்தது.

எல்லாவற்றிற்கும் மேலாகச் சோழ வளநாட்டின் குலவிளக்கு வீசிய அழகொளியில் அவன் மயங்கிப் போனான். ஆம்! சோழ இளவரசியான அம்மங்கைதேவியின் பேரழகைப் பற்றிப் பலமுறை அவன் கேள்விப்பட்டிருக்கிறான். பேரழகின் பிறப்பிடத்தை, பொன்னி வளநாட்டுக் கன்னியை, மான்விழி மயிலை, தேன்மொழிக் குயிலை, அன்ன நடை அழகுப் பெட்டகத்தைக் காண நேர்ந்த போது ஆகவமல்லன் மதிமயங்கிப் போனான். வண்ண மலரைச் சுற்றி வரும் வண்டானான்!

ஒரு நாள் மாலை வேளையில் மேன்மாடத்தில் உலவிக் கொண்டிருந்த ஆகவமல்லன் ஒரு காட்சியைக் கண்டான். தீதில்லாத திருவடி கொண்ட கோல மயில் ஒன்று அசைந்தாடி வருவதைக் கண்டான். அவன் உள்ளம் துள்ளியது. விரைந்து கீழிறங்கினான்.

&&&

எவரையோ எதிர்நோக்கித் தோட்டத்தில் காத்திருந்த அம்மங்கைதேவி தனது அருகில் யாரோ நடக்கும் அரவம் கேட்டுத் திரும்பினாள். எதிரில் ஆசை பொங்கி வழியும் விழிகளுடன் குந்தள நாட்டு இளவரசன் ஆகவமல்லன் நின்று கொண்டிருந்தான். சற்றும் எதிர்பாராத நிலையில் அவன் அவ்விதம் தன்னெதிரே வந்து நின்றதைக் கண்ட அம்மங்கைதேவி திகைத்துப் போனாள். அவளது திகைப்பைப் புரிந்து கொண்ட ஆகவமல்லன் “மன்னிக்க வேண்டும்; இளவரசி ஏகாந்தத்தில் திளைத்திருந்த தங்களின் இன்பத்திற்கு இடையூறாக நான் வந்துவிட்டேன் போலிருக்கிறது” என்றான்.

முன்பின் பழகியறியாத ஒரு ஆடவனுடன் அதுவும் வேற்று நாட்டு இளவரசனுடன் என்ன பேசுவது என்பதை அறியாது அம்மங்கைதேவி திணறினாள். அந்தத் திகைப்பிலும் ஒரு அழகு இருந்தது. மதிமயங்கிப் போய் இருந்த ஆகவமல்லனை அது மேலும் கிறுகிறுக்கச் செய்தது.

“சோழ நாட்டுப் பெண்கள் வாய் பேசா மடந்தைகள் என நான் கேள்விப்பட்டது இல்லையே” என்றான். அவன் குரலில் கலந்திருந்த குறும்பு அம்மங்கைதேவியின் திணறலைப் போக்கியது.

“சோழ நாட்டுப் பெண்கள் வாய்பேசா மடந்தைகளும் அல்ல! வீணாகப் பேசும் வாயாடிகளும் அல்ல” என்றாள்.

கோவைக்கனி போன்ற அவளது செம்பவள உதடுகள் திறந்து மூடுவதைக் கண்ட ஆகவமல்லன் மதுவுண்ட வண்டானான். அவனது தடுமாற்றத்தைக் கண்ட இளவரசி இனித் தான் அங்கிருப்பது முறையல்ல என எண்ணி நகரத் தொடங்கினாள். அதற்குள் யாரோ வரும் அரவமும் கேட்டது. யாரும் வருவதற்கு முன்பு தனது விருப்பத்தை அவளிடம் கூறிவிட வேண்டுமென ஆகவமல்லன் துடித்தான். அவசர அவசரமாக “இளவரசி!” எனத் தொடங்கினான். ஆனால் அம்மங்கைதேவியோ அதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவள் விழிகள் யாரையோ மகிழ்ச்சியுடன் வரவேற்று முகமன் கூறிக் கொண்டிருந்தன. தன்னையும் மதிக்காது அவள் யாரை வரவேற்றுக் கொண்டிருக்கிறாள் என்பதை அறிய ஆகவமல்லன் திரும்பினானன். அவன் தலை வேகமாகச் சுழன்றது. ஆயிரம் வேல்கள் அவன் இதயத்தில் பாய்ந்தன. ஆம்! ஆகவமல்லனின் தாயாதியும் வேங்கி இளவரசனுமான இராசராச நரேந்திரன் அகமும் முகமும் குளிர வந்து கொண்டிருந்தான்.

நடந்தது இன்னதென அறியாத நிலையில் அவன் அவர்கள் இருவரும் நிற்பதைப் பார்த்ததும் “அண்ணா! அம்மங்காவிடம் என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?” என்றான்.

“ஒன்றுமில்லை அத்தான்; தோட்டத்தில் உலவ வந்த குந்தள இளவரசர் உங்களைப் பற்றிச் சற்று விசாரித்தார். அதற்குப் பதில் கூறிக் கொண்டிருந்தேன்; வாருங்கள் போகலாம்” என அவனை அழைத்துச் சென்றாள். கைகோர்த்த வண்ணம் குதூகலமாகச் செல்லும் அந்தக் காதலர்களைக் கண்டு பொருமிய வண்ணம் ஆகவமல்லன் நின்றான்.

# 28. போர்! போர்!! போர்!!!

ஏமாற்றம், அதன் விளைவாக உருவான ஆத்திரம், அதனின்றும் பிறந்த அடங்காச் சினம். இவற்றோடு தாயகம் திரும்பிய ஆகவமல்லன் தந்தையிடம் தனது விருப்பத்தை வெளியிட்டான்.

முடவன் கொம்புத்தேனை அடைய ஆசைப்படுவதைப் போல, தனது மகன் சோழ இளவரசியை அடைய ஆசைப்படுவதைக் கண்டு சயசிங்கன் திடுக்கிட்டுப் போனான். இது என்ன விபரீதம் எனக் கலங்கினான். ஆனால் ஆகவமல்லனின் ஆசையோ நாளுக்கு நாள் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது.

கேவலம் ஒரு சின்னஞ்சிறு நாட்டின் இளவரசன், சோழப் பேரரசின் அரவணைப்பிலே வாழும் வேங்கி நாட்டின் அரியணையில் அமரப் போகிறவன். அந்த இராசராச நரேந்திரன் சோழ இளவரசியின் காதலுக்கு உரியவனாகிவிட்டான். சோழப் பேரரசே கண்டு அஞ்சும் அளவிற்குப் பெருவீரனாகத் திகழ்ந்த தன்னைவிட அவன் எந்த அளவிற்கு உயர்ந்தவனாகிவிட்டான்? இவற்றையெல்லாம் எண்ணி எண்ணி ஆகவமல்லனின் உள்ளம் கொதித்தது. தனக்குப் போட்டியாக முளைத்த தன் தாயாதி பெற்ற வெற்றி அவனைக் குமுறச் செய்தது.

தனது மகன் படும் துன்பத்தைக் கண்ட சயசிங்கன் ஒரு முடிவிற்கு வந்தான். அதற்கிணங்க இராசேந்திர சோழருக்குத் திருமண ஓலை அனுப்பப்பட்டது. இரண்டு நாடுகளுக்கும் இடையே வளர்ந்து வரும் நட்புறவை மேலும் வலுப்படுத்தும் முறையில் குந்தள நாடும் சோழ வளநாடும் திருமண உறவுகொள்ள வேண்டும் என அந்த ஓலையிலே சயசிங்கன் குறிப்பிட்டிருந்தான்.

சோழ இளவரசிக்கும், வேங்கி இளவரசனுக்கும் திருமணம் நடத்துவதாக ஏற்கனவே முடிவாகிவிட்டது எனச் சோழரிடம் இருந்து பதில் கிடைத்தது. எதிர்பார்த்த பதில் கிடைத்தும் ஆகவமல்லன் அமைதியடையவில்லை. அவனது ஆசை ஆத்திரமாக உருவெடுத்தது. தன்னை ஏற்றுக்கொள்ள மறுத்த சோழ இளவரசிக்கும் அவளது நாட்டிற்கும் நல்லதொரு பாடம் கற்பிக்க வேண்டும் என அவன் முடிவு செய்தான். இந்த முடிவுடன் மீண்டும் பெரும் படை திரட்டலானான்.

தனது மகன் கொண்டுள்ள மூர்க்கத்தனமான பிடிவாதத்தைக் கண்டு சயசிங்கனின் உள்ளம் உடைந்தது. ஆகவமல்லனைப் பலமுறை தடுத்துப் பார்த்தான்; அவனோ கேட்பதாக இல்லை. இந்த ஏக்கத்தில் சயசிங்கன் நோயாளியாகிப் படுக்கையில் விழுந்து இறந்து போனான். உயிர் துறக்கும் தறுவாயில் மகனை அருகில் அழைத்து "ஆகவமல்லா, பாறையுடன் மோதிக் கொள்ளும் பேதை போல வீண் முயற்சி செய்யாதே. இராசராசனும், இராசேந்திரனும் கட்டி வளர்த்துள்ள சோழப் பேரரசின் வலுவைக் குறைத்து மதிப்பிட்டுவிடாதே. வீணாகப் போரில் இறங்கி உனது வாழ்வைக் கெடுத்துக் கொள்ளாதே" என்று கூறிவிட்டு இறந்தான்.

அந்த அறிவுரைக்குப் பின்னும் ஆகவமல்லனின் பொல்லாத உள்ளம் அடங்கவில்லை. பெண்பித்துக் கொண்ட மனிதன் பேயனாகிவிடுவது இயல்பல்லவா? அம்மங்கைதேவியின் அழகு ஆகவமல்லனை மதியிழக்கச் செய்தது. அந்தக் கோவைச் செவ்வாய்க் கோதையின் நினைவு அவனை கிறுகிறுக்க வைத்து அவனது உள்ளத்தில் வெறியேற்றி வைத்தது. அந்த வெறியைச் சிறிது தணித்து வந்த தந்தையும் காலமாகிவிடவே, அவனது ஆசை அணை உடைத்த வெள்ளமெனப் பொங்கிப் பெருகியது.

தனது காதலுக்கு இடையூறாக நின்ற வேங்கி இளவரசன் மீது அவனது சினம் திரும்பியது. "அம்மங்காதேவி! உனது உள்ளத்தில் எவனுடைய உருவத்தைப் பதித்து வைத்திருக்கின்றாயோ அவனின் அரியணையைத் தவிடு பொடியாக்குகிறேன். அவனது மணிமுடியை எனது காலால் எட்டி உதைத்து உருட்டுகிறேன் பார்!" என உறுமினான்.

இதைச் செயலில் நிறைவேற்ற ஆகவமல்லன் திட்டமிட்டான். ஒரு பெரும் படையுடன் வேங்கி மீது படையெடுத்தான். ஆனால் அவன் எண்ணியது போல அவனது எண்ணம் இலகுவில் நிறைவேறவில்லை. வேங்கி நாட்டின் உதவிக்கு இராசாதிராசன் பெரும்படையுடன் விரைந்து சென்றான்.

இரு தரப்புப் படைகளுக்கும் பெரும் போர் மூண்டது. ஆகவமல்லன் பெரும் வீரன் என்றாலும் இராசாதிராசனின் போர்த் தந்திரங்களுக்கு முன் அவனது படைகளால் நிற்க முடியவில்லை.

குந்தள நாட்டுப் படைத்தளபதிகளான கண்டப் பையன், கங்காதரன் ஆகியோர் சோழர்களால் கொல்லப்பட்டனர். குந்தளப்

படை நிலைகுலைந்து பின் வாங்கியது. சோழர் படை விரட்டிச் சென்று குந்தள நாட்டில் புகுந்தது. கொள்ளிப்பாக்கை நகர் கைப்பற்றப்பட்டது. ஆகவமல்லன் தனது படையுடன் பின் வாங்கிச் சென்று காட்டினில் மறைந்தான். அவனைப் பின் தொடர்ந்து சென்று முற்றிலும் அழிக்க இராசாதிராசன் திட்டமிட்டான். ஆனால் சோழர் தலைநகரில் இருந்து விபரீதமான செய்தி ஒன்று கிடைத்தது.

ஆம்; கங்காநதியும் கடாரமுங் கைக்கொண்டு சிங்காதனத்திருந்த செம்பியர்கோனாகிய இராசேந்திர சோழரின் உடல்நிலை சீர்கேடு அடைந்து வருவதாகச் செய்தி கிடைத்தது. எனவே போரை அந்த அளவிலேயே நிறுத்திவிட்டு இராசாதிராசன் தலைநகரை நோக்கி விரைந்து திரும்பினான்.

கங்கைகொண்ட சோழன் என நானிலமெங்கும் புகழ் பரப்பிய இராசேந்திர சோழன் காலமானான். அவனுக்குப் பிறகு இராசாதிராசன் அரியணையேறினான். அவ்வாறே குந்தள நாட்டின் மன்னனாக ஆகவமல்லன் முடிசூடிக் கொண்டான். நாட்டின் அரியணையில் அமர்ந்து மக்களைப் புரக்க வேண்டிய மன்னன் தனித்திருக்கலாகாது என அவனது அமைச்சர்கள் வற்புறுத்தினர். உள்ளம் உடைந்து போயிருந்த ஆகவமல்லன் திருமணம் என்ற பேச்சைக் கேட்டாலே சீறி விழுந்தான். காலம் கடந்தால் கல்லும் கனியுமல்லவா! அமைச்சர்களும், ஆன்றோர்களும், சான்றோர்களும் அவனது மனநிலை உணர்ந்து இங்கிதமாகப் பேசி அவனை இணங்க வைத்தனர். சக்தியவ்வை, சாங்கப்பை என்ற இரு சகோதரியரை ஆகவமல்லன் மணந்து கொண்டான்.

மூத்தவளான சக்தியவ்வை ஒரு ஆண் மகவைப் பெற்றாள். அம்மகவிற்குச் சோமேசுவரன் எனப் பெயரிட்டனர். சாங்கப்பை தேவி நாளடைவில் ஒரு ஆண் மகவை ஈன்றாள். அதற்கு விக்கிரமாதித்தன் என்று ஆகவமல்லன் பெயரிட்டான். சாங்கப்பை இரண்டாவதாக ஒரு பெண் மகவை ஈன்றாள்.

சோழப் பேரரசை வீழ்த்த வேண்டும் என்ற தனது முயற்சியை நிறைவேற்றுவதற்காக ஆகவமல்லன் தனது படை பலத்தைப் பெருக்கிய வண்ணம் இருந்தான். இவனது எண்ணத்தை உய்த்துணர்ந்த இராசாதிராசனும் தனது படையைப் பெருக்கி வந்தான்.

சோழ நாட்டின் எல்லையில் இருந்து கொண்டு தனக்கு ஓயாத தொல்லை தரும் ஆகவமல்லனை அவனது நாட்டிலேயே புகுந்து

அழித்து ஒழிக்க இராசாதிராசன் திட்டமிட்டான். சோழர் படையுடன் குந்தள நாட்டில் புகுந்தான.

ஆகவமல்லன் இந்தப் படையெடுப்பை சற்றும் எதிர்பார்க்கவில்லை. அவன் அப்போது கம்பிலி நகரத்தில் தங்கியிருந்தான். குந்தள நாட்டில் எல்லையோரத்தில் அந்நகரம் அமைந்து கிடந்தது. குந்தளப் படைகள் யாவும் அங்குதான் குவிக்கப்பட்டிருந்தன. இந்தப் படைகளைப் பார்வையிடுவதற்காக ஆகவமல்லன் தனது கோப்பெருந்தேவியருடன் கம்பிலி நகருக்கு வருகை தந்திருந்தான். இந்த வேளையில் பேரிடியெனச் சோழர் படை கம்பிலி நகரைத் தாக்கியது. ஆகவமல்லன் எதிர்த்துப் போராடினான். என்றாலும் சோழர் படையின் பேராற்றலுக்கு முன் குந்தளரால் நிற்க முடியவில்லை.

கம்பிலி நகரத்தின் மதிற்கதவுகளைச் சோழ நாட்டு வேழப்படைகள் தகர்த்தெறிந்தன. சோழர் படை உள்ளே புகுந்தது. பயங்கரமான போர் நடைபெற்றது. இருதரப்பிலும் எண்ணிலடங்காதவர் இறந்தனர்.

அப்போதுதான் அந்தத் துயரமான நிகழ்ச்சி நடைபெற்றது. கம்பிலி நகரத்திலிருந்த அரச மாளிகையைச் சோழர் படை சூழ்ந்து கொண்டது. அம்மாளிகைக்கு எரியூட்டப்பட்டது. தப்பியோட முயன்றவர்கள் சோழர் படையால் வதம் செய்யப்பட்டனர். இரகசியச் சுரங்க வாயில் மூலமாக அரச குடும்பத்தினர் வெளியேற முயன்றனர். ஆனால் காலம் கடந்துவிட்டது. சுற்றிலும் பற்றி எரியும் தீ. நாலா பக்கத்திலிருந்தும் விர்ரென பறந்து வரும் அம்புகள் இடையே ஆகவமல்லனின் கோப்பெருந்தேவியர் குழந்தைகளுடன் தவித்தனர். இனி நடந்ததை விவரித்துப் பயன் என்ன? குந்தள இளவரசர்களான சோமேசுவரனும் விக்கிரமாதித்தனும் மட்டுமே காப்பாற்றப்பட்டனர். குந்தள நாட்டுக் கோப்பெருந்தேவியரான சத்தியவ்வை, சாங்கப்பை அவள் ஈன்றெடுத்த பெண் மகவு முதலியோர் தீயில் சிக்கினர்.

செய்தியறிந்த ஆகவமல்லன் திடுக்கிட்டுப் போனான். துக்கமும் வெட்கமும் அவனே ஆட்கொண்டன. தனது படைகளுடன் பின் வாங்கினான். மழலைமொழி பேசும் தனது புதல்வர்கள் அன்னையை நினைத்து அரற்றுவதையும், குமிழ்ச் சிரிப்பால் தன்னை மகிழ்வித்த அந்தப் பெண் மகவையும், தன்னை மணந்த அந்தப் பேதைகளையும், எண்ணிய போது அவனது உள்ளத்தில் அடங்காச் சினம் பிறந்தது. பழி பழி என அவனது உள்ளம் வெறி கொண்டது.

ஆனால் சோழர் படையோ கம்பிலி நகரத்தில் இருந்த சளுக்கியர் மாளிகையைத் தகர்த்தெறிந்துவிட்டு அவ்விடத்தில் வெற்றித் தூண் ஒன்றை நிறுவும் வேலையில் ஈடுபட்டிருந்தது.

# 29. கல்யாணிசெற்ற தனியாண்மைச் சேவகன்

நாட்டை இழந்து தனது இதய வீட்டின் அரசிகளை இழந்து காட்டில் மறைந்து வாழ நேர்ந்த போதிலும் ஆகவவல்லன் தளர்வடைந்துவிடவில்லை. சிதறுண்டு போன தனது படைகளைத் திரட்டும் பணியில் ஈடுபட்டான். தெலுங்க நாட்டு மன்னனான விச்சையன், கூர்ச்சர நாட்டு மன்னனான அத்திராசன் ஆகியோரின் உதவியையும் நாடிப் பெற்றான்.

போர்க்கலையில் மகாவல்லவனாகிய இராசாதிராசன் இவற்றையெல்லாம் கவனிக்காமல் இல்லை. கானகங்களும், குன்றுகளும் அடர்ந்து விளங்கிய காரணத்தால் குந்தள நாடு பகைவரின் கைகளில் எளிதில் சிக்கவில்லை. அடிக்கடி தோற்றோடிய ஆகவமல்லன் மறைந்து வாழவும், மீண்டும் படை திரட்டவும் அந்தக் காடுகள் வசதியளித்தன.

இவற்றையெல்லாம் கணக்கிட்ட இராசாதிராசன் ஆகவமல்லனை அழித்து இறுதி வெற்றி அடையத் திட்டமிட்டான். இறுதி வெற்றி காண விழைவது எளிதான செயலல்ல. பல ஆண்டுகள் தொடர்ந்து போரிட வேண்டி வரலாம். குந்தள நாட்டின் காடுகளிலும் மேடுகளிலும் சளைக்காது போரிட வேண்டிய நிலை பிறந்தே தீரும். எதிரியும் சாமான்யன் அல்லன். போர்க் கலையில் மகா நிபுணன். இவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்த இராசாதிராசன் நீண்ட காலப் போர்த் திட்டம் ஒன்றை வகுத்தான். அதற்கிணங்கச் சோழர் படை குந்தள நாட்டில் புகுந்தது. சோழர் படைக்குத் தலைமை வகித்து இராசாதிராசனே சென்றான்.

கிருஷ்ணயாற்றங்கரையில் உள்ள பூண்டூரில் பெரும் போர் மூண்டது. தெலுங்க நாட்டு மன்னன் விச்சையன் ஆகவமல்லனுக்கு உதவியாக அந்தப் போரில் கலந்து கொண்டான். ஆடிக் காற்றில் அம்மியே பறக்கும் போது இலவம் பஞ்சு என்ன செய்யும்? சோழர் படையுடன் போரிட முடியாது ஆகவமல்லனே திணறும் போது தெலுங்க விச்சையினால் என்ன செய்ய முடியும்?

குந்தளப் படை பின்வாங்கி மண்ணதிப்பதியில் புகுந்து ஒளிந்து கொண்டது. தெலுங்க விச்சையன் சோழர்களிடம் அகப்பட்டுக் கொண்டான். பூண்டூரின் மதிற் சுவர்கள் இடித்துத்

தரைமட்டமாக்கப்பட்டன. அடுத்து மண்ணதிப்பதியை நோக்கிச் சோழர் படை விரைந்தது.

விரைந்து வரும் பேரபாயத்தைக் கண்ட ஆகவமல்லன் ஒரு சிறுபடையை அங்கு நிறுத்திவிட்டு எஞ்சியவருடன் தனது தலைநகராகிய கல்யாணபுரத்திற்குப் பின் வாங்கிச் சென்றான். சண்டமாருதம் எனச் சுழன்றுவரும் சோழர் படை மண்ணதிப்பதியை எளிதில் கைப்பற்றி எரியூட்டியது. அந்நகரில் வேங்கை வடிவம் பொறிக்கப்பட்ட வெற்றித் தூண் ஒன்றும் நிறுவப்பட்டது. அந்நகருக்கு அருகில் இருந்த வராகக் குன்றில் ஆகவமல்லனின் வராக முத்திரை கம்பீரமாகப் பொறிக்கப்பட்டிருந்தது. அதை அழித்து அங்குப் புலிச்சின்னத்தைப் பொறிக்கும்படி இராசாதிராசன் ஆணை பிறப்பித்தான்.

அத்துடன் இராசாதிராசனின் சினம் அடங்கவில்லை. சோழர் படையால் சிறைப் பிடிக்கப்பட்டிருந்த சளுக்கியப் படைத்தலைவர்களான நுளம்பன், காளிதாசன், சாமுண்டன், வில்லவராசன் ஆகியோரின் மார்பில்— “சோழருடன் பொருத ஆற்றாது ஆகவமல்லன் யாங்கணும் அஞ்சிப் புறம் காட்டியோடினான்” எனப் பச்சைகுத்தச் செய்து அவர்களைத் துரத்திவிட்டான்.

இந்த அவமானத்தினால் எல்லாம் ஆகவமல்லன் அவ்வளவாகச் சினம் கொள்ளவில்லை. கம்பிலி நகரத்தில் நடைபெற்ற போரின் போது இறந்துபட்ட தன் பட்டத்தரசியுடன் இருந்த பெண் மகவு என்ன ஆயிற்று என்பது அவனுக்கு விளங்காத ஒரு மர்மமாக இருந்தது. பகைக்கு. அப்பாற்பட்டதாக இதைக் கருதிய ஆகவமல்லன் தனது ஒற்றர் படைத்தலைவர்களான கங்காகேத்தன், தேவநாதன் என்பவர்களை இராசாதிராசனிடம் தூதனுப்பித் தனது பெண் மகவைப் பற்றிய செய்தியை அறிந்து வரச் செய்தான்.

சோழ குலத்தின் மங்கா விளக்கான இராசாதிராசனின் தங்கையை இழித்துப் பேசிப் போர் தொடுத்து அடாத செயல் பல புரிந்து தொல்லை பல தந்து வரும் ஆகவமல்லனின் தூதர்களைக் கண்டதும் இராசாதிராசனுக்கு அடங்காத சினம் பிறந்தது.

அந்த இரண்டு தூதுவரையும் பிடித்து ஐங்குடுமி தரிக்கச் செய்து ஒருவனுக்கு ஆகவமல்லன் என்றும், மற்றவனுக்கு ஆகவமல்லி என்னும் பெயரிட்டுத் துரத்தினான்.

இந்த அவமானங்களை எல்லாம் சகிக்க முடியாத ஆகவமல்லன் படையுடன் வெளிக்கிளம்பிப் போரிட்டான். ஆயினும் என்ன? வழக்கம் போலக் குந்தளர் படை சமருக்கு ஆற்றாது பின் வாங்கியது. சோழர் படை சளுக்கியத் தலைநகரில் புகுந்தது. கல்யாணபுரத்தில் இருந்த சளுக்கிய அரண்மனை குறையாடப்பட்டது.

பின்னர் இராசாதிராசன் தனது வெற்றிக்கு அறிகுறியாக அங்கு வீராபிடேகம் செய்து கொண்டான். இணையற்ற வெற்றிகள் பல பெற்ற இந்த மாமன்னனை நாட்டு மக்கள் அன்று முதல் விசயராசேந்திரன் என அழைக்கலாயினர்.

# 30. கொப்பத்துப் போர்

தமிழகம் பல போர்களைக் கண்டிருக்கிறது. “கடுஞ் சினத்த கொல்களிறு, கதழ்பரிய கலிமாவும், நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவரும்” என மாங்குடி மருதனிளநாகனார் எனும் புலவர் பெருந்தகை போற்றியவாறு படை பல நடாத்திக் களம்பல கண்ட மாவீரர்கள் பலரைத் தமிழகம் ஈன்றெடுத்திருக்கிறது. என்றாலும் விசயாலய சோழன் காலமுதற்கெண்டு சோழ குலத்து மன்னர்கள் கண்ட போர்க் களங்களின் அளவை அதற்கு முன்னும் பின்னும் தமிழகம் கண்டதில்லை. இந்தப் போர்க் களங்களில் பொன்னித் துறைவர்கள் சிந்திய குருதியின் பலனாக ஒரு மகத்தான சோழப் பேரரசு உருவாகியது. கீழை நாடுகளின் வரலாறு கண்டறியாத ஒரு பெரும் பேரரசைச் சோழர்கள் உருவாக்கிப் புலிக்கொடியைப் பறக்கவிட்டார்கள் என்றால் பலநூறு போர்க் களங்களில் அவர்கள் சிந்திய குருதியும் இழந்த உயிர்களும்தான் அதற்குக் காரணமாகும்.

பிற்காலச் சோழர்களின் வரலாறு போராட்ட மிகுந்த வரலாறாகும். திருப்புறம்பயத்துப் போரிலிருந்து கொப்பத்துப் போர் வரையிலும் சோழ குலம் வலிமைமிக்க பகைவர்களை அழித்தொழிக்க, தனது ஒப்பற்ற மைந்தர்களைப் பலிகொடுத்துப் பரிதவித்திருக்கிறது.

விசயாலய சோழன் காலத்தில் தலைதூக்கிய சோழ அரசை முளையிலேயே கிள்ளியெறியத் தெற்கே வாழ்ந்த பாண்டியர்கள் முயன்றனர். விசயாலய சோழனின் மகனாகிய ஆதித்தன் பகைவரை எதிர்த்துப் போரிடச் சென்றான். சோழர்களுக்கு உதவிபுரியப் பல்லவ மன்னன் அபராஜிதவர்மனும், கங்கநாட்டு வேந்தன் பிரித்விபதியும் முன்வந்தனர். வரகுண பாண்டியன் படைகளும் சோழர் படைகளும் திருப்புறம்பியத்தில் சந்தித்தன. பெரும் போர் மூண்டது. இந்தப் போரில் சோழர்களுக்கும் பல்லவர்களுக்கும் உதவி புரிய வந்த பிரித்விபதி எதிர்பாராதவிதமாக வீரமரணமடைந்தான். எனினும் இறுதியில் வரகுண பாண்டியன் தோற்றோடினான். சோழர்களுக்குத் தெற்கே இருந்த வலிமை மிக்க பகைவன் மறைந்தான். சோழப் பேரரசிற்குத் திருப்புறம்பயத்தில் வித்திடப்பட்டது.

அடுத்தடுத்து ஆதித்தன், பராந்தகன் ஆகியவர் காலங்களில் பல போர்க் களங்களைச் சோழர் குலம் எதிர்நோக்க வேண்டியிருந்தது.

குஞ்சரமல்லன், பண்டிதவற்சலன், இருமடி சோழன் எனப் புகழப் பெற்றவனும், நாற்பத்தாறு ஆண்டுகள் வரை சோழ சிங்காதனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்தியவனும், இராசராசனும், இராசேந்திரனும் கண்ட மகத்தான பேரரசிற்குப் பலமிக்க அடிப்படை அமைத்தவனும், 'ஈழமும் தமிழ்க் கூடலும் சிதைத்து இகல் கடந்ததோர் இசை பரந்தவன்' எனக் கலிங்கத்துப் பரணியில் சயங்கொண்டாரால் புகழப் பெற்றவனுமாகிய பராந்தக சோழன் காலத்தில் மற்றொரு பெரும் போர் மூண்டது. வளர்ந்து வரும் சோழப் பேரரசு வடக்கே ஒரு மாபெரும் பகைவனுடன் மோதிட வேண்டி நேர்ந்தது.

இராட்டிரகூடப் பெரும்படையுடன் சோழ வளநாட்டின் படைகள் பொருது தீரவேண்டிய சூழ்நிலை பிறந்தது.

சோழ குலத்தின் வளர்ச்சியைக் கண்டு அழுக்காறு கொண்ட கங்க மன்னனான இரண்டாம் பூதுகன் இராட்டிரகூடருடன் சேர்ந்து கொண்டான். இருதரத்துப் படைகளும் தக்கோலம் என்னும் இடத்தில் சந்தித்துப் பெரும் போர் புரிந்தன.

தமிழகத்தின் வரலாற்றில் தக்கோலப் பெரும் போர் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். இராட்டிரகூடப் படைகளுக்கு அந்நாட்டின் மன்னனாகிய மூன்றாம் கிருஷ்ணதேவன் தலைமை வகித்தான். சோழர் படையை இளவரசனாகிய இராசாதித்தன் முன்னின்று நடத்தினான். ஆயிரமாயிரமானோர் இறந்துபட்டனர். போர் மிகக் கடுமையான கட்டத்தை அடைந்தது. வெற்றித்திரு எவர்க்குரியதோ என்ற ஐயப்பாடு பிறந்தது. இந்த நிலையைக் கண்ட இராசாதித்தன் தனது வீரர்களை உற்சாகப்படுத்துவதற்காகத் தானே முன்னின்று போரை நடத்தினான். யானை மீது ஏறி அமர்ந்த வண்ணம் பகைவர் படையைக் கலக்கிக் கொண்டிருந்த இளவரசன் இராசாதித்தனுக்குப் பெரும் விபத்து ஒன்று நேர்ந்தது.

கங்க மன்னனாகிய பூதுகன் மறைந்திருந்து விடுத்த அம்பொன்று இராசதித்தன் மார்பிலே தைத்தது. களிற்றின் மேல் அமர்ந்து போரிட்ட நிலையியே அந்தக் காளை உயிர் துறந்தான். தங்களது உயிருக்குயிரான இளவரசனுக்கு நேர்ந்த விபத்தைக் கண்ட சோணாட்டு வீரர்கள் மனமுடைந்து போனார்கள். இராட்டிரகூடர் முன்னினும் அதிகமான ஊக்கத்தோடு போர் புரிந்து வெற்றியெய்தினர். வடபகுதியில் தங்கள் எல்லையை விரிவாக்க எண்ணிய சோழர்களின் முயற்சி தற்காலிகமாகத் தடைப்பட்டது.

தக்கோலப் பெரும்போரில் ஏற்பட்ட சூழ்நிலை கொப்பத்துப் போர்க்களத்திலும் உருவாகியிருந்தது. பலமுறை தோற்றோடிய ஆகவமல்லன் ஆறாண்டுகள் வரை தனது படையைப் பெருக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். இறுதியாக ஒரு மாபெரும் படையுடன் சோழ வளநாட்டின் மீது படையெடுத்தான். குந்தள குலத்திற்கு இழைக்கப்பட்ட அவமானங்களுக்குப் பழிவாங்க வேண்டும் என ஆகவமல்லன் உறுதி பூண்டிருந்தான். எனவே எந்த வகையைக் கையாண்டேனும், எந்த முறையைப் பின்பற்றியேனும் சோழர்களை வெல்ல வேண்டும் என ஆகவமல்லன் திட்டமிட்டிருந்தான். இதற்காக நச்சுத் தோய்ந்த அம்புகளையும் ஆயுதங்களையும் உபயோகிக்க அவன் தயங்கவில்லை.

சூழ்ந்து வரும் பெரும் பகையைக் கண்டு இராதிராசன் மனங்கலங்கவில்லை. இம்முறையும் குந்தளருக்குத் தக்கதொரு பாடத்தைக் கற்பிப்போம் என உறுதிபூண்டவனாய்த் தனது தம்பியரோடு பகைப்புலம் நோக்கிச் சென்றான்.

கிருஷ்ணையாற்றங்கரையில் உள்ள கொப்பத்தில் இருதரத்துப் படைகளும் சந்தித்தன. கிருஷ்ணை ஆற்றின் நன்னீரோடு செந்நீர் கலந்தோடியது. ஆகவமல்லன் ஒரு சூதுத்திட்டம் வகுத்துப் போர் புரிந்தான். சளுக்கியப் படைகள் ஒரே முகமாகத் திரண்டு இராசாதிராசன் வீற்றிருந்த யானையைத் தாக்கின. சூழ்ந்து வரும் பேராபத்தை சோழப் படைகள் உணரவில்லை. மாவீரன் இராசாதிராசனும் அதை அறிந்தானில்லை. சீறிப்பாயும் சிங்கமானாலும், சிறு நரிக் கூட்டம் சூழ்ந்து கொண்டால் என்ன செய்ய முடியும்? நஞ்சு தோய்த்த அம்புகளைத் தொடுத்து வஞ்சகப் போர் புரியும் குந்தளர் நடுவே இராசாதிராசன் தனிமையாக அகப்பட்டுக் கொண்டான். தங்கள் தலைவனுக்கு நேர்ந்த அபாயத்தைக் கண்ட சோணாட்டுப் படை வீரர்கள் திடுக்கிட்டுப் போயினர். தங்கள் மன்னனைக் காக்க முயன்றனர். அவ்விடத்தில் பெரும் போர் மூண்டது. அந்த வேளையில்கூட இராதிராசன் சற்றும் கலங்காது வீரப் போர் புரிந்தான். அடற்களிற்றின் மீது அமர்ந்து அரிமா போலப் போரிட்ட அவனின் தீரத்தைக் கண்டு குந்தளர் திகைத்துப் போயினர்.

ஆயினும் என்ன? வஞ்சகமாகப் பாய்ந்து வந்த அம்பொன்று அவனது உயிரைக் குடித்தது.

'கம்பிலி சயத்தம்பம் நட்டவனும், கடியரண்கொள் கல்யாணர் கட்டறக் கிம்புரிப்பணைக் கிரியுகைத்தவனும், கிரிகள் எட்டினும் புலிபொறித்த மாவீரனும், மும்மடிபோய்க் கல்யாணி செற்றதனியாண்மைச் சேவகனுமான' இராசாதிராச சோழன் கொப்பத்துப் போர்க்களத்தில் புகழை நிலை நிறுத்திவிட்டு வீரமரணமடைந்தான். 'கல்யாணபுரமுங் கொல்லாபுரமும் எறிந்து யானைமேற்றுஞ்சின உடையார் விசயராசேந்திர தேவர்' எனச் சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் இவனைப் புகழ்ந்துரைக்கின்றன.

ஆகவமல்லனின் சூதுத்திட்டத்தின் முதற் கட்டம் வெற்றியடைந்தது. ஆனால் முழுவெற்றி காண அவனால் இயலவில்லை. இராசாதிராசனின் மரணத்தால் குழப்பமடைந்த சோழப் படைகள் புறங்காட்டத் தொடங்கின. இந்த நிலையில் பாடிவீட்டில் தங்கியிருந்த இராசாதிராசனின் இளவல்களான இரண்டாம் இராசேந்திரனும், வீரராசேந்திரனும், களத்திற் புகுந்து 'அஞ்சேல் அஞ்சேல்' என்று அபயம் கூறிப் போரைத் தொடங்கினர். சோர்வடைந்திருந்த சோணாட்டுப் படைகள் வீரவுணர்ச்சி பெற்றன. 'வீரவேல் வெற்றிவேல்' என்ற முழக்கத்துடன் மீண்டும் போர் புரியத் தொடங்கின. நாணற்காட்டிலே பரவிய பெருந்தீயெனக் குந்தளப் படைகள் நடுவே அண்ணனை இழந்த தம்பியர் இருவரும் புகுந்தனர்.

குந்தளப் படைத்தலைவர்களான சயசிங்கன், புலிகேசி, தசபன்மன், அசோகையன், ஆரையன் கன்னி நுளம்பன் ஆகியோர் கொல்லப்பட்டனர். ஆகவமல்லனும் பிறரும் புறங்காட்டி ஓடினர். சோழர்கள் வெற்றித்திருவை மணந்து வாகை சூடினர்.

இதுவரை மன்னரெவரும் செய்ய எண்ணியிராத அருஞ்செயல் ஒன்று அப்போர்க்களத்தில் நடைபெற்றது. குருதியும் நிணமும் கலந்து சேறாகிக் கிடந்த அந்தப் போர்க் களத்தின் நடுவே இரண்டாம் இராசேந்திரன் சோழச் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொண்டான். தமையனைக் கொன்றவனைத் தோற்கடித்துப் புறங்காட்டியோடச் செய்து அவ்விடத்திலேயே முடிசூடிய இந்த வீரமன்னனைப் பற்றிக் கூற வந்த சயங்கொண்டார்,

**'ஒரு களிற்றின்மேல் வருகளிற்றையொத்**
**துலகுயக்கொளப்**
**பொருது கொப்பையிற் பொருகளத்திலே**
**முடிகவிழ்த்தவன்.'**

என வியக்கின்றார்.

இங்ஙனம் தனது பெருமுயற்சி வியர்த்தமானதைக் கண்ட ஆகவமல்லன் ஐந்தாண்டுகளுக்குப் பிறகு மீண்டுமொருமுறை படையெடுத்தான். முடக்காற்று என்னுமிடத்தில் இருதரத்துப் படைகளும் சந்தித்தன.

சோழர் படைகளுக்குத் தலைமை வகித்து இரண்டாம் இராசேந்திரனும், வீரராசேந்திரனும் போர் புரிந்தனர். ஆகவமல்லன் தனது ஆற்றல் அனைத்தையும் செலவிட்டு, பொருதினான் என்றும் முடக்காற்றுப் போரில் தோல்வி அடைந்து ஓடி ஒளிய நேரிட்டது. அதன் பிறகு இப்போதுதான் இறுதிமுறையாக ஆகவமல்லன் படையெடுக்கிறான்.

# 31. விடிவெள்ளி

துங்கபத்திரையாற்றின் குளிர்ந்த நீரில் மூழ்கி எழுந்து வந்தது போலச் சில்லென்ற காற்று வீசியது. கீழ்வானத்தின் கடைக்கோடியில் விடிவெள்ளி முளைத்து எழுந்து கொண்டிருந்தது. அந்த வைகைப் பொழுதின் அமைதியைக் கிழித்த வண்ணம் டக்டக் எனக் குதிரைகளின் குளம்படிச் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

தங்கள் பிடரிமயிரைச் சிலிர்த்த வண்ணம் மெதுவாக நடைபோட்டு வந்த அந்த வெண் பரிகள் மீது அமர்ந்த வண்ணம் ஆகவமல்லனும் அவனது புதல்வன் விக்கிரமாதித்தனும் பாடிவீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தனர்.

நீண்ட காலமாக நெஞ்சிலே உறுத்திக் கொண்டிருந்த முள்ளைப் பிடுங்கி எறிந்துவிட்டவனைப் போல ஆகவமல்லனின் முகத்தோற்றம் இருந்தது. ஆகவமல்லன் பிடுங்கியெறிந்த முள் விக்கிரமாதித்தனின் இளம் நெஞ்சில் தைத்தது. இழிவும், பழியும் நிரம்பிய துயரக் காதையைத் தனது தந்தை கூறக் கேட்ட விக்கிரமாதித்தனின் உள்ளத்திலே வேதனை குடிகொண்டது.

சோகம் ததும்பும் விழிகளுடன் தன்னை நோக்கிய தனது புதல்வனை நோக்கி ஆகவமல்லன் கூறலானான்.

“விக்கிரமா! இதுவரை நான் கூறியவற்றில் ஒரு சில நீ ஏற்கெனவே அறிந்தவைகள்தான். என்றாலும் எனது உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்த வேதனைகளை உன்னிடம் கூற வேண்டும் என்பதற்காக அனைத்தையும் கூறினேன். மகனே கேள்! தாயற்ற குழந்தைகளான உன்னையும் உனது அண்ணனையும், கானகத்தின் நடுவே பத்திரமாக வளர்க்கச் செய்தேன். நான் போருக்குப் புறப்படும் ஒவ்வொரு முறையும், தானும் கூடவர வேண்டும் என நீ அடம் பிடிப்பாய். சிறு குழந்தையாகிய உன்னைத் தேற்றுவித்து விடைபெறுகையில் எனது கண்கள் கலங்கும். மீண்டும் வந்து உன்னைக் காண்பேனா என்ற ஐயத்துடன் செல்லுவேன். போர்க்களத்தில் தோல்வியுற்றுப் படுகாயமடைந்து நான் திரும்பும் ஒவ்வொரு முறையும் என்னை எதிர்கொண்டழைக்க நீ ஓடி வருவாய். ‘அப்பா வெற்றிதானே..!’ என மழலைமொழி நிரம்பக் கூவுவாய். வேதனையும் வெட்கமும் என்னை ஆட்கொள்ளும். ‘இல்லை விக்கிரமா! அடுத்த முறை வெற்றி காண்போம்’ என்பேன். பிறகு

எனது காயங்களை உனது தளிர்கரத்தால் தடவி 'அப்பா வலிக்கிறதா?' என்பாய். 'இல்லையடா மகனே! வலியும் வேதனையும் தீர்ந்ததடா' என்பேன். அத்துடன் நீ விடமாட்டாய். போர்க்களத்தில் நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறும்படி கேட்பாய். குந்தள நாட்டின் நாடு நகரங்களையெல்லாம் சோழர்கள் எரியூட்டித் தரைமட்டமாக்கியதையும், நமது படைகள் புறங்கண்டு திரும்பி வந்திருப்பதையும் நான் கூறுவேன். நீ எனது உடைவாளைக் கையில் எடுத்துக் கொள்ளுவாய். 'அப்பா! நான் பெரியவன் ஆனதும் உங்களுடன் களத்திற்கு வருவேன். சோழர் படையைச் சிதற அடிப்பேன். குந்தளரின் புகழை மீண்டும் நிலை நிறுத்துவேன்' என்று கூறி வாளைச் சுழற்றுவாய். எனது உள்ளத்திலே குடிகொண்டிருக்கும் சோர்வு மறையும். எதிர்காலத்தைப் பற்றிக் கனவு காணத் தொடங்குவேன்.

"விக்கிரமா! இந்தக் குந்தள குலம் பண்டைப் பெருமையை இழந்து தவிப்பதற்கும், அரண்மனையிலே வளர்ந்து, அரியணையேறி ஆட்சி செலுத்த வேண்டிய நீங்கள் ஆரண்யத்திலே வாழ்ந்து சாண் அகல நிலங்கூட இல்லாது இருப்பதற்கும் முழுமுதற் காரணமாக நான் விளங்குவதை எண்ணுந்தோறும் எனது உள்ளம் வேதனைத் தீயில் வேகிறது. எனது தந்தை சாகும் போது குந்தள நாட்டின் அரசுரிமையை என்னிடம் அளித்துவிட்டுப் போனார். அதைப் போல என்னுடைய மக்களுக்கு எதுவும் செய்ய இயலாத நிலையில் நான் இருக்கிறேன். இதை எண்ணும் போது எனது நெஞ்சம் வெடித்துவிடும் போல் இருக்கிறது.." இங்ஙனம் ஆகவமல்லன் கூறி வருகையில் அவன் குரல் தழதழத்தது.

இதைத் கேட்டுக் கொண்டிருந்த விக்கிரமாதித்தனின் விழிகளில் நீர் ஆறாகப் பெருகி ஓடத் தொடங்கியது.

"அப்பா! இதென்ன பேச்சு. தந்தை மகற்காற்றும் கடன் அரசுரிமைதானா? அரசுரிமைக்குப் பதிலாக அன்பை அள்ளிச் சொரிந்திருக்கிறீர்கள். எல்லாவற்றிற்கும் மேலாக வீரத் தந்தையின் புதல்வர்கள் என்ற பெருமையை எங்களுக்கு அளித்துப் பெருமிதம் கொள்ளச் செய்திருக்கிறீர்கள். இதைத் தவிர எங்களுக்கு வேறு என்ன வேண்டும் அப்பா."

"விக்கிரமா! என்னதான் நீ கூறினாலும் எனது உள்ளம் அமைதியடைய மறுக்கிறது. அதோ பார்! கீழ்த்திசையில் ஒளி பரவத்

தொடங்குவதை. அதைப் போல இருள் படிந்த எனது உள்ளத்தில் உன்னை நினைக்கும் போது நம்பிக்கையொளி பரவுகிறது. மகனே! வாழையடி வாழையாக வளர்ந்து வந்த குந்தள குலம் எதிர்காலத்தில் உன்னையே நம்பியிருக்கிறது. உனது அண்ணன் சோமேசுவரன் எனது எண்ணத்தை நிறைவேற்றுவான் என்ற நம்பிக்கை எனக்கில்லை. எனது மனோரதங்களை நீ நிறைவேற்றுவாய். குந்தள குலத்திற்கு நேர்ந்த இழிவையும் பழியையும் துடைத்து மீண்டும் வராகக் கொடியை வானாளவப் பறக்கவிடுவாய் என்ற அசையாத நம்பிக்கை எனக்கிருக்கிறது. அவற்றையெல்லாம் கண் குளிரக் காண நான் இருப்பேனோ என்னவோ? சோழர்களுடன் பலமுறை நான் போரிட்ட இந்தத் துங்கபத்திரை ஆற்றங் கரையிலேயே சாக வேண்டும் என நான் விரும்புகிறேன். வாணாளெல்லாம் வாளை உறையிலிடாது சோழருடன் போரிட்டு வீரமரணம் அடைந்தான் ஆகவமல்லன் என உலகம் கூறுவதையே நான் விரும்புகிறேன். விக்கிரமா! என் எண்ணத்தை நிறைவேற்றுவாயா?"

ஆகவமல்லன் இவ்வாறு கூறுவதைக் கேட்டதும் விக்கிரமாதித்தன் கோவென்று கதறி அழுதிருப்பான். ஆனால் அந்த மங்கிய ஒளியில் தனது தந்தையின் முகத்திலே காணப்பட்ட வீரமும் உறுதியும் அவனை அவ்வாறு செய்வதில் இருந்து தடுத்து நிறுத்தின. நாத்தடுமாற, கண்கள் கலங்க விக்கிரமன் மறுமொழி கூறினான்.

"அப்பா! உங்கள் விருப்பம் எனது கடமை. எனது உயிரைக் கொடுத்தாகிலும் அதை நிறைவேற்றி, குந்தள குலத்தின் பெருமையை நிலைநாட்டுவேன். ஆகவமல்லன் பெற்றெடுத்த புதல்வன் என்ற புகழுக்குப் பங்கம் வராமல் நடந்து கொள்கிறேன். இல்லையேல் களத்திலே போரிட்டு மடிவேன்."

உணர்ச்சி வயப்பட்ட ஆகவமல்லன் தனது புதல்வனை அப்படியே தழுவிக் கொண்டான்.

# 32. துரோகப்படலம்

தந்தைக்கு எதிராகத் தனயன் சதி புரிவதும், தமயனை வீழ்த்தத் தம்பி திட்டமிடுவதும் அரசகுலங்களில் வழக்கந்தான். என்றாலும் குந்தள அரசகுலம் ஒரு கடுமையான சோதனையை எதிர்நோக்கியிருந்த போது; பன்னூறு ஆண்டுகளாக, வாழையடி வாழையாகத் தழைத்து வந்த குந்தள அரச பரம்பரையை அழிவு தேடி வந்திருக்கும் போது; குந்தள மன்னன் ஆகவமல்லன் வாழ்வா அன்றிச் சாவா என்ற போராட்டத்தில் ஈடுபட்டிருந்த போது; அவனது முத்த புதல்வன் சோமேசுவரன் செய்த துரோகத்திற்கு இணையான செயலொன்றை வேறு எங்கும் நாம் காண முடியாது.

குந்தள நாட்டின் பண்டையப் பெருமையை மீண்டும் நிலைநாட்டுவது எப்படி என்பதற்கான திட்டங்களை வகுப்பதில் ஆகவமல்லனும், விக்கிரமாதித்தனும் ஈடுபட்டிருந்த போது சோமேசுவரன் மற்றொரு சூழ்ச்சித் திட்டத்தைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தான். சோமேசுவரனின் உள்ளத்திலே நீண்ட நாட்களாக ஒரு ஐயம் குடிகொண்டிருந்தது. நாளுக்கு நாள் தனது தம்பியின் புகழ் வளருவதைக் கண்டு அவன் மனம் வெதும்பினான். பொறாமையால் அவனது உள்ளம் கருகிக் கொண்டிருந்தது. தனது தந்தை விக்கிரமாதித்தன் மேல் செலுத்தி வரும் அளவற்ற அன்பைக் காணக்காண அவனது நெஞ்சம் பற்றியெரிந்தது. எங்கே அரசுரிமையைத் தனக்குத் தராது தனது தம்பிக்கு மன்னர் அளித்துவிடுவாரோ என்ற அச்சம் அவன் உள்ளத்தில் குடியேறியிருந்தது.

எனவே எப்படியேனும் அரசுரிமையை அடைய அவன் திட்டமிட்டான். தனது நோக்கத்திற்குத் தடைகல்லாக விளங்கும் எவரையும் ஒழித்துக்கட்ட அவன் சித்தமாக இருந்தான். ஒற்றர் படைத்தலைவன் கங்காகேத்தன் அவனுக்கு உறுதுணையாக இருந்தான். இருவரும் சேர்ந்து பல திட்டங்களைத் தீட்டினர்.

இடைவிடாது இருபதாண்டு காலத்திற்கு மேலாகப் போராடிப் போராடிச் சலிப்படைந்து, அதன் விளைவாக ஆகவமல்லனின் மீது வெறுப்படைந்திருந்த படைத்தளபதிகள் அனைவரையும் தங்களது நோக்கத்திற்கு இணங்க வைக்கும் முயற்சியில் அவர்கள் ஈடுபட்டனர். சூழ்ச்சித்திறன் மிக்க கங்காகேத்தனுக்கு அது ஒன்றும்

பெரிய காரியமாக இருக்கவில்லை. அதுவும் பட்டத்து இளவரசன் சோமேசுவரனே இச்சதிக்குத் தலைமை வகிக்கிறான் என்பதை அறிந்த போது தளபதிகள் பலரும் கங்காகேத்தனின் வலையில் சுலபமாக வீழ்ந்தனர்.

இரண்டு தடைகளைத் தாண்டி இச்சதித்திட்டம் வெற்றி பெற வேண்டியிருந்தது. முதலாவது தடையாக விக்கிரமாதித்தன் விளங்கினான். மாவீரனான விக்கிரமாதித்தன் தனது தந்தையை எப்படியும் காக்க முயலுவான். ஆகவமல்லன் மீதும் இளவரசன் விக்கிரமாதித்தன் மீதும் அன்பை அள்ளிச் சொரிந்து அடிபணியும் படை வீரர்கள் பலர் இருந்தனர். மன்னருக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்க அவர்கள் தயாராக இருந்தனர்.

இந்தத் தடைக் கற்களை அகற்றிவிட்டால் ஆகவமல்லனைச் சிறைப்பிடிப்பது எளிதாகிவிடும். ஆனால் அத்தடைகளை அகற்றுவது எப்படி?

இதையெல்லாம் யோசித்த சோமேசுவரனும், கங்காகேத்தனும் திட்டமொன்று தீட்டினர்.

சோமேசுவரனுக்கு ஆதரவாக உள்ள படைத்தளபதிகளைக் கொண்ட இரகசியக் கூட்டமொன்று நடத்துவது எனத் தீர்மானிக்கப்பட்டது. அக்கூட்டத்தில் குந்தள நாட்டின் மன்னனாகச் சோமேசுவரனை ஏற்றுக் கொண்டு தளபதிகள் விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்க வேண்டும் எனவும் முடிவு செய்யப்பட்டது.

# 33. நள்ளிரவில் சதி

துங்கபத்திரையாற்றில் பெருவெள்ளம் பெருகியோடிக் கொண்டிருந்தது. நள்ளிரவில் அக்காட்சி பயங்கரத்தை அளித்துக் கொண்டிருந்தது. அந்தப் பயங்கரத்திற்கு மெருகு ஏற்றுவதைப் போல வானத்திலும் கரு மேகங்கள் சூழ்ந்திருந்தன. விர்ரென காற்று வீசிக் கொண்டிருந்தது. எந்த நேரத்திலும் பெருமழை பிடித்துக் கொள்ளலாம் என்ற சூழ்நிலை.

அந்த நள்ளிரவில் முக்காடிட்ட இரு உருவங்கள் குதிரை மீது விரைந்து போய்க் கொண்டிருந்தன. லேசாக விழுந்து கொண்டிருந்த தூறலையும் பொருட்படுத்தாது அவர்கள் விரைந்து போய்க் கொண்டிருந்தனர்.

“கங்காகேத்தா! இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும்?” என ஒரு மெல்லிய குரல் கேட்டது.

“இதோ! வந்துவிட்டோம் இளவரசே! இன்னும் சற்று தூரம்தான்” எனப் பதிலளித்தது மற்றொரு குரல்.

“எல்லோரும் வந்திருப்பார்கள் அல்லவா?” என வினவியது முன் குரல்.

“ஆம் தங்களது வருகைக்காகக் காத்திருப்பார்கள்” என்றது பின் குரல்.

குதிரைகளின் மேல் போய்க் கொண்டிருந்தவர்கள் யார் என்பதை இதற்குள் வாசகர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள். ஆம்! இளவரசன் சோமேசுவரனும் ஒற்றர் படைத்தலைவன் கங்காகேத்தனும் போய்க் கொண்டிருந்தார்கள்.

திடீரெனச் சற்றுத் தொலைவில் ஒளி ஒன்று தோன்றி மறைந்தது. அதைக் கண்டு திடுக்கிட்ட சோமேசுவரன் குதிரையை நிறுத்தினான்.

“பயப்படாதீர்கள் இளவரசே! நமது ஆட்கள் காட்டும் சமிக்ஞை! வேறு ஒன்றுமில்லை” என்றான் கங்காகேத்தன்.

ஒளி தோன்றி மறைந்த திக்கை நோக்கிக் கங்காகேத்தன் தனது குதிரையைச் செலுத்தினான். படபடக்கும் உள்ளத்தோடு அவனைப் பின் தொடர்ந்தான் சோமேசுவரன். போகும் வழி அடர்த்தியாகிக் கொண்டே வந்தது. காட்டு மரங்களும் புதர்களும் நெருக்கமாக

இருந்தன. அவற்றை விலக்கிக் கொண்டு போவது பெரும் சிரமமாக இருந்தது. முடிவே இல்லாத இந்தப் பயணத்திற்கும் முடிவு வந்தது.

பாழடைந்த மாளிகை ஒன்றின் முன்பு இப்பாதை போய் முடிவடைந்தது. அந்தக் காரிருளில் அம்மாளிகையின் சிதைந்த பகுதிகள் பயங்கரமாகத் தோற்றமளித்தன. குதிரைகள் மிரண்டு போய் முன் நடக்க மறுத்தன.

குதிரை மீது இருந்தவாறே கங்காகேத்தன் குரல் கொடுத்தான்.

“யாரது அங்கே!” என்றான். அவனது குரல் பயங்கரமாக எதிரொலித்தது. பதில் எதுவும் இல்லை. சற்று நேரம் அமைதி நிலவியது. பிறகு அந்த மாளிகையின் இடிபாடுகளுக்கு நடுவே இருந்து தீப்பந்தத்துடன் ஒருவன் வெளிப்பட்டான். தீப்பந்தத்தின் சிவந்த ஒளியில் அவனது முகம் பயங்கரமாகத் தெரிந்தது.

“தேவநாதா! எல்லோரும் வந்துவிட்டார்களா?” என்றான் கங்காகேத்தன்.

இதற்குள் மாளிகைக்கு வெளியே வந்துவிட்ட தேவநாதன் தலைவணங்கி இளவரசனுக்கு மரியாதை செலுத்தினான்.

“ஆம்! எல்லோரும் வந்துவிட்டார்கள். உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்” என்றான் தேவநாதன்.

இளவரசனும், கங்காகேத்தனும் கீழிறங்கினார்கள். அருகில் இருந்த மரத்தில் குதிரைகளைக் கட்டினார்கள்.

தீவர்த்தியைப் பிடித்தவாறு தேவநாதன் வழிகாட்ட இருவரும் பின் தொடர்ந்தார்கள். போகும் வழியில் ஏதோ கேட்க சோமேசுவரன் வாயெடுத்தான். அவன் கேட்கப் போவது இன்னதெனப் புரிந்து கொண்டவன் போலக் கங்காகேத்தன் பேசத் தொடங்கினான்.

“இளவரசே! இந்த மாளிகை தங்களுடைய முப்பாட்டனார் கட்டியது. ஆம்; தைலப மன்னர் இதைக் கட்டினார். இன்று இடிந்து மண்ணாகிக் கிடக்கிறது” என்றான்.

முன்னால் போய்க் கொண்டிருந்த தேவநாதன் நின்றான். பின்னல் திரும்பி ஏதோ சமிக்ஞை செய்தான். அந்த இடத்தில் கீழ்நோக்கிப் படிகள் சென்றன. அப்படிகளில் அவன் இறங்கி நடக்கத் தொடங்கினான். ஒரு ஆள் மட்டுமே செல்லக் கூடிய அகலத்தில் அப்பாதை அமைந்திருந்தது.

இளவரசனின் கரங்களைப் பிடித்துக் கொண்டு கங்காகேத்தன் கீழிறங்கினான். தட்டுத்தடுமாறி அவ்வழியில் சோமேசுவரன் நடந்தான். பாதாள லோகத்திற்கு இறங்கிப் போய்க் கொண்டிருக்கிறோமோ என்ற பிரமை அவனுக்கு ஏற்பட்டது.

அப்பாடா! நல்லவேளையாகப் பாதை முடிந்து ஒரு பெரிய கூடத்தில் மூவரும் நுழைந்தனர். அங்கு அவர்களை வரவேற்க ஒரு அதிசயம் காத்திருந்தது. பாதாள நிலவறை போலக் காணப்பட்ட அந்தக் கூடத்தின் நடுவே சுள்ளிகள் குவிக்கப்பட்டுத் தீ எரிந்து கொண்டிருந்தது. அதைச் சுற்றிலும் பலர் கூடியிருந்தனர். உள்ளே நுழைந்த இளவரசனைக் கண்டதும் அவர்களது முகத்தில் மகிழ்ச்சி பரவியது.

“இளவரசர் சோமேசுவரர் வாழ்க!” என்ற முழக்கம் எழுந்தது.

அவர்களது மரியாதையைப் புன்முறுவலுடன் ஏற்றுவிட்டு அனைவரையும் சோமேசுவரன் அமரச் செய்தான்.

கூடியிருந்தோரிடையே எழுந்த பரபரப்பு அடங்கியதும் கங்காகேத்தன் பேசத் தொடங்கினான்: “நண்பர்களே! தைலப சக்கரவர்த்தியின் மாளிகையிலே இந்த நள்ளிரவில் நாம் கூடியுள்ளோம். தைலப சக்கரவர்த்தியின் வழித்தோன்றலும், குந்தள குலவிளக்குமான சோமேசுவரர் சற்று முன்பு உள்ளே நுழைந்த போது நீங்கள் அனைவரும் ஆரவாரத்துடன் வரவேற்றீர்கள். இளவரசர் வாழ்க என முழங்கினீர்கள். ஆனால் அது மட்டும் போதாது. குந்தள நாட்டின் அரியணையில் அவரை ஏற்றி மணிமுடி சூட்டி சோமேசுவர சக்கரவர்த்தி வாழ்க என முழங்கும் காலம் விரைவில் வர வேண்டும். அதற்கானவற்றைச் செய்யவே நாம் இங்கே கூடியுள்ளோம். இருபதாண்டு காலமாக இடைவிடாத போராட்டத்தில் நமது நாடு நகரங்கள் பாழாகியுள்ளன. நமது பெண்டு பிள்ளேகளை இழந்திருக்கிறோம். சுருக்கமாகச் சொன்னால் குந்தள நாடே சுடுகாடாகியிருக்கிறது. ஆனாலும் ஆகவமல்லரின் போர் வெறி தணியவில்லை. இவ்விதம் இரத்தம் சிந்தப்படுவதற்கு ஒரு முடிவு ஏற்படுத்தியே ஆக வேண்டும். இந்தக் கருத்து இங்குள்ள அனைவருக்கும் இருக்கிறது. சாடைமாடையாக இக்கருத்தை மன்னரிடம் நம்மில் பலரும் தெரிவித்தோம். ஆனால் ஆகவமல்லர் சற்றும் செவி கொடுக்கவில்லை. இந்த நிலையில் நாம் மனம் ஒடிந்து கிடந்த போது நடிபிக்கையொளி போல இளவரசர் சோமேசுவரர் நமது கருத்தை ஆதரிக்க முன்வந்தார். நான் அதைத் தெரிவித்த போது

உங்களில் பலரும் அதை நம்பத் தயாராக இல்லை, ஏன்? தளபதி மதுவணர்கூடச் சற்றுத் தயக்கமடைந்தார். அந்தத் தயக்கத்தையும் அவநம்பிக்கையையும் போக்கவே இக்கூட்டம் கூட்டப்பட்டது. மிக நெருக்கடியான வேளையில் நாம் இங்குக் கூடியுள்ளோம். சோழப் படைகள் இன்னும் ஒரு வாரத்திற்குள் துங்கபத்திரைக்கு வந்துசேர்ந்துவிடும். அதற்குள் நாம் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானித்துவிட வேண்டும். இத்தருணம் தப்பினால் மறுதருணம் வாய்ப்பது அரிது. குந்தள சாம்ராஜ்யத்தின் மேன்மைக்காகப் பல ஆண்டுகளாகப் பாடுபட்டு வரும் நீங்கள் அனைவரும் உங்களின் யோசனைகளைக் கூறுவீர்கள் என நம்புகிறேன்" எனக் கூறி முடித்தான்.

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. எரியும் தீயின் செவ்வொளி கூடியிருந்தோரின் சிந்தனை ததும்பும் முகங்களில் படிந்து கொண்டிருந்தது. யாரும் வாய் திறக்க,வில்லை.

தளபதி மதுவணர் எழுந்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டார். குந்தளப் படைகளின் தலைமைத் தளபதியான அவர் கூறப் போவதைக் கேட்க அனைவரும் தயாராயினர்.

# 34. தளபதியின் திட்டம்

தளபதி மதுவணர் தமது கம்பீரமான விழிகளால் ஒருமுறை அனைவரையும் நோக்கினார். மறுகணம் பேசத் தொடங்கினார்.

“இளவரசர் அவர்களே! நண்பர்களே! நள்ளிரவில், காகையும் கூகையும் வரக் கூசிடும் இந்தப் பாழடைந்த மாளிகையில் நாம் கூடியிருக்கிறோம். தைலபச் சக்கரவர்த்தியின் இந்த மாளிகை பாழடைந்து கிடப்பதைப் போலவே, குந்தள நாடும் இன்று பாழடைந்து கிடக்கிறது. எங்கும் அழுகுரல், பஞ்சம் பட்டினி. செல்வச் செழிப்புடன் விளங்கிய குந்தள நாட்டின் நகரங்கள் இன்று சிதைந்து, தகர்ந்து மண்மேடிட்டுக் கிடக்கின்றன. இந்த அவல நிலைக்கு யார் காரணம்? அதைச் சற்று யோசித்துப் பாருங்கள். சோழரை எதிர்த்து ஆகவமல்லர் நடத்திய அத்தனை போர்களிலும் முன்னணியில் நின்று போரிட்டவர்களில் நானும் ஒருவன். கம்பிலிப் போரிலும், கிருஷ்ணையாற்றங்கரைப் போரிலும் இராசாதிராச சோழனை எதிர்த்துக் கடும் போரிட்டோம். என்றாலும் நாம் தோல்வியடைந்தோம். அதற்கடுத்து நடைபெற்ற கொப்பத்துப் போரில் நமது படைகள் வெற்றிவாகை சூடின. இராசாதிராசன் போர்க் களத்திலேயே கொல்லப்பட்டான். ஆனால் எதிர்பாராதவிதமாக இராசாதிராசனின் தம்பியர்கள் போர்க் களத்தில் தோன்றி சோழர்களின் தோல்வியை வெற்றியாக மாற்றினர். அதன் பின்னர் முடக்காற்றுப் போரிலும் நாம் படுதோல்வி அடைந்தோம். இதற்கிடையில் கங்கபாடியையும், வேங்கியையும் கைப்பற்ற நாம் செய்த முயற்சிகளும் தோல்வி அடைந்தன. நமது இளம் தளபதிகளில் திறமை வாய்ந்தவனும், மாவீரனுமான சாமுண்டராயன் தலைமையில் வேங்கி நோக்கிச் சென்ற நமது படையில் ஒருவர்கட்ட திரும்பவில்லை. அத்தனைபேரும் வேங்கிப் போரில் களபலியாக்கப்பட்டனர். சாமுண்டராயனும் கொல்லப்பட்டான். பதினெட்டு ஆண்டு காலத்திற்கு மேலாகப் போர்க்களத்திலேயே வாணாளைச் செலவிட்டிருக்கிறோம். நமது பெண்டு பிள்ளைகளைப் பறிகொடுத்துப் பரிதவித்திருக்கிறோம். இத்தனைக்குப் பிறகும் நமது மன்னரின் போர் வெறி தணிந்தபாடில்லை. மறுபடியும் இன்று நமது படையணிகள் கூடல் சங்கமத்தில் திரட்டப்பட்டுள்ளன. வீரராசேந்திர சோழர் பெரும் படையுடன் வந்து கொண்டிருக்கிறார். இன்னும் சில வாரங்களில்

பெரும்போர் தொடங்கிவிடும். இந்தப் போர் கடும் போராகத்தான் இருக்கும். அதுவும் இதுவே இறுதிப் போராகத்தான் இருக்கும். கடல் போலப் பரந்த சோழர் படையுடன் சின்னஞ்சிறிய குந்தளர் படை மோதினால் முடிவு என்ன ஆகும் என்பதை நான் கூறத் தேவையில்லை. நாம் எல்லோரும் அழிக்கப்படுவது உறுதி. இந்தப் பேராபத்தில் இருந்து குந்தள நாடு தப்புவது எப்படி? உங்களில் பலரின் உள்ளத்தையும் இந்தக் கேள்வி குடைந்து கொண்டிருப்பது போலவே எனது உள்ளத்திலும் இக்கேள்வி எதிரொலித்துக் கொண்டிருக்கிறது. அந்தகார இருளில் திக்குத்திசை தெரியாது தடுமாறிக் கொண்டிருந்த நம்முன் நம்பிக்கையொளி ஒன்று தோன்றியிருக்கிறது. அந்த ஒளிதான் இளவரசர் சோமேசுவரர். குந்தள நாட்டைக் காக்கும். வலிமை இன்று அவரிடம்தான் உள்ளது. நம்மையும், இந்த நாட்டையும் அழிவிலிருந்து காக்க அவர் முன்வந்திருப்பது நமக்கெல்லாம் மட்டில்லா மகிழ்ச்சியை அளிக்கிறது. அவர் இடும் கட்டளையைச் சிரமேற் தாங்கிச் செயல்படச் சித்தமாக இருக்கிறோம் என உங்கள் சார்பில் கூறிக் கொண்டு எனது பேச்சை முடித்துக் கொள்கிறேன்" என்று கூறிவிட்டு அமர்ந்தார்.

"இளவரசர் சோமேசுவரர் வாழ்க!" எனத் தேவநாதன் குரல் எழுப்பினான். அதைத் தொடர்ந்து "வாழ்க! வாழ்க!" என அனைவரும் முழங்கினர்.

# 35. தம்பியை ஒழிக்கத் திட்டம்

**சோ**மேசுவரன் எழுந்தான். கங்காகேத்தனை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தான். பேசட்டுமா என்று கேட்பது போல அந்தப் பார்வை இருந்தது. பேசுங்கள் என விழிகளாலேயே விடை கூறினான் கங்காகேத்தன்.

அந்த நள்ளிரவின் அமைதியைக் கிழித்த வண்ணம் சோமேசுவரன் பேசத் தொடங்கினான். "தளபதிகளே! எதைப் பேசுவது எப்படிப் பேசுவது என்றே எனக்குப் புரியவில்லை. என் மீது நீங்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு எவ்வாறு நன்றி செலுத்துவது என்றே எனக்குத் தெரியவில்லை. குறிப்பாகத் தளபதி மதுவணரும், கங்காகேத்தனும் என் மீது செலுத்திவரும் அளவற்ற அன்பிற்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன். குந்தள நாட்டின் மன்னரும் எனது தந்தையுமான ஆகவமல்லரை எதிர்க்க வேண்டிய இக்கட்டான சூழ்நிலையில் நான் தள்ளப்பட்டுள்ளேன். ஆகவமல்லர் எனது தந்தை. ஆனால் குந்தள நாடு எனது தாய்நாடு. தாயகத்தின் நலன் தந்தையின் நலனைவிடப் பெரிது. மக்களின் அழுகுரலைத் துடைக்கவும், பேரபாயத்தில் இருந்து குந்தள நாட்டை மீட்கவும் துணிந்தேன். என்னுடைய முயற்சிக்குக் கங்காகேத்தனும் மதுவணரும் உரமூட்டினர். நீங்கள் அனைவரும் எனக்கு உறுதுணையாக இருப்பதை எண்ணும் போது புதிய உற்சாகம் என்னுள்ளத்தில் கரைபுரண்டு ஓடுகிறது. உங்கள் துணையுடன் வராகக் கொடியை மீண்டும் நாட்டுவேன் என்ற உறுதியை உங்கள் முன் கூறுகிறேன்" என்று கூறிவிட்டு இளவரசன் சோமேசுவரன் அமர்ந்தான்.

கங்காகேத்தன் எழுந்து பேசத் தொடங்கினான்: இளவரசரின் நோக்கம் என்ன என்பதை அனைவரும் நேரடியாகத் தெரிந்து கொண்டீர்கள். அதற்காகத்தான் உங்கள் அனைவரையும் இங்கே கூட்டினேன். அடுத்து நாம் செய்ய வேண்டியது என்ன என்பதைத் தீர்மானிக்க வேண்டும். எதிரிகள் நாற்புறமும் நம்மைச் சூழ்ந்திருக்கிறார்கள். சோழர்களை மட்டும் நான் குறிப்பிடவில்லை, குந்தள நாட்டிலும் நமக்கு எதிரிகள் இருக்கிறார்கள். நமது இரகசியம் வெளியானால் உடனடியாக நாம் அனைவரும் அழிக்கப்படுவது உறுதி. எனவே நாம் விரைவாகச் செயல்பட வேண்டும். முதலாவதாக இளவரசர் விக்கிரமாதித்தர் நமது நோக்கத்திற்குப் பெருந்தடையாக

இருப்பார். மன்னரைக் காக்க எப்படியும் அவர் முயலுவார். மேலும் விக்கிரமாதித்தர் மீது தீராத பக்தி கொண்ட படையணிகள் பல உள்ளன. அப்படையணிகள் நமக்கு எதிராகக் கிளம்பலாம். எனவே இத்தடையை உடனடியாக நாம் அகற்றியாக வேண்டும். ‘போர், போர்’ என விக்கிரமாதித்தர் ஓயாது துடித்துக் கொண்டிருக்கிறார். இதை நமக்குச் சாதகமாக மாற்றிக் கொள்ள வேண்டும். வேங்கி நாட்டின் எல்லையில் படை திரட்டி வைக்குமாறு விசயாதித்தனுக்குச் சோழர்கள் ஆணை பிறப்பித்துள்ளனர். அவனும் அவ்வாறே படை திரட்டி வைத்துள்ளான். ஆனால் விசயாதித்தனின் உள்நோக்கம் வேறு. குந்தள நாட்டின் மீது படையெடுக்க அவன் படை திரட்டவில்லை. சந்தர்ப்பம் கிடைத்தால் வேங்கியின் அரியணையை அபகரிக்க அவன் திட்டம் போட்டுள்ளான். நியாயப்படி வேங்கி அரியணை விசயாதித்தனுக்கு உரியதல்ல என்பதை நீங்கள் அறிவீர்கள். வேங்கி இளவரசனான விஷ்ணுவர்த்தனன் கங்கைகொண்ட சோழபுரத்தில் தனது பாட்டன் வீட்டில் வளர்ந்து வருகிறான். அவனுக்குப் பதில் அரசப் பிரதிநிதியாக இருந்து வேங்கியை ஆள அவனின் சிற்றப்பனான விசயாதித்தன் நியமிக்கப்பட்டான். இந்த விசயாதித்தனுக்குச் சக்திவர்மன் என்ற புதல்வன் ஒருவன் இருக்கிறான். எனவே வேங்கி அரியணை தனக்கும், தனது புதல்வனுக்கும் உரியதாக வேண்டும் என விசயாதித்தன் தீர்மானித்துள்ளான். எனவே அவன் சோழர்களுக்குத் துரோகம் செய்யத் தயங்கமாட்டான். அவனுடன் நாம் இரகசிய உடன்பாடு ஒன்று செய்து கொள்ள வேண்டும். விக்கிரமாதித்தரையும், அவருக்கு விசுவாசமாக உள்ள படை வீரர்களையும் பிரித்து வேங்கிப் படையெடுப்பிற்கு அனுப்பிவிட வேண்டும். அப்படையணியுடன் நமது தளபதி தேவநாதனையும் அனுப்ப வேண்டும். விசயாதித்தனின் இரகசிய உதவியோடு விக்கிரமாதித்தனைத் தேவநாதன் சிறைப் பிடிக்க வேண்டும். அதே வேளையில் இங்கு நாம் ஆகவமல்லரைச் சிறைப்பிடிக்க வேண்டும். பிறகு சோழருடன் சமாதானம் செய்து கொள்ள வேண்டும். இதுவே என் திட்டம்” என்றான் கங்காகேத்தன்.

அவன் கூறுவதை அளவிட முடியாத ஆர்வத்துடன் கேட்டு வந்த அக்கூட்டத்தில் இருந்து “அபாரம்! நல்ல யோசனை! அப்படியே செய்வோம்” என்ற பாராட்டுக் குரல்கள் எழுந்தன.

கூட்டத்தைக் கையமர்த்திவிட்டுக் கங்காகேத்தன் மீண்டும் பேசினான்: "பொறுங்கள்! இன்னுமொரு அருமையான திட்டம் என்னுள்ளத்தில் இருக்கிறது. இளவரசர் ஆணையிட்டால் அதையும் கூறுகிறேன்" என்றான்.

"கேட்க வேண்டுமா? கூறு கங்காகேத்தா!" என்றான் சோமேசுவரன்.

"வீரராசேந்திர சோழருடன் சமாதானம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறினேன் அல்லவா! அது எப்படி சாத்தியம் என உங்களில் பலர் எண்ணியிருக்கக் கூடும். அதற்காகத்தான் அற்புதமான திட்டம் ஒன்றினைத் தயாரித்துள்ளேன். வீரராசேந்திர சோழருக்கு வீரமாதேவி என்ற புதல்வி ஒருத்தி இருக்கிறாள். அந்த இளவரசியை நமது சோமேசுவருக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டால் இரு குலத்திற்கும் இடையே உள்ள பகை மறையும். நமது பலமும் அதிகரிக்கும்" என்றான் கங்காகேத்தன்.

அளவுகடந்த மகிழ்ச்சியாலும், பூரிப்பாலும் புடைத்துப் போனான் சோமேசுவரன். குந்தள நாட்டின் அரியணையில் சோழ இளவரசியுடன் அமர்ந்து ஆட்சி செலுத்துவதாக அப்போதே இன்பக் கனவு காணத் தொடங்கிவிட்டான்.

# 36. ஆகவமல்லனின் கலக்கம்

சதிகாரர்கள் தங்களின் திட்டத்தை நிறைவேற்ற அதிகச் சிரமப்படவில்லை. போர்! போர்! என ஓயாது துடித்துக் கொண்டிருந்த விக்கிரமாதித்தன் வேங்கிப் படையெடுப்பு யோசனையைக் கேட்டவுடனேயே துள்ளிக் குதித்தான். தானே செல்வதாகக் கூறினான். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று சதிகாரர்களுக்கு. ஆனால், ஆகவமல்லன் மட்டும் அதற்கு இணங்கவில்லை. சோழர் படைகளை முறியடித்த பிறகு வேங்கிப் படையெடுப்பை வைத்துக் கொள்ளலாம் என்று கூறினான்.

துங்கபத்திரையாற்றில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடுவதாலும் கடும் மழை பெய்யத் தொடங்கிவிட்டதாலும் சோழர் படை துங்கபத்திரையின் அக்கரையிலேயே முடங்கிக் கிடக்க வேண்டிய நிலை பிறந்திருக்கிறதென்றும், எனவே இந்தப் பொன்னான வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு வேங்கியைக் கைப்பற்றிக் கொள்வதே சிறந்த இராசதந்திரமாகும் எனத் தளபதி மதுவணரும் சோமேசுவரனும் எடுத்துக் கூறினார்கள்.

என்ன காரணத்தினாலேயோ அவர்களது யோசனையை ஏற்க ஆகவமல்லன் தயங்கினான். இனந்தெரியாத தயக்கம் அவனைத் தடுத்தது. தந்தையின் தயக்கத்தை விக்கிரமாதித்தன் வேறுவிதமாகப் புரிந்து கொண்டான். தன்னைப் போர்க்களத்திற்கு அனுப்பவே தந்தை தயங்குகிறார் என அவன் எண்ணிக் கொண்டான். எனவே அண்ணனுடன் சேர்ந்து கொண்டு அவனும் வேங்கிப் படையெடுப்பை ஆதரித்தான். தன் புதல்வர்கள் இருவரும், முக்கிய தளபதிகள் பலரும் வற்புறுத்திய போது அதை மறுக்க ஆகவமல்லனால் இயலவில்லை. அரைகுறை உள்ளத்தோடு இந்த யோசனைக்கு இணக்கம் தெரிவித்தான்.

வேங்கி நோக்கிப் படையெடுத்துச் சென்ற விக்கிரமாதித்தனை அரைகுறை மனதுடன் ஆகவமல்லன் வழியனுப்பி வைத்தான். தன்னைப் போர்க்களத்திற்கு அனுப்பி வைக்கத் தந்தை தயங்கியதின் காரணத்தை விக்கிரமனால் அறிந்து கொள்ளவே முடியவில்லை. தயங்கித் தயங்கி அவனுக்கு விடைகொடுத்தனுப்பிய வேளையில் ஆகவமல்லன் கூறிய சொற்கள் இன்னும் அவனது செவிகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தன.

“விக்கிரமா! இந்த வேளையில் என்ன காரணத்தாலோ என் மனம் உன்னைவிட்டுப் பிரிய மறுக்கிறது. இதுவே நமது இறுதிச் சந்திப்பாக இருந்துவிடுமோ என அஞ்சுகிறேன். எது எப்படி ஆனாலும் விக்கிரமா! எனது விருப்பத்தை நீ நிறைவேற்றி வைப்பாய் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. நீ அளித்த உறுதிமொழி என்னைத் திடம் கொள்ளச் செய்கிறது. எனவே உன்னைப் பிரிய நான் இசைகிறேன்.”

ஆகவமல்லன் இவ்வாறு கூறியதை எண்ணுந்தோறும் விக்கிரமனின் விழிகளில் நீர் ஆறாகப் பெருகி ஓடியது. ‘இதுவே கடைசி சந்திப்பாக இருக்கலாம்’ என்று கூறினரே. ஐயோ! அவர் வாயில் இப்படிப்பட்ட வார்த்தைகளா வர வேண்டும்? மலை பெயர்ந்தாலும் நிலை பெயராத உள்ளம் படைத்த அவர் எதைக் கண்டு அஞ்சுகிறார்? காரணமில்லாமல் அவர் அஞ்சமாட்டாரே? அந்த வீராதி வீரர் எதைக் கண்டு அஞ்சுகிறார்? கடல் போலப் பரந்த சோழர் படையின் அளவைக் கருதியா? இல்லை! இல்லை! இதற்காகவா அவர் அஞ்சப் போகிறார். இருபதாண்டு காலத்திற்கு மேலாக வாளை உறையிலிடாது போரிட்டு வரும் தனது வீரத்தந்தை பகைவனின் படை பலத்தைக் கண்டு அஞ்சிவிடவா போகிறார். இருக்காது! இருக்காது! ஒருக்காலும் இருக்காது. அப்போது மின்னல் வெட்டுப் போல ஒரு எண்ணம் அவனுக்குத் தோன்றியது.

ஒருவேளை அப்படியும் இருக்கலாமா? சே! சே! அண்ணன் அவ்வளவு கீழ்த்தரமாகவா போவான்? கரைப்பார் கரைத்தால் கல்லுங்கரையுமன்றோ? இயற்கையிலேயே சிறிது சபல புத்தி படைத்த சோமேசுவரன் எதுதான் செய்யத் துணியமாட்டான்?

இவ்வாறெல்லாம் எண்ணிப் பலவாறு குழம்பினான் விக்கிரமாதித்தன். தனது வீரத்தந்தையைத் துரோகமும் சூழ்ச்சியும் ஒன்றும் செய்துவிட முடியாது என அவனது உள்ளம் தன்னைத்தானே தேற்றிக் கொண்டது.

வேங்கிப் போரிலே தனது வீரத்தைக் காட்டி, விசயாதித்தனைத் தோற்கடித்து வாகைசூடி வெற்றிச் செய்தியுடன் தந்தையிடம் திரும்ப வேண்டும். அதைக் கண்டு அவர் மகிழ வேண்டும். அந்த மகிழ்ச்சியால் உந்தப்பட்டுச் சோழர் படையைத் தாக்க வேண்டும் என்றெல்லாம் பலவாறு கனவு கண்ட வண்ணம் வேங்கி நாட்டின்

எல்லையை அடைந்த விக்கிரமாதித்தனைப் பெரும் ஏமாற்றம் எதிர் நோக்கிக் காத்திருந்தது.

ஆம்! விசயாதித்தன் சமாதானம் வேண்டித் தூதுவர்களை அனுப்பியிருந்தான். இந்தச் செய்தியைத் கேட்டதும் விக்கிரமாதித்தன் அடைந்த திகைப்பிற்கு அளவே கிடையாது. அருகிலிருந்த தேவநாதனை அழைத்து, “தேவநாதா! இது உண்மையாக இருக்க முடியுமா? அன்றி இதில் ஏதேனும் சூழ்ச்சி கலந்திருக்குமா?” என்றான்.

இந்த வேளையை எதிர்நோக்கிக் காத்திருந்த தேவகாதன் மெதுவாகத் தன் வஞ்சக வலையை விரித்தான். “இளவரசே! இதில் ஒன்றும் சூது இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. வீராதி வீரரான விக்கிரமாதித்தர் வருகிறார் என்று கேள்விப்பட்டதுமே விசயாதித்தன் நடுங்கிவிட்டான் போல் இருக்கிறது. எனவே அவனது சமாதான வேண்டுகோளை ஏற்றுக் கொள்வதுதான் சாலச் சிறந்தது” என்றான்.

விக்கிரமாதித்தனுக்கோ என்ன செய்வது என்றே தெரியவில்லை. வாளெடுத்து வீசவும், வேலெடுத்து எறியவும், நேருக்கு நேர் நின்று போர் புரியவும்தான் அவன் அறிந்திருக்கிறானே ஒழிய சூதும், சூழ்ச்சியும் கொண்ட இராசதந்திரக் கலையை அவன் தெரிந்திருக்கவில்லை. எனவே அவனது உள்ளம் செய்வதின்னவென்றறியாது திகைத்தது. சமாதான வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளும்படி தேவநாதன் தூண்டிக் கொண்டே இருந்தான்.

சிறிது பொறுத்து ஆற அமரச் சிந்தித்துச் செயலாற்றுவது என விக்கிரமாதித்தன் முடிவு செய்தான். இதற்கிணங்கத் தனது படைகளை வேங்கி நாட்டு எல்லையிலேயே பாசறை அமைத்துத் தங்கும்படி விக்கிரமன் ஆணை பிறப்பித்தான். இந்தச் செயலைக் கண்ட தேவநாதன் பெரும் ஏமாற்றமடைந்தான். எங்கே தங்களது திட்டம் நிறைவேறாது போய்விடுமோ என்ற அச்சம் பிறந்தது தேவநாதனுக்கு. கொடுமை நிறைந்த அவனது உள்ளத்தில் மற்றொரு வஞ்சனைத் திட்டம் உருவாகியது. ஒருவேளை தங்களது திட்டத்தின்படி விக்கிரமாதித்தனைச் சிறைப்பிடிக்க முடியாது போய்விட்டால் அவனை எப்படியேனும் கொன்றுவிடுவது என அவன் முடிவு செய்தான்.

# 37. விக்கிரமன் தப்பினான்

வஞ்சகக் கலையில் கைதேர்ந்த தேவநாதனின் மூளை தீவிரமாக வேலை செய்தது. நாளை மறுநாள் அமாவாசை. அன்று நள்ளிரவில் துங்கபத்திரை ஆற்றங்கரையில்.. இவ்வாறு எண்ணும் போதே தேவநாதனின் உடல் சிலிர்த்தது. கரணம் தப்பினால் மரணம் என்பார்களே! அது போலச் சற்று தவறினாலும் தங்கள் திட்டம் கெட்டுப் போவது மட்டுமல்ல தங்கள் உயிர்களுக்கு ஆபத்து நேரும். அமாவாசை கங்குலில் தனக்கிடப்பட்ட பணியை வெற்றிகரமாக முடித்துவிட வேண்டும். இத்தருணம் தப்பினால் மறுதருணம் வாய்ப்பது அரிது. இவ்வாறெல்லாம் தேவநாதனின் சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது.

இளவரசன் விக்கிரமாதித்தன் இதையெல்லாம் கவனித்ததாகத் தெரியவில்லை. விசயாதித்தனின் சமாதான கோரிக்கையை ஏற்றுக் கொள்வதா அல்லது போரை நடத்துவதா என்ற தீவிரமான சிந்தனையில் அவன் ஆழ்ந்திருந்தான். விசயாதித்தனின் சமாதானக் கோரிக்கைக்கு இரண்டு நாட்களில் பதில் சொல்வதாக விக்கிரமாதித்தன் கூறியிருந்தான். அந்த இரண்டு நாள் கெடுவும் மெதுவாகக் கழிந்து கொண்டிருந்தது.

அமாவாசை கங்குல் நள்ளிரவு. இருள் கவிந்திருந்த அந்த மலைப்பகுதியில் குந்தள நாட்டுப் படைகள் தண்டு இறங்கியிருந்தன. ஆங்காங்கே ஒன்றிரண்டு இடங்களில் சுள்ளிகள் குவிக்கப்பட்டு எரிந்து கொண்டிருந்தன. காவல் பணியை மேற்கொண்டவர்களைத் தவிர மற்ற வீரர்கள் பாசறைகளில் உறங்கிக் கொண்டிருந்தனர். இரண்டே இரண்டு பேர் மட்டும் தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தனர். ஒருவன் தளபதி தேவநாதன். மற்றொருவன் இளவரசன் விக்கிரமாதித்தன்.

என்ன காரணத்தாலேயோ அன்று விக்கிரமாதித்தனின் உள்ளம் நிலையில்லாது தத்தளித்துக் கொண்டிருந்தது. படுக்கையில் இருந்து மெதுவாக எழுந்து வெளியே வந்தான். காவல் புரிந்து கொண்டிருந்த வீரர்கள் தூங்கி வழிந்து கொண்டிருந்தனர். அவர்கள் நிலையைப் பார்த்துத் தனக்குள் விக்கிரமாதித்தன் சிரித்துக் கொண்டான். பின்னர் மெதுவாக நடக்கத் துவங்கினான். அந்த மலைப் பகுதியில் குடிகொண்டிருந்த அமைதியும் நள்ளிரவின் பயங்கரமும் அவன் மனதிற்குச் சாந்தியளித்தன.

சிந்தனையில் லயித்தவாறு நடந்து கொண்டிருந்த விக்கிரமாதித்தன் ஏதோ நினைவு வந்தவனாகத் திரும்பிப் பார்த்தான். அவன் உள்ளம் திடுக்கிட்டது. அடேயப்பா! எவ்வளவு தூரம் வந்துவிட்டோம். வெகுதூரத்தில் அவனது பாசறை தெரிந்தது. போதும்! இனி திரும்ப வேண்டியதுதான் என அவன் தீர்மானித்த போது குதிரையொன்று வரும் ஒலி கேட்டது. கிழக்குத் திக்கில் இருந்து வரும் இந்த ஒலியைக் கேட்டதும் அவன் துணுக்குற்றான். ஒருவேளை தந்தை ஏதேனும் செய்தி அனுப்பியிருப்பாரோ. அது என்ன செய்தியாக இருக்கும்! நல்ல செய்தியா? கெட்ட செய்தியா? இவ்வாறு எல்லாம் கணப்பொழுதில் அவன் உள்ளம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணித் தவித்தது. குதிரையின் குளம்படியொலியும் நெருங்கி வந்து கொண்டிருந்தது.

உறையில் இருந்த வாளை உருவிய வண்ணம் விக்கிரமாதித்தன் குதிரைமேல் வருபவனை எதிர்நோக்கி நின்றான். குதிரைமேல் வந்தவனோ சாய்ந்து கிடந்தான். அவன் உடலெங்கும் குருதி பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது. இதைக் கண்டதும் திடுக்கிட்ட விக்கிரமாதித்தன் விரைந்து சென்று அவனைத் தாங்கிப் பிடித்துக் கீழிறக்கினான். குதிரை வீரனோ மயக்க நிலையில் இருந்தான். அவனை அப்படியே கிடத்திவிட்டு அந்த நள்ளிரவில் தண்ணீர் கொண்டு வர ஓடினான் இளவரசன். அருகில் இருந்த சிற்றோடையின் நீரை அள்ளிக் கொண்டு வந்து குதிரை வீரனின் முகத்தில் விக்கிரமன் தெளித்தான்.

உடலெங்கும் காயங்களால் நிறைக்கப் பெற்றுப் பயங்கரமாகத் தோற்றமளித்த அவ்வீரனின் விழிகள் மெதுவாகத் திறந்தன. அந்தக் காரிருளில் எதிரில் நிற்பது யார் என்பதை அறிந்து கொள்ள அவனுக்குச் சற்று நேரம் பிடித்தது. அதை அறிந்து கொண்டதும் அவனது முகம் மலர்ந்தது.

ஏதோ விபரீதமான செய்தியொன்றை அவன் கொண்டு வந்திருக்கிறான் என்பதை விக்கிரமன் உணர்ந்து கொண்டான். விரைந்து சென்று அந்தத் தூதுவனைத் தன்னிருகரங்களினால் பற்றிய வண்ணம், “தந்தையிடமிருந்து ஏதாவது சேதி கொண்டு வந்திருக்கிறாயா?” எனத் துடித்தான்.

“ஆம், இளவரசே..!” அதற்கு மேல் பேச முடியாமல் அந்த வீரன் தடுமாறினான்.

அந்த வீரனைத் தன்னிரு கைகளினாலும் தாங்கிப் பிடித்து, அமரச் செய்து அவன் யாது கூறப் போகிறான் என்பதை ஆவலுடன் விக்கிரமன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்த வீரனின் உடலெங்கும் காணப்பட்ட காயங்கள் அவன் கடும் போரிட்ட பிறகு, தப்பி வந்திருக்கிறான் என்பதை வெளிப்படுத்தின. அவனை அவ்விதம் செல்லவொட்டாது தடுத்தவர்கள் யாராக இருக்க முடியும்? உடலெங்கணும் ஏற்பட்டிருந்த பலத்த காயங்களினால் ஏராளமான குருதி வெளியேறிவிட்டபடியாலும், நீண்ட தூரம் பயணம் செய்து களைத்திருந்தபடியாலும், அந்த வீரன் பேச முடியாமல் திணறிக் கொண்டிருந்தான். அணுஅணுவாக அவனது உயிர் உடலைவிட்டுப் பிரிந்து கொண்டிருந்தது. அதற்குள் தான் கொண்டு வந்த செய்தியைச் சொல்லிவிட அவனது உதடுகள் துடிதுடித்தன. மரண வேதனையுடன் மெதுவாக அவன் முனகினான்.

“இளவர..சே! த.ங்..க.ள் த..ந்..தை..” எனக் கூறி மூச்சு வாங்கினான்.

“தந்தைக்கு என்ன? தந்தைக்கு என்ன நேர்ந்தது?” என விக்கிரமாதித்தன் பதறினான்.

தூதுவனுக்கு மேல்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. அவனது விழிகள் விக்கிரமனைப் பரிதாபமாகப் பார்த்தன. அரும்பாடுபட்டு இவ்வளவு தூரம் வந்து கண்ணுக்குக் கண்ணான இளவரசனைச் சந்தித்துக் கூற வந்த செய்தியைக் கூறாது திணறுகிறோமே என்ற ஏக்கம் அந்த விழிகளில் வெளிப்பட்டது.

“ஐயோ! என் அருமைத் தந்தைக்கு என்ன நேர்ந்துவிட்டது. கூறமாட்டாயா?” என விக்கிரமனின் விழிகள் கெஞ்சின. மூச்சுத் திணறியவாறு தூதுவன் பேசத் தொடங்கினான். அவனது வாயிலிருந்து ஒவ்வொரு எழுத்தாக வெளிப்பட்டது.

“மன்..ன..ர்.. பேர..பாயத்..தில்..?” அவன் தான் சொல்ல வந்ததை முற்றிலும் முடிக்கவில்லை. அதற்குள் அவன் உயிர் இளவரசனின் அணைப்பிலேயே பிரிந்தது.

‘மன்னர் பேரபாயத்தில்’ மின்னல் வெட்டுப் போல இந்தச் சொற்றொடர்கள் சென்று விக்கிரமனின் உள்ளத்தில் ஆழப்பாய்ந்தன. தந்தைக்கு ஆபத்தா? ஐயோ! யாரால் நேர்ந்தது? என்ன ஆபத்து நேர்ந்தது? ஒன்றுமே தெரியவில்லையே? என விக்கிரமனின் உள்ளம்

அலமோதியது. தந்தைக்கு ஆபத்தா? ஐயோ! யாரால் நேர்ந்தது? என்ன என்ன ஆபத்து நேர்ந்தது? ஒன்றுமே தெரியவில்லையே? என விக்கிரமனின் உள்ளத்தில் எண்ண அலைகள் எழும்பி ஒன்றோடொன்று மோதின.

வேங்கிக்குத் தான் புறப்பட்ட பிறகு அங்கு ஏதோ நடந்திருக்கிறது. அதன் விளைவாக மன்னர் பேராபத்தில் சிக்கியிருக்கிறார் என்பதை விக்ரமன் உணர்ந்து கொண்டான். பகைவரால் தந்தைக்கு ஒன்றும் ஆபத்து ஏற்பட்டிருக்க முடியாது. நம்மைச் சேர்ந்தவர்கள் சிலரால்தான் மன்னருக்கு ஆபத்து நேர்ந்திருக்க வேண்டும். ஆம்; அப்படித்தான் இருக்க வேண்டும். தன்னை வேங்கிக்கு அனுப்பத் தனது தந்தை தயங்கியதன் காரணம் பளிச்சென விக்கிரமனுக்குப் புலப்பட்டது. ஏதோ பேராபத்து ஒன்று சூழ்ந்து வருவதை அவர் அப்போதே உணர்ந்திருக்க வேண்டும். எனவேதான் அவர் அவ்விதமெல்லாம் பேசித் தன்னை வழியனுப்பி வைத்தார் போலும். இனிமேல் நாம் இங்கிருப்பதில் பயனில்லை. விசயாதித்தனது சமாதான வேண்டு கோளும், தேவநாதனது போக்கும், ஏதோ ஒருவகை ஐயத்தை ஊட்டுவனவாக அமைந்திருக்கின்றன. இதில் ஏதோ மர்மம் கலந்திருக்கிறது. இதற்கும் தந்தைக்கு வந்த ஆபத்திற்கும் ஏதோ தொடர்பிருக்க வேண்டும்.

இவ்வாறு விக்கிரமனின் சிந்தனை விரைவாக ஓடிக் கொண்டிருந்த போது அதனினும் விரைவாக பேரொளி ஒன்று பரவி வந்ததைக் கண்டு திடுக்கிட்டுத் திரும்பினான். தனது படைகள் தண்டு இறங்கியிருந்த இடத்தில் பெருந்தீ ஒன்று எரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். உற்றுக் கவனித்த போது தனது கூடாரம்தான் எரிந்து கொண்டிருக்கிறது என்பதை அறிய அவனுக்கு வெகுநேரம் பிடிக்கவில்லை. அதுவரை புலனாகாத பல விஷயங்கள் எல்லாம் அவனுக்குப் பளிச்செனப் புலனாயின. உடனடியாகத் தான் என்ன செய்ய வேண்டும் என்பதை அவன் முடிவு செய்து கொண்டான்.

# 38. மனிதவேட்டை

அந்த நள்ளிரவில் துங்கபத்திரையாறுதான் எத்தனை பயங்கரமான நிகழ்ச்சிகளைப் பார்த்துவிட்டது? இடைவிடாது பெய்த பெருமழையின் 'சோ'வென்ற பேரொலியும், தங்குதடையின்றிப் பெருகியோடி வந்த வெள்ளத்தின் 'ஓ'வென்ற பேரிரைச்சலும் சேர்ந்து அந்தப் பகுதியில் ஒரு பயங்கரமான சூழ்நிலையை உருவாக்கியிருந்தன. இந்தப் பயங்கரத்திற்கு மேலும் மெருகூட்டுவதைப் போலத் துங்கபத்திரை ஆற்றின் வடகரையிலே ஆங்காங்குத் திவர்த்திகளின் வெளிச்சம் தெரிந்தது.

சற்று நெருங்கி உற்றுக் கவனித்தோமானால் ஆங்காங்கே கும்பல் கும்பலாக வீரர்கள் சிலர் தீவர்த்திகளுடன் அந்த ஆற்றங்கரை நெடுகிலும் எதையோ தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்கிறோம். இந்தப் பயங்கரமான பெருமழையிலே இவர்கள் எதைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறியாது நாம் திகைக்கிறோம்.

அப்போது ஆற்றங்கரையோரமாகக் கிழக்கிலிருந்து வந்த சாலையில் குதிரையொன்று விரைந்து வந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். வேகமாக விரைந்து காற்றினும் கடுகி வந்த அந்தக் குதிரை மீது அமர்ந்திருந்தவன், கண்ணைப்பறிக்கும் மின்னலுடன் பெய்து கொண்டிருந்த பெருமழையைச் சற்றும் பொருட்படுத்தாது குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தான். அப்போது சாலையின் மேற்கிலிருந்து ஒரு கும்பல் தீவர்த்திகளை ஏந்திய வண்ணம் வந்து கொண்டிருந்தது. தனக்கு எதிரில் வந்து கொண்டிருந்த இந்தக் கூட்டத்தைக் கவனித்த அந்தக் குதிரை வீரன் சற்று நின்று நிதானித்தான். மறுகணம் தனது குதிரையைத் திருப்பிச் சாலையினின்றும் விலகி அருகிலிருந்த புதருக்குள் மறைந்தான்.

சாலையில் மேற்கிலிருந்து வந்த கூட்டம், அந்தப் புதரை நெருங்கியது. பெய்து கொண்டிருந்த பெருமழை மேலும் வலுக்கவே, அவர்கள் அருகிலிருந்த மரத்தடியில் ஒதுங்கினார்கள். அந்த மங்கிய தீவர்த்தி வெளிச்சத்தில் வந்திருப்பவர்கள் யாரென்று அறிய நாம் துடிக்கிறோம்.

ஆம்; இளவரசன் சோமேசுவரன், கங்காகேத்தன், தளபதி மதுவணன் முதலியோர் கவலை தோய்ந்த முகத்தினராய்க் காட்சி

தருகிறார்கள். அதிலும் குறிப்பாக இளவரசன் சோமேசுவரனின் முகத்தில் முற்றுப் பெறாத மலர்ச்சியும், என்ன நேருமோ என்ற கவலையும் தோன்றி ஒன்றோடு ஒன்று கலந்து போட்டியிட்டன.

“கங்காகேத்தா! வேங்கி சென்றிருக்கும் தேவநாதன் தனது காரியத்தை வெற்றிகரமாக முடித்திருப்பான் அல்லவா?” என்றான் சோமேசுவரன்.

“இளவரசே! இதிலென்ன ஐயம்? தேவநாதன் சென்று என்றுமே தோல்வியுடன் திரும்பியதில்லையே. இதற்குள் காரியத்தை வெற்றிகரமாக முடித்திருப்பான். இன்னும் சிறிது நேரத்தில் வெற்றிச் செய்தி நமக்குக் கிடைக்கும்” என்றான் கங்காகேத்தன்.

“ஆம்! இளவரசே! நாம்தான் ஏமாந்துவிட்டோம்” என்றார் தளபதி மதுவணர்.

“ஆம்! சற்றும் எதிர்பாராத நிலையில் அந்த நிகழ்ச்சி நடைபெற்றுவிட்டது. அதற்கு நாம் என்ன செய்ய முடியும்?” என்றான் கங்காகேத்தன்.

“நடந்ததை நினைத்து வருத்தப்பட்டு என்ன பயன்? நாம் தேடி வரும் பொருட்கள் விரைவில் கிடைத்துவிடும். அல்லவா?” என்றான் சோமேசுவரன்.

“இளவரசே, அதைப் பற்றி எள்ளளவும் தங்களுக்குச் சந்தேகம் வேண்டாம். மன்னருடன் ஆற்றிலிறங்கிய வீரர்கள் கூறுவது உண்மையானால் இந்த ஆற்றங்கரையோரமாக எங்கேயாவது மன்னரின் சடலம் ஒதுங்கிக் கிடக்கும். அப்படி அவர் ஆற்று வெள்ளத்திற்குத் தப்பி, கரையேறியிருந்தாலும், நிச்சயமாக அவர் பகைவர் கையில் சிக்கியிருப்பார்” என்றார்.

அப்போது ‘ஆ’வென யாரோ அலறும் ஒலி கேட்டது. அனைவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். புதரின் மறைவிலிருந்து மின்னல் வேகத்தில் குதிரையொன்று பாய்ந்து வெளிக்கிளம்பியது. அதைத் தொடர்ந்து “விக்கிரமாதித்தன்.. விக்கிரமாதித்தன்” என்ற வியப்பொலியும் “பிடி.. பிடி” என்று பலர் கூவும் ஒலியும் கேட்டன.

பலர் தங்கள் கரங்களில் ஏந்தியிருந்த வேல்களைக் குதிரை சென்ற திக்கை நோக்கி வீசியெறிந்தார்கள்.

இவர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விக்கிரமன் ஏறியிருந்த குதிரை கடுகிச் சென்று, பொங்கிப் புரண்டோடும் துங்கபத்திரையாற்றின் வெள்ளத்தில் இறங்கியது. சிறிது நேரத்தில் பேரலைகளுக் கிடையில் விக்கிரமனின் உருவம் மறைந்தது.

&&&

அந்த நள்ளிரவில் ஆற்றங்கரையோரத்தில் சோமேசுவரனும் அவனைச் சேர்ந்தவர்களும் எதைத் தேடிக் கொண்டிருந்தார்கள்? ஆகவமல்லனுக்கு நேர்ந்த விபத்து யாது? விக்கிரமன் அங்கு எப்படித் தோன்றினான்? என்பவைகளை நாம் அறிய வேண்டுமானால் சற்றுப் பின்னோக்கிச் செல்ல வேண்டும்.

அந்த நள்ளிரவு வேளைக்குச் சற்று முன்னர் சதிகாரர்கள் தங்கள் திட்டப்படி ஆகவமல்லனின் கூடாரத்தை வளைத்துக் கொண்டனர். ஆகவமல்லன் முதலில் திகைத்துப் போனாலும் மறுகணம் சமாளித்துக் கொண்டான். அமைதியாகக் கூடாரத்தைவிட்டு வெளியில் வந்து சுற்றிலும் நின்றவர்களை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தான். அவன் விழிகளில் வீசிய ஒளியைக் கண்டதும் எதிரில் நின்றவர்களின் விழிகள் கூசின. சோமேசுவரன் தனது தலையைக் குனிந்து கொண்டான். எங்கே அந்தக் கோழை அச்சத்தால் ஏதேனும் உளறிவிடப் போகிறானே என்று மதுவணன் முந்திக் கொண்டான்.

“அரசே! தங்கள் தலைமையில் போரிட நாங்கள் விரும்பவில்லை..” என்றான்.

“அப்படியானால் யார் தலைமையிலே போரிடப் போகிறீர்கள்?” என ஆகவமல்லன் வினவினான். அவன் குரலில் ஏளனம் ஒலித்தது.

“அதைப் பற்றிப் பேச இப்போது நேரமில்லை. அரசே! அதை நாங்களாகவே முடிவு செய்து கொள்வோம். தங்களது போர் வெறியில் சிக்கி இந்தக் குந்தள நாடு அழிந்தது போதுமென மக்கள் கருதுகிறார்கள். அவர்களின் விருப்பத்தை நிறைவேற்ற நாங்கள் முடிவு செய்துள்ளோம்” என்றான் மதுவணன்.

இதைக் கேட்டதும் ஆகவமல்லன் கலகலவென்று நகைத்தான். அந்த நள்ளிரவில் அந்தச் சிரிப்பு பயங்கரமாக எதிரொலித்தது. அதைக் கேட்டவர்களின் உடலில் மயிர்க் கூச்செறிந்தது.

அப்போது ஒரு அதிசயம் நிகழ்ந்தது. ஆகவமல்லனின் சிரிப்பைத் தொடர்ந்து பலமான பிளிறல் ஒன்று கேட்டது. கொலைவெறி தவழும் கண்களுடன் ஆகவமல்லனைச் சூழ்ந்து நின்ற அனைவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். ஆகவமல்லனின் பட்டத்துயானை புட்பகப்பிடி விரைந்து வந்து கொண்டிருந்தது. கடுஞ்சினத்துடன் விரைந்து வந்த அந்தக் கொல்களிற்றைக் கண்டு அனைவரும் அஞ்சி விலகினர். தனது தலைவனுக்கு நேர்ந்த ஆபத்தை அந்த யானை எவ்விதமோ உணர்ந்து அங்கு வந்து சேர்ந்தது. ஆகவமல்லனின் பயங்கரமான சிரிப்பிலே ஏதேனும் சமிக்ஞை அடங்கி இருந்ததோ என்னவோ?

விரைந்து வந்த புட்பகப்பிடி தனது தலைவனின் முன் மண்டியிட்டது. சுற்றிலும் நின்றவர்கள் செயலிழந்து நின்றார்கள். புட்பகப்பிடியின் மீது பாய்ந்து ஏறிய ஆகவமல்லன் ஒருமுறை சுற்று முற்றும் கம்பீரமாகப் பார்த்தான். மறுகணம் இடி முழக்கம் போன்ற குரலில் பேச ஆரம்பித்தான்.

“பகைவனைக் கண்டஞ்சிப் பிறந்த பொன்னாட்டிற்குத் துரோகம் செய்யும் கோழைகள், நயவஞ்சக நெஞ்சம் படைத்த பஞ்சைகள், அடுத்துக் கெடுக்கும் அற்பர்கள், இவர்களைத் தவிர மற்றவர்கள் வாருங்கள்! தாய்நாட்டின் மீது தணியாத பற்றுக் கொண்டவர்களே பிறவிப்பகைவர்களைக் கருவறுக்க வாருங்கள். நெஞ்சிலே உரம், நேர்மைத் திறன், தோள்களிலே வலிமை, வாட்களை வீசும் திறமை இவைகள் நிறைந்தவர்களே வாருங்கள். கோழைகள் கையில் சிக்கிச் சீரழிவதைக் காட்டிலும், பகைவர் மத்தியில் பாய்ந்து போரிட்டு வீர மரணம் அடைவதே மேல்.”

மறுகணம் புட்பகப்பிடி விரைந்து நடக்க ஆரம்பித்தது. ஆகவமல்லனது உணர்ச்சிவயமான பேச்சினால் சதிகாரர்களின் சூழ்ச்சி வலை அறுந்தது. தங்கள் மன்னன் மீது தணியாத பற்றுக் கொண்ட வீரர் சிலர் ஆகவமல்லனைப் பின் தொடர்ந்தனர்.

சோமேசுவரனும் மற்றவர்களும் செயலிழந்து நின்றனர். பின்னர்த் திடீரென உணர்வு பெற்ற சோமேசுவரன் ஆகவமல்லனைத் துரத்திச் சிறை பிடிக்கும்படி ஆணையிட்டான். ஆனால் காலம் கடந்துவிட்டது. குந்தள நாட்டு மன்னனைச் சுமந்து சென்ற புட்பகப்பிடி துங்கபத்திரை ஆற்றில் இறங்கி நெடுந்தொலைவு நீந்திச் சென்றுவிட்டது. எதிர்க்கரை நெடுகிலும் காவல்காத்து வந்த சோழ வீரர்கள் யாரோ

ஆற்றைக் கடக்க முயலுவதைக் கண்டார்கள். மறுகணம் அம்பு மழை பொழிய ஆரம்பித்தது. தனது தலைவனுக்குற்ற ஆபத்தைப் புட்பகப்பிடி உணர்ந்து கொண்டதைப் போல அந்தப் பெரு வெள்ளத்தில் லாவகமாக நீந்திச் சென்றது.

# 39. அடங்களிற்று ஆகவமல்லன்

கீழ் வானத்தின் கோடியில் விடிவெள்ளி முளைத்தெழுந்து கொண்டிருந்தது. முன்னிரவு தன் கரையில் நடைபெற்ற கொடும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் அறவே மறந்துவிட்டு அமைதியுடன் துங்கபத்திரை ஆறு ஓடிக் கொண்டிருந்தது. தெள்ளிய நீரலைகள் இருகரை மருகிலும் மோதி மோதித் திரும்பிக் கொண்டிருந்தன. சில்லென்ற வாடைக்காற்று மெல்லென்று வீசிக் கொண்டிருந்தது.

அந்த வைகறைப் பொழுதில் ஒரு பெரும் கரிய உருவமொன்று தள்ளாடிய வண்ணம், ஆற்றங்கரை நெடுகிலும் எதையோ தேடித்திரிந்தது. மங்கிய ஒளியில் உற்று நோக்கினோமானால் அந்த உருவம் எது என்பதை நாம் அறிந்து கொள்கிறோம். ஆம்! குந்தள மன்னனின் பட்டத்து யானையான புட்பகப்பிடிதான் அவ்விதம் எதையோ தேடித் திரிந்து கொண்டிருந்தது. கருங்குன்று போன்ற அதன் உடலெங்கனும் செந்நீர் ஊற்றுகள் பீறிட்டுக் கிளம்பி வடிந்து கொண்டிருந்தன. அதன் உடலெங்கணும் அம்புகள் தைத்திருந்தன. அந்தக் கொடிய வேதனையையும் பொருட்படுத்தாது அது யாரைத் தேடித் திரிகிறது? அதோ அலைகளால் தள்ளப்பட்டு ஏதோ ஒன்று கரையில் ஒதுக்கப்பட்டிருக்கிறதே. ஆம்! அந்தத் திக்கை நோக்கிப் புட்பகப்பிடி விரைந்து செல்கிறது. கரையோரத்தில் கிடக்கும் உருவத்தைக் கண்டதும் அம்மா! என அது! ஒருமுறை தீனக்குரலிடுகிறது. மறுகணம் மெதுவாகத் தனது துதிக்கையால் அந்த உடலே அணைத்துப் பிடித்துத் தூக்கி வருகிறது. அதன் கண்கள் நாலாபுறமும் சுழலுகின்றன. அதோ! சிறிது தூரத்தில் சற்று ஈரக்கசிவற்ற ஒரு மரத்தடி தென்படுகிறது. உடலை அங்குத் தூக்கிச் சென்று மெதுவாகப் படுக்க வைக்கிறது. பிறகு தனது துதிக்கையால் அந்த உருவத்தைத் தடவிக் கொடுக்கிறது. இடையிடையே தீனக் குரலில் பிளிறுகிறது.

துயரம் தரும் இந்த நிகழ்ச்சியைக் காண விரும்பாதவன் போலத் தயங்கித் தயங்கி ஆதவன் வெளிப்பட்டுக் கொண்டிருந்தான். அந்த ஆற்றங்கரையின் சற்றுத் தொலைவில் ஒரு மரத்தின் வேரைப் பற்றிய வண்ணம் பாதி உடல் நீரிலும் மற்றொரு பாதி கரையிலுமாக விக்கிரமாதித்தன் மயங்கிக் கிடந்தான். தனது தலைவனுக்குற்ற ஆபத்தை நன்றியுள்ள அந்தக் குதிரை உணர்ந்து கொண்டது. தனது

பற்களால் விக்கிரமனின் உடையை மெதுவாகக் கடித்த வண்ணம் அவனே கரைக்கிழுத்துக் கொண்டிருந்தது.

ஐந்தறிவு படைத்தவை எனவே இவைகள் எல்லாம் மிருகங்கள் என்று இகழ்ந்து கூறி அவற்றைத் தாழ்த்தி வைத்திருக்கும் மானிடனே! பார்! பார்! இந்த மிருகங்களின் நன்றியுணர்ச்சியைப் பார்! எனப் பாரிலுள்ளோருக்கு அறிவிப்பதைப் போல அந்த மரத்தின் மேலிருந்த புள்ளினங்கள் கூவிக் கொண்டிருந்தன.

விக்கிரமாதித்தன் சிறிது சிறிதாகத் தன்னுணர்வைப் பெற்றுக் கொண்டிருந்தான். மெதுவாகத் தனது விழிகளைத் திறந்த விக்கிரமன் தன்னெதிரில் நன்றியுணர்வுடன் நின்று கொண்டிருக்கும் அருமைக் குதிரையைக் கண்டான். தலைவன் தன்னிலை பெற்றதை உணர்ந்து கொண்ட அந்தக் குதிரை கனைத்தது. அந்தக் கனைப்பில்தான் எவ்வளவு மகிழ்ச்சி வெளிப்பட்டது.

குதிரையின் தலைக் கயிற்றைப் பிடித்த வண்ணம் மெதுவாக எழுந்த விக்கிரமன் நடக்க முடியாமல் தள்ளாடினான். குதிரையின் கழுத்தை அணைத்துப் பிடித்த வண்ணம் மெதுவாக நடந்தான். சிறிது தொலைவு செல்வதற்குள் அவன் செவிகளில் ஏதோ தீனக்குரல் கேட்டது. ஒருகணம் திடுக்கிட்டு நின்ற விக்கிரமாதித்தன் மறுகணம் குரல் வந்த திக்கை நோக்கிச் சென்றான்.

குரல் வந்த இடத்தை நெருங்க நெருங்க அவனது இதயத் துடிப்பு அதிகமாயிற்று. இப்போது தீனக்குரல் தெளிவாகக் கேட்கிறது. ஆ..! புட்பகப்பிடியின் குரலல்லவா. இந்த எண்ணம் தோன்றியவுடன் விக்கிரமனின் நடையிலே விரைவு அதிகமாயிற்று. அவன் உடலிலே குடிகொண்டிருந்த சோர்வு மாயமாக மறைந்தது. ஓட்டமும் நடையுமாக விரைந்து சென்றான்.

ஐயகோ! அவன் கண்ட காட்சி திடுக்கிட வைத்தது. ‘அடற்களிற்று ஆகவமல்லன்’ என நாடு புகழ நானிலம் ஆண்ட அந்த வீரத்திருமகனுக்கு இந்த கதியா நேர வேண்டும்! வீராதி வீரன் மாளவ நாட்டு மன்னன் போச மகராசனைத் தோற்கடித்துப் புறமுதுகிடும்படி செய்த மாவீரனுக்கு இந்த கதியா நேர வேண்டும்! சோழப் பேரரசுடன் இடைவிடாது இருபதாண்டு காலத்திற்கு மேலாகப் போரிட்டுத் தளராத தனது மனவுறுதியை வெளிக்காட்டிய வீரனுக்கு இத்தகைய கதியா நேர வேண்டும்!

துங்கபத்திரை ஆற்றங்கரையிலே பலமுறை சோழர்களுடன் சீறிப்பாய்ந்து ஆகவமல்லன் போரிட்டிருக்கிறான். அப்போதெல்லாம் அவன் கொண்டிருந்த எண்ணம் இது ஒன்றுதான். சோழருடன் போரிட்டு வாகை சூட வேண்டும், அல்லது இந்த ஆற்றங்கரையிலே வீரமரணம் அடைய வேண்டும். இன்று அவனது உடலும் அதே ஆற்றங்கரையிலே கிடந்தது. அவன் விரும்பியபடி பகைவருடன் போரிட்டு, உடலெங்கும் விழுப்புண்கள் தாங்கி அந்த உடலும் வீழ்ந்து கிடக்கவில்லை. எதிர்மாறாக ஆற்று நீரினால் அலைக்கழிக்கப்பட்டுக் கரையிலே ஒதுங்கிக் கிடந்த அந்த உடலில் உயிர் வெளியேறத் துடித்துக் கொண்டிருந்தது.

தனது தந்தை கிடந்த கோலத்தைக் கண்டதும் விக்கிரமாதித்தன் அலறித் துடித்துவிட்டான். விரைந்தோடிச் சென்று ஆகவமல்லனைத் தழுவியெடுத்துத் தனது மடியில் கிடத்திய வண்ணம் “அப்பா! அப்பா!” என அவன் கதறலானான். தாயைப் பிரிந்த கன்றினைப் போல அலறித் துடித்தான். அவன் படும் துன்பத்தைக் கண்ட புட்பகப்பிடி தீனக்குரலில் மறுபடியும் பிளிறியது.

சிறிது நேரத்திற்குப் பிறகு ஆகவமல்லனின் விழிகள் மெதுவாகத் திறந்தன. தனது அருமைத் திருமகனின் முகத்தை ஒரு தடவை அவன் பார்த்தான். அந்த முகத்தில் மறுகணம் மலர்ச்சி தோன்றியது. விழிகளிலே ஒளி தோன்றியது. உதடுகள் மெதுவாக அசைந்தன.

விழிகளிலே நீர் பெருக “அப்பா! அப்பா! உங்களுக்கு இந்த கதியா நேர வேண்டும்” என அரற்றினான் விக்கிரமாதித்தன்.

தன் மைந்தன் படும் துயரைக் கண்ட ஆகவமல்லனது கரங்கள் விக்கிரமனை மெதுவாக வருடின.

“மகனே! வந்துவிட்டாயா! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நீ எப்படியும் வந்துவிடுவாய் என்பது எனக்குத் தெரியும்” என்றான். ஆகவமல்லனின் குரலில் பெருமிதம் வெளிப்பட்டது.

“ஐயோ! அப்பா! உங்களுக்கு இத்தகைய துன்பம் வருமென்று அறிந்திருந்தால் நான் உங்களைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டேன்” எனக் கதறினான் விக்கிரமன்.

“குழந்தாய்! வீணாக ஏன் வருந்துகிறாய்? இப்போதுதான் நீ வந்து சேர்ந்துவிட்டாயே. இனிமேல் எனக்கென்ன குறை வரப் போகிறது.

குழந்தாய்! இதைக் கேள். ஆற்றுவெள்ளத்தில் மூழ்கும் முன்பாக நான் உன்னைத்தான் நினைத்துக் கொண்டேன். எனது வீரத்திருமகனை எங்கே சந்திக்க முடியாமல் இறந்துவிடப் போகிறேனோ என எண்ணி வருந்தினேன். என்றாலும் எனதுள்ளத்தின் அடித்தளத்தில் எப்படியும் நீ வந்துவிடுவாய் என்ற நம்பிக்கை இருந்து வந்தது. நான் எண்ணியதைப் போல நீ வந்து சேர்ந்துவிட்டாய்..'' இதைக் கூறி முடிப்பதற்குள் ஆகவமல்லனுக்கு மேல் மூச்சு வாங்கிற்று.

அளவற்ற துக்க வெள்ளத்தில் மூழ்கியிருந்த விக்கிரமாதித்தனுக்கு "அப்பா! அப்பா!'' என அரற்றுவதைத் தவிர வேறொன்றும் கூற முடியவில்லை.

அப்போது ஆகவமல்லன் விந்தையான செயலொன்றைப் புரிந்தான். மெதுவாகத் தனது இடுப்பைச் சுற்றியிருந்த துணியை அவிழ்த்தான்; காலைக் கதிரவனின் பொன்னொளியில் பளபளவென மின்னிக் கொண்டிருந்த இரத்தின ஆரத்தை வெளியில் எடுத்தான்.

"மகனே! கேள். ஆற்று வெள்ளத்தில் இறங்கிய போது உன் நினைவு வந்தது என்று கூறினேன் அல்லவா? அதைத் தொடர்ந்து இரத்தின ஆரத்தைக் கழற்றித் துணியில் சுற்றி எனது அரையில் பிணைத்துக் கொண்டேன். எதற்காகத் தெரியுமா? உனக்காகத்தான் மகனே! இந்த ஆரமும், இந்த உடைவாளும் பழமை வாய்ந்தவை. காம்போஜம் முதல் சீனம் வரை கட்டியாண்ட கன்னோசி மன்னன் ஹர்ஷவர்த்தனனைத் தோற்கடித்து விந்தியத்திற்குத் தெற்கே வரவிடாது விரட்டிய வீரபுலிகேசி மன்னர் அணிந்திருந்த ஆரமும் உடைவாளும் உன் முன்னிருக்கின்றன. நமது முன்னோர்கள் பெருமையுடன் இவற்றை அணிந்து இந்த நாட்டை ஆண்டு வந்தார்கள். மகனே! இத்தகைய குந்தள நாட்டின் பெருமைக்குரிய சின்னங்களை எனக்குப் பின் தரித்து இந்த நாட்டை ஆளத் தகுதி வாய்ந்தவன் நீதான். இவற்றை எப்படியாகிலும் உனது கையில் சேர்த்துவிட வேண்டும் என்று நான் விரும்பினேன். எனது எண்ணம் நிறைவேறியது. மகனே! சற்று அருகில் வா! இந்தப் புராதன ஆரத்தை உனக்குச் சூட்டி மகிழ்கிறேன்'' என்றான். இருவரது விழிகளிலும் நீர் ஆறாகப் பெருகியோடியது.

“அப்பா! நீங்கள் இருக்கும் போது இதற்கென்ன அவசரம்! புலி இருந்த இடத்தில் பூனையை அமர்த்த விரும்புகிறீர்களே!” என அழுத வண்ணம் விக்கிரமன் பேசினான்.

“மகனே! நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதில் பயனில்லை. எனது வாழ்நாள் அருகிக் கொண்டிருக்கின்றது. அதற்குள் இந்த நாட்டின் மன்னனாக உனக்கு முடிசூட்ட விரும்புகிறேன். மன்பதை காக்கும் மன்னர் குடிப் பிறந்தவர்கள் இன்ப துன்பங்களுக்கு ஆட்பட்டவர்களாக இருக்கக் கூடாது. விக்கிரமா! என் அருகில் வா! பீடும் பெருமையும் மிக்க இந்தக் குந்தள நாட்டை ஆண்டு வரும் பொறுப்பை இன்று முதல் உன்னிடம் ஒப்படைக்கிறேன்” என்று ஆகவமல்லன் கூறி விக்கிரமனின் கழுத்தில் அந்த ஆரத்தைச் சூட்டினான். பின்னர் பழமை பொருந்திய தனது உடைவாளை எடுத்தான். பொன்னாலும் மணியாலும் அழகுறுத்தப்பட்டிருந்த அந்த வாள், ஆதவனின் பொன்னொளியில் பளபளவென மின்னியது. அதை ஒருமுறை பார்த்துவிட்டு ஆகவமல்லன் பேசத் தொடங்கினான்:

“விக்கிரமா! நமது குல முன்னோர்கள் களம் பல வென்றது இந்த வாளினால்தான். புலிகேசி மன்னர் தனது கரத்தில் பிடித்திருந்த இந்த வாளைக் கண்டு நரசிம்மப் பல்லவனும், ஹர்ஷவர்த்தனனும் அஞ்சி ஒடுங்கி இருக்கிறார்கள். அத்தகைய இந்த வீரவாளை உறையிலிடாது இருபதாண்டு காலமாகச் சோழர்களுடன் பொருது வந்திருக்கின்றேன். இந்த ஆரத்தையும் வீரவாளையும் என்னிடமிருந்து பறித்துக் கொள்ளச் சோழர்கள் செய்த முயற்சி கொஞ்ச நஞ்சமல்ல. அவற்றையெல்லாம் நீ அறிவாய். எனவே விக்கிரமா, இந்த நாட்டின் அரசுரிமையை, குந்தள நாட்டின் தன்மானத்தை இந்த வாளினால் காத்துக் கொள்” என்று கூறித் தனது கரத்திலிருந்த வாளை விக்கிரமாதித்தனது கரத்தில் கொடுத்தான்.

விழிகளில் நீர் ஆறாகப் பெருகியோடக் கரங்கள் நடுங்க விக்கிரமாதித்தன் அந்த வாளைப் பெற்றுக் கொண்டு வணங்கினான். இந்த உருக்கமான காட்சியைக் கண்ட வண்ணம் அருகில் நின்ற புட்பகப்பிடி ஒருமுறை பிளிறியது. இந்த முடிசூட்டு விழாவிலே துந்துபி ஊதுவது போல அந்தக் குரல் எதிரொலித்தது.

“குந்தள நாட்டின் மன்னவா! உனது முதற்பணி என்னவென்று தெரியுமா?” என ஆகவமல்லன் கேட்டான். தந்தையிடமிருந்து திடுமெனப் புறப்பட்ட இந்தக் கேள்வியைக் கண்டதும் விக்கிரமாதித்தன் ஒருகணம் வியப்படைந்தான்.

“அப்பா! இதென்ன கேள்வி! அது என் கடமை ஆயிற்றே. தாயகத்தின் மண்ணிலிருந்து பகைவரை விரட்டி, வராகக் கொடியை மீண்டும் கம்பீரமாகப் பறக்கவிடுவேன். இதுவே எனது தலையாய பணி” என்றான்.

“பொறு! விக்கிரமா! பொறு! நான் கூற வந்தது வேறு. நீ இப்போது கூறியதும் உனது கடமைகளில் ஒன்றேயாகும். அதை நான் சொல்லாமலேயே நீ செய்வாய் என்பதை நானறிவேன். இதைவிட முக்கியமான பணியொன்றை நீ செய்ய வேண்டும்” என்று கூறி ஆகவமல்லன் நிறுத்தினான். இவ்வளவு நேரம் இடைவிடாது பேசிக் கொண்டிருந்த காரணத்தினால் அவனுக்கு மேல்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. தனது இறுதி மூச்சு ஓய்ந்துவிடுவதற்கு முன் தான் கூற வேண்டியதைக் கூறிவிட அவன் முயன்றான். வியப்புப் பொங்கும் விழிகளுடன் தந்தை யாது கூறப் போகிறார் என்பதைக் கேட்க விக்கிரமன் துடித்துக் கொண்டிருந்தான். இளம் வெயிலில் ஆகவமல்லனின் முகம் தனி ஒளி பெற்று மின்னியது. ஏதோ ஒரு மாபெரும் இரகசியத்தைக் கூறப் போகிறவனைப் போல அவன் காட்சியளித்தான். மூடியிருந்த தனது விழிகளைத் திறந்து தனது அரும் பெறல் மைந்தனை ஒருமுறை உற்று நோக்கினான். வீரவொளி வீசும் தோற்றத்துடன் தன் எதிரில் அமர்ந்திருக்கும் விக்கிரமனைக் கண்டவுடன் அவனுக்குப் புதியதொரு தெம்பு பிறந்தது. மெதுவாகப் பேசத் தொடங்கினான்.

“விக்கிரமா! தாயகத்தின் மானத்தைக் காப்பேன் என்று கூறினாய் அல்லவா? அந்த மானம் குந்தள நாட்டின் தன்மானம் எங்கிருக்கிறது என்று கருதுகிறாய்” என்றான் ஆகவமல்லன்.

தந்தையிடமிருந்து பிறந்த இந்த வினாவைக் கேட்டதும் தனயன் திகைத்துப் போனான். என்ன கூறுவது என்றே அவனுக்குத் தெரியவில்லை. விக்கிரமனின் விழிகளில் தேங்கி நிற்கும் திகைப்பைக் கண்டதும் ஆகவமல்லன் மறுபடியும் பேசத் தொடங்கினான்.

“விக்கிரமா! உன் திகைப்பு எனக்குப் புரிகிறது. இத்தனை நாட்களாக யாரிடமும் நான் வெளியிடாது எனதுள்ளத்தில் அடக்கி வைத்திருந்த இரகசியத்தை இப்போது உன்னிடம் வெளியிடப் போகிறேன். கவனமாகக் கேள்..” என்று முன்னுரையுடன் ஆகவமல்லன் பேசத் தொடங்கினான்.

“விக்கிரமா! குந்தள நாட்டின் தன்மானம் சோழ வளநாட்டில் வளருகிறது. பகைவர் நாட்டில் நமது குலக்கொடி வளர்கிறது. அதை முதலில் மீட்டுவரும் பணியை நீ செய்ய வேண்டும். நானே அந்த உண்மையை வெகு நாட்களுக்குப் பிறகுதான் தற்செயலாக அறிந்து கொண்டேன். இன்று துரோகியாக மாறி இருக்கின்றானே கங்காகேத்தன்.. நமது ஒற்றர்படைத் தலைவன்! அந்த நயவஞ்சகன் இதை நெடுநாட்களாக என்னிடம் சொல்லாது மறைத்திருந்தான். அது போகட்டும் மகனே! எனது இறுதி மூச்சு நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. சற்று அருகில் வா! காதோடு காதாகக் கூற வேண்டிய இரகசியம் இது. இதோ உலவுகிறதே இந்தக் காற்றிற்கும் அது கேட்கக் கூடாது. வேறு யாருக்கும் தெரிந்தால் குந்தள அரச குலத்தின் மானமழிந்துவிடும்” என்று கூறி விக்கிரமன் காதில் ஏதோ முனகினான். ஆகவமல்லன் கூறிய இரகசியத்தைக் கேட்டு விக்கிரமனின் விழிகள் வியப்பால் விரிந்தன. அவனது இதயம் ஒருகணம் செயலற்றுப் போனது.

“விக்கிரமா! நான் கூறியதைக் கேட்டாய் அல்லவா! இதை முதலில் செய். அதுவே உனது தலையாய கடமை. மறந்துவிடாதே” என்றான் ஆகவமல்லன்.

“அப்படியே ஆகட்டும் அப்பா! உங்கள் எண்ணத்தை நிறைவேற்றுவேன். குந்தள நாட்டின் தன்மானத்தைக் காப்பேன்” என்றான் விக்கிரமாதித்தன். அவன் விழிகளில் நீர் பெருகியோடி ஆகவமல்லனின் முகத்தில் வீழ்ந்து தெறித்தது.

சற்று நேரத்திற்கெல்லாம் அந்த மாமன்னனின் விழிகள் ஒருமுறை இறுதி முறையாகத் தன் மைந்தனின் முகத்தைப் பரிவுடன் நோக்கிவிட்டு நிரந்தரமாக மூடிக் கொண்டன. இறந்து போன தனது தந்தையின் சடலத்தின் மீது விழுந்து கோவெனக் கதறினான் விக்கிரமாதித்தன்.

அதுவரை அமைதியுடன் அருகில் நின்று கொண்டிருந்த ஆகவமல்லனின் பட்டத்து யானையான புட்பகப்பிடி, சற்று நெருங்கி

வந்து தனது தலைவனின் உடலை ஒருமுறை தனது துதிக்கையால் தடவியது. அந்த உடலில் உயிர் இல்லை என்பதை அது உணர்ந்து கொண்டது. மெதுவாக நடந்து சிறிது தொலைவிற்கு அப்பால் சென்று ஒருமுறை தீனக்குரலில் பிளிறியது. மறுகணம் தொப்பெனக் கீழே சாய்ந்தது.

# 40. கண்டிகை பூட்டிய காவலன்

தெற்கு நோக்கி நீண்டு வளைந்து சென்ற அந்தச் சாலையில் குதிரை வீரன் ஒருவன் போய்க் கொண்டிருந்தான். பலமாக வீசிக் கொண்டிருந்த காற்றில் அந்த இளைஞனின் தலைமயிர் கலைந்து அவனது அழகிய முகத்தில் புரண்டு கொண்டிருந்தது. அதைக்கூட அவன் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு பயணம் செய்து கொண்டிருந்தான்.

அந்தப் பகுதியில் சோழர் படை பாடிவீடு அமைத்துத் தங்கியிருந்ததன் காரணமாக அச்சாலையில் குதிரைகளும் தேர்களும் அடிக்கடி ஊர்ந்து கொண்டிருந்தன. அவ்விதம் யாரேனும் எதிர்ப்படும் போதெல்லாம் அக்குதிரை வீரன் விசித்திரமான செயலொன்றைப் புரிந்து வந்தான். சாலையினின்றும் உடனே விலகி அருகிலிருந்த அடர்த்தியான மரங்களுக்குப் பின் மறைந்து கொள்வான். இங்ஙனம் அடிக்கடி மறைந்து மறைந்து தனது பயணத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தான்.

மாலைக் கதிரோன் மேலை வாயிலில் விழுந்து கொண்டிருந்தான். அப்போது அந்தச் சாலையில் பெரும் ஆரவார ஒலி எழுந்தது. அந்த இளைஞன் திடுக்கிட்டு உற்று நோக்கினான். எதிர்த் திசையில் பெரும் ஆரவார முழக்கங்களுடன் கூட்டம் ஒன்று வந்து கொண்டிருந்தது. உடனே அவன் சாலையிலிருந்து விலகிப் பக்கத்தில் உள்ள புதர்க்காட்டில் மறைந்தான்.

ஆரவார முழக்கங்களுடன் சோழ வீரர்கள் சிலர் வந்து கொண்டிருந்தார்கள். வந்தவர்கள் சும்மா வரவில்லை. தேரைக் கட்டி இழுப்பதைப் போல எதையோ இழுத்துக் கொண்டு வந்தார்கள். அவ்வளவு உற்சாகத்துடன் அவர்கள் எதை இழுத்து வருகிறார்கள்? புதருக்குப் பின்னல் மறைந்த வண்ணம் அந்த இளைஞன் மெதுவாக எட்டிப் பார்த்தான்.

சோழ வீரர்கள் இதற்குள் வெகு அருகில் வந்துவிட்டார்கள். மரத்தினால் செய்த ஒரு பெரும் உருவத்தை அவர்கள் இழுத்து வந்தார்கள். ஆ! எவ்வளவு பெரிய உருவம். கழுத்திலே மகரகண்டிகை பூட்டிய அந்த உருவத்தின் மார்பில் பெரும் பலகையொன்று கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. அந்தப் பலகையில் பின்கண்ட வாசகம் எழுதப்பட்டிருந்தது.

**“சுந்தர கண்டிகை பூட்டிய
குந்தளத்தரசனும் மக்களும்
ஐம்மடியஞ்சித் தன்
புரசையானைப் புழைக்கையிற்
பிழைத்து
இவ்வுலகமெல்லாம்
அலறி ஓடிய பரிசொரு
பலகையில் பழுதற எழுதியது.”**

புதரில் மறைந்தபடியே இதைப் படித்த அவ்விளைஞனின் விழிகளில் தீப்பொறி பறந்தது. சினத்துடன் அந்த உருவத்தை உற்று நோக்கினான். ஆம்! ஆகவமல்லனைப் போல அந்த உருவத்தை அமைத்திருந்தார்கள். அதற்குமேல் அவனால் பொறுக்க முடியவில்லை. வாளையுருவிய வண்ணம் முன்னால் ஓரடி வைத்தான். மறுகணம் தான் யார் என்பதும் என்ன காரியத்திற்காகச் செல்கிறோம் என்பதும் அவனது நினைவிற்கு வந்தன. கையும் தளர்ந்தது. உள்ளமும் தளர்ந்தது.

சோழ வீரர்கள் கடந்து சென்ற பிறகு குதிரை மீதேறி அதை விரைந்து செலுத்தலானான். நொந்து போயிருந்த அவனது உள்ளத்தில் வேதனை அலைகள் எழுந்தன.

# 41. பின்தொடரும் பாதகர்கள்

‘அருகில் உள்ள காட்டில் மரங்களை வெட்டி ஆகவமல்லரின் உருவத்தை அமைத்துச் சோழ வீரர்கள் இழுத்து வருகிறார்கள் போலும். கூடல் சங்கமத்தில் உலகம் காண அதை நிறுத்தி வைப்பார்கள். போருக்கஞ்சி ஆகவமல்லர் தோற்றோடி ஒளிந்து கொண்டார் என உலகத்திற்கு அறிவிப்பார்கள். ஆனால் நடைபெற்ற உண்மையை உலகம் அறியுமா? பகைவருக்கு அஞ்சி ஆகவமல்லர் மறையவில்லை. துரோகிகளின் சதிச்செயலுக்கு இரையாகி மறைந்தார் என்பதை உலகம் எப்படி அறியும்? போகட்டும்! போகட்டும்! சோழ வீரர்களின் இறுமாப்பினை என்றாவது ஒரு நாள் அடக்கி உண்மையை வெளிப்படுத்தாமலா இருக்கப் போகிறேன்?’

இவ்வாறு சிந்தனையில் மூழ்கிய வண்ணம் பயணம் செய்த அவன் நீலவானிலே விண்மீன்கள் முளைத்தெழுந்து மின்னிக் கொண்டிருப்பதைக் கூட அறியாது போய்க் கொண்டிருந்தான்.

தற்செயலாக அண்ணாந்து பார்த்த போது நடுநிசியாகியிருந்ததை அவன் உணர்ந்தான். வானிலே கருமேகங்கள் சூழ்ந்து கொண்டிருப்பதையும் குளிர்ந்த காற்று விரைந்தடிப்பதையும் பார்த்த பிறகு குதிரையை விரைந்து செலுத்தினான். சற்றுத் தொலைவில் பாழடைந்த கட்டிடம் ஒன்று தென்பட்டது. அங்குத் தங்கி இரவுப் பொழுதைக் கழித்துவிட்டுச் செல்ல அவன் முடிவு செய்தான். அந்த எண்ணத்தை ஆமோதிப்பது போலக் குதிரையும் தளர்நடை போட்டது. நீண்ட தூரம் இடைவிடாது பயணம் செய்து வந்திருந்த காரணத்தால் அக்குதிரை மிகவும் களைத்திருந்ததைக் கூட அந்த வீரன் பொருட்படுத்தவில்லை. இன்னும் நெடுந்தொலைவு செல்ல வேண்டிய தனது குதிரை சற்று இளைப்பாறட்டும் என எண்ணியவனாய் அந்தப் பாழடைந்த கட்டிடத்தை நெருங்கினான்.

இடிந்தும், தகர்ந்தும் காணப்பட்ட அக்கட்டிடம் கலைந்த கனவொன்றினைப் போல அந்த நள்ளிரவு வேளையில் தோற்றமளித்தது. இருள் சூழ்ந்த அந்தக் கட்டிடத்தினுள்ளே குதிரையுடன் அவன் உள்ளே புகுந்த போது அங்குக் குடியிருந்த வௌவால்கள் வினோதமான குரல்களை எழுப்பிய வண்ணம் அங்கும் இங்கும் பறந்தன. நள்ளிரவின் பயங்கரத்தை அதிகரித்துக் கொண்டிருந்த அந்த இருட்டில் தட்டுத்தடுமாறி அவன் நடந்தான்.

மெதுவாக அடிமேல் அடி வைத்து நடந்து பல கட்டுக்களையும் தாண்டி அக்கட்டிடத்தின் பின்புறத்தை அடைந்தான். பின் பகுதியில் பரந்த திண்ணை இருந்தது. ஒருபுறமாகக் குதிரையை நிறுத்தினான். அருகிருந்த மேடையில் படுத்தான்.

அப்பப்பா! உடலெல்லாம் எவ்வளவு வேதனை? உடலில் மட்டுமா வேதனை? உள்ளத்தின் வேதனை அதைவிட அதிகமாக இருந்தது. அந்த வேதனையின் எதிரொலி போல வானம் திடீரெனக் குமுறியது. மறுகணம் சடசடவென பெருமழை பெய்யத் தொடங்கியது. குதிரை மெதுவாக நகர்ந்து அவனருகே ஒண்டிக் கொண்டது. அதை இருமுறை அன்பாகத் தட்டிக் கொடுத்தான். 'மழை வருவதற்கு முன்பே இங்கு வந்து சேர்ந்தது எவ்வளவு நல்லதாகப் போயிற்று' என எண்ணியவாறே உறக்கத்தில் ஆழ்ந்தான்.

திடீரென ஏதோ பேச்சுக்குரல் கேட்டு அவன் திடுக்கிட்டு விழித்தான். இந்தப் பாழடைந்த கட்டிடத்தில் இந்த அகால வேளையில் யார் பேசுகிறார்கள்? வேறு யாரும் மழைக்காக ஒதுங்கி இருக்கிறார்களா? என எண்ணமிட்ட வண்ணம் எழுந்த அவனை ஏதோ ஒன்று மேலும் திடுக்கிட வைத்தது. பேச்சுக்குரல் பழகிய குரலாக ஒலித்தது. காதுகளை நன்றாகத் தீட்டிய வண்ணம் கூர்ந்து கேட்டான். அவனது முகத்தில் வெறுப்பும் குரோதமும் பிறந்தன.

நள்ளிரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு அந்தக் குரல் பேசியது.

"மழை நின்றுவிட்டது போலத் தோன்றுகிறதே! நாம் புறப்படலாமா? இந்தக் கட்டிடத்தில் தங்குவது அவ்வளவு உசிதமாகத் தெரியவில்லை. பெருமழைக்கு இரையாகி எந்த வேளையிலும் இது நம் தலை மீது விழலாம். சிறிது தொலைவு சென்றால் வழிப்போக்கர் விடுதி ஒன்று உள்ளது. அங்கு போய்த் தங்கலாம். ஒருவேளை அங்கு அவனும் தங்கியிருக்கக் கூடும்."

"அவ்வளவு இலகுவாக அவன் அகப்பட்டுக் கொள்வான் என நான் கருதவில்லை."

மூன்றாவது குரல் பேசியது.

"வீணாகப் பேசிப் பொழுதைக் கழிக்க வேண்டாம். மறுபடியும் மழை பிடித்துக் கொள்ளும் போல இருக்கிறது. சீக்கிரமாகப் புறப்படுவோம்."

சிறிது நேரத்தில் குதிரைகள் புறப்பட்டுச் செல்லும் ஒலி கேட்டது. தன்னைத் தேடித்தான் அவர்கள் போகிறார்கள் என்பதை அந்த வீரன் தெரிந்து கொண்டான்.

# மூன்றாம் பாகம்

## 42. வெளிறிய முகம்

**"நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத் துணவும் காழகத் தாக்கமும்."**

பூம்புகார்ப் பட்டினத்தின் அங்காடித் தெருவிலே குவிந்து கிடந்த சிந்தைக்கினிய காட்சியைப் பட்டினப்பாலை ஓவியமாகத் தீட்டித் தருகிறது.

பண்டைத் தமிழ் நகரங்கள் பலவும் இத்தகைய எழில் மிகு காட்சிகளை அன்று அளித்துக் கொண்டிருந்தன. கங்கைகொண்ட சோழபுரம் மட்டும் இதற்கு விலக்காகிவிடுமா? கங்கை முதல் குமரிவரை விரிந்து பரந்து கிடந்த பேரரசின் தலைநகரல்லவா? இந்நகரின் சிறப்பை நாம் முன்னமே கண்டிருக்கிறோம் என்றாலும் அந்நகரின் செல்வச் சிறப்பை நாம் நேரில் கண்டதில்லை. அதை நேரில் காண வரும்படி நண்பர்களை அழைக்கிறோம்.

வளவர்தம் அழகுத் திருநகருக்கு அணிகலனாக விளங்கிய அங்காடி வீதியில் நாம் நுழைவோம். வட இமயம் முதல் மேல் தென்ரோகணம் வரையிலும், கீழ்க்கடாரம் முதல் மேல் அரபு வரையிலும் கிடைக்கும் பொருட்கள் அனைத்தும் அந்த அங்காடி வீதியிலே விற்கப்பட்டு வந்தன.

அதோ! எவ்வளவு அழகிய குதிரைகள்! பிடரி மயிரைச் சிலிர்த்த வண்ணம் அந்தப் புரவிகள் வரிசையாக நிற்பதைக் காணவே காசு கொடுக்க வேண்டும் போலத் தோன்றுகிறது. ஆம்! அந்த நாளில் தமிழகத்தில் குதிரை வாணிபம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மேற்கே அரபுநாடுகளில் இருந்து கலங்களில் குதிரைகளை ஏற்றிக் கொணர்ந்து தமிழகத்திலே விற்று வந்தார்கள். இந்த வாணிபம் பெருத்த அளவில் கங்கைகொண்ட சோழபுரத்திலும் நடைபெற்று வந்தது.

வெண்புரவிகளின் அழகைக் கண்டு வியந்த வண்ணம் நடக்கும் நமது மூக்கினை ஏதோ நறுமணம் துளைக்கிறது. திரும்பிப் பார்க்கிறோம். குடமலை நாட்டிலிருந்து வந்த அகிலும் சந்தனமும் பிற வண்ணப் பொருட்களும் குவிக்கப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். பிரிய மனமில்லாமல் பிரிந்து செல்கிறோம்.

இதோ! இங்குக் கண்ணைப் பறிக்கும் வண்ணம் ஒளி வீசிக் காண்போரின் கருத்தை ஈர்த்தன சில பொருட்கள். குறிப்பாக அங்குப் பைந்தொடிப் பாவையரின் கூட்டம் மிகுந்திருந்தது. அழகுப் பெட்டகங்களாக விளங்கும் அவர்களின் மத்தியில் புகுந்து செல்ல நமது உள்ளம் நாணுகிறது. தென்பாண்டி நாட்டிலிருந்து வந்த முத்துக்களும் வடமலையிலிருந்து கொண்டு வரப்பட்டிருந்த மணியும், பொன்னும், இவைகளைக் கொண்டு அழகுற அமைக்கப்பட்டிருந்த அணிகளும் காண்போரைக் கவர்ந்திழுத்துக் கொண்டிருந்தன. ‘புவியில் எத்தனை வகை செல்வங்கள் உண்டோ அத்தனையும் உண்டு தமிழ் நாட்டில்’ என்று அறை கூவுவதைப் போலப் பல்வேறு வகைப் பொருட்களும் அங்கு விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன.

செல்வங் கொழிக்கும் அந்த அங்காடி வீதியில் போவோரும் வருவோரும் மிகுந்திருந்தார்கள். தேர்களில் செல்லுவோரும், குதிரைகள் மீதேறி விரைந்து செல்வோரும், பொருட்களை விலை கூறி விற்போரும், வாங்குவோருமாகச் சேர்ந்து அங்கு ஒரு கலகலப்பை ஏற்படுத்தி இருந்தார்கள்.

இவற்றையெல்லாம் கண்டு களித்தவாறு இளைஞன் ஒருவன் குதிரையின் தலைக் கயிற்றைக் கையில் பிடித்த வண்ணம் சென்று கொண்டிருந்தான். களை பொருந்திய முகமும், கவர்ச்சிகரமான தோற்றமும் படைத்த அவன் பலரின் கவனத்தையும் ஈர்த்துக் கொண்டிருந்தான். தான் இங்ஙனம் பலரின் கவனத்திற்கும் ஆளாகிக் கொண்டிருப்பதை அந்த வீர இளைஞன் அறியவில்லை. செல்வங் கொழிக்கும் அந்தத் திருநகரின் தோற்றம் அவனைப் பிரமிக்க வைத்திருந்தது. ஆங்காங்கே நடப்பனவற்றையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டே தன்னை மறந்தவனாக அவன் சென்று கொண்டிருந்தான். அந்நிலையில் தன்னைப் பின் தொடர்ந்து மூவர் வந்து கொண்டிருப்பதை அவன் உணரவில்லை.

அந்த இளைஞன் தங்களை அறிந்து கொள்ள முடியாதபடி அம்மூவரும் அவனைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தனர்.

தற்செயலாக அந்த இளைஞன் திரும்பிப் பார்த்த போதெல்லாம் அவர்கள் கூட்டத்தில் புகுந்து மறைந்து கொண்டார்கள். அல்லது ஏதாவது ஒரு பொருளை வாங்குவது போல நடித்துக் கொண்டிருந்தார்கள். அந்த இளைஞனே அவர்கள் தங்களது பார்வையிலிருந்து தப்பவிடாது பின்தொடர்ந்து கொண்டிருந்தார்கள். அவன் நின்றவிடமெல்லாம் அவர்களும் நின்றார்கள். அவன் சென்றவிடமெல்லாம் அவர்களும் பின்தொடர்ந்து சென்றார்கள். இந்த நாடகத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைப்பது போல ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது.

திடீரென அந்த அங்காடி வீதியில் குதிரைகள் சில விரைந்து வந்தன. புலிக்கொடி தாங்கி முன்னால் வந்த வீரர்கள் உரத்த குரலில் பின்வருமாறு முழங்கிய வண்ணம் வந்தார்கள்.

“வீரமும் தியாகமும் ஆரமெனப் புனைந்த கோப்பரகேசரி வர்மரான அதிராசேந்திர தேவர் வருகிறார்..! வழிவிடுங்கள்! வழிவிடுங்கள்!”

“கடாரம் கைக்கொண்ட கோமகன் வேங்கி நாட்டு இளவரசர் விஷ்ணுவர்த்தனர் வருகிறார்..! வழிவிடுங்கள்! வழிவிடுங்கள்!”

இடி முழக்கம் போன்ற இந்தக் குரலைத் தொடர்ந்து குதிரைகள் பல விரைந்து வந்தன. அவற்றின் நடுநாயகமாக வந்த இரு புரவிகள் மீது அமர்ந்து பெருமிதத்துடன் இளவரசர்கள் இருவரும் வந்தனர். இளவரசர்களைக் கண்டதும் அந்த அங்காடி வீதியில் கூடியிருந்த மக்களிடையே பெருமகிழ்ச்சி பொங்கியெழுந்து பேரார்வமாக உருவெடுத்தது. “வாழ்க! வாழ்க!” என்ற வாழ்த்தொலி வானைப் பிளக்கும் வண்ணம் எழுந்தது. ஆங்காங்கே மலர்களையும் சிலர் இளவரசர்கள் மீது தூவி வாழ்த்தினார்கள். இங்ஙனம் உற்சாக வெள்ளம் புரண்டு கொண்டிருந்த நேரத்திலே வழிப்போக்கனான அந்த இளைஞனின் முகத்தைப் பார்ப்பவர்கள் திடுக்கிட்டுப் போவார்கள். அவ்வளவு பயங்கரமாக அந்த முகம் வெளிறிப் போயிருந்தது. அவசரம் அவசரமாக அவன் தனது குதிரையைக் கூட்டத்திடைச் செலுத்திக் கொண்டு அருகில் காணப்பட்ட சந்தில் புகுந்து மறைந்தான். உற்சாக வெள்ளத்தில் மூழ்கியிருந்த மக்கள் அவன் அவ்விதம் சென்றதைப் பொருட்படுத்தவில்லை. அவனைப் பின் தொடர்ந்து வந்த மூவரும் திடீரென மறைந்த அந்த இளைஞனைக் காணாது திகைத்தனர்.

இளவரசன் அதிராசேந்திரனோ இவற்றையெல்லாம் கவனியாது சென்று கொண்டிருந்தான். வேங்கி இளவலின் விழிகளுக்கு இவையெல்லாம் தப்பவில்லை. யார் அந்தப் புதியவன்? தங்களைக் கண்டதும் ஏன் அவனின் முகம் வெளிற வேண்டும்? எதற்காக அவன் அவ்வளவு விரைவாக அங்கிருந்து மறைந்து செல்ல வேண்டும்? அந்த வீரனின் முகத்தோற்றம் அவன் இந்நாட்டைச் சேர்ந்தவனில்லை என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டிற்று. 'இருக்கட்டும். இதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று எண்ணமிட்டவனாய் விஷ்ணுவர்த்தனன் அவ்விடத்தைவிட்டகன்றான்.

# 43. கோதைமார்பன்

நாலாபுறமும் இருள் சூழ்ந்து வந்து கொண்டிருந்தது. சற்று முன் வரை கோலாகலத்தின் பிறப்பிடமாக விளங்கிய அம்மாநகரத்தின் வீதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. அந்த நகரின் வீதிகளிலே நள்ளிரவு வேளையிலே ஒருவன் அலைந்து கொண்டிருந்தான். தனது கையில் குதிரையின் தலைக்கயிற்றைப் பிடித்த வண்ணம் அவன் சென்று கொண்டிருந்தான். கட்டிடங்களின் இருண்ட நிழல் சாலையில் படிந்திருந்த காரணத்தால் அவனது முகம் நமக்குத் தெளிவாகப் புலப்படவில்லை.

இதோ சாலை விளக்கொளி அவனது முகத்தில் படிகிறது. அந்த மங்கிய ஒளியில் அவனது முகம் தெளிவாகத் தெரிகிறது. ஆம்; அங்காடி வீதியில் நாம் சந்தித்த அதே இளைஞன்தான்.

எங்கு செல்வது? என்ன செய்வது? என்பவைகளை அறியாதவன் போல அவன் அந்த நகரில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். மற்றும் மூவர் அவனைத் தேடி அந்த நகரில் சுற்றியலைந்து கொண்டிருந்தார்கள். தன்னைச் சூழ்ந்து வரும் பேராபத்தைச் சற்றும் அறியாதவனாக அந்த இளைஞன் சென்று கொண்டிருந்த போது அவனுக்கு எதிர்த்திசையில் இரண்டு வெண் புரவிகள் வந்து கொண்டிருந்தன. அவற்றின் மீது முண்டாசு கட்டிய இரண்டு வீரர்கள் கையில் வேலுடன் காட்சி தந்தனர்.

தனது எதிரில் வருபவர்களைக் கண்டு ஒருகணம் திடுக்கிட்ட அந்த இளைஞன் மறுகணம் சமாளித்துக் கொண்டவனாய்த் தொடர்ந்து நடக்கத் தொடங்கினான். நகர் சோதனைக்கு வரும் காவலர்களாக இருக்கக்கூடும். எனவே அவர்களின் ஐயத்திற்கு இடம் கொடுக்காத வகையில் நாம் மிடுக்குடன் நடந்து செல்ல வேண்டும் என அவன் முடிவு கட்டியவனாக விரைந்து நடை போட்டான்.

எதிரில் வந்த குதிரைகள் நெருங்கி வந்தன. இதோ! ஒரு சில கணங்களில் தன்னைத் தாண்டிவிடும்! என அவன் எண்ணிக் கொண்டிருக்கையில் அந்தக் குதிரைகள் திடீரென நிறுத்தப்பட்டன. அந்த இளைஞன் திகைப்படைந்தான். மறுகணம் குதிரை வீரர்களில் ஒருவன் பேசினான்.

"ஐயா! நீர் யார்? இந்த நள்ளிரவில் எங்கு செல்கிறீர்?" என்றான்.

தனது குரலைத் திடப்படுத்திக் கொண்டு அந்த இளைஞன் பேசத் தொடங்கினான்.

“ஐயா! நான் வெளியூரான். இரவில் தங்க இடம் தேடி அலைகிறேன்.”

“ஓகோ! அப்படியா! உம்மைப் பார்த்தாலே நீர் இந்தப் பக்கத்திற்குப் புதியவர் என்று தெரிகிறது. ஐயோ! பாவம். வெகுநேரமாக இடம் தேடி அலைகிறீர் போலிருக்கிறது. சரி. எங்களோடு வாரும். தங்கும் விடுதியைக் காட்டிவிட்டுச் செல்கிறோம்” என்றான்.

இந்த இளைஞன் ஒருகணம் தாமதித்தான். நீண்ட பயணத்தால் ஏற்பட்ட களைப்பு, அவனை அந்த அழைப்பை ஏற்றுக் கொள்ளும்படித் தூண்டியது. மறுகணம் “மிக்க நன்றி ஐயா! தங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்” என்று கூறிய வண்ணம் அந்த இளைஞன் தனது குதிரை மீது தாவியேறினான். மூன்று குதிரைகளும் அவ்விடத்தைவிட்டு நகர்ந்தன. போகும் வழியில் அந்தப் புதியவனை நோக்கி முன்னவன், “ஐயா! நீர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? உமது பெயர் யாது? என்ன காரியமாக இங்கு வந்தீர்?” என்றான்.

தயங்கித் தயங்கி அந்த இளைஞன் இந்தக் கேள்விகளுக்குப் பதில் கூறத் தொடங்கினான். “ஐயா! என்னைக் கோதைமார்பன் என அழைப்பார்கள். நான் வேங்கி நாட்டைச் சேர்ந்தவன். இங்குக் கவிச்சக்கரவத்தி சயங்கொண்டாரிடம் தமிழ் பயில வந்தேன்.”

“ஓகோ! ஓகோ!” என ஒரே காலத்தில் இரண்டு வியப்புக் குரல்கள் எழுந்தன.

“சயங்கொண்டாரிடம் தமிழ் பயில வந்தேன் என்கிறீர். ஆனால் இந்த நள்ளிரவில் கங்கைகொண்ட சோழபுரத்தில் சுற்றிக் கொண்டிருக்கிறீரே” என்றான் முன்னவன்.

“ஒன்றுமில்லை. இந்நகரத்தை நான் இதுவரை பார்த்ததே இல்லை. எனவே சுற்றிப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். போர்க்காலமாதலால் கோட்டைத் கதவுகளை மாலையிலேயே சாத்திவிட்டார்கள். எனவே இங்குத் தங்க இடமில்லாமல் சுற்றிக் கொண்டிருந்தேன்” என்றான்.

இதற்குள் அவர்கள் செல்ல வேண்டிய இடத்தை அடைந்துவிட்டார்கள். விடுதியொன்றின் முன் அவர்கள் வந்து நின்றனர்.

“கோதைமார்பரே! நீர் தங்க வேண்டிய இடம் இதுதான். இங்கு இரவு தங்கிச் செல்லலாம்” என்றான் அந்த முன்னவன்.

“ஐயா, தங்கள் உதவிக்கு மிக நன்றி. முன்பின் தெரியாத இந்த ஊரில் எனக்கு இவ்வளவு உதவி செய்த உங்களை நான் யாரென்று அறிந்து கொள்ளலாமா?” என்றான் கோதைமார்பன்.

இவ்வளவு நேரம் ஒன்றும் பேசாமல் வந்து கொண்டிருந்த மற்றொரு குதிரை வீரன் இதற்குப் பதிலளித்தான்.

“எங்களை யாரென்றா கேட்டீர் கோதைமார்பரே! உம்மைப் போன்றவர்களுக்கு உதவி செய்வதைவிட ஊர்க் காவலர்களாகிய எங்களுக்கு வேறு என்ன வேலை?” என்று மிடுக்குடன் கூறிவிட்டுத் தனது குதிரையைக் கிளப்பினான். மற்றவனும் அவனைப் பின்தொடர்ந்தான். கம்பீரமான தோற்றத்துடன் கூடிய அந்த இருவரும் மறைவதை கோதைமார்பன் பார்த்துக் கொண்டிருந்தான்.

# 44. தலைவன் வரக்காணேன்!

இரவு வேளையில் அரண்மனையைச் சேர்ந்த பூஞ்சோலையில் மாங்குயில் ஒன்று கூவிக் கொண்டிருந்தது. ஆம். குயிலினுமினிய குரலொன்று தீந்தமிழ்ப் பண் இசைத்துக் கொண்டிருந்தது.

சோலையின் நடுவே அமைந்திருந்த பளிங்கு மேடையில் அம்மங்கை தேவியும், அருள்மொழிநங்கையும் அமர்ந்திருந்தனர். அவர்கள் அருகே இளவரசி மதுராந்தகி, வீரமாதேவி, புவனமாதேவி ஆகியவர்கள் அமர்ந்திருந்தனர். புவனமாதேவி தனது செம்பவள வாயைத் திறந்து தேனினுமினிய தீங்குரலில் பாடிக் கொண்டிருந்தாள்:

**"தஞ்சமோ தோழீ! தலைவன் வரக்காணேன்**
**வஞ்சமோ உண்டு; மயங்கும் என் நெஞ்சு— அன்றே**
**வஞ்சமோ உண்டு; மயங்கம்என் நெஞ்சு ஆயின்**
**எஞ்சலார் சொன்னது எவன் வாழியோ தோழீ!"**

பிரிவாற்றாமையால் துடிக்கும் தலைவி, தலைவனது வரவை எதிர்நோக்கி, வருந்துவதைச் சித்திரிக்கும் இந்தப் பாடலை உருக்கமுடன் புவனமாதேவி பாடியதைக் கேட்ட அனைவரின் உள்ளங்களும் நெகிழ்ந்தன. மிக்க உணர்ச்சியுடன் புவனமாதேவி இந்தப் பாடலைப் பாடினாள். தலைவனைப் பிரிந்த தலைவியாகவே தன்னைக் கருதிக் கொண்டு உள்ளமுருக அவள் பாடினாள். உண்மையிலேயே அவள் அந்நிலையிலேயே இருந்தாளோ என்னவோ நாமறியோம்.

புவனமாதேவி இந்தப் பாடலைப் பாடிய போது அங்கிருந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையை அடைந்தார்கள். காலஞ்சென்ற தனது கணவனை அம்மங்கைதேவி எண்ணிக் கொண்டாள். அவள் விழிகளில் நீர் தேங்கிற்று. போர்க்களம் நோக்கிப் போயிருக்கும் மன்னரை நினைத்து அருள்மொழிநங்கை உள்ளம் உருகினாள். மதுராந்தகியின் மனநிலையோ அலைகடல் போல நிலையில்லாது தவித்துக் கொண்டிருந்தது. குறும்புக்காரியான வீரமாதேவி கூடச் சிறிது மனம் நெகிழ்ந்து போனாள். பாடியவளின் நிலையை நம்மால் விவரிக்கவே இயலாது.

இங்ஙனம் மனம் நெகிழ்ந்த நிலையில் இருந்த அவர்கள் தங்களைக் காண வீரர்கள் இருவர் வந்து நிற்பதைக் கவனிக்கவில்லை. முண்டாசுகளைக் கட்டிய வண்ணம் நின்று கொண்டிருந்த அந்த வீரர்களும் இசையில் தங்கள் உள்ளங்களைப் பறிகொடுத்தவாறு நின்று கொண்டிருந்தனர்.

திடீரெனத் தன்னினைவு பெற்ற அம்மங்கைதேவி, தனது எதிரில் நின்ற வீரர்களை நோக்கினாள். அவளது விழிகளில் வியப்பு மிளிர்ந்தது.

"யார் நீங்கள்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றாள். நின்று கொண்டிருந்தவர்களில் முதல்வன் பேசினான்: "தேவி, நான் மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் தூதுவன். தங்களிடம் ஒரு செய்தியையறிந்து போக வந்தேன்."

கரகரத்த குரலில் அந்தத் தூதுவன் பேசினான். தனது பாட்டனிடமிருந்து வந்துள்ள செய்தியை அறியப் புவனமாதேவி துடித்தாள்.

"நீங்கள் கொண்டு வந்த செய்தியைக் கூறுங்கள்" என்றாள் அம்மங்கைதேவி.

"சிறப்பான செய்தி ஒன்றுமில்லை தேவி. அவரது அருமைப் பேத்தியைத் தங்களிடம் அடைக்கலமாகவிட்டுச் சென்றார் அல்லவா? அந்த இளவரசியாரின் உடல் நலம் எப்படியிருக்கிறது என்பதை அறிந்துவரச் சொன்னார்" என்றான்.

இதைக் கேட்டதும் அனைவரின் முகத்திலும் புன்னகை தோன்றியது. புவனமாதேவி நாணத்தினால் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். நகைத்த வண்ணம் அம்மங்கைதேவி அந்தத் தூதுவனை நோக்கி "ஐயா! நீரே பார்த்துக் கொள்ளும். கங்க இளவரசி எப்படி இருக்கிறாள் என்பதை நேரில் பார்த்த வண்ணம் போய்த் தமிழ்ப் பேரரையரிடம் கூறும்" என்றாள்.

அந்தத் தூதுவன் பொல்லாத குறும்புக்காரனாக விளங்கினான். புவனமாதேவியை மேலுங்கீழும் ஏற இறங்கப் பார்த்த வண்ணம் "தேவி! இளவரசியார் சற்று இளைத்துத்தான் காணப்படுகிறார்" என்றான்.

புவனமாதேவியின் முகத்தில் செம்மை படர்ந்தது. தனது தோழிக்காக வீரமாதேவி பரிந்து பேசினாள்.

“ஐயா! தூதுவரே, உமக்கொன்றும் ‘மாலைக் கண்’ நோய் இல்லையே. அந்த நோய் வந்தவர்களுக்குத்தான் இருட்டில் உள்ள பொருள் தெளிவாகத் தெரியாது” என்றாள். அவள் இவ்விதம் கூறியதைத் தொடர்ந்து கொல்லென்ற நகைப்பொலி எழுந்தது.

“தேவி! மன்னிக்க வேண்டும். தாங்கள் இங்கிருப்பதையறியாமல் பேசிவிட்டேன்” என்று கூறிவிட்டு அந்தத் தூதுவன் தனது வாயை இறுக்கமாக மூடிக் கொண்டான். அடுத்து நின்ற மற்றொரு தூதுவன் இரண்டடி முன்னாக வந்து வணங்கி அருள்மொழி மகாராணியை நோக்கிப் பேசலானான்.

“தேவி, நான் மன்னவர் பெருமானிடமிருந்து வருகிறேன். அவர் கூறியனுப்பிய செய்தியைக் கூறுவதற்கு முன்னதாக அடியேன் வரும் வழியெல்லாம் எனது செவிகளில் வீழ்ந்த ஒரு சேதியைக் கூற அருள் கூர்ந்து அனுமதி தருதல் வேண்டும்” எனப் பணிவுடன் வேண்டிக் கொண்டான்.

அருள்மொழிநங்கைக்கு ஒன்றும் புரியவில்லை. திகைத்தவாறு அந்தத் தூதுவனுக்குப் பேச அனுமதி கொடுத்தாள்.

“ஒன்றுமில்லை தேவி! நாடு நகரமெல்லாம் இதே பேச்சாக இருக்கிறது. நமது இளைய இளவரசிக்கு ஏன் இன்னும் திருமணம் ஆகவில்லை. அங்க, வங்க, கலிங்க, காம்போஜ முதலிய ஐம்பத்தாறு நாட்டு அரசிளங்குமரர்களும் கையில் மணமாலையுடன் காத்துக் கிடக்கிறார்களாமே. அவர்களையெல்லாம் நமது இளவரசி வேண்டாமென்று தள்ளிவிட்டாராமே. அதற்குக் காரணமென்னவென்று கேட்கிறார்கள்” என்றான். அவன் குரலில் குறும்பு மிளிர்ந்தது.

வீரமாதேவிக்கு அடங்காத சினம் பிறந்தது. தூதுவர்களாயிற்றே போகட்டும் என்று பார்த்தால் அளவுக்கு மீறிப் பேசுகிறார்களே! என எண்ணியவளாய் ஏதோ பேச வாயெடுத்தாள்.

அதுவரை வந்திருந்த தூதுவர்களை அமைதியாக உற்றுநோக்கிக் கொண்டிருந்த மதுராந்தகி, தனது அத்தையின் காதில் ஏதோ கூறினாள். அம்மங்கைதேவியின் கண்கள் வியப்பினால் விரிந்தன. மறுகணம் விரைந்து எழுந்து சென்று அந்தத் தூதுவர்களின் முண்டாசுகளைக் கீழே தட்டிவிட்டாள்.

கலகலவென நகைத்த வண்ணம் எதிரில் இளவரசன் அதிராசேந்திரனும், இளவரசன் விஷ்ணுவர்த்தனனும் நின்றார்கள். அனைவரும் திகைத்துப் போனார்கள். புவனமாதேவியை வியப்பு ஒரு பக்கமும் வெட்கம் ஒரு பக்கமும் பிடுங்கித் தின்றன.

“அண்ணா! இதென்ன வேடம்!” என வியப்புக் கலந்த குரலில் வீரமாதேவி கூவினாள்.

“அன்புத் தங்காய்! நகர் சோதனைக்காக நாங்கள் பூண்டவேடம் இது. அதை இறுதியாக உங்களிடமே சோதனை செய்து பார்த்துவிட்டோம்” என்றான் அதிராசேந்திரன்.

“மதுராந்தகி! எங்களை எவ்விதம் நீ அடையாளங் கண்டு கொண்டாய்?” என விஷ்ணுவர்த்தனன் கேட்டான்.

இதற்கு வீரமாதேவி பதில் கூறினாள்: “இதில் என்ன சிரமமிருக்கிறது? நீங்கள் எந்த மாறுவேடத்தில் இருந்தாலும் உங்களது கண்கள்தான் ஓயாது அக்காவைச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்குமே. வேறு யாருக்கு அந்தத் துணிவு வரும்? அதிலிருந்து உங்களை அவள் அடையாளங் கண்டு கொண்டாள்” என்றாள்.

“சீ! போடி குறும்புக்காரி!” என்றாள் மதுராந்தகி.

வீரமாதேவி கூறிய பதிலைக் கேட்டு அனைவரும் கொல்லென்று நகைத்தனர்.

# 45. புலிப்போத்தன்ன புல்லணல் காளை

நீண்ட நாட்களுக்குப் பிறகு சயங்கொண்டாரின் மாந்தோப்பில் இளவரசி மதுராந்தகியின் தேர் புகுந்தது. ஆங்காங்கே மரத்தடிகளில் அமர்ந்து பழந்தமிழ்ச் சுவடிகளைப் படித்துக் கொண்டிருந்த மாணவர்கள் எழுந்து இளவரசிகளுக்கு வணக்கம் செலுத்தினர். அவர்களது வணக்கத்தைப் புன்னகையுடன் ஏற்ற வண்ணம் இளவரசிகள் மூவரும் தேரிலிருந்து இறங்கித் 'தமிழ்க் குடிலுக்குள்' நுழைந்தனர். வழக்கமாக வாயிலில் வந்து தங்களை வரவேற்கும் சயங்கொண்டாரை அன்று காணாது மதுராந்தகி திகைத்தாள். அந்தக் குடிலுக்குப் பின்புறமுள்ள தோப்பின் நடுவே அமைக்கப்பட்டிருந்த மேடையில் சயங்கொண்டார் அமர்ந்திருந்தார். அவரது எதிரில் மாணவன் ஒருவன் அமர்ந்து ஓலைச் சுவடி ஒன்றைப் பிரித்து வாசித்துக் கொண்டிருந்தான்.

**"யானை தாக்கினும் அரவுமேற் செலினும்**
**நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்**
**சூல்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை**
**வலிக்கூட் டுணவின் வாட்குடிப் பிறந்த**
**புலிப்போத் தன்ன புல்லணல் காளை."**

களிற்றி யானை தன்னைத் தாக்கவரினும் தன் மேலே பாம்பு ஊர்ந்து செலினும் முகில் இடியை இடிப்பினும் இவற்றிற்குக் கூட அக்குலத்தில் உதித்த சூல் கொண்ட மகளிரும் அஞ்சமாட்டார்கள். இத்தகைய மறம் பூண்ட வாழ்க்கையினையும், தமது வலிமையால் பகைவரைக் கொள்ளை கொண்டுண்ணும் உணவினையும் உடையவர்கள் அந்நிலத்து மக்கள். வாட் தொழிலைத் தவிர வேறு தொழில் அறியாதவர்கள். அத்தகைய குடிப்பிறந்த புலிப் போத்து போன்ற புல்லிய தாடியை உடையவன் இந்தத் தலைவன் என்ற பொருளைத் தரும் சிறப்பு மிக்க பெரும்பாணாற்றுபடைப் பாடல் ஒன்றை வீரஞ் செறிந்த குரலில் அந்த மாணவன் படித்தான். அவன் அவ்விதம் படித்ததைக் கேட்டவர்கள் புத்துணர்ச்சி பெற்றனர். சயங்கொண்டார் அளவற்ற மகிழ்ச்சி கொண்டார்.

அவருக்குப் பின்னால் வந்து நின்று கொண்டிருந்த இளவரசிகள் மூவரும் அந்தப் பாடலின்பத்தில் ஆழ்ந்து போயினர். அதிலும்

குறிப்பாக வீரமாதேவியின் செவிகளில் 'புலிப் போத்தன்ன புல்லணல் காளை' என்ற சொற்றொடர் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தது. அவளது விழிகள் அந்த சொற்றொடருக்கு ஏற்ற ஓவியமாகத் திகழ்ந்த அந்த மாணவனைப் பார்த்துக் கொண்டிருந்தன. சிலை போன்ற உடலமைப்புடனும் காட்சியளித்த அவனது விழிகள் தன்னையே நோக்குவதைக் கண்ட பிறகுதான் வீரமாதேவியின் வேல்விழிகள் வேறு பக்கம் திரும்பின.

"நன்று! நன்று! மிக நன்றாக இருக்கிறது இந்தப் பாடல்" என்றாள் மதுராந்தகி.

இளவரசியின் குரல் கேட்டுத் திடுக்கிட்டுச் சயங்கொண்டார் திரும்பினார்.

"தேவி! மன்னிக்க வேண்டும். எப்போது வந்தீர்கள்? நீங்கள் வந்ததையே நாங்கள் கவனிக்கவில்லை" என்றார்.

"அதனால் என்ன" என்று கூறிவிட்டு மூன்று இளவரசிகளும் அந்த மேடையில் அமர்ந்தனர். மூவரின் விழிகளும் தன் பக்கம் திரும்புவதைக் கவனித்த அந்த மாணவன் மெதுவாக அவ்விடத்தைவிட்டு நழுவத் தொடங்கினான்.

இதைச் சயங்கொண்டார் கவனித்தார். "கோதைமார்பா! கொஞ்சம் பொறு" என்று சொல்லிவிட்டு மதுராந்தகியின் பக்கம் திரும்பி "தேவி! இவன் எனது புதிய மாணவன். வேங்கி நன்னாட்டைச் சேர்ந்தவன். என்னிடம் தமிழ் பயிலுவதற்காக வந்து சேர்ந்திருக்கிறான்" என்றார்.

உடனே கோதைமார்பன் இளவரசிகள் பக்கம் திரும்பி வணங்கிவிட்டு அந்த இடத்தைவிட்டு அகல ஆரம்பித்தான்.

"கோதைமார்பரே! பரவாயில்லை. இங்கேயே அமர்ந்து கொள்ளும்" என்றாள் மதுராந்தகி.

சிறிது தயக்கத்துடன் அவன் மீண்டும் அங்கேயே அமர்ந்தான்.

"கோதைமார்பரே! உம்மைப் பார்த்தால் பைந்தமிழ்ச் சுவடிகளை ஏந்திச் செல்லும் புலவனைப் போலத் தோன்றவில்லையே" என்றாள் மதுராந்தகி.

இதைக் கேட்டதும் கோதைமார்பனின் முகத்தில் இருள் படர்ந்தது.

“இல்லை தேவி! நான் உண்மையாகவே தமிழ் பயிலத்தான் வந்திருக்கிறேன்” என்றான். அவன் குரலில் காணப்பட்ட தடுமாற்றம் அனைவரையும் வியப்படையச் செய்தது.

“கோதைமார்பரே!, நான் உம்மைச் சந்தேகிக்கவில்லை. வெறும் சுவடிகளைப் புரட்டும் கரமாக உமது கரம் தோற்றமளிக்கவில்லையே. வாளைச் சுழற்றும் கரமாகத் தோன்றுகிறதே என்பதால்தான் கேட்டேன்” என்றாள் மதுராந்தகி.

“ஆம் தேவி! படையிலும் சிறிது காலம் நான் பணியாற்றினேன்” எனப் பெருமூச்சுவிட்டான் கோதைமார்பன்.

“தேவி! கோதைமார்பன் என்னிடம் தமிழ் பயில வந்திருப்பதாகக் கூறுவது பொய்” என்றார் செயங்கொண்டார்.

இதென்ன மற்றொரு அபாயம் எனக் கோதைமார்பன் திடுக்கிட்டான். அதைக் கவனிக்காதது போலச் செயங்கொண்டார் தொடர்ந்தார்.

“கோதைமார்பனின் புலமை என்னைத் திகைக்கச் செய்திருக்கிறது. வடமொழியில் அவனுக்குள்ள புலமை சிறப்பானது” என்றார் செயங்கொண்டார்.

ஆம்! வந்து சில நாட்கள் ஆவதற்குள்ளாகவே சயங்கொண்டாரின் உள்ளத்தைக் கோதைமார்பன் கவர்ந்துவிட்டான். அவனது பணிவான நடத்தையும், பண்பமைந்த பேச்சும் அவரைப் பெரிதும் அவன் பால் ஈர்த்தன. தன்னைப் பற்றி எதுவுங்கூற அவன் தயங்கினான். சயங்கொண்டாரும் அதை அழுத்திக் கேட்காமல் விட்டுவிட்டார். எனினும் அவன் பெரிய குலத்தைச் சேர்ந்த பிள்ளையாக இருக்க வேண்டும் என்பதை அவர் ஊகித்து அறிந்து கொண்டார்.

வழக்கமான தனது குறும்புத்தனத்தை வெளிக் காட்டாது வீரமாதேவி அமைதியாக உட்கார்ந்திருந்தாள். ஓயாது சுழன்று கொண்டிருக்கும் அவளது கருவிழிகள் அன்று வழக்கத்திற்கு விரோதமாக இயங்கிக் கொண்டிருந்தன. அஞ்சனம் ஊட்டிய தனது கடைக் கண்ணினால் கோதைமார்பனை ஒருகணம் பார்ப்பதும், மறுகணம் வேறு பக்கம் திரும்பிக் கொள்வதுமாக இருந்து வந்தாள். அவளது நெஞ்சு ஏனோ படபடவென அடித்துக் கொண்டது.

ஆசிரியர் அமர்ந்திருக்கிறார் என்ற காரணத்தால் கோதைமார்பன் தனது விழிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தான். என்றாலும்

அவனது விழிகள் இடை இடையே வீரமாதேவியின் பேரெழிலைப் பருகிக் கொண்டுதான் இருந்தன.

இதையெல்லாம் கவனித்தும் கவனியாது போலப் புவனமாதேவி இருந்தாள். 'அகப்பட்டுக் கொண்டாள் கள்ளி! காதலாவது கழற் காயாவது என்று பேசியவள் அல்லவா! இருக்கட்டும்! இருக்கட்டும்! பேசிக் கொள்கிறேன்!' என அவள் மனதிற்குள் கருதியபடி இருந்தாள்.

&&&

இளவரசிகள் மூவரும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் சயங்கொண்டாரிடம் விடைபெற்றுச் சென்றனர். போகுமுன் ஒரு தடவை தனது கயற்கண்ணால் கோதைமார்பனின் உள்ளத்தைக் கலக்கிவிட்டு வீரமாதேவி சென்றாள்.

அவர்கள் சென்ற பிறகு சயங்கொண்டார் தனது மாணவனிடம் பேசத் தொடங்கினார்.

"கோதைமார்பா! தமிழின் மீதும், தமிழ்ப் புலவர்கள் மீதும் சோழ குலத்தினர் கொண்டிருக்கும் பற்றுதலுக்கு ஈடு இணையே கிடையாது" என்றார்.

இதற்குக் கோதைமார்பன் பதிலொன்றுங் கூறவிலை.

"கோதைமார்பா! வந்திருந்தவர் யார் தெரியுமல்லவா. நடுவிலே அமர்ந்திருந்தவர் இளவரசி மதுராந்தகி. வலதுபுறத்தில் அமர்ந்திருந்தவர் இளவரசி வீரமாதேவியாகும்."

"ஓகோ! அப்படியா!" என்றான் கோதைமார்பன்.

"இடதுபுறத்தில் அமர்ந்திருந்தவர் புவனமாதேவியாகும். உன்னைப் போல அவளும் எனது புதிய மாணவி. மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் என்று கேள்விப்பட்டிருக்கிறாயா? சோழ நாட்டின் மாதண்டநாயகரைப் பற்றிக் கேள்விப்படாமல் இருந்திருக்க முடியுமா? அவரின் பேத்திதான் இந்த புவனமாதேவி" என்றார் சயங்கொண்டார்.

இதைக் கேட்டதும் கோதைமார்பனின் முகத்தில் திகைப்புத் தோன்றியது. ஏதோ கேட்க வாயெடுத்தான். மறுகணம் அந்த எண்ணத்தை அடக்கிக் கொண்டான்.

# 46. உலகமுழுதுடையாள்

தென்னவன் பொதிகையிலே பிறந்து தேனருவியிலே திளைத்துப் பொன்னி நதியின் தண்புனலிடை மூழ்கி வந்து சோழ மன்னவனின் பொழிலிடைத் தென்றல் உலவிக் கொண்டிருந்தது.

பொன்னியாற்றின் புனலிடை மூழ்கி மேலும் தண்மை பெற எண்ணிய நிலவு விரைந்து வந்து கொண்டிருந்தது. நிலவொளியும் நின்று உலவிக் கொண்டிருந்த தென்றலும், புவனமாதேவியின் உள்ளத்தில் குடிகொண்டிருந்த வெம்மையைத் தணிக்க முயன்று தோல்வியடைந்து திரும்பின.

“காதலன் காண்கிலேன்; கலங்கும் நோய் கைம்மிகும் ஊது உலை தோற்க உயிர்க்கும் என் நெஞ்சு” என்பதற் கேற்ப அவள் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள். அந்த இரவு வேளையில் தனது ஆருயிர்த் தோழிகளைவிட்டுப் பிரிந்து சோலை நடுவே தனியே அமர்ந்து எதையோ எண்ணியெண்ணி அந்தப் பேதை கலங்கிக் கொண்டிருந்தாள்.

திடீரென அவளுக்கு அன்றொரு நாள் இரவில் பெற்ற நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது. இளவரசர்கள் இருவரும் மாறுவேடத்தில் வந்து தங்களிடம் வேடிக்கை காட்டியதை எண்ணிய போது, அவள் உள்ளம் நெகிழ்ந்தது.

எவ்வளவு பெரிய பேரரசின் அரியாசனத்திற்குரிய இளவரசர்! அந்தக் கர்வம் சிறிதுமில்லாது குழந்தையுள்ளம் படைத்தவராக விளங்குகின்றாரே! மன்னாதி மன்னர்கள் பலர் தங்களது புதல்விகளை அவருக்கு மணமுடித்துத் தரக் காத்துக் கிடக்கிறார்கள். அப்படியிருந்தும் தன்பால் அவர் செலுத்தும் அன்பை நினைத்தால் ஒருகணம் திகைப்பாக இருக்கிறது. மறுகணம் அச்சமாகவும் இருக்கிறது.

அப்போது புவனமாதேவியின் நினைவில் மற்றொரு நிகழ்ச்சி நிழலாடியது. சோழர் அரண்மனையின் பல பகுதிகளையும், அவள் சுற்றிப் பார்த்து வந்த போது அரசவை கூடும் மண்டபத்தை அவள் காண நேர்ந்தது. அவளுடன் வந்த வீரமாதேவி அந்த மண்டபத்தின் சிறப்பியல்புகளை எடுத்துக் கூறி வந்தாள். புவனமாதேவியின் உள்ளத்தை ஒரு பொருள் கவர்ந்திழுத்துக் கொண்டிருந்தது. அந்த மண்டபத்தின் நடுநாயகமாகத் திகழ்ந்து கண்ணைக் கவரும்

வண்ணம் ஒளி வீசிக் கொண்டு இருந்த சோழ மன்னர்களின் அரியாசனம் அவளைக் கவர்ந்தது. நவமணிகளால் செய்யப்பட்ட அந்தச் சிங்காதனம் ஒரு உயர்ந்த மேடை மீது வைக்கப்பட்டிருந்தது. அந்தச் சிங்காதனத்தின் படிகளில் பதிக்கப்பட்டிருந்த நவமணிகள் பேரொளியை வீசிக் கொண்டிருந்தன. அந்தப் படிக்கட்டுகளில் எத்தனை வேந்தர்களின் மணிமுடிகள் வீழ்ந்து வணங்கினவோ? பொன்னொளி வீசிக் கண்ணொளியைப் பறித்துக் கொண்டிருந்த அந்த அரியாசனத்தைப் பார்த்த வண்ணம், புவனமாதேவி மெய்ம்மறந்து நின்றாள். இந்த அரியாசனத்தின் பெயரை வீரமாதேவி கூறக் கேட்டு அவள் தெரிந்து கொண்டாள்.

'இராசேந்திர சோழர் மாவலிவாணராயன்' என்னும் அந்த அரியணையிலே அமர்ந்து இந்த நாட்டை ஆளப் போகும் அதிராசேந்திரர் எங்கே? அந்த அரியாசனத்தின் முன் தலை வணங்கி நின்று, தொண்டு புரியும் மாதண்ட நாயகனின் பேத்தி எங்கே? மலையும் மடுவும் ஒன்றாகிவிட முடியுமா? எவ்வளவுதான் ஒளி வீசினாலும் பித்தளை பொன்னுக்குச் சமமாகிவிட முடியுமா?

இவ்வாறு எண்ணிய போது அவள் விழிகளில் நீர் பெருகியது.

அப்போது யாரோ தனதருகிலே வந்து நிற்கும் அரவங் கேட்டு, அவள் திரும்பினாள். தான் காண்பது கனவா அல்லது நனவா என்ற ஐயம் அவளுக்கு ஏற்பட்டது. ஆம்! அவளுக்கு எதிரில் இளவரசன் அதிராசேந்திரன் நின்று கொண்டிருந்தான். புவனமாதேவியின் விழிகள் நீர்ப் பெருக்கெடுத்து ஓடுவதைக் கண்டு அவன் திடுக்கிட்டான்.

"புவனா! இதென்ன கோலம்? உனது கலக்கத்திற்குக் காரணம் என்ன?" என்றான்.

தனது தவற்றை உணர்ந்தவளாக அவள் அவசரம் அவசரமாகத் தனது விழிகளில் பெருகிய நீரைத் துடைத்துக் கொண்டாள்.

தனது கேள்விக்குப் பதில் ஒன்றும் கிடைக்கப் பெறாத இளவரசன் அதிராசேந்திரன், "உன் தனிமைக்கு நான் பங்கம் இழைத்துவிட்டேனோ" என்றான்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை இளவரசே!" என்றாள் புவனமாதேவி.

“இல்லை. என்னிடம் எதையோ மறைக்கின்றாய். உனதுள்ளம் எதையோ எண்ணிக் கலங்குகிறது. அதை என்னிடம் கூடக் கூறலாகாதா?” என்றான் அதிராசேந்திரன். அவன் குரலில் காணப்பட்ட கனிவு அவளது விழிகளில் மேலும் நீரை வரவழைத்தது. முத்து முத்தாக நீர் அவளது விழிகளில் இருந்து வழியத் தொடங்கியது. இதைக் கண்டதும் அதிராசேந்திரன் பதறிப் போனான். விரைந்து முன்வந்து அவளது கரங்களைப் பிடித்துக் கொண்டு, “புவனா, உனக்கென்ன நேர்ந்தது?” என்றான். அணை உடைத்துப் பாயும் வெள்ளமெனப் புவனமாதேவியின் துக்கம் பெருகியது. அதிராசேந்திரனின் மார்பிலே தனது தலையைப் புதைத்த வண்ணம் அவள் தேம்பலானாள்.

அவள் கொண்டிருந்த ஆற்றாமையை அவன் புரிந்து கொண்டான். தனது விரல்களினால் மெதுவாக அவளது தலையை வருடினான். அந்த இன்பத்தில் தனது துன்பத்தைப் புவனமாதேவி மறந்தாள்.

“புவனா! இதோ பார், நான் அருகிலிருக்கும் போது ஏன் வீணாக வருத்தப்படுகிறாய்?” என அன்பொழுக அதிராசேந்திரன் கூறினான்.

“இளவரசே! உங்கள் அரவணைப்பில் இருக்கும் பொழுது எனக்கென்ன நேர்ந்துவிடப் போகிறது?” என்றாள் புவனமாதேவி.

“புவனா! தனிமையில் உன்னிடம் எவ்வளவோ பேச வேண்டும் என நான் துடிதுடித்த வண்ணம் வந்தேன். ஆனால் நீயோ, இன்பமாகப் பொழுதைப் போக்க வேண்டிய வேளையில் எதையோ நினைத்துக் கலங்கிக் கொண்டிருக்கிறாய்.”

“இளவரசே! எனது கலக்கத்தைப் போக்கத்தான் நீங்கள் வந்துவிட்டீர்களே. இனி நான் என்றுமே எதற்குமே கலங்கமாட்டேன்” என்றாள்.

நறுமணம் நிறைந்து மெல்லென வீசிய தென்றல் காதலரிருவருக்குமிடையில் புகுந்து செல்ல முயன்றது. சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. காதலரிருவரும் மெய்ம்மறந்த நிலையிலிருந்தனர்.

“இளவரசே! இந்த இன்பம் என்றும் நீடித்திருக்குமல்லவா!” என்றாள் அந்தப் பேதை.

“புவனா, இதென்ன பேச்சு. என்னை நீ நம்பவில்லையா?”

“அப்படியெல்லாம் ஒன்றுமில்லை இளவரசே! நீங்களோ சோழப் பேரரசை ஆளப்போகும் மன்னர். ஆனால் நானோ ஒரு சாதாரணமான படைத்தலைவனின் பேத்தி. இதை நினைக்கும் போது இந்தப் பேதையின் நெஞ்சு தடுமாறுகிறது” என்றாள்.

தனது மார்பிலே சாய்ந்து கிடந்த புவனமாதேவியின் முகத்தை மெதுவாகத் தன்னை நோக்கி அதிராசேந்திரன் திருப்பினான். கள்ளமில்லாத அந்த மதிமுகத்தை ஒருகணம் உற்றுப் பார்த்தான். மறுகணம் பேசத் தொடங்கினான்:

“புவனா! உனது ஐயத்தைப் போக்குவதற்கு முன் ஒன்று கூற விரும்புகிறேன். இவ்வளவு நேரமாக நான் கண்டு கொண்டிருந்த கனவை உன்னிடம் கூற விரும்புகிறேன். கேள் புவனா! போர்க் களத்திலிருந்து திரும்பி வரும் தந்தையிடம் சமயம் பார்த்து உன்னை மணக்க நான் அனுமதி வாங்கிவிடுகிறேன். அவரும் மறுமொழி எதுவுங் கூறாது மகிழ்ந்த வண்ணம் நமது திருமணத்தைச் சிறப்பாக நடத்தி வைக்கிறார். சோழ வளநாடே குதூகலத்தில் ஆழ்கிறது. சோழ நாட்டின் வழக்கத்தையொட்டிப் புலவர்கள் புவனமாதேவி என்னும் உனது பெயரைத் தமிழ் மரபுப்படி உலகமுழுதுடையாள் என மாற்றி அழைக்கிறார்கள். நீ மகிழுகிறாய். நானும் மகிழ்கிறேன். அதைக் கண்டு எல்லோரும் மகிழ்கிறார்கள்” என்றான்.

தான் கண்ட கனவை அதிராசேந்திரன் கூறியதைக் கேட்டதும், புவனமாதேவியின் உடம்பு புல்லரித்தது. பளிங்கு மேடையிலிருந்து கீழிறங்கி, இளவரசனது காலைத் தொட்டு வணங்கினாள்.

கீழே குனிந்து அவளைத் தழுவி எடுத்த வண்ணம் அதிராசேந்திரன் பேசலானான். “புவனா! இதைக் கேள். நான் இந்த நாட்டின் மன்னனாக, ‘இராசேந்திர சோழ மாவலிவாணராயன்’ அரியாசனத்தில் அமரும் போது எனதருகில் நீதான் இருப்பாய். நீ என் இதயராணி மட்டுமல்ல. இந்த நாட்டின் வருங்கால மகாராணியுமாவாய்” என்றான்.

# 47. காட்டில் சதி

எங்கும் காரிருள் சூழ்ந்திருந்தது. அந்தக் கானகத்தில் கவிழ்ந்திருந்த காரிருளின் பயங்கரத்தை அதிகப்படுத்துவது போலக் கோட்டான்கள் இடையிடையே அலறிக் கொண்டிருந்தன.

கூகையும் கோட்டானும் வெளிவரக் கூசிடும் நள்ளிரவில் அந்த அடர்ந்த காட்டின் நடுவே ஏதோ மங்கலான ஒளி தெரிகிறது. ஒளி வந்த திக்கை நோக்கிச் சென்று சற்று நெருங்கிப் பார்ப்போமானால் ஓரிடத்தில் சுள்ளிகள் குவிக்கப்பட்டு நெருப்பு எரிந்து கொண்டிருப்பதையும், எரியும் நெருப்பைச் சுற்றி மூவர் அமர்ந்திருப்பதையும் காண்கிறோம்.

கொழுந்துவிட்டெரியும் அந்த நெருப்பின் ஒளி அம்மூவர் முகத்திலும் படிந்து அவற்றைச் செந்நிறமாக்கியிருந்தன. அதிலே ஒருவன் ஏற்கனவே நமக்கு அறிமுகமானவன். மற்ற இருவரும் புதியவர்கள். என்றலும் மூவரையும் இதற்கு முன்னர்த் துங்கபத்திரையாற்றங்கரையில் இருந்த பாழடைந்த மண்டபத்திலும் கங்கைகொண்ட சோழபுரத்தின் அங்காடி வீதியிலும் நாம் சந்தித்து இருக்கிறோம்.

அமர்ந்திருந்தவர்களிலே முதலாமவன் பேசத் தொடங்கினான்.

“நண்பர்களே! அந்த நள்ளிரவில் அவன் எங்ஙனம் தப்பிச் சென்றான் என்பது நமக்குப் புரியாத புதிராக இருக்கிறது. அங்காடி வீதியிலே சுற்றிக் கொண்டிருந்த அவனை நாம் கவனமாகப் பின்தொடர்ந்து சென்றோம். அப்போது திடீரென இளவரசர்கள் வரவால் ஏற்பட்ட குழப்பத்தில் அவன் நமது பார்வையில் இருந்து தப்பி எங்கோ மறைந்துவிட்டான். நள்ளிரவு நேரம் வரை அவனை நாம் தேடித் திரிந்தோம். என்றாலும் பலன் கிடைக்கவில்லை.”

“ஆம்! கங்காகேத்தரே! அவன் திடீரென மறைந்தது எனக்கு வியப்பைத் தருகிறது” என மற்றொருவன் கூறினான். மூன்றாமவன் பேசத் தொடங்கினான்.

“அவன் மறைந்ததில் ஒன்றும் அதிக வியப்பில்லை. அவன் கரத்திலே கொண்டு வந்த பொருட்கள் என்னவாயின என்பதுதான் எனக்குப் புரியவில்லை.”

இதற்குக் கங்காகேத்தன் மறுமொழி கூறினான். "நகரில் அவன் நுழையும் போதே அவனிடம் அந்தப் பொருட்கள் இல்லை என்பதை நாம் கண்டோம். இவ்வளவு குறுகிய காலத்தில் அவனுக்கு இங்கு நண்பர்கள் யாரும் ஏற்பட்டிருக்க முடியாது. எனவே அவன் அவைகளை இந்தக் காட்டில் எங்கோ மறைத்து வைத்திருக்க வேண்டும்."

"ஆம்! ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும்" என மற்ற இருவரும் கூறினார்கள்.

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது.

"ஆமாம். கங்காகேத்தரே, துங்கபத்திரைக் கரையிலே நான் உம்மை ஒன்று கேட்டேன். பிறகு பதில் கூறுகிறேனென்று நீர் கூறினீர். அது நினைவிலிருக்கிறதா?" எனக் கேட்டான் ஒருவன்.

"ஆம் நீலகேசி, நீர் கேட்ட கேள்வியை நான் இன்னும் மறந்துவிடவில்லை" என்ற பீடிகையோடு பேசத் தொடங்கினான்.

"வழி நெடுகிலும் அவனைத் தேட வேண்டும் என்று நீர் கூறினீர். இல்லை, வேண்டாம், நேரே கங்கைகொண்ட சோழ்புரம் சென்று காத்திருப்போம். அவன் அங்கு வந்து சேருவான் என்று நான் கூறினேன். நீங்களிருவரும் நான் கூறியதை நம்பவில்லை. கடைசியில் நான் கூறியபடியே அவன் அங்கு வந்து சேர்ந்தான். நீங்கள் கூறியபடி வழி நெடுகிலும் அவனைத் தேடிக் கொண்டிருந்தோமானால் நமது பொன்னான நேரம் வீணாகக் கழிந்திருக்கும்" என்றான்.

"ஆம் கங்காகேத்தரே, நீர் கூறியது உண்மைதான். ஆனால் நீர் எப்படி அவன் அவ்விதம் அங்கு வந்து சேருவானெனக் கணக்கிட்டீர் என்பதுதான் எங்களுக்கு இன்னும் புரியவில்லை" என்றான் நீலகேசி.

இந்தக் கேள்விக்கு உடனே பதிலளிக்காது சற்று நேரம் கங்காகேத்தன் மௌனம் சாதித்தான். பிறகு "நண்பர்களே, அதை மட்டும் கேட்காதீர்கள். காலஞ் சென்ற ஆகவமல்லருக்கும் எனக்கு மட்டுமே தெரிந்த இரகசியம் அது. அதைக் கூற இன்னும் சரியான வேளை வரவில்லை. வேளை வந்ததும் உங்களிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப் போகிறேன்" என்றான்.

அதற்குமேல் அவனை வற்புறுத்த விரும்பாத மற்ற இருவரும் அமைதியாக இருந்துவிட்டனர்.

“நண்பர்களே! நமது வேலை நாளையிலிருந்து இந்தக் கானகத்தில் தொடங்குகிறது” என்றான், காங்காகேத்தன்.

“என்ன இந்த பாழுங்காட்டில் நமது வேலை ஆரம்பிக்கிறதா?” எனச் சயசிங்கனும் நீலகேசியும் வினவினர். அவர்கள் குரலில் வியப்புக் கலந்திருந்தது.

“ஆம் நண்பர்களே! நாம் தேடி வந்த பொருட்கள் இந்தக் காட்டில்தான் எங்கேயோ பதுக்கி வைக்கப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் கங்கைகொண்ட சோழபுரத்திற்கருகில் இதைவிடப் பாதுகாப்பான இடம் வேறு கிடையாது. எனவே நாளை முதல் இந்தக் காடெங்கும் நாம் சுற்றி அலைய வேண்டியிருக்கும். யாரேனும் கேட்டால் மூலிகை தேடி அலைவதாகக் கூறுங்கள். அந்தப் பொருட்கள் கிடைத்த பிறகே நாம் செய்ய வேண்டிய அடுத்த வேலையைப் பற்றி ஆராய வேண்டும்” என்றான்.

“அடுத்த வேலையா?” என நீலகேசி திகைத்தான்.

“ஆம் நீலகேசி. 18 ஆண்டுகட்கு முன் ஒரு வேலையைத் தொடங்கினேன். அது இன்னும் முற்றுப் பெறவில்லை. அதையும் முடிக்க வேண்டியுள்ளது. அதைப் பின்னர்க் கூறுவேன்” என்றான் கங்காகேத்தன்.

மர்மமாகவே பேசிவரும் தங்கள் தலைவனின் போக்கைக் கண்டு மற்ற இருவரும் வியப்படைந்த போதிலும் அவனிடம் எதிர்க் கேள்வி கேட்காதிருந்தனர். அவர்களின் போக்கைத் தனது மனதிற்குள் பாராட்டியவனாய் மறுபடியும் பேசத் தொடங்கினான்.

“நண்பர்களே! இங்கு நமக்கு மூன்று வேலைகள் காத்துக் கிடக்கின்றன. முதலாவதாக மறைந்து கிடக்கும் பொருட்களைத் தேடி எடுக்க வேண்டும். இரண்டாவதாக நமது எதிரி எங்கு ஒளிந்து இருக்கிறான் என்பதைக் கண்டு பிடித்து அவனைத் தீர்த்துவிட வேண்டும். முடியாவிட்டால் பகைவர் கையில் அவனைக் காட்டிக் கொடுத்துவிட வேண்டும். மூன்றாவதாக மற்றொரு வேலை— மிக முக்கியமான வேலை..” என்று கூறி நிறுத்தினான் காங்காகேத்தன்.

“என்ன.. என்ன?” என்று ஏககாலத்தில் நீலகேசியும் சயசிங்கனும் கேட்டனர்.

“அந்த வேலையை நாம் செய்யத் தவறினால் நமது எதிரி அதனைச் செய்துவிடுவான். அவன் இங்கு வந்ததே அந்த வேலையைச் செய்வதற்காகத்தான்” என்றான் கங்காகேத்தன்.

நீலகேசியும் சயசிங்கனும் ஒன்றும் புரியாது விழித்தனர். கங்காகேத்தன் மேலே தொடர்ந்தான்.

“நண்பர்களே! விலை மதிக்க முடியாத ஒரு பொருளை நாம் இங்கிருந்து கடத்த வேண்டியிருக்கும்” என்றான்.

“விலைமதிக்க முடியாத பொருளா?” என்று நீலகேசி திகைத்தான்.

விலைமதிக்க வொண்ணாதபடி எங்கேனும் பொன்னும் பொருளும் குவிந்து கிடக்கிறதோ என்பதை அறிய சயசிங்கன் துடித்தான்.

“நண்பர்களே! கேவலம் பொன்னையும் பொருளையும் நாம் கடத்த இங்கு வரவில்லை. ஒரு பெண்ணைக் கடத்திச் செல்ல வேண்டும்” என்றான்.

மற்ற இருவரும் அதைக் கேட்டு அளவு கடந்த வியப்பில் ஆழ்ந்தனர்.

# 46. மன்னரின் ஓலை

காவிரிக்கரையில் இத்தகைய காதல் நாடகத்தில் ஈடுபட்டுப் புதியதொரு அனுபவத்தில் திளைத்துக் கொண்டிருந்த இளவரசன் அதிராசேந்திரனை அதிர்ச்சிக்குள்ளாக்கிய செய்தி ஒன்று போர்க்களத்தில் இருந்து வந்தது. வீரராசேந்திர சோழர் தமது புதல்வனுக்குக் களத்திலிருந்து ஓலை ஒன்று அனுப்பியிருந்தார். அதைப் படித்ததும் இளவரசன் திகைத்துப் போனான். மன்னர் அனுப்பிய ஓலையில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்.

"இளவரசன் அதிராசேந்திரனுக்கு, வீரராசேந்திர சோழர் வரைந்த முடங்கல். மகனே! போர்க்களத்திலிருந்து உனக்குப் புதியதொரு செய்தியைத் தரப் போகிறேன். இந்தச் செய்தியைப் படித்ததும் நீ திகைத்துப் போவாய். ஏனெனில் அந்தச் செய்தியை அறிந்த போது நானடைந்த திகைப்பும் வியப்பும் இன்னும் என்னைவிட்டு நீங்கவில்லை.

போர்க்களம் நோக்கிப் பாய்ந்து வந்த நமது படைகள் களம்புக வழியில்லாது துடித்துக் கொண்டிருக்கின்றன. நமது வீரர்களின் தினவெடுக்கும் திண்தோளுக்கு வேலையே இருக்காதோ என்ற ஐயமும் எழுந்திருக்கிறது. துங்கபத்திரையாற்றில் பெருக்கெடுத்தோடிக் கொண்டிருக்கும் வெள்ளமும், இடைவிடாது இப்பகுதியில் பெய்து கொண்டிருக்கும் அடை மழையும் சேர்ந்து நமது படைகளின் முன்னேற்றத்தை இத்தனை காலமாகத் தடுத்து நிறுத்திவிட்டன. இல்லையெனில் இதற்குள் நமது படைகள் பகைவரைத் தாக்கி முறியடித்துச் சோழ நாட்டிற்கு வெற்றிச் செய்தியை அனுப்பி இருக்கும். ஆனால் மகனே! பகைவர் பாசறையில் எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. என் செவிகளையே என்னால் நம்ப முடியவில்லை. அந்த அதிசயச் செய்தி எதுவாக இருக்க முடியும் என்பதை உன்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. 'குந்தள நாட்டு மன்னன் ஆகவமல்லனை எதிர்த்து அவன் புதல்வன் சோமேசுவரன் போர்க்கொடி உயர்த்திவிட்டான். வேங்கி நோக்கிப் படையெடுத்துச் சென்ற விக்கிரமாதித்தன் திடீரென எங்கேயோ மறைந்துவிட்டான். ஆகவமல்லன் கொல்லப்பட்டிருக்க வேண்டும் என்றும் செய்தி உலவுகிறது.' இச்செய்தி உண்மையானதுதானா என்பதை நமது ஒற்றர் படை

தீவிரமாக ஆராய்ந்து வருகிறது. எது எப்படி இருந்தாலும் துங்கபத்திரையில் வெள்ளம் வடிந்த பிறகு நமது படைகள் பகைவர் பாசறையைத் தாக்குவது உறுதி. ஆகவமல்லனைப் போன்று எதிரியை நேருக்கு நேராக நின்று எதிர்க்கும் துணிவு அவன் புதல்வன் சோமேசுவரனுக்குக் கிடையாது. சூதுக்கும் சூழ்ச்சிக்கும் அவன் பேர்போனவன். அவனது ஒற்றர்கள் சிலர் எப்படியோ நமது கட்டுக்காவலை மீறிச் சோழ நாட்டிற்குள் நுழைந்துவிட்டதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. அவர்களின் நோக்கம் எதுவாக இருந்தாலும் அது தீயதாக இருக்கும் என்பதில் யாருக்கும் ஐயமிருக்க முடியாது. அதுவும் மகனே! இச்செய்தியைக் கேட்டவுடன் உன்னைப் பற்றிய கவலைதான் என்னெஞ்சில் புகுந்தது. உனக்கு ஏதேனும் நேர்ந்துவிடுமானால் என் இதயம் அதைத் தாங்கிக் கொள்ளாது. அதிராசேந்திரா! சோழ குலம் எதிர்காலத்தில் உன்னையே நம்பி இருக்கிறது. உனது தோள் வலிமையை நம்பி ஒரு மாபெரும் சாம்ராஜியம் வாழுகிறது. நமது மூதாதையர் கட்டிவளர்த்த சோழப் பேரரசின் எதிர்காலம் உன் கையில்தான் இருக்கிறது. உனது பெருவீரத்தைப் பற்றிய ஐயம் எனக்குத் துளியளவும் கிடையாது. சின்னஞ் சிறு குழந்தையாக, பால்மணம் மாறாத பாலகனாக இருக்கும் போதே நீ உன் வீரத்தை நிலைநாட்டிவிட்டாய். என் நினைவில் அந்நிகழ்ச்சி இன்னமும் பசுமையாக இருந்து வருகிறது.

“நீ அப்போது சிறு குழந்தை. வாள் வீசிப் போரிடப் பழகிக் கொண்டிருந்தாய். யாரிடம் தெரியுமா? விந்தியம் முதல் குமரிவரை தனக்கு நிகரான வீரர் எவரும் கிடையாது எனப் புகழ்பெற்றிருந்த எனது அண்ணன் இராசாதிராச சோழரிடம் நீ வாள் வீசிக் கொண்டிருந்தாய். உன் பெரியப்பனும் உனக்கு உற்சாகமாகக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். நீயும் அவருடன் சரிசமமாகச் சுழன்று அயராது போரிட்டுக் கொண்டிருந்தாய். அப்போது தற்செயலாக அங்கு நானும் உனது பாட்டனார் இராசேந்திர சோழ சக்கரவர்த்தியும் வந்தோம். உனது திறமையைக் கண்டு வியந்த இராசேந்திர சோழர் கரகோஷம் செய்து தமது பாராட்டைத் தெரியப்படுத்தினர். கரகோஷத்தைக் கேட்டுத் திடுக்கிட்ட இராசாதிராசர் சற்றுத் திரும்பினார். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு உனது வாளினால் அவர் கரத்தில் இருந்த வாளினைத் தட்டி வீழ்த்தினாய். சுற்றும் நின்றவர்கள் பலமான ஆரவாரம் செய்தார்கள். உனது பாட்டனார் விரைந்தோடி வந்து உன்னைத் தூக்கி அணைத்துக்

கொண்டு உச்சிமோந்து மகிழ்ந்தார். அப்போது அவர் கூறிய சொற்கள் இன்னமும் என் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. 'இந்த மகத்தான சோழ சாம்ராஜ்யத்தை எதிர்காலத்தில் இவன் பன்மடங்கு விரியச் செய்து கட்டிக் காப்பான்' என்றார். அவர் குரலில்தான் எவ்வளவு பெருமிதம் தொனித்தது. சுற்றிலும் நின்ற உனது பெரியப்பன்மார்களும் மாமன்மார்களும், நானும் வெட்கத்தால் தலைகளைக் கவிழ்த்துக் கொண்டோம். கேள்! மகனே! உனக்கு நினைவிருக்கும் என நம்புகிறேன். வீராதி வீரர் விசயராசேந்திரர் எனப் பட்டம் பெற்ற எனது அண்ணன் இராசாதிராச சோழர் உன்னை அப்படியே தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு கூத்தாடினார். நீ உனது மழலை வாயைத் திறந்து 'வெற்றி வேல்! வீரவேல்' என்று முழங்கினாய். நாங்கள் எல்லாம் அளவற்ற மகிழ்ச்சியடைந்தோம். இப்படியெல்லாம் சோழ குலத்தின் மகிழ்ச்சிக்கும், நம்பிக்கைக்கும் உரியவனான உனக்கு ஏதேனும் நேர்ந்துவிடுமோ! என்ற அச்சம் என்னைப் பிடித்து வாட்டுகிறது. களத்திலிருந்து திரும்பி நான் கங்கைகொண்ட சோழபுரம் வரும் வரை எனது சிந்தனையில் இந்த எண்ணம்தான் குடிகொண்டிருக்கும். எனவே மகனே, கவனமுடன் இரு."

இவ்வாறு அன்பொழுகத் தந்தை எழுதியிருந்த ஓலையைப் படித்ததும் அதிராசேந்திரன் உள்ளம் நெகிழ்ந்து போனான். திரும்பத் திரும்பக் கவனமுடன் இருக்கும்படி மன்னர் தமது ஓலையில் எழுதியிருந்ததைப் படித்த போது தனது கவனக் குறைவை எண்ணி அவன் வெட்கினான். அவனைப் பொறுத்த வரையில் மன்னர் எழுதியிருந்தது உண்மைதான். அதிராசேந்திரன் மாபெரும் வீரன்தான். என்றாலும் சூதும், சூழ்ச்சியும் அறியாத கள்ளமற்ற உள்ளம் படைத்தவன். நேருக்கு நேர் நின்று ஆயிரவருடனும் அவன் பொருதுவான்; வெற்றியும் பெறுவான். ஆனால் தனியொருவன் நின்று செய்யும் சூழ்ச்சியை அறிந்து கொள்ளும் ஆற்றலை அவன் பெற்றிருக்கவில்லை. எதையும் துச்சமாக மதித்து ஏமாந்து போகும் பண்பு அவனிடமிருந்தது. வஞ்சகரான குந்தளர் செய்யும் சூழ்ச்சிகளை அவன் உணர்ந்தறியாது ஏதாவது ஆபத்தில் சிக்கிக் கொள்வானோ என வீரராசேந்திர சோழர் அஞ்சினார். அதன் விளைவாகவே இத்தகைய முடங்கலை அவனுக்கு எழுதியிருந்தார்.

வேங்கி இளவரசன் விஷ்ணுவர்த்தனனுக்கும் மன்னர் ஒரு ஓலை அனுப்பியிருந்தார்.

கடாரம் சென்று வாகைசூடித் திரும்பிய அவனை முதற்கண் வாழ்த்திவிட்டுப் பிறகு மன்னர் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்.

"விஷ்ணுவர்த்தனா! நீயும் உனது முன்னோர்களும் சோழப் பேரரசிற்கு ஆற்றியிருக்கும் தொண்டுகளுக்குச் சோழகுலம் என்றும் கடமைப்பட்டிருக்கிறது. எல்லாவற்றையும்விட இனிமேல் நான் கேட்கப் போகும் உதவியை நீ செய்ய வேண்டும். குந்தள நாட்டின் தேர்ந்த ஒற்றர் சிலர் சோழ வளநாட்டில் புகுந்துவிட்டனர். ஏதோ ஒரு தீய செயலைச் செய்வதற்காகத்தான் அவர்கள் அங்கு வந்திருக்க வேண்டும். சோழ குலத்தின் மணிவிளக்கை அணைத்துவிடவும் அவர்கள் முயலலாம். எனவே நீயும், மதுராந்தகியும் கவனமுடன் இருந்து இளவரசனைக் காத்து வாருங்கள். சூது வாது தெரியாத இளம்பிள்ளையைக் காத்து வரும் பொறுப்பை உங்களிடம் மட்டுமே ஒப்படைக்க விரும்புகிறேன். வேறு யாரிடமும் அதை ஒப்படைக்க எனக்கு மனமில்லை. இளவரசனுக்கு வரும் ஆபத்து எந்த உருவிலும் வரலாம். அதை மறவாது கவனமுடன் காத்து வரவும்."

மன்னர் எழுதிய ஓலைகளைப் படித்த இளவரசர்கள் இருவரையும் திகைப்பும், வியப்பும் ஆட்கொண்டன. தகுந்த காரணமேதுமின்றி மன்னர் அவ்வாறு எழுதியிருக்கமாட்டார் என்பதை இருவரும் உணர்ந்து கொண்டனர்.

# 49. வலையில் வீழ்ந்த விசயாதித்தன்

“விஷ்ணுவர்த்தனா, இந்தச் செய்தியைக் குறித்து என்ன கருதுகிறாய்?” என இளவரசன் அதிராசேந்திரன் தனது மைத்துனனை நோக்கி வினவினான்.

“உன்னைப் போலவே நானும் திகைத்துக் கொண்டிருக்கிறேன். சடசடவென எவ்வளவு விரைவாக நிகழ்ச்சிகள் நடைபெற்றுவிட்டன” என வியந்தான் விஷ்ணுவர்த்தனன்.

“ஆம்! போர் தொடங்குவதற்கு முன்பே ஆகவமல்லன் மறைந்ததை நினைக்கப் பெரும் வியப்பாகத்தான் இருக்கிறது” என்றான் அதிராசேந்திரன்.

“வேங்கியில் நடைபெற்ற நிகழ்ச்சிகளும் அதிர்ச்சியைத்தான் தருகின்றன.”

“ஆமாம், விஷ்ணுவர்த்தனா! விசயாதித்தரின் மனமாற்றத்திற்குக் காரணம் புரியவில்லையே. பாவம்! பகைவர்களின் சூழ்ச்சி வலையில் சிக்கி ஏமாந்து போனார்.”

“அதிராசேந்திரா! மாமா அனுப்பியிருக்கும் ஓலையில் வேங்கியைப் பற்றி விவரமாக எழுதவில்லை அல்லவா? சக்திவர்மன் இங்கு வந்ததும் விவரமாகத் தெரிந்து கொள்ளலாம்” என்றான் விஷ்ணுவர்த்தனன்.

மைத்துனர்கள் இருவரும் போர்க்களத்திலிருந்து சக்கரவர்த்தி அனுப்பிய ஓலையைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தனர்.

துங்கபத்திரைக் கரையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை நேயர்கள் ஏற்கனவே அறிவார்கள். வேங்கியில் இருந்து விக்கிரமன் தப்பிச் சென்ற பிறகு அங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளை நாம் அறிந்து கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

&&&

தன்னால் பின்னப்பட்டிருந்த சூழ்ச்சி வலையை அறுத்தெறிந்துவிட்டு விக்கிரமாதித்தன் தப்பிச் சென்றுவிட்டான் என்பதை அறிந்ததும் தேவநாதன் கொதித்தான். சோமேசுவரனுக்கு என்ன பதில் கூறுவது என்று அவனுக்குத் தெரியவில்லை. திகைத்தான்; திணறினான். அப்போது மின்னல் வெட்டுப் போல ஒரு

யோசனை அவனுக்கு உதயமானது. விக்கிரமாதித்தனைப் பிடிக்க முடியாமல் வெறுங் கையுடன் சோமேசுவரனிடம் திரும்புவதைவிட வேங்கி நாட்டின் மணிமுடியோடு திரும்பினால்..? அவனது கொடிய உள்ளம் சூழ்ச்சித் திட்டமொன்றை வகுத்தது.

வேங்கி அரியாசனத்தின் மீதுள்ள ஆசை, கண்களை மறைக்க மயக்கத்தில் ஆழ்ந்திருந்த விசயாதித்தன் தேவநாதனின் கண்களுக்குத் தட்டுப்பட்டான். அரசபதவி மீதுள்ள ஆசையால் எது வேண்டுமானாலும் செய்ய விசயாதித்தன் தயாராக இருந்தான். விஷ்ணுவர்த்தனனுக்கு நியாயமாக உரிய மணிமுடியை அபகரிக்கத் தகுந்த வேலையை எதிர்நோக்கிக் காத்திருந்தான். விசயாதித்தனுக்குச் சக்திவர்மன் என்றொரு புதல்வன் இருந்தான். தனது அருமைப் புதல்வனும் அவனது சந்ததியார்களும் வேங்கி சிங்காதனத்தில் அமர்ந்து ஆட்சி புரிய வேண்டுமென விசயாதித்தன் விரும்பினான். இந்த விருப்பத்திற்கு விஷ்ணுவர்த்தனனின் அரசுரிமை தடையாக இருந்தது. சோழர்களின் வலிமை அதைவிடப் பெருந் தடையாக இருந்தது.

விசயாதித்தனின் இந்த ஆசையைத் தேவநாதன் அறிந்திருந்தான். எனவே சுலபமாகத் தனது வலையை வீசினான்.

அந்த வலையில் விசயாதித்தனும் சிக்கிக் கொண்டான்.

வேங்கியின் அரசுரிமை விசயாதித்தனுக்கும் அவனது சந்ததியார்களுக்குமே உரியது என்றும் இதைக் குந்தளர்கள் அங்கீகரிப்பதாகவும், பதிலாகக் குந்தளருடன் சேர்ந்து சோழரை எதிர்க்க விசயாதித்தன் முன்வர வேண்டும் என்றும் தேவநாதன் கோரிக்கைவிடுத்தான். பழம் நழுவிப் பாலில் விழுந்த மகிழ்ச்சி விசயாதித்தனுக்கு ஏற்பட்டது. தேவநாதனின் கோரிக்கையை உடனடியாக ஏற்றுக் கொண்டு தனது பாசறைக்கு வரும்படி அவனுக்கு அழைப்புவிடுத்தான். அந்த அழைப்பை ஏற்றுத் தேவநாதனும் விசயாதித்தனைச் சந்தித்தான். இருவரும் மனம்விட்டுப் பேசினர். சோழர்களை முறியடிக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டனர். மறுநாள் குந்தளர் பாசறைக்கு விசயாதித்தன் வருகை தருவதாக ஒப்புக் கொண்டான்.

அதற்கிணங்க மறுநாள் தனது மெய்க்காப்பாளர் சிலருடன் குந்தளர் பாசறைக்கு விசயாதித்தன் வருகை தந்தான். அளவற்ற மகிழ்ச்சியோடு உள்நுழைந்த விசயாதித்தனைக் குந்தளரின் ஈட்டி முனைகள் வரவேற்றன. திடுக்கிட்டு நிமிர்ந்த விசயாதித்தனுக்கு

எதிரில் வஞ்சகச் சிரிப்புடன் தேவநாதன் நின்று கொண்டிருந்தான். தான் ஏமாற்றப்பட்டுவிட்டதை அறிய விசயாதித்தனுக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை. அதைப் போலவே தலைவனை இழந்த வேங்கிப் படைகளை முறியடிக்கவும் தேவநாதனுக்கு வெகு நேரம் பிடிக்கவில்லை. நள்ளிரவில் குந்தளப் படைகள் வேங்கிப் படைகளைத் தாக்கிச் சிதறடித்தன. விசயாதித்தனின் புதல்வனான சக்திவர்மன், களம் என்றாலே உளம் நடுங்கும் கோழை. தந்தை சிறைப்பட்டுவிட்டார் என்றவுடன் அஞ்சி நடுங்கினான். தனது படைகளை கட்டாற்றில் கைவிட்டுவிட்டுத் தான் தப்பிச் செல்லத் திட்டமிட்டான்.

நள்ளிரவில் எப்படியோ குந்தளர் பார்வைக்கு அகப்படாமல் தப்பி, காடுகளில் மறைந்து பயணம் செய்து துங்கபத்திரைக்கரையில் முகாமிட்டிருந்த சோழர் படையை அடைந்தான். வீரராசேந்திர சோழரிடம் நடந்தவைகளைக் கூறினான். அவரும் அவனைத் தக்க பாதுகாப்புடன் கங்கைகொண்ட சோழபுரத்திற்கு அனுப்பி வைத்தார்.

# 50. இரகசியம்

அமுதவல்லியின் அழகு முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது. அவள் முன் மண்டியிடாத குறையாக நின்று ஏதோ கூறிக் கொண்டிருந்தான் குமுதசந்திரன்.

“இதோ பார்! உன் சகவாசமே இனிமேல் வேண்டாம். நானோ ஏழைப் புலவரின் மகள். நீயோ இளவரசர்களுடன் சமமாகப் பழகும் தோழன். உனக்கும் எனக்கும் ஒத்துவராது” என்றாள் அமுதவல்லி.

“அமுதா! நான் என்ன தவறு செய்தேன்? இப்படி ஒரேயடியாகக் கோபித்துக் கொள்ளுகிறாய். வேண்டாம் என்று ஒரு வார்த்தை சொல்லு. இந்த இளவரசர்களை உதறித் தள்ளிவிட்டு வந்துவிடுகிறேன்” எனக் கெஞ்சினான் குமுதசந்திரன்.

“போதுமே! உன் வீரப்பேச்சு. புலவன் நாவு பொய் பேசக் கூசாது என்பார்கள். நீ மட்டும் அதற்கு விதிவிலக்கா? என்னைப் பார்த்தால் கண்ணே மணியே உன்னைப் பிரிவதா என்பாய். இளவரசர்களைப் பார்த்தால் எந்நேரமும் உங்கள் அருகிலேயே இணைபிரியாது இருப்பேன் என்பாய்.”

“அரசகுலத்தின் மீது உனக்கென்ன இப்படித் திடீர் கோபம் ஏற்பட்டுவிட்டது?”

“பின் என்ன? அவர்கள் உன்னைப் போலவா இருக்கிறார்கள்?”

“அது எப்படி அவர்கள் என்னைப் போல இருக்க முடியும்? நானோ ஏழைக் கவிஞன். அவர்களோ இளவரசர்களாயிற்றே!”

“போதுமே.. உன் வேடிக்கை! அரசனாக இருந்தாலும் ஆண்டியாக இருந்தாலும் காதல்..” என நிறுத்தினாள் அமுதவல்லி. வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது.

“ஏன் நிறுத்திவிட்டாய், முழுவதையும் கூறி முடித்துவிடு” என்றான் குமுதசந்திரன்.

“புரியாதது போல நடிக்கிறாயே. இந்த ஆண்களே இப்படித்தான்” எனச் சிணுங்கினாள் அமுதவல்லி.

“அது போகட்டும். இளவரசர்களைப் பற்றி ஏதோ கூறினாயே! அது என்ன?”

“நாள் தவறினாலும் பெரிய இளவரசியைச் சந்திக்க வேங்கி இளவரசர் தவறுவதில்லை. பெண்வாடையே இன்னதென அறியாத நமது இளவரசரோ நள்ளிரவானாலும் கங்க இளவரசியைச் சந்திக்க மறப்பதில்லை. நீயும்தான் இருக்கிறாய். நாலு நாளைக்கொருதரம் முகத்தைக் காட்டிவிட்டுப் போகிறாய்.”

“ஆம்! அமுதா. முகத்தைக் காட்டிவிட்டுப் போனாலும் இதயத்தை விட்டுவிட்டு அல்லவா செல்லுகிறேன்.”

“போதும்.. போதும்! உன் கைவரிசையை என்னிடம் காட்டாதே.”

“கேள் அமுதா! உன்னைக் காணாமல் இருக்கும் போது என்னுள்ளம் எவ்வளவு வேதனைக்கு ஆளாகிறது தெரியுமா? அரச சேவையில் இருப்பவனுக்கு ஓய்வுதான் ஏது? ஒழிவுதான் ஏது? எல்லாம் இந்தப் போர் முடியட்டும். பிறகு..” அவன் தன் பேச்சை முடிப்பதற்குள் அமுதவல்லி குறுக்கிட்டாள்.

“பிறகு நமது வாழ்க்கைப் போரைத் தொடங்கலாம் என்கிறாயா?” என்றாள். அதைத் தொடர்ந்து இருவரும் கலகலவென நகைத்தனர். அந்தச் சிரிப்பினூடே பேச்சு வேறு பக்கம் திரும்பியது.

“ஆமாம்! வேங்கியிலிருந்து தப்பியோடி வந்திருக்கிறாரே சக்திவர்மர் அவர் என்ன ஒரு மாதிரியோ..”

“ஆமாம்! அமுதா. அவர் ஒரு அரைப் பித்தர்தான். பாவம் நமது விஷ்ணுவர்த்தனருக்குச் சொந்தமான மணிமுடியை அபகரித்து இவர் தலையில் சூட்ட விசயாதித்தர் திட்டம் போட்டார். உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைத்தவன் உருப்படுவதில்லை. அதற்கேற்ப அவரும் பகைவர் கையில் சிக்கிவிட்டார். நமது சக்கரவர்த்தி பெருந்தன்மையுடன் சக்திவர்மரை ஏற்றுக் கொண்டு இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்.”

“இதெல்லாம் தெரிந்த செய்திதானே.”

“தெரியாத செய்தி ஏதேனும் நீ சொல்லப் போகிறாயா?”

“ஆமாம்!”

“அப்படி என்ன அபூர்வச் செய்தி..”

சுற்றும் முற்றும் ஒருமுறை அமுதவல்லி பார்த்துத் கொண்டாள். அந்த ஏகாந்தமான ஏரிக்கரையில் அவர்கள் இருவரையும் தவிர வேறு யாரும் இல்லை.

“நமது இளவரசி வீரமாதேவி இருக்கிறார் அல்லவா?”

“ஆமாம்! அவருக்கு என்ன?”

“அவரைச் சுற்றி இவர் வட்டமிடுகிறார்.”

“யார்?”

“வேறு யார்? சக்திவர்மர்தான்.”

“இதிலென்ன ஆச்சரியம். அவருக்கு நமது இளவரசி மாமன் மகள்தானே. முறைப்பெண்ணைத் தானே அவர் விரும்புகிறார்.”

“தன் மனதில் ஒருவனை வரித்துவிட்ட பிறகு தமிழ்ப் பெண் மற்றொருவனை மனதாலும் நினைக்கமாட்டாள்.”

“அடியே! இதென்ன.. பெரும் புதிர் போடுகிறாய்?”

“புதிரல்ல. நான் கூறுவது பெரும் உண்மை.”

“வீரமாதேவி யாரையேனும் காதலிக்கிறாரா?”

“ஆமாம்! உன் அறிவுக் கூர்மைக்கு ஒரு சோதனை வைக்கப் போகிறேன். வீரமாதேவியாரின் நெஞ்சில் இடம் பெற்றவர் யார் என்பதைக் கூறு பார்க்கலாம்.”

கவி குமுதசந்திரன் உண்மையிலேயே திகைத்துப் போனான். அரச குலத்தாருடன் நெருங்கிப் பழகும் அவனுக்குத் தெரியாத இரகசியம் எதுவுமே இருந்ததில்லை. எனவே அமுதவல்லி கூறிய செய்தி அவனைத் திடுக்கிட வைத்துவிட்டது.

“என்ன திகைக்கிறாய்?” என்றாள் அமுதவல்லி.

“இல்லை! நமது இளவரசி எந்த தேசத்து இளவரசரைக் காதலிக்கிறார் என்று புரியாமல்தான் விழித்துக் கொண்டிருக்கிறேன்.”

“இளவரசி என்றால் இளவரசரைத்தான் காதலிக்க வேண்டும் என விதி இருக்கிறதோ?”

“பின் என்ன? புலவனாகிய நான் புலவர் மகளாகிய உன்னைத்தானே காதலிக்கிறேன்.”

“உனக்கும் வேறு விதியில்லை. போனால் போகிறது என்று நானும் உன்னைக் காதலித்துத் தொலைக்கிறேன்.”

“நமது கதை இருக்கட்டும். இளவரசியின் கதையைச் சொல்லு.”

“நமது இளவரசி ஒரு ஏழைப் புலவனைக் காதலிக்கிறார்.”

“ஆ! உண்மையாகவா?” என வியந்து போனான் குமுதசந்திரன்.

“என்ன? இப்படி வாயைப் பிளக்கிறாய்?”

“அமுதவல்லி! நீ கூறுவது உண்மைதானே.”

“ஆம்! நானே என் இரு கண்களாலும் பார்த்தேன்.”

“எதைப் பார்த்தாய்?”

“அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பதை.”

“எவர்கள் இருவரும்..?”

“இளவரசி வீரமாதேவியும் கோதைமார்பரும்தான்.”

“எந்தக் கோதைமார்பர்..? ஆசிரியர் செயங்கொண்டாரிடம் கல்வி பயில வந்திருக்கிறாரே அந்தக் கோதைமார்பரிடமா?”

“ஆமாம்.”

“சீச்சி! கோதைமார்பன் யாரோ ஒரு அனாதை. அவனையாவது நமது இளவரசி காதலிப்பதாவது..”

“நான் சொன்னால் நீ நம்பமாட்டாய். நீயே நேரில் பார்த்தால்தான் நம்புவாய்.”

“எதைக் கொண்டு நீ இந்த முடிவுக்கு வந்தாய்?”

“பெண்ணின் உள்ளம் பெண்ணுக்குத்தான் தெரியும். அவர்கள் இருவரும் நடந்து கொள்ளுகிற முறை, பார்வை, பேச்சு ஆகியவற்றிலிருந்து அதை நான் ஊகித்தேன்.”

“பார்வை! பேச்சா?”

“ஆமாம்! நீ முதன் முதல் என்னைச் சந்தித்த போது எப்படிப் பார்த்தாயோ! அப்படி அவர்கள் ஒருவரையொருவர் பார்க்கிறார்கள். நீ எப்படித் தட்டுத்தடுமாறி சம்பந்தமில்லாமல் வார்த்தைகளை எப்படிக் கொட்டினாயோ அப்படி அவர்கள் பேசிக் கொள்கிறார்கள்.”

“இது மட்டும்தானா? இன்னும் ஏதேனும் உண்டா?”

"உண்டு. அடிக்கடி அவர்கள் சந்தித்துப் பேசுகிறார்கள்."

"ஓகோ! அப்படியா சேதி!"

# 51. அத்தை மகன்

வேங்கி இளவரசன் சக்திவர்மன் கங்கைகொண்ட சோழபுர அரண்மனைக்கு வந்து சேர்ந்தது முதல் அங்கு ஒரே குதூகலமும் கும்மாளமும் குடிகொண்டன. அவனது பைத்தியக்காரத்தனமான நடவடிக்கைகள் அனைவரையும் நகைக்கச் செய்தன.

போகட்டும் பாவம்! பித்தன் என்ற இரக்க உணர்ச்சியின் காரணமாக அவனை ஒருவரும் ஒன்றும் கூறுவதில்லை. ஆதலால், நாளுக்கு நாள் அவனது சேட்டைகள் மிகுந்து வந்தன. அதிலும் வீரமாதேவிக்கு அவனால் அதிக இன்னல்கள் ஏற்பட்டன. வீரமாதேவி செல்லுமிடத்திற்கெல்லாம் அவன் பின்தொடர்ந்து வந்து 'மாதேவி! மாதேவி!' எனப் பிதற்றிக் கொண்டிருந்தான். இதை வெளியில் கூறினாலோ வெட்கக்கேடு. என்ன செய்வதென்றே அவளுக்குத் தெரியவில்லை.

அப்படித்தான் ஒரு நாள் அவள் சயங்கொண்டாரின் இல்லத்திற்குப் புவனமாதேவியுடன் போயிருந்தாள். சயங்கொண்டாருடன் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது அவளது விழிகள் நாற்புறமும் யாரையோ தேடித் திரிந்தன. புவனமாதேவி தனது ஆசிரியருடன் ஏதோ இலக்கிய இன்பத்தில் ஆழ்ந்திருந்தாள். இந்த நல்லவேளையை நழுவவிடாது மெதுவாக எழுந்து அவ்விடத்தைவிட்டு அகன்று பின்புறத்தில் உள்ள சோலையை அடைந்தாள்.

திடீரென அருகில் உள்ள செடி மறைவில் இருந்து கலகலவென நகைத்த வண்ணம் சக்திவர்மன் எழுந்து நின்றான். சற்றும் எதிர்பாராத நிலையில் அவனை அங்குக் கண்டதும் வீரமாதேவி பயந்து போனாள்.

"மாதேவி! எதற்காகப் பயப்படுகிறாய்? அத்தை மகனைக் கண்டு அஞ்சலாமா? என்னை விட்டுவிட்டு நீ புறப்பட்டுப் போனாய். உடனே நான் குதிரை மீதேறி இங்கு வந்து சேர்ந்துவிட்டேன். இதோ பார். எப்படி மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்குகிறது" எனத் தொடர்பில்லாமல் ஏதேதோ பேசினான் சக்திவர்மன்.

இந்தப் பைத்தியத்தினிடமிருந்து எப்படித் தப்புவது என்பதையறியாது வீரமாதேவி திகைத்துக் கொண்டிருந்தாள்.

"மாதேவி! ஏன் என்னிடம் முகம் கொடுத்தே பேசமாட்டேன் என்கிறாய். என்னை ஒருமுறை பாரேன். யாரேனும் வந்துவிடுவதற்குள் உன்னிடம் ஒன்று சொல்லிவிடுகிறேன்" என்றான்.

அப்போது அருகில் யாரோ பலமாகச் செருமும் ஒலி கேட்டது. உடனே சக்திவர்மன் "சரி, மாதேவி! யாரோ வருகிறார்கள். பிறகு வந்து பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு ஓடி மறைந்தான். அவன் தலை மறைந்ததும் அங்குக் கோதைமார்பன் தோன்றினான்.

"நல்லவேலை செய்தீர்! நீர் வந்திராவிடில் அந்தப் பைத்தியத்தினிடமிருந்து இன்று நான் தப்பியிருக்கவே முடியாது" என்றாள் வீரமாதேவி.

"அப்படியொன்றும் நான் பெரிய உதவி செய்துவிடவில்லையே" என்றான் கோதைமார்பன்.

"வேங்கி மேல் படையெடுத்துப் போன அந்தப் பாழும் விக்கிரமாதித்தன், இது போன்ற பைத்தியங்களையெல்லாம் அழித்து ஒழிக்காது, பாதியிலேயே போரை நிறுத்திவிட்டு ஏன்தான் மறைந்தானோ?" என்றாள் வீரமாதேவி.

அவள் இவ்வாறு கூறுவதைக் கேட்டதும், கோதைமார்பனின் கண்களிலே குறும்பு மிளிர்ந்தது. தனக்குள்ளாகவே ஒருமுறை அவன் சிரித்துக் கொண்டான். "தேவி, விக்கிரமாதித்தனது வீரம் இதற்குத்தானா பயன்பட வேண்டும்" என்றான்.

"பின் வேறு எதற்குப் பயன்படும்? சோழர் படையுடன் பொருத ஆற்றாது அவன் எங்கேயோ ஓடி ஒளிந்துவிட்டானே" என்றாள். அவள் குரலில் ஏளனம் கலந்திருந்தது.

"விக்கிரமாதித்தனைப் பற்றி அப்படியெல்லாம் தப்புக் கணக்குப் போட்டுவிடாதீர்கள்" என்றான் கோதைமார்பன்.

"ஏதேது.. நீர் பேசுவதைப் பார்த்தால் குந்தள இளவரசனுடன் நெருங்கிப் பழகியிருப்பீர் போலத் தோன்றுகிறதே!"

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை இளவரசி. குந்தள இளவரசனைப் பற்றி நான் கேள்விப்பட்டதைத்தான் உங்களிடம் கூறினேன்" என்றான்.

“நீர் கேள்விப்பட்டது என்ன?”

“வீரனான குந்தள இளவரசன் யாருக்கும் அஞ்சி ஒளியவில்லை. தனது தந்தைக்குக் கொடுத்த வாக்கினைக் காக்க அஞ்ஞாதவாசம் செய்து வருகிறான்.. என்றுதான் நான் கேள்விப்பட்டேன்.”

இதற்கு ஏதோ மாற்றம் கூற வீரமாதேவி வாய் திறந்த நேரத்தில் யாரோ அவளை அழைக்கும் குரல் கேட்டது. “மாதேவி! மாதேவி!” என்று அழைத்தவாறு புவனமாதேவி அவர்கள் இருவரையும் நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

கோதைமார்பனும், வீரமாதேவியும் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டதும் அவள் முகத்தில் குறும்புப் புன்னகை மலர்ந்தது. அதைக் கண்டு நாணம் மேலிட வீரமாதேவி தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். கோதைமார்பன் அவ்விடத்தைவிட்டு அகன்றான். அவன் மறையும் வரை காத்திருந்த புவனமாதேவி தனது தோழியின் கையில் மெதுவாகக் கிள்ளி, “அடி மாதேவி! நீ பெரிய கள்ளி!” என்றாள்.

“ஏனடி, அப்படிக் கூறுகிறாய்? நான் என்ன செய்தேன்?” என்றாள் மாதேவி.

“என்ன செய்தேனா? இரு, இரு. அக்காவிடம் நீ செய்ததைக் கூறுகிறேன். அருகிலிருந்து பேசிக் கொண்டிருந்தவளை எங்கே என்று பார்த்தால், ஆளைக் காணவில்லை. இங்கு வந்து கோதைமார்பருடன்..”

“ஐயய்யோ! அபாண்டமாக ஏதேனும் கூறாதே. அந்த அரைப்பைத்தியமான சக்திவர்மனிடம் அகப்பட்டுக் கொண்டேன். நல்லவேளையாகக் கோதைமார்பர் வந்து என்னைக் காப்பாற்றினார். அவருக்கு நன்றி சொல்ல வேண்டிய முறையில் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தேன்.”

“இதுதான் சிறிது நேரமா? நான்தான் பார்த்துக் கொண்டே இருந்தேனே. எவ்வளவு நேரமாக நீங்கள் பேசிக் கொண்டிருந்தீர்கள். மாதேவி! எல்லாம் எனக்குத் தெரியும். என்னிடம் மறைக்காதே.”

“சீ! போடி! ஒய்யாரக்கள்ளி! உன்னைப் பற்றி எனக்குத் தெரியாது என்றா எண்ணிக் கொண்டிருக்கிறாய். அப்பாவியான எனது அண்ணனை எப்படியோ சொக்குப் பொடி தூவி மயக்கிவிட்டாய்..

ஐயோ, என்னைக் கிள்ளாதேடி. வலிக்கிறது. உள்ளதைச் சொன்னால் உனக்கேன் கோபம் வருகிறது'' என்றாள் வீரமாதேவி.

“போடி போ! ஏதாயினும் சொல்லிக் கொண்டிருப்பதுதான் உனது வேலை!!''

“நான் மட்டுமா சொல்கிறேன். அக்கா, அத்தை, அம்மா எல்லோருமே கூறுகிறார்கள்.''

இதனைக் கேட்டதும் புவனமாதேவி திடுக்கிட்டுப் போனாள். இரகசியமாக தாங்கள் நடத்திய காதல் நாடகத்தை மற்றவர்கள் எப்படியறிந்தார்கள் என அவள் திகைத்தாள்.

“புவனா! என்ன திகைக்கிறாய்! நீ ஒன்றுக்கும் பயப்படாதே. அவர்கள் அன்று விளையாட்டாக உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். வேறு ஒன்றும் அவர்களுக்குத் தெரியாது. ஆனால் என்னிடம் மட்டும் எதையும் மறைத்துவிட முடியும் என எண்ணாதே'' என்றாள்.

போன உயிர் திரும்பி வந்தது போலப் புவனமாதேவி பெருமூச்சுவிட்டாள். “அப்பப்பா! பொல்லாத குறும்புக்காரி'' என அவளுடைய வாய் முணுமுணுத்தது.

# 52. குல விளக்கு

வீரன் ஒருவன் புலிவேட்டைக்குக் கிளம்பினான். வழியிலே ஒரு புள்ளிமானைக் கண்டான். அதன் மருளும் விழிகளில் தன் மனதைப் பறிகொடுத்தான். புலிவேட்டையை மறந்துவிட்டுப் புள்ளிமானுடன் விளையாடத் தொடங்கிவிட்டான்.

இந்தக் கதையைப் போலக் கோதைமார்பனின் கதையும் அமைந்திருந்தது. அவன் வந்த காரியம் எவ்வளவு முக்கியமானது. அந்தக் காரியத்தை முடித்துவிட்டுத்தான் மறுவேலை என்ற உறுதியோடு கங்கைகொண்ட சோழபுரத்தில் காலடி எடுத்து வைத்த அவனது நிலை இப்போது எவ்வாறு இருந்தது? வந்த காரியத்தை அறவே மறந்துவிட்டு வேறு சொந்தக் காரியத்தில் ஈடுபட்டுவிட்டான். அவனது மனவுறுதி தளர்ந்து போனது. சுருங்கக் கூறின் 'தான் யார்' என்பதையே அவன் மறந்து போனான். அது அவனுடைய குற்றமல்ல. அவனை அவ்விதம் மெய்ம்மறக்க செய்த குற்றம் வீரமாதேவியையே சாரும்.

'கூடாது! கூடாது இனி இப்படியிருக்கக் கூடாது. சோழ இளவரசியின் விழியாகிய வலையில் சிக்கிக் கொள்ளக் கூடாது. இதுவரை ஏமாந்தது போதும். அந்த மாயவலை நம்மைச் சுற்றி வளைத்துக் கொள்ளுமுன் இந்த இடத்தைவிட்டு அகன்றுவிட வேண்டும். இல்லையென்றால் தந்தையிடம் நாம் கொடுத்த வாக்குறுதிக்குப் பங்கம் விளையும்' எனப் பலவாறு எண்ணமிட்டவாறு கோதைமார்பன் அம்மாந்தோப்பின் ஒரு மூலையில் அமர்ந்திருந்தான். தன்னை மறந்த நிலையில் சிந்தனையில் ஆழ்ந்திருந்த அவன் தனக்குப் பின்னால் ஏதோ நிழலாடுவதைக் கண்டான். திடுக்கிட்டுத் திரும்புவதற்குள் அவன் மேல் திடுமென மூவர் பாய்ந்தார்கள். நீண்ட நாட்களாக இரை தராததால் தினவெடுத்துப் போயிருந்த தனது தோள்களுக்கு அன்று அவன் இரை கொடுக்கத் தொடங்கினான். அவன் மேல் வந்து விழுந்த அந்த மூவரின் நோக்கமும் அவனை எப்படியாவது பிடித்துக் கட்டிவிட வேண்டும் என்பதாக இருந்தது. ஆனால் கோதைமார்பனின் வலிமை வாய்ந்த கரங்கள் கொடுத்த குத்துக்கள் அந்த எண்ணத்தை அறவே மறக்கும்படி செய்தன.

நீலகேசியின் வயிற்றில் திடுமெனக் கோதைமார்பன் ஒரு உதைவிட்டான். "ஐயோ! அப்பா!" என்று அலறிய வண்ணம் அவன்

சற்றுத் தூரத்தில் போய் விழுந்தான். விழுந்தவன் மறுகணம் பேச்சு மூச்சற்றுப் போனான். சில விநாடிகளில் சயசிங்கனும் தனது தோழனைப் பின்பற்றிப் போய்த் தலைகீழாக விழுந்தான். தனது தோழர்கள் இருவருக்கும் ஏற்பட்ட கதியைக் கண்டு கங்காகேத்தன் கலங்கினான். அப்படியே பின்வாங்கி ஓட முயன்றான். ஆனால் அவனை அவ்வளவு எளிதாகக் கோதைமார்பன் விட்டுவிடவில்லை. தப்பி ஓட முயன்ற அவனைப் பிடித்துக் கீழே தள்ளி அவனது மார்பின் மேல் அமர்ந்து கொண்டான்.

"பூனைக்குத்தான் மோப்பம் பிடிக்கும் ஆற்றல் உண்டு என்பார்கள். ஏடா! குள்ளநரி! உனக்கும் அந்த ஆற்றல் உண்டா?" என்று கூறி அவனது கழுத்தைத் தன் இரு கரங்களாலும் அழுத்திப் பிடித்துக் கொண்டான். "அடே! கங்காகேத்தா! என்னிடமே விளையாடத் துணிந்துவிட்டாயா? நீ எதற்காக வந்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். அது உனக்குக் கிடைக்காது. அது போகட்டும். இப்போது நான் கேட்பதற்கு மட்டும் பதில் கூறு" என்றான்.

கங்காகேத்தன் மௌனம் சாதித்தான். அவன் எண்ணத்தை உணர்ந்து கொண்டவன் போலக் கோதைமார்பன் கங்காகேத்தனின் கழுத்தைப் பலமாக நெறித்தான். கங்காகேத்தனின் விழிகள் வெளியே பிதுங்கி விழுந்துவிடுவன போல் காட்சி தந்தன. வேதனை பொறுக்க முடியாமல் அவன் அலறினான். கோதைமார்பன் தனது பிடியைச் சிறிது தளர்த்தினான்.

"அடே! நான் கேட்கும் கேள்விக்கு ஒழுங்காகப் பதில் கூறு. இல்லையேல் இப்படியே உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று கூறிவிட்டு ஒருகணம் கங்காகேத்தனை உற்று நோக்கினான்.

"என் தந்தை என்னிடம் ஒரு ரகசியத்தைக் கூறினார். அது பற்றிய உண்மையை நீயறிவாய் என்றார். உன்னை நானே தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் என்றிருந்தேன். நீயாக வந்து அகப்பட்டுக் கொண்டாய். கூறடா அந்த உண்மையை. குந்தள நாட்டின் குலவிளக்கைக் கவர்ந்த அந்தச் சோணாட்டுப் படைத்தலைவன் யார்?" என்றான். கோதைமார்பனின் குரலில் ஒலித்த பயங்கரத்தைக் கண்டு கங்காகேத்தன் கதிகலங்கிப் போனான்.

"ஐயா! என்னை மன்னித்துவிடுங்கள். நான் ஒரு பாவமும் அறியேன்" என்றான் கங்காகேத்தன்.

“அடே! மீண்டும் என்னுடன் விளையாடுகிறாயா?” என்று சினத்துடன் கோதைமார்பன் அவனை விழித்து நோக்கினான். அந்த விழிகளில் கூத்தாடிய கொலைவெறியைக் கண்டு கங்காகேத்தன் மிரண்டு போனான்.

“ஐயா, பதினெட்டு ஆண்டு காலமாக நான் யாரிடமும் கூறாது காப்பாற்றி வரும் அந்த இரகசியத்தை உங்களிடம் கூறினால் எனக்குக் கிடைக்கும் பரிசு என்ன?”

“நீ கெட்ட கேட்டிற்குப் பரிசு வேறு தேவையா? போகட்டும். அந்த இரகசியத்தை நீ ஒளியாது கூறுவாயானால் உனக்கு உயிர்ப்பிச்சை கிடைக்கும். அதுவும் நீ என்னை வளர்த்தவன் என்ற காரணத்திற்காகத்தான்” என்றான் கோதைமார்பன்.

இதைக் கேட்டதும் கங்காகேத்தன் தனது வாயைத் திறந்தான். மெதுவாக அவனது உதடுகள் அசைகின்றன. அந்த மாபெரும் இரகசியம் நெஞ்சிலிருந்து கிளம்பி மெல்ல வெளியே வந்து கொண்டிருக்கிறது. இதோ.. வந்துவிட்டது. கங்காகேத்தன் ஏதோ முணுமுணுக்கிறான்.

அந்தச் சொல் கோதைமார்பனின் காதில் விழுந்ததும் அவன் துள்ளிக்குதித்து எழுந்தான். அப்படியானால்.. அப்படியானால்.. புவனமாதேவி யார்? என்ற கேள்வி அவன் உள்ளத்தில் எழுந்தது. இன்னதென விவரிக்க இயலாத ஒரு இன்பம் அவனது நெஞ்சில் நிறைந்து வழிந்தது. இதற்கிடையில் கங்காகேத்தனும், அவனுக்குத் துணையாக வந்து உதை வாங்கிய சூரர்களும் எழுந்து ஓடுவதை அவன் காணவில்லை. இனி யார் எப்படிச் சீரழிந்தாலும் அவனுக்கென்ன? அவனது உள்ளத்தில் அவ்வளவு இன்பம் குடிகொண்டிருந்தது.

# 53. இரகசியம்

கோதைமார்பனாக மாறுவேடம் பூண்டிருப்பவன் யார் என்பதை இதற்குள் வாசகர்கள் ஒருவாறு ஊகித்து அறிந்து கொண்டிருப்பார்கள். மரணப்படுக்கையில் இருந்த தனது தந்தையிடம் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவே இத்தகைய வேடத்தை விக்கிரமாதித்தன் பூண்டான். மரணப்படுக்கையில் வைத்து ஆகவமல்லன் விடுத்த வேண்டுகோள் அவனது செவிகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தது.

“விக்கிரமா! நான் கூறப்போவதைக் கவனமாகக் கேள். கம்பிலியில் நடைபெற்ற போரில் உன் தாய் மடிந்த சோக நிகழ்ச்சி உனக்குத் தெரியும். இரண்டு வயதுச் சிறுமியான உன் தங்கையும் மடிந்துவிட்டாள் என நாமெல்லாம் கருதிக் கொண்டிருந்தோம். இல்லை. சோணாட்டுப் படைத்தலைவன் ஒருவன் அவளைச் சிறையெடுத்துச் சென்றான். அந்தக் குந்தள குலவிளக்கு சோணாட்டில் ஒளி வீசி எரிந்து கொண்டிருக்கிறது. ஆமாம்! மகனே! தான் யார் என்பதை அறியாமலேயே அவள் சோழ நாட்டில் வளர்ந்து வருகிறாள். அவளை மீட்டுக் குந்தள குலத்தின் தன்மானத்தைக் காக்க வேண்டியது உன் பொறுப்பு.”

இந்த மாபெரும் இரகசியம் ஆகவமல்லனைத் தவிர மற்றொருவருக்கும் தெரிந்திருந்தது. ஆம்! ஒற்றர் படைத்தலைவனான கங்காகேத்தனுக்கும் இந்த இரகசியம் தெரிந்திருந்தது.

கம்பிலி நகரத்தில் நடைபெற்ற போரில் குந்தள அரண்மனையைச் சோழர் படை சூழ்ந்து கொண்டது. அரச குடும்பத்தினரைப் பாதுகாக்கும் பொறுப்பை ஆகவமல்லன் கங்காகேத்தனிடம் ஒப்புவித்தான். இரகசிய சுரங்க வாயில் வழியாக அரசகுடும்பத்தினரைத் தப்புவிக்கக் கங்காகேத்தன் பெருமுயற்சி செய்தான். சோமேசுவரனும் விக்கிரமாதித்தனும் அப்போது சிறுவர்களாக இருந்தார்கள்.

அரண்மனையை முற்றுகையிட்டுத் தாக்கிக் கைப்பற்ற முயன்ற சோழ வீரர்களை எதிர்த்துக் குந்தள வீரர்கள் கடும் போரிட்டனர். ஆத்திரம் கொண்ட சோழ வீரர்கள் அரண்மனைக்கு எரியூட்டினர். சிறிது நேரத்தில் அரண்மனை பற்றியெரியத் தொடங்கியது.

நாலாபுறமும் தீ வேகமாகப் பரவியது. அரண்மனையைச் சுற்றி வளைத்த சோழ வீரர்கள் அம்புகளை எய்த வண்ணம் இருந்தனர். நெருப்பிலிருந்து தப்ப முயன்ற பலரும் பகைவரின் அம்புகளுக்கு இரையாயினர். அரண்மனையின் பல பகுதிகளும் தீயின் கோரமான தாக்குதலுக்கு இரையாகி இடிந்து விழுந்து, கொண்டிருந்தன.

அந்தப் பயங்கரமான சூழ்நிலையில் அரச குடும்பத்தினரைத் தப்புவிக்கும் முயற்சியில் கங்காகேத்தன் ஈடுபட்டான். அரண்மனையில் இருந்து வெளியே செல்ல இரகசியச் சுரங்க வாயில் ஒன்று இருந்தது. பெரும் சிரமத்துடன் அச்சுரங்க வாயிலைக் கண்டுபிடித்து அதன் கதவைத் திறந்தான். தரையில் அமைந்திருந்த அந்த வாயிலின் படிகள் கீழ்நோக்கிச் சென்றன. உள்ளே கும்மிருட்டு. இளவரசர்கள் இருவரையும் அவசர அவசரமாகத் தூக்கிக் கொண்டு கங்காகேத்தன் உள்ளிறங்கினான். இருளில் அவர்களை அமரச் செய்துவிட்டு மேலே ஏறிவரத் தொடங்கினான்.

ஆகவமல்லனின் பட்டத்தரசியர் இருவரும் சுரங்கப் படியில் இறங்க ஒருவர் பின் ஒருவராக அடியெடுத்து வைத்தனர். அப்போது எதிர்பாராத கோர விபத்து ஒன்று நேர்ந்தது. தீப்பற்றி எரிந்து கொண்டிருந்த உத்தரமொன்று மடமடவென முறிந்து கீழே விழுந்தது. சுரங்க வாயிலின் மீது விழுந்த அந்த உத்தரத்தின் அடியில் அரசிகள் இருவரும் சிக்கிக் கொண்டு வீறிட்டனர். விக்கிரமனின் அன்னையான சாங்கப்பை தன் கரத்தில் இருந்த பெண் மகவை வீசியெறிந்தாள். சற்று தூரத்தில் போய் விழுந்த குழந்தை வீறிட்டு அலறியது.

சுரங்கப் படிகளின் வழியாக மேலேறி வந்து கொண்டிருந்த கங்காகேத்தன் இந்த நிகழ்ச்சியைக் கண்டு திடுக்கிட்டுப் போனான். அரசிகளைக் காப்பாற்ற அவன் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. நெருப்பின் கொடிய நாக்குகள் அவனை அருகில் நெருங்கவொட்டாது செய்தன. சுரங்க வாயிலே பற்றியெரியும் போது அவனால் என்ன செய்ய முடியும்?

இதற்குள் கீழே சுரங்கத்தில் விடப்பட்டிருந்த சிறுவர்கள் அச்சத்தினால் அலறத் தொடங்கினர். இருதலைக் கொள்ளி எறும்பு போலக் கங்காகேத்தன் துடித்தான். மரணத்தின் கோரப்பிடியில் சிக்கித் துடிக்கும் அரசியரைக் காப்பாற்றக் கடைசியாக ஒரு முயற்சி செய்வதா? அல்லது குந்தள குலத்தை எதிர்காலத்தில் விளங்க வைக்க எஞ்சியிருக்கும் அரச குமாரர்களைக் காப்பாற்றுவதா? எதை

முதலில் செய்வது எனத் திகைத்தான். தீயில் சிக்கிவிட்ட அரசியரைக் காப்பாற்றுவது பெரும் கடினம். அந்த முயற்சியில் தனது உயிரையே இழக்கும்படி நேரலாம். அப்படியேதேனும் நேர்ந்துவிட்டால் இளவரசர்களின் கதி என்ன ஆகும்? இத்தகைய மனப் போராட்டத்தின் விளைவாக இளவரசர்களையாவது காப்பாற்றி மன்னரிடம் சேர்ப்பிக்க முடிவு செய்தவனாக வந்த வழியே திரும்பினான் கங்காகேத்தன்.

அவன் முயன்றிருந்தாலும் காக்க முடியாதவாறு அரசிகள் இருவரும் நெருப்பில் சிக்கி மடிந்தனர். சற்றுத் தள்ளி தரையில் கிடந்தவாறு வீறிட்டலறிக் கொண்டிருந்த குழந்தையை நாற்புறமும் நெருப்பு சூழ்ந்து கொண்டிருந்தது. அப்போது சோழ நாட்டு வீரர்கள் கதவை உடைத்துத் திறந்த வண்ணம் அந்த அறையில் நுழைந்தனர். அந்த வீரர்களுக்குத் தலைமை தாங்கி வந்த மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் ஒருகணம் திடுக்கிட்டு நின்றார். எரியும் நெருப்பின் நடுவே அழகிய குழந்தை ஒன்று அழுத வண்ணம் கிடந்த கோரக் காட்சி அவரைத் திடுக்கிட வைத்தது. மறுகணம் ஆபத்தைச் சற்றும் பொருட்படுத்தாமல் எரியும் நெருப்பில் பாய்ந்து குழந்தையை வாரியெடுத்து மீட்டார். குழந்தைப் பேறில்லாது வாடும் அவருக்குத் தேடக் கிடைக்காத செல்வம் கிடைத்தது போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. ஒரு பெண் மகவைக் குந்தள நாட்டில் கண்டெடுத்திருப்பதாக இராசாதிராச சோழரிடம் கூறி அதை வளர்க்க அனுமதியும் வாங்கிக் கொண்டார். ஆனால் அந்தக் குழந்தை.. குந்தள அரச குலக்கொழுந்து என்பதை அவர் அறிந்திருக்கவில்லை. ஏன் யாருமே அறிந்திருக்கவில்லை.

நீண்ட நெடுநாட்களுக்குப் பிறகு இந்த இரகசியம் கங்காகேத்தனுக்குத் தெரிய வந்தது. அதை அவன் ஆகவமல்லரிடம் தெரிவித்தான். ஆகவமல்லர் அடைந்த வேதனைக்கு அளவே இல்லை. தனது குலக்கொடி பகைவர் நாட்டில் வளருவதைக் கண்டு ஆகவமல்லரின் உள்ளம் பொருமியது. இந்தப் பொருமலும் வேதனையும் சாகும் வரை நீடித்தன.

# 54. ஆபத்து சூழ்கிறது

கடந்த கால நிகழ்ச்சிகளை எண்ணி வேதனையில் ஆழ்ந்திருந்த விக்கிரமனின் உள்ளம் தீவிரமாகச் சிந்தனை செய்யத் தொடங்கியது. கங்காகேத்தன் எதற்காகத் தன்னைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறான் என்பது ஓரளவு விக்கிரமனுக்குத் தெரிந்துதான் இருந்தது. குந்தள அரச சின்னங்களான இரத்தின ஆரத்தினையும், உடைவாளினையும் கவர்ந்து செல்லவே அவர்கள் வந்திருக்க வேண்டும். அந்த நோக்கத்துடன்தான் தன்னைத் தாக்கியிருக்க வேண்டும்.

சயங்கொண்டாரின் குடிலில் தங்கியிருப்பதை இந்தச் சதிகாரர்கள் எப்படியோ தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இனி அடிக்கடி நமது நடவடிக்கைகளைக் கண்காணிக்கத்தான் செய்வார்கள். இரத்தின ஆரமும் உடைவாளும் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் இடத்தை அறியும் வரை இந்த இடத்தைவிட்டுப் போகமாட்டார்கள். அதற்காக எதை வேண்டுமானாலும் செய்யத் துணிவார்கள். ஒரு முயற்சியும் பலிக்காது போனால் சோழர்களிடம் தன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டாவது போவார்கள். ஆம்! நிச்சயமாக அவ்வாறு செய்யத் தயங்கமாட்டார்கள்.

இவ்வாறெல்லாம் விக்கிரமாதித்தனின் சிந்தனை ஓடியது. பிறகு அவனது சிந்தனை புவனமாதேவியின்பால் திரும்பியது. துங்கபத்திரை ஆற்றங்கரையில் மரணத்தின் தலைவாயிலில் நின்ற வண்ணம் 'உனக்கொரு தங்கை இருக்கிறாள்' என ஆகவமல்லன் கூறியதை விக்கிரமாதித்தன் அவ்வளவாக நம்பவில்லை. ஏமாற்றத்திற்கும் வேதனைக்கும் நொந்து போன ஆகவமல்லர் ஏதோ பிதற்றுகிறார் என்று கூட அவன் எண்ணினான். தனது தங்கையை உயிரோடு காண்போம் என்ற எண்ணம் சற்றும் இல்லை. ஆனால் உயிர்ச்சிலையாக நடமாடும் ஓவியமாக, கண்டோர் உள்ளத்தினைக் கொள்ளை கொள்ளும் பேரழகியாகப் புவனமாதேவியைக் கண்ட போது அதுவும் அவள்தான் தன் தங்கை என்பதைக் கங்காகேத்தன் மூலமாக உறுதி செய்து கொண்ட பிறகு அவன் உள்ளம் நிலை கொள்ளாது தவித்தது. ஆண்டாண்டு காலமாகக் காத்துக் கிடந்து அன்புத் தங்கையைக் கண்டும் அளவளாவிப் பேச முடியாமல் 'உனது அண்ணன் நான்தான்' என்று கூற முடியாமல், 'தங்காய்' என வாய்

நிறைய அவளை அழைத்து மகிழ முடியாமல் தான் தனித்து நிற்பதை உணர்ந்த போது அவன் நெஞ்சு வெடித்துவிடும் போல இருந்தது.

புவனாவிடம் தான் யார் என்பதை எப்படி வெளிப்படுத்திக் கொள்வது? அப்படியே கூறினாலும் அதை அவள் நம்ப வேண்டுமே. மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் பேத்தியாக வளர்ந்து, சோழ இளவரசிகளின் உயிர்த் தோழியாக, அவர்களது அரவணைப்பில் இருந்து வரும் புவனமாதேவி இந்த உண்மையை அறிந்தால் என்ன நேரும்? திடுக்கிட்டுப் போவது மட்டுமல்ல அவளது சித்தமே கலங்கிப் போகும். கூடாது! கூடாது! அவசரம் கூடாது. தன்னந்தனியாக அவளைச் சந்தித்து மெதுவாக அவளிடம் தான் யார் என்பதைக் கூற வேண்டும். அவசரப்பட்டால் காரியம் கெட்டுப் போகும். ஆனால் மெதுவாகச் செயல்பட்டாலும் காரியம் கெட்டுப் போகும். அடிபட்ட நாகம் சீறும் என்பார்கள். அதுபோலத் தன்னிடம் உதை வாங்கிப் போயிருக்கும் கங்காகேத்தன் சும்மா இருக்கமாட்டான். சோழர்களிடம் தன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டாலும்விடுவான். சோழர்கள் கையில் சிக்கினால் என்ன நடக்கும்? வேவு பார்த்த குற்றத்திற்காக உடனே சிரச் சேதம் செய்துவிடுவார்கள். அல்லது சிறையில் அடைப்பர். பிறகு தங்கையைக் காப்பாற்றுவதோ தந்தைக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவதோ முடியாத காரியமாகிவிடும்.

இவ்வாறு எண்ணிய விக்கிரமனின் உள்ளத்தை மற்றொரு நினைவு கலக்கியது. ஆம்; அவனது அஞ்சாத நெஞ்சத்தை இரு கருவிழிகள் கலக்கின. ஒரு பேதைப் பெண்ணினால் நேரவிருக்கும் அபாயத்தை எண்ணி அவன் கலங்கினான். அவனது திட்டத்தினையும் உறுதியினையும் அந்த மங்கை நல்லாள் தவிடுபொடி ஆக்கிவிடுவாளோ என அவன் பயந்தான்.

அவன் பயந்ததற்குக் காரணமில்லாமல் போகவில்லை. சோழ இளவரசியான வீரமாதேவியின் நெஞ்சமாகிய சிறைக்குள்ளே அவன் சிறிது சிறிதாக அடைபட்டுக் கொண்டிருந்தான். அவனை அறியாமலேயே இது நடைபெற்றுக் கொண்டிருந்தது. சோழர்களின் சிறைச்சாலையைவிட சோழ இளவரசியின் நெஞ்சமாகிய சிறை கொடுமையானது அல்லவா? முன்னதில் சிக்கிக் கொண்டாலும் தப்பிச் செல்ல வழி உண்டு. ஆனால் பின்னதில் சிக்கினால் வாழ் நாள் முழுவதும் தப்ப முடியாதே. அதுமட்டுமா? சோழர்களின் ஆதிக்கப் பிடியில் இருந்து குந்தள நாட்டை விடுவித்து வராகக்

கொடியை மீண்டும் பறக்கவிடுவதாகத் தந்தை முன் செய்த சபதம் சிதறி அல்லவா போகும். சோழ இளவரசியின் காதலுக்கு அடிமையான பிறகு குந்தள நாட்டை விடுவிப்பது எப்படி? வராகக் கொடியைப் பறக்கவிடுவதுதான் எப்படி?

வீரமாதேவியின் விழிகள் விரிக்கும் வலையில் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது! ஆம்! கூடவே கூடாது. எப்படியாவது இங்கிருந்து விரைவில் தன் தங்கையுடன் தப்பிச் சென்றுவிட வேண்டும். எவ்வளவு விரைவில் சோழ நாட்டைவிட்டு வெளியேறுகிறோமோ அவ்வளவுக்கு நல்லது என விக்கிரமன் முடிவு செய்தான்.

# 55. காட்டில் வேட்டை

அன்று அந்தக் கானகமே அல்லோல கல்லோலப்பட்டது. கொம்புகள் ஊதப்படும் ஒலியும், தாரகைகள் அதிரும் ஒலியும், குதிரைகள் விரைந்தோடும் ஒலியும் ஒன்றாகக் கலந்து எழுந்தன. ஆம்! இளவரசர்கள் இருவரும் நீண்ட நாட்களுக்குப் பிறகு அந்தக் காட்டில் வேட்டையாட வந்திருந்தார்கள். அதிலும் இளவரசன் அதிராசேந்திரன் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்தான்.

"விஷ்ணுவர்த்தனா! அதோ பார். ஒரு மான் துள்ளியோடுவதை. அதைப் பிடிக்க வேண்டும். நான் இந்தப் பக்கமாகப் போகிறேன். நீ அந்தப் பக்கமாகப் போ. இருவரில் யார் அதைப் பிடிக்கிறார்கள் என்று பார்ப்போம்" என்றான்.

மறுகணம் இருவரது குதிரைகளும் வெவ்வேறு திசைகளில் பறந்தன. அந்த மானோ பொல்லாத மானாக இருந்தது. இருவரது கண்களுக்கும் அகப்படாது துள்ளியோடி மறைந்துவிட்டது. மானை விரட்டிய வண்ணம் நீண்ட தூரம் வந்துவிட்ட விஷ்ணுவர்த்தனன் கானகத்திலிருந்து வெளியேற வழியேதும் காணாது திகைத்தான். அவன் ஒரு பெரும் அரச மரத்தின் அடிக்கு வந்து சேர்ந்திருந்தான். பிரமாண்டமாகத் தோற்றமளித்த அந்த மரம் அவனைத் திகைக்க வைத்தது. குதிரையை மரத்தடியில் நிறுத்திவிட்டு, ஏதாவது வழி புலப்படுகிறதா என்பதைக் காண அந்த மரத்தின் மீது அவன் ஏறலானான். அந்த மரத்தில் பாதி தூரம் வரை அவன் ஏறிய பிறகு ஒரு பொந்தைக் கண்டான். அதைப் பிடித்த வண்ணம் மேலேற முயன்ற விஷ்ணுவர்த்தனின் விழிகளில் வியப்புத் தோன்றியது. ஆம்! அந்த மரப்பொந்திலிருந்து ஏதோ ஒரு பொருள் ஒளிவீசிக் கொண்டிருந்தது. அது என்னவென்று காண உள்ளே கையைவிட்ட விஷ்ணுவர்த்தனன் திடுக்கிட்டுப் போனான். மன்னர்கள் அணியும் இரத்தின ஆரம் ஒன்றும், வீரவாள் ஒன்றும் அவன் கரத்திற்கு அகப்பட்டன. கானகத்தின் நடுவேயுள்ள இந்த மரப்பொந்தில் மணிமுடியும் வாளும் மறைத்து வைக்கப்பட்டிருந்தது அவனுக்கு அளவற்ற வியப்பை அளித்தது. இதை ஒளித்து வைத்தவர்கள் யாராக இருக்கக் கூடும்; அவர்கள் ஏன் அவற்றை இங்கு ஒளித்து வைக்க வேண்டும் எனப் பலவாறு எண்ணமிட்டவனை அந்த மணிமுடியின் மீதும், உடைவாளின் மீதும் பொறிக்கப்பட்டிருந்த உருவம் கவர்ந்து

இழுத்தது. ஆ! இதென்ன இலச்சினை! வராக இலச்சினை அல்லவா. வராக இலச்சினை குந்தளர்களின் இலச்சினை அல்லவா. அப்படியானால் இவைகள்..?

சரி, இவைகள் இங்கேயே இருக்கட்டும். யாரேனும் வருவதற்குள் இறங்கிவிடுவோம் எனத் தீர்மானித்தவனாய் அந்தப் பொருட்களை மீண்டும் அவைகளின் இருப்பிடத்திலே வைத்துவிட்டுக் கீழிறங்கினான். பிறகு தனது குதிரை மீது பாய்ந்தேறிய வண்ணம் விஷ்ணுவர்த்தனன் அதை விரைந்து செலுத்தினான். அவன் கண்ட வியப்பான காட்சியைக் குறித்து அவனது உள்ளம் அதைவிட விரைவாகச் சிந்தித்துக் கொண்டிருந்தது.

சிறிது தூரம் சென்றதும் தன்னெதிரே மூவர் வந்து கொண்டிருப்பதை அவன் கவனித்தான். அவர்களும் இவனைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றார்கள்.

“நீங்கள் யார்? இந்த அடர்ந்த கானகத்தின் நடுவே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என்றான் விஷ்ணுவர்த்தனன்.

அதில் சிறிது வயது முதிர்ந்தவனாகக் காணப்பட்ட ஒருவன் முன் வந்து வணங்கி, “நாங்கள் மருத்துவர்கள். மூலிகை ஒன்றைத் தேடித் திரிந்து கொண்டிருக்கிறோம்” என்றான்.

“ஓகோ! அப்படியா!” என்று கூறிய விஷ்ணுவர்த்தனன் அந்த மூவரையும் ஒருகணம் கூர்ந்து கவனித்துவிட்டு அவ்விடத்தைவிட்டு அகன்றான்.

இதற்கு முன் இவர்களை எங்கேயோ சந்தித்திருக்கிறோமே என்ற நினைவு அவனுக்கு வந்தது. நெடுநேரம் யோசித்தான். திடீரென அவனின் நினைவிற்கு அந்த நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வந்தது. ஆம்! அன்றொரு நாள் அங்காடி வீதியில் கோதைமார்பனைப் பின்தொடர்ந்து இந்த மூவரும் வந்து கொண்டிருந்தார்கள். இவர்கள் இந்தக் காட்டில் மூலிகை தேட வந்தவர்களாகத் தோன்றவில்லை. இந்த இரத்தின ஆரத்தினையும் உடைவாளையும் தேடி வந்தவர்களாகவே இருக்க வேண்டும். இது சரியாக இருக்குமானால் கோதைமார்பனுக்கும் இவர்களுக்கும் ஏதோ பகை இருக்க வேண்டும். அதுவும் இந்தப் பொருட்களைக் குறித்ததாக இருக்கலாம். அப்படியானால் கோதைமார்பன் யாராக இருக்கக்கூடும்? போலி வேடதாரியாக இருக்கக்கூடுமா? அவன் எதற்காக இங்கு

வந்திருக்கிறான். வேவு பார்க்க வந்திருக்கிறானா? வேவு பார்க்க வந்தவனிடம் குந்தள அரசச் சின்னங்கள் இருப்பானேன்? அவன் அதைக் காட்டில் மறைப்பானேன்? அதைத் தேடி மூவர் அலைவதேன்? இப்படி அடுக்கடுக்கான கேள்விகள் விஷ்ணுவர்த்தனனின் உள்ளத்தில் எழுந்தன.

# 56. சதித்திட்டம்

நண்பகல் பொழுதில்கூட அந்தக் கானகத்தில் இருள் சூழ்ந்திருந்தது. வானுறவோங்கி நின்ற மரங்கள் அடர்த்தியாக வளர்ந்திருந்ததின் காரணமாகப் பகலவனின் ஒளிக் கிரணங்கள் அக்காட்டில் ஊடுருவ முடியவில்லை. பறவைகள் எழுப்பிய ஒலியும், அங்குமிங்கும் மிருகங்கள் திரிவதால் ஏற்படும் சலசலப்பையும் தவிர வேறு சப்தம் எதுவும் அக்காட்டில் இல்லை.

அமைதி நிலவிய அந்தக் காட்டின் நடுவே திடீரென ஏதோ பேச்சுக் குரல் கேட்கிறது. மனிதர் நடமாட அஞ்சும் அக்காட்டில் பேச்சுக் குரல் கேட்பது நமக்கு அதிசயத்தைத் தருகிறது. பேச்சுக் குரல் வந்த திசையை நோக்கிச் செல்கிறோம். அங்கே ஒரு மரத்தடியில் சிலர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். சற்று நெருங்கி உற்று நோக்குகிறோம். இந்த முகங்களை இதற்கு முன் எங்கேயோ பார்த்த நினைவு நமக்கு வருகிறது. ஆம்! நமது பழைய நண்பர்கள்தான். கங்காகேத்தனும் அவனது தோழர்களையும் தவிர வேறு யார் இந்தக் காட்டில் இந்த வேளையில் கூடியிருக்க முடியும்.

நீலகேசி பேசிக் கொண்டிருந்தான்: "கங்காகேத்தரே உம்மால்தான் அவன் அன்று உயிரோடு தப்பினான். அவனுக்கு எத்தகைய ஆபத்தினையும் விளைவிக்கக் கூடாது என்று நீர் கண்டிப்பாகக் கட்டளையிட்டிருந்ததால்தான் இந்த விஷக் கத்தியை அவன் உடலில் பாய்ச்சாமல் இருந்தேன்" என்று கூறிய வண்ணம் வேலைப்பாடு அமைந்த ஒரு கத்தியை எடுத்துக் காட்டினான். அப்படிக் காட்டும் போது நீலகேசியின் கண்களிலே கொலை வெறி கூத்தாடியது.

"நீலகேசி! நீ கூறுவது சரிதான். விக்கிரமனைக் கொல்ல வேண்டாம் என நான் கூறியிருந்ததால்தான் அன்று நாம் அவமானத்துடன் திரும்ப வேண்டியிருந்தது. நம் கையால் எடுத்து வளர்த்த பிள்ளையாயிற்றே என்று அன்று சற்று இரக்கம் காட்டினேன். அது மட்டுமல்ல. அவனைக் கொல்ல நான் விரும்பாததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. குந்தள அரசச் சின்னங்களான இரத்தின ஆரமும் உடைவாளும் இன்றும் அவனிடம்தான் உள்ளன. அவற்றை அவன் எங்கேயோ மறைத்து வைத்திருக்கிறான். அவை ஒளித்து வைக்கப்பட்டிருக்கும் இடத்தை நாம் அறியும் வரை அவன் உயிரோடு இருக்க வேண்டும். இந்தக் காட்டில்தான் அவன் அப்பொருள்களை

மறைத்து வைத்திருக்கிறான். எப்படியும் அவற்றை எடுத்துப் போக இங்கு வருவான். அப்போது அவனை வஞ்சம் தீர்த்துக் கொள்ளலாம். அதுவரை உங்கள் ஆத்திரத்தை அடக்கி வையுங்கள்" என்றான் கங்காகேத்தன்.

"அப்படியானால் அவன் இந்தக் காட்டிற்கு வரும்வரை நாம் இங்கேயே அலைந்து திரிய வேண்டியதுதானா?" என்றான் நீலகேசி.

"அவசரப்படாதே! நான் சொல்லப் போவதை முழுவதுமாகக் கேள்!" என்ற பூர்வப் பீடிகையுடன் கங்காகேத்தன் பேசத் தொடங்கினான்.

"நண்பர்களே! சில நாட்களுக்கு முன்பு இதே காட்டில் கூடிய போது நான் பேசிய பேச்சு உங்களுக்குப் புரியாத புதிராக இருந்தது. விக்கிரமன் எப்படியும் இங்கு வந்து சேருவான் என்று நான் சொன்னேன். நீங்கள் நம்பவில்லை. ஆனால் நான் சொன்னபடி அவன் வந்து சேர்ந்தான். அவன் எதற்காக இங்கு வந்திருக்கிறான் என்பதை அன்று நான் உங்களிடம் கூறவில்லை. இப்போது அந்த மாபெரும் இரகசியத்தைக் கூறப் போகிறேன். கவனமாகக் கேளுங்கள்" என்று கூறி நிறுத்தினான்.

நீலகேசியும் சயசிங்கனும் அடங்காத ஆர்வத்துடன், நிமிர்ந்து உட்கார்ந்தனர். கங்காகேத்தன் சொல்லப் போகும் இரகசியத்தை அறிய அவர்கள் காதுகள் துடித்தன. கங்காகேத்தன் தொடர்ந்தான்.

"நண்பர்களே! கம்பிலி நகரத்தில் நடைபெற்ற கடும் போரில் குந்தள அரசியர்கள் இருவரும் இரண்டு வயதுக் குழந்தையான இளவரசியும் மடிந்த கதை உங்களுக்கு நினைவிருக்கும். அந்த பயங்கரமான இரவை நினைத்தால் இன்றும் என் உடல் நடுங்குகிறது. நாற்புறமும் பற்றியெரியும் தீயின் நடுவில் இருந்தும், பாய்ந்து வரும் பகைவர்களின் அம்புகளுக்கு நடுவில் இருந்தும் இளவரசர்களைக் காப்பாற்றினேன். என் உயிரையும் திரணமாக மதித்து எமன் வாயில் இருந்து அவர்களை மீட்டேன். ஆனால் அரசியர்கள் இருவரையும் இளவரசியையும் என்னால் மீட்க முடியாது போயிற்று. தீயில் கருகி அவர்கள் மடிவதை என் கண்ணாலேயே பார்த்துவிட்டுத் திரும்பினேன்" என்று கூறிவிட்டுக் கங்காகேத்தன் நிறுத்தினான். கடந்த கால நினைவு அவனுக்கு எழுந்ததோ என்னவோ? அவன் உடல் சிலிர்த்தது. சிறிது நேரம் அமைதியாக இருந்துவிட்டு அவன் தொடர்ந்தான்.

“கண்ணால் கண்டதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரித்தறிவதே மெய் என்பார்கள். என்னைப் பொறுத்தவரை அது உண்மையாயிற்று. நெருப்பின் கோர நாவுகளுக்கு அரசிகளும், இளவரசியும் இரையானதைக் கண்டதாகக் கூறினேன் அல்லவா? அது ஒருவிதத்தில் பொய்த்துப் போயிற்று. அரசிகள் இருவரும் மாண்டார்களே தவிர இளவரசி சாகவில்லை” என்றான்.

சயசிங்கனும் நீலகேசியும் திடுக்கிட்டுப் போயினர். “என்ன! குந்தள இளவரசி உயிருடன் இருக்கிறாரா?” என வினவினர்.

“ஆம்! நண்பர்களே! அந்த இரண்டு வயதுக் குழந்தை இன்று பொங்கும் பேரழகுடன் பருவமங்கையாகத் திகழ்கிறாள்” என்றான்.

“அப்படியானால் இப்போது இளவரசி எங்கே இருக்கிறார்?”

“அவசரப்படாதீர்கள்! நான் கூறப் போவதை முழுவதும் கேளுங்கள். இளவரசர்கள் இருவரையும் காப்பாற்றி ஆகவமல்லரிடம் சேர்ப்பித்துவிட்டு நடந்த கதையைக் கூறினேன். மனைவிகளையும் ஒரே மகளையும் இழந்த அவர் அளவு கடந்த துக்கத்தில் ஆழ்ந்தார். அப்போது எதிர்பாராதவிதமாக ஒரு செய்தி கிடைத்தது. சோழர் படைத் தலைவன் ஒருவன் எரியும் அரண்மனையில் இருந்து ஒரு குழந்தையைக் காப்பாற்றி எடுத்துச் சென்றிருக்கிறான் என ஒற்றர்கள் கூறினார்கள். அந்த மர்மத்தை அறிந்து வருமாறு ஆகவமல்லர் என்னை ஏவினார். சோழ வளநாடு முழுவதும் தேடியலைந்து துப்புத் துலக்கினேன். இறுதியில் உண்மை தெரிய வந்தது. சோழர் தளபதியாகிய மதுராந்தகத் தமிழ்ப்பேரரையன் ஒரு குழந்தையைக் கண்டெடுத்து வளர்த்து வருவதாக ஒரு செய்தி கிடைத்தது. மதுராந்தகத் தமிழ்ப்பேரரையன் அப்போது கங்க நாட்டின் மன்னனாக முடிசூடப்பட்டிருந்தான். எனவே கங்கநாடு சென்றேன். அத்தனை காலமாக நான் தேடியலைந்தது வீண் போகவில்லை. பேரரையன் வளர்த்து வரும் குழந்தை குந்தள இளவரசியே என்பதை அறிந்தேன். ஆகவமல்லரிடம் திரும்பிச் சென்று விவரத்தைக் கூறினேன். தனது மகள் உயிரோடு இருப்பதில் அளவற்ற மகிழ்ச்சியும் பகைவர் நாட்டில் அவள் வளர்வதில் அளவற்ற துக்கமும் அவருக்கு ஏற்பட்டது. அடுத்து அடுத்துப் போர்கள் தொடர்ந்து நடைபெற்ற காரணத்தால் இளவரசியை மீட்கும் திட்டத்தைச் செயல்படுத்த முடியாமல் போனது. இதெல்லாம் பழைய கதை. இனிமேல் நான் கூறப் போவதுதான் முக்கியமானது. ஆகவமல்லருக்கும் எனக்கும் மட்டுமே தெரிந்த இந்த

இரகசியம் விக்கிரமனுக்கும் தெரிந்திருக்கிறது. சாவதற்கு முன் ஆகவமல்லர் அவனிடம் இதைக் கூறி இருப்பார் என ஊகிக்கிறேன். தனது தங்கையை மீட்கும் நோக்கத்துடன் அவன் சோழ நாடு வந்திருக்கிறான். எனவே நமக்கு மற்றொரு பணியும் சேர்ந்திருக்கிறது. ஆம்! குந்தள இளவரசியை மீட்கும் வேலையையும் நாமே செய்ய வேண்டும். இதற்கான திட்டங்களை இப்போதே நாம் வகுத்துக் கொள்ள வேண்டும்" என்றான் கங்காகேத்தன்.

"வந்த வேலையை மறந்துவிட்டுப் பந்தல் காலைக் கட்டிக் கொண்டு நின்றானாம் ஒருவன். அதைப் போல நீர் கூறுவதும் உள்ளது" என்றான் நீலகேசி. நீலகேசி கூறுவதை ஆமோதிப்பது போலச் சயசிங்கன் மௌனம் சாதித்தான்.

"நான் கூறியதை மேற்போக்காகப் பார்த்தால் அப்படித்தான் தெரியும். இங்கிருந்து இரத்தின ஆரத்தினையும் வீரவாளையும் கைப்பற்றிக் கொண்டு போவது முக்கியம்தான். ஏனெனில் குந்தள நாட்டின் அரசுரிமைச் சின்னங்கள் அவை. ஆனால் குந்தள இளவரசியை நம்முடன் சேர்த்துக் கொண்டோமானால் அதைவிட மகத்தான பேரரசு நமது காலடியில் விழும்" என்று கூறி நிறுத்தினான் கங்காகேத்தன்.

"கங்காகேத்தரே! பூடகமாகவே நீர் பேசிக் கொண்டு வருகிறீர். நீர் கூறுவது ஒன்றுமே எங்களுக்குப் புரியவில்லை" என்றான் நீலகேசி.

"நீலகேசி! இதைக் கேள்! ஒற்று வேலை செய்பவன் கண்ணையும் காதையும் மட்டும் பயன்படுத்தினால் போதாது. இவை இரண்டிற்கும் அப்பால் ஊகித்து அறியும் சக்தியையும் கொண்டிருக்க வேண்டும். சோழ நாட்டில் இத்தனை நாட்களாக உலவித் திரிந்தும் ஒரு செய்தியை நீங்கள் கேள்விப்படவில்லையா? கங்கைகொண்ட சோழபுரத்து மக்கள் நாற்சந்திகளில் கூடும் போதெல்லாம் காதோடு காதாகப் பேசிக் கொள்ளும் செய்தி உங்கள் காதில் விழவில்லையா?" என்றான் கங்காகேத்தன்.

"சோழ நாட்டு மக்கள் பேசிக் கொள்ளும் அந்தப் பரம ரகசியம்தான் என்ன?"

"நீலகேசி! இதைக் கேள்! விதி விதி என்று கூறுகிறார்களே அந்த விதியில் எனக்கு நம்பிக்கை கிடையாது. ஆனால் அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டதும் விதியின் விசித்திர விளையாட்டை

எண்ணித் திடுக்கிட்டுப் போனேன். ஆம் நண்பர்களே! பரம்பரைப் பகைவனின் மகனை நமது இளவரசி காதலிக்கிறாள்” என்றான் கங்காகேத்தன்.

“என்ன? யாரை?” என்ற வியப்பொலிகள் எழுந்தன.

“பதறாதீர்கள் நண்பர்களே! எந்த மரத்தில் படருகிறோம் என்று தெரியாமலேயே நமது குலக்கொடி நச்சு மரத்தில் படரத் தொடங்கிவிட்டது. ஆம்! குந்தள இளவரசி தன்னைத்தானே அறிந்து கொள்ளாத நிலையில் சோழ இளவரசனைக் காதலிக்கத் தொடங்கியிருக்கிறாள். அதுவும் ஒருவிதத்தில் நன்மைக்குத்தான். கேளுங்கள்! இனி நாம் மிக்க விழிப்புடன் செயல்பட வேண்டும். சோழ நாட்டின் மிகப்பெரிய இடத்தில் நமது இளவரசி அமர்ந்திருக்கிறாள். இது நமக்கு ஒரு வாய்ப்பாகும். அவள் யார் என்பதை இளவரசியிடம் விளக்கினால் நமது பக்கம் அவள் நிச்சயமாக மாறக்கூடும். அந்த வேலையை ஒருவர் மேற்கொள்ள வேண்டும். மற்றொருவர் இந்தக் காட்டிலேயே தங்கியிருக்க வேண்டும். மறைத்து வைத்த பொருள்களை எடுத்துச் செல்ல விக்கிரமன் எப்படியும் இந்தக் காட்டிற்கு வருவான். அப்போது அவனைத் தீர்த்துக்கட்டிவிட்டு பொருள்களை அபகரிக்க வேண்டும். மூன்றாவது ஆள் எப்போதும் செயங்கொண்டாரின் தமிழ்க்குடிலுக்கு அருகே இருந்து விக்கிரமனைக் கண்காணித்து அவ்வப்போது மற்றவர்களுக்குச் செய்தி கொடுத்து வர வேண்டும். இதுதான் எனது திட்டம்” என்றான் கங்காகேத்தன். மற்ற இருவர்களும் அதை ஏற்கும் பாவனையில் தலையசைத்தனர்.

“நண்பர்களே! முதல் பணி மிகக் கடினமான பணி. எனவே அதை நானே ஏற்றுக் கொள்கிறேன். குந்தள இளவரசியை நமது பக்கம் கொண்டு வரும் பணியில் நான் வெற்றியடைந்தால் இந்த சோழ வளநாட்டையே நமது காலடிக்குக் கொண்டு வந்ததாகக் கருதிக் கொள்ளுங்கள். அதை எப்படிச் செய்வாய் என்று மட்டும் கேட்காதீர்கள். எல்லாவற்றையும் பிறகு கூறுகிறேன். சயங்கொண்டார் குடிலில் நீலகேசி இருக்கட்டும். இந்தக் காட்டில் சயசிங்கன் இருக்கட்டும். உங்களுக்கு இடப்பட்ட பணியை மட்டும் கவனமாகச் செய்யுங்கள். ஒவ்வொரு அமாவாசை நள்ளிரவிலும் இங்கே கூடுவோம்” என்றான் கங்காகேத்தன்.

# 57. காதல் ஓலை

“தேவி! சில நாட்களாகவே உங்கள் முகம் வாட்டமாகவே காணப்படுகிறது ஏன்?”

“போடி குறும்புக்காரி! எனக்கேனடி வாட்டமும் வேதனையும்.”

“நீங்கள் மறைத்தாலும் உங்கள் பேச்சும் செய்கையும் உங்களைக் காட்டிக் கொடுத்துவிடுகின்றனவே.”

“அப்படி என்னடி பேசினேன்.. என்ன செய்தேன்?”

“தேவி! பாம்பின் கால் பாம்பறியும் என்பார்கள். ஒரு பெண்ணின் மனது மற்றொரு பெண்ணிற்குத்தான் புரியும். என்னிடமே மறைக்கிறீர்களே.”

“அடி கள்ளி! அப்படிப்பட்ட இரகசியம் என்னதான் உனக்குத் தெரிந்துவிட்டது.”

“சொல்லட்டுமா! சொன்னால் கோபிக்கமாட்டீர்களே.”

“நிச்சயமாகக் கோபிக்கமாட்டேன்.”

“ஐம்பத்தாறு தேசத்து இராச குமாரர்களையும் நிராகரித்த தங்கள் உள்ளம் ஒரு ஏழைப் புலவனை ஏற்றுக் கொண்டதாக..”

“என்னடி சொன்னாய்..!” என்ற போலிக் கோபத்துடன் வீரமாதேவி எழுந்து கையை ஓங்கினாள். அதிலிருந்து தப்ப அமுதவல்லி எழுந்து ஓடினாள். அவளை விரட்டிய வண்ணம் மாதேவி துரத்தினாள். அவர்களின் சிரிப்பொலி அந்தச் சோலையெங்கும் எதிரொலித்தது.

“தேவி! ஒன்று சொல்கிறேன் கேட்கிறீர்களா?”

“என்னடி..”

“அந்தக் கோதைமார்பரைப் பார்த்தால் புலவர் வீட்டுப் பிள்ளை போலவா தோன்றுகிறது? ஏதோ அரச குடும்பத்துப் பிள்ளை போலத்தான் தோன்றுகிறது. ஏதோ ஒரு காரணத்திற்காக இப்படி வேஷம் போடுகிறார் என எண்ணுகிறேன்.”

“அவ்வளவு நிச்சயமாக எப்படியடி கூறுகிறாய்?”

“அவரும் அப்படித்தானம்மா சந்தேகப்படுகிறார்.”

“அவர் என்றால் எவரடி?”

“அவர்தானம்மா” எனச் சிணுங்கினாள் அமுதவல்லி. வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது.

“ஓகோ! குமுதசந்திரனா?”

“ஆமாம்.”

“அவர் என்னடி கூறினார்?”

“கோதைமார்பரைப் பற்றிய இதே சந்தேகம் அவருக்கும் வந்திருக்கிறது.”

“அப்படியானால் கோதைமார்பர் யாராக இருக்கும் என ஊகிக்கிறாய்?”

“யாராக இருந்தாலும் என்னம்மா? மனதுக்குப் பிடித்திருக்கிறதா இல்லையா?”

“பார்த்தாயா.. பழையபடியும் கேலியை ஆரம்பித்துவிட்டாயே..”

“இல்லையம்மா! இனிமேல் கேலி செய்யவில்லை. இனி செயலில் இறங்கப் போகிறேன்.”

“என்னடி உளறுகிறாய்?”

“ஆமாம் தேவி! உங்கள் காதலை நிறைவேற்றி வைக்கும் வரை இனி ஓய்வு ஒழிச்சல் கிடையாது.”

“ஐயய்யோ! உன்னிடம் போய்ச் சொல்லித் தொலைத்தேனே. இந்த விஷயம் வெளியில் தெரிந்தால் என்ன ஆகும்?”

“என்ன ஆகும்! ஒன்றும் ஆகாது. ஒரு நல்ல முகூர்த்தத்தில் திருமணம் நடக்கும்.”

“போடி பைத்தியக்காரி! இந்த உலகம் இதனை ஏற்குமா? சக்கரவர்த்திதான் இதற்குச் சம்மதமளிப்பாரா?”

“அதற்குள் ஏன் தேவி சோர்ந்துவிட்டீர்கள். எங்களைப் பாருங்கள். நானும் அவரும் ஊரைப் பற்றிக் கவலைப்படுகிறோமா? உலகத்தைக் குறித்துக் கவலைப்படுகிறோமா?”

“உங்கள் கதை வேறு. என் கதை வேறு. உண்மையைச் சொல்லப் போனால் உன் மீது எனக்குப் பொறாமையாக இருக்கிறது.”

“ஐயோ! என் மீது ஏனம்மா பொறாமை?”

“உன்னைப் போல நானும் ஒரு புலவர் வீட்டில் பிறந்திருந்தால் கோதைமார்பரை மணக்கத் தடையேதும் இருந்திருக்காது. அரண்மனையிலே பிறந்துவிட்டேன். அதனால்தான் இப்படி அவதிப்படுகிறேன்..” இப்படிக் கூறுகையில் வீரமாதேவியின் விழிகளில் முத்துக்கள் கோர்த்தன.

“தேவி! இதென்ன, இதற்குப் போய் இப்படிக் கலங்குகிறீர்கள்?”

“இல்லை அமுதா! அன்பே உருவான அக்காளிடமும் அண்ணனிடமும் என் அன்னையிடமும் என் வேதனையை வெளியிட முடியாமல் தவிக்கிறேன். இன்றுதான் உன்னிடம் கூறுகிறேன். காதல் நோயின் கொடுமை இன்னதென அறியாது இத்தனை நாள் வளர்ந்தேன். இன்று மனதில் அவருக்கு எப்படியோ இடம் கொடுத்துவிட்டேன். எப்படி இடங்கொடுத்தேன் என்பது எனக்கே புரியவில்லை. என் காதல் நிறைவேறுமா என எனக்கே சந்தேகமாக இருக்கிறது.”

“தேவி! கலங்காதீர்கள். உங்கள் காதல் நிறைவேறும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. கோதைமார்பர் யார் என்பதை விரைவில் கண்டு பிடித்து உங்களுக்குத் தெரிவிக்கிறேன். அதுவரை சற்றுப் பொறுத்திருங்கள்.”

“நல்லது! அமுதவல்லி! உன்னைத்தான் நம்பியிருக்கிறேன்.”

“என்னை நம்பினோர் கெட்டதில்லை தேவி! வேண்டுமானால் குமுதசந்திரனைக் கேட்டுப் பாருங்கள். என் பெருமை தெரியும்” என்றாள் அமுதவல்லி.

# 58. புதிய மருத்துவன்

தொடர்ந்து பெய்த பெரு மழையின் காரணமாகச் சோழகங்க ஏரியில் நீர் ததும்பி நின்றது. வழக்கமாக அந்த ஏரிக்கரையில் காணப்படும் கோலாகலம் தற்போது இல்லை. படகுத் துறை வெறிச்சோடிப் போய்க் கிடந்தது. அன்னப் படகு கவனிப்பாரற்றுக் கரையோரமாக அசைந்த வண்ணம் கிடந்தது. தண்ணீரின் சலசலப்பைத் தவிர வேறு சப்தம் எதுவும் அங்குக் குடிகொண்டிருக்கவில்லை. எங்கும் அமைதி.

இந்த அமைதியான சூழ்நிலையில் ஏரிக்கரை மீது ஒரு உருவம் சரக்! சரக்! என்ற ஒலியை எழுப்பிய வண்ணம் வந்து கொண்டிருந்தது. ஏகாந்தமான அந்த ஏரிக்கரையில் சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் அந்த உருவம் நடந்து படகுத் துறையை நெருங்கியது. மாலைக் கதிரவனின் செவ்வொளி அந்த உருவத்தின் முகத்தில் படிகிறது. அந்த உருவத்தின் சிவந்த விழிகள் மேலும் சிவக்கின்றன. இந்த பயங்கர விழிகள் நமக்கு அறிமுகமான விழிகள்தாம். ஆம்! கங்காகேத்தன்தான் அந்த ஏரிக்கரை மீது நின்று கொண்டிருக்கிறான். அப்போது எங்கிருந்தோ பேச்சுக்குரல் கேட்டது.

ஒலிவந்த திசையை உற்று நோக்கினான் கங்காகேத்தன். அன்னப்படகில் இருந்துதான் பேச்சுக்குரல் கேட்டது. மெதுவாக நடந்து அன்னப்படகை நெருங்கி எட்டிப் பார்த்தான். படகில் ஒரு இளைஞன் உட்கார்ந்த வண்ணம் தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்தான்.

“மாதேவி! மாரன் கணையால் அடிபட்டுக் கிடக்கும் என்னைப் பார்! மாமன் மகளே! மனமிரங்காதோ உனக்கு.”

கங்காகேத்தன் திகைத்துப் போனான். அந்த இளைஞனைப் பார்த்தால் அப்படியொன்றும் பித்தனைப் போலத் தோன்றவில்லையே. பெரிய குடும்பத்துப் பிள்ளையாகவும் தோன்றுகிறது. இவனுக்கு என்ன வந்தது? ஏன் இப்படித் தனிமையாக வந்து புலம்புகிறான்? என்று யோசித்த வண்ணம் மேலும் நெருங்கி நின்று கவனித்தான்.

“வேங்கியைவிட்டுப் புறப்படும் போது எத்தனை மனக்கோட்டைகள் கட்டினேன். மாதேவி! உன்னுடன் பேசி மகிழலாம் என்ற ஆசையுடன் ஓடோடி வந்தேனே. ஆனால் நீயோ என்னை ஏறிட்டுப் பார்க்க மறுக்கிறாயே. இந்தப் படகுத் துறைக்கு நீ வருவாய் என வழிமேல்

விழிவைத்து எத்தனை நாட்களைக் கழித்திருக்கிறேன்! ஆனால் நீயோ என்னை மறந்தது போலவே இந்தப் படகுத் துறையையும் மறந்துவிட்டாயே" என அந்த இளைஞன் .புலம்பிக் கொண்டிருந்தான்.

மூடுபனி விலகி எதிரில் உள்ள சில பொருட்கள் சிறிது சிறிதாகத் தெரிய ஆரம்பிப்பது போலக் கங்காகேத்தனுக்குச் சில உண்மைகள் புலனாகத் தொடங்கின. வேங்கி, மாதேவி என்ற சொற்கள் சில உண்மைகளை உணர்த்தின. ஓகோ! வேங்கியில் இருந்து தப்பியோடி வந்திருக்கும் இளவரசன் சக்திவர்மன் இவன்தான் போலும். அப்படியானால் இவனது உள்ளத்தைக் கவர்ந்த அந்த மங்கை யார்? இவனது அத்தை மகளான வீரமாதேவியை எண்ணிப் புலம்புகிறான் போலும்!

கங்காகேத்தனின் மூளை தீவிரமாக வேலை செய்யத் தொடங்கிற்று. தனது திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளக் கைக்கருவியாக இந்தப் பித்தனைப் பயன்படுத்தினால் என்ன என அவன் எண்ணினான். அந்த எண்ணத்தைச் செயல்படுத்துவதிலும் முனைந்தான். மெதுவாக நகர்ந்து சக்திவர்மனுக்குப் பின்புறம் போய் நின்றான்.

"இளவரசே!" என்றான்.

"யார்? மாதேவியா?" எனத் திரும்பினான் சக்திவர்மன். தனக்கு முன்னால் பணிவாக நிற்கும் அந்தப் புதிய ஆளைக் கண்டு திகைத்தான்.

"நீ யார்?" எனக் குழறினான்.

"இளவரசே! பயப்பட வேண்டாம். உங்களுக்கு உதவி செய்வதற்காகவே வந்திருக்கிறேன்" என்றான்.

"எனக்கா? என்ன உதவி?"

"உங்கள் காதல் நோயைத் தீர்க்கும் மாமருந்து தருகிறேன்."

"ஆ! அது எப்படி உனக்குத் தெரிந்தது?"

"திரிபுவனங்களிலும் நடப்பதை நானறிவேன்."

"அப்படியானால்.."

"அஞ்ச வேண்டாம் இளவரசே! நான் ஒரு நிமித்திகன். அத்துடன் மருத்துவனும்கூட."

“என் காதல் நிறைவேறுமா? மாதேவியை மணப்பேனா!”

“அவசரப்படாதீர்கள் இளவரசே! ஆற அமர இருந்து பூசை செய்து சொல்ல வேண்டிய பதில் இது.”

“அப்படியானால் வா! இப்போதே அரண்மனைக்குப் போவோம்.”

குதூகலத்துடன் சக்திவர்மன் அவனை அழைத்துக் கொண்டு கிளம்பினான். தனது எண்ணம் இவ்வளவு விரைவில் கைகூடும் எனக் கனவிலும் கருதாத கங்காகேத்தன் களிப்புடன் அவனைப் பின்தொடர்ந்தான்.

# 59. தடுமாற்றம்

செயங்கொண்டாரின் தமிழ்க் குடிலில் அன்று வழக்கத்திற்கு மாறான அமைதி குடிகொண்டிருந்தது. ஏதோ வேலையாக ஆசிரியர் வெளியே சென்றிருந்தார். எனவே கோதைமார்பனுக்கு அன்று வேலை இருக்கவில்லை. அந்த மாஞ்சோலையின் ஒரு முலையைத் தேடிப்பிடித்து அங்கிருந்த கல்லின் மீது அமர்ந்து கொண்டு சுவடி ஒன்றினைப் புரட்டிக் கொண்டிருந்தான். தமிழ்க் கவிதைகளின் சுவை அவனை மெய்ம்மறக்கச் செய்தது. காலமெல்லாம் வாளினையும், வேலினையும் தூக்கித் திரிந்து வாணாளின் பெரும் பகுதியை வீணாக்கிக் கொண்டதற்காக அவன் உள்ளம் ஒருகணம் தன்னையே நொந்து கொண்டது. மறுகணம் தமிழ்க் கவிதைகளுக்கு இருக்கும் சக்தி அவனை அச்சமடையச் செய்தது. ஆம்! இந்தச் சோழ நாடே ஒரு அபாயகரமான நாடுதான். பொன்னியாற்றின் எழிலும், சோழ வளநாட்டின் செழுமையும் கண்டோரைக் கவர்ந்திழுக்கும் வன்மை பெற்றவை. சோழ வளநாட்டுச் சேல்விழியரோ கண்களால் மற்றவர்களின் உள்ளங்களைக் கவர்ந்து செல்லும் வன்மை படைத்தவர்கள். செந்தமிழ் மொழியோ தன்னை கற்பவரை அடிமை கொள்ளச் செய்யும் வன்மை படைத்தது. ஆம்! மொத்தத்தில் சோழ நாடே அபாயகரமான நாடுதான். இவ்வாறு எண்ணமிட்ட வண்ணம் சுவடிகளைப் புரட்டிய அவனை ஒரு கவிதை கவர்ந்திழுத்தது. இசையுடன் அதைப் படிக்கத் தொடங்கினான்.

**“சீறடிய கிண்கிணி சிலம்போடு சிலம்ப**
**வேறுபடு மேகலைகள் மெல்லன மிழற்ற**
**சேறுபடு கோதைமிசை வண்டு திசைபாட**
**நாறுமலர்க் கொம்பு நடை கற்பதென வந்தாள்.”**

அழகிய கால்களில் சிலம்பு அணிந்திருக்கிறாள். அவள் நடக்கும் போது அவை கிண்கிணி என ஒலிக்கின்றன. இடையை அழகு செய்யும் மேகலை மெல்லென ஒலிக்கிறது. அவள் கூந்தலினுக்கு அழகு சேர்க்கும் மலர்களைச் சுற்றும் வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்கின்றன. இத்தனை ஆரவாரத்துடன் மலர்க்கொடியொன்று நடந்து வருவது போல ஒரு மங்கை நல்லாள் வருகிறாள். அவளை வர்ணிக்கும் இப்பாடலின் நயத்தில் ஆழ்ந்திருந்த கோதைமார்பனின் செவிகளில் உண்மையாகவே சிலம்பொலி கேட்டது. திடுக்கிட்டு

நிமிர்ந்தான். ஆம்! உண்மையிலேயே இரு மலர்க்கொடிகள் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தன.

திறந்த விழிகளைச் சற்றும் இமைக்காமல் தங்களையே பார்த்த வண்ணம் திகைப்புடன் அமர்ந்திருந்த அவனைக் கண்டதும் அமுதவல்லிக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது.

“என்ன கோதைமார்பரே! பேயை, பிசாசைக் கண்டவர் போல எங்களைக் கண்டு இப்படி மிரளுகிறீரே!” என்றாள்.

குமுதவல்லி வீசிய கேலிக்கணை கோதைமார்பனின் திகைப்பை அறுத்தெறிந்தது. தன்முன் இளவரசி வீரமாதேவியும் அவளது தோழி அமுதவல்லியுமே நிற்கிறார்கள். தான் காண்பது கனவல்ல என்ற உணர்வு அவனுக்குப் பிறந்தது. எழுந்து நின்று இளவரசிக்கு வணக்கம் கூறினான்.

“ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த நான் நீங்கள் வருவதைக் கவனிக்கவில்லை. திடீரென உங்களைப் பார்த்ததும் திகைத்துவிட்டேன்” என்றான்.

“தன்னை மறந்த நிலையில் அப்படியென்ன யோசனையோ” என்றாள் அமுதவல்லி.

“இல்லை.. ஒன்றுமில்லை” எனத் தடுமாறினான் கோதைமார்பன்.

“என்னடா இது? சும்மா உட்கார்ந்திருப்பவனை வம்புக்கு இழுக்கிறாளே என யோசிக்கிறீரா” என்றாள் அமுதவல்லி. அவளின் குறும்பைக் கண்டு வீரமாதேவி சிரித்தாள்.

“இந்தாடி! உன் கேலியை நிறுத்து. இப்படியெல்லாம் நீ பேசினால் சோழ நாட்டுப் பெண்களே மரியாதை தெரியாதவர்கள் என நினைத்துக் கொள்ளப் போகிறார்” என அமுதவல்லியை அடக்கினாள் மாதேவி. பின்னர்க் கோதைமார்பன் பக்கம் திரும்பி “ஐயா! என் தோழி பெரிய குறும்புக்காரி. வேடிக்கையாகப் பேசுவது அவள் வழக்கம். தயவுசெய்து அதைப் பொருட்படுத்தாதீர்கள்” எனக் கேட்டுக் கொண்டாள்.

“ஓகோ! அப்படியா சேதி! தேவி, அன்னிய நாட்டு மனிதருக்கு முன்னால் என்னை நீங்கள் அவமானப்படுத்திவிட்டீர்கள். இனிப் பொறுக்க முடியாது. நான் வருகிறேன்” என்று போலிக் கோபத்துடன் கூறிவிட்டு கழுத்தை ஒரு வெட்டு வெட்டிவிட்டு விரைந்து நடந்தாள்

அமுதவல்லி. அவளின் நடிப்பைக் கண்டு கோதைமார்பனும் வீரமாதேவியும் நகைத்தனர்.

தங்களைத் தனிமையாகவிட்டுப் போவதற்காகவே அவள் அவ்விதம் செய்கிறாள் என்பது இருவருக்கும் புரிந்துதான் இருந்தது. எனவே அவளைத் தடுத்து நிறுத்த அவர்கள் முயலவில்லை. அமுதவல்லியின் தலைமறைந்ததும் மாதேவியின் பக்கம் திரும்பினான் கோதைமார்பன். அதுவரை அவனையே நோக்கிக் கொண்டிருந்த மாதேவியின் முகத்தில் செம்மை படர்ந்தது.

# ௫௦. தத்தளிப்பு

“இளவரசி! சேதி கேட்டீர்களா?” என அவசர அவசரமாக உள்நுழைந்தாள் அமுதவல்லி. ஏதோ அந்தரங்கமாக உரையாடிக் கொண்டிருந்த புவனாவும் வீரமாதேவியும் திடுக்கிட்டுத் திரும்பினர். போர்க்களத்திலிருந்துதான் ஏதோ சேதி வந்திருக்கிறது என எண்ணினர்.

“அப்படி என்னடி அவசரச் சேதி?” என வீரமாதேவி வினவினாள்.

“போர்க்களத்தில் இருந்து தாத்தா ஏதேனும் செய்தி அனுப்பியிருக்கிறாரா?” எனத் துடித்தாள் புவனா.

“அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா! நமது வேங்கி இளவரசர் சக்திவர்மர் இருக்கிறார் அல்லவா?”

“ஆமாம்! அவருக்கு என்ன இப்போது கேடு வந்தது?” எனச் சிடுசிடுத்தாள் வீரமாதேவி.

“என்னம்மா இது! சக்திவர்மர் பெயரைச் சொன்னாலேயே கோபிக்கிறீர்களே.”

“சரி சரி; சுற்றி வளைக்காமல் விஷயத்தைச் சொல்லு” என்றாள் புவனா.

“ஆமாம்! புவனா! இந்த அமுதவல்லி எப்போதும் இப்படித்தான். விஷயத்தை உடனே சொல்லமாட்டாள். சற்று நேரம் வேடிக்கை பண்ணிவிட்டுத்தான் எதையும் சொல்லுவாள்” என்றாள் வீரமாதேவி.

“அடேயப்பா! இளவரசிக்கு வருகிற கோபத்தைப் பார்த்திர்களா!” என அமுதவல்லி சிரித்துவிட்டுக் கடைசியில் ஒருவாறாக அந்தச் செய்தியைக் கூறத் தொடங்கினாள்.

“நமது சக்திவர்மர் யாரோ ஒரு நிமித்திகனைக் கூட்டி வந்திருக்கிறார். ஒருவரின் முகத்தைப் பார்த்த அளவிலேயே திரிகால பலனையும் அவன் சொல்லுகிறானாம். அரண்மனையெங்கும் இதே பேச்சுத்தான். கூட்டம் கூட்டமாக அவனைப் போய்ப் பார்த்துச் சோசியம் கேட்டு வருகிறார்கள். நாமும் போய்க் கேட்கலாமா?” என்றாள் அமுதவல்லி.

“போடி! நிமித்திகனாவது மண்ணாங்கட்டியாவது. சக்திவர்மர் ஒரு அசடு. எவனோ ஒரு எத்தன் அவரை ஏமாற்றிக் கொண்டிருக்கிறான்.

அவனை நம்பி சோசியம் கேட்க நாமும் போகலாம் என்கிறாயே" என்றாள் வீரமாதேவி.

"இல்லையம்மா! அவனை வேண்டுமானாலும் இங்கேயே அழைத்து வரட்டுமா?" என்றாள் அமுதவல்லி.

"அழைத்துத்தான் வரட்டுமே! அவனையும் நாம் சோதனை செய்து பார்ப்போமே" என்றாள் புவனா.

"என்னமாவது செய்யுங்கள்! எனக்கு வேறு வேலை இருக்கிறது. நான் போகிறேன்" என்றாள் வீரமாதேவி.

அனுமதி கிடைத்துவிட்ட குதூகலத்துடன் மான் போலத் துள்ளியோடினாள் அமுதவல்லி.

சற்று நேரத்தில் அமுதவல்லி ஒரு மனிதனுடன் திரும்பி வந்தாள். ஆம். நமது பழைய நண்பன் கங்காகேத்தன்தான். அவனது நடையுடை பாவனைகள் எல்லாம் தற்போது மாறியிருக்கின்றன. நிமித்திகனுக்குரிய தோற்றங்களோடு காட்சி தருகிறான். அவனது விழிகளில் குடிகொண்டிருக்கும் வஞ்சகமும், கபடமும் அவனை நமக்குக் காட்டிக் கொடுக்கின்றன.

புவனமாதேவியைக் கண்டதும் வணக்கம் செலுத்திய கங்காகேத்தன் அப்படியே ஒருகணம் திகைத்துப் போனான். அவனது விழிகளில் அளவு கடந்த வியப்பு வெளிப்பட்டது. அவனது கண்கள் புவனாவைக் கொத்திவிடுவது போலப் பார்த்தன.

"என்ன நிமித்திகரே! கங்க இளவரசியைக் கொத்திவிடுவது போலப் பார்க்கிறீர்" என்றாள் அமுதவல்லி. அவள் கூறியது எதுவும் அவன் செவிகளில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவனது உதடுகள்,

"ஆம்! நான் காண்பது கனவல்ல. நனவுதான். அதே குழந்தைதான். தாயின் சாயலை அப்படியே கொண்டிருக்கிறாள்" என முணுமுணுத்தன.

அவன் கூறியது அரைகுறையாகப் புவனாவின் காதில் விழுந்தது.

"என்ன! நீர் என்ன கூறுகிறீர்?" என்றாள்.

"ஆம் தேவி! உங்கள் பிறப்பின் இரகசியம் இப்போது புலப்படுகிறது" என்றான் கங்காகேத்தன்.

“என் பிறப்பின் இரகசியமா?” எனத் திடுக்கிட்டாள் புவனா.

“ஆம் தேவி! நீங்கள் பிறந்தது வேறிடம். வளர்ந்தது வேறிடம். மனம் நாடியதோ மற்றோர் இடம்” என்றான் நிமித்திகன்.

புவனாவின் தலை கிறுகிறுவெனச் சுற்றியது. அவன் என்ன சொல்லுகிறான் என்பதே அவளுக்குப் புரியாத புதிராக இருந்தது. திகைத்தபடி அவனே நோக்கி விழித்தாள்.

“தேவி! யாருக்கும் தெரியாத அந்த மாபெரும் இரகசியத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்களா?” எனக் கேட்டுவிட்டு அமுதவல்லியைக் குறிப்பாக நோக்கினான் காங்காகேத்தன்.

அவன் எண்ணத்தைப் புரிந்து கொண்ட புவனா “பரவாயில்லை. அவள் எனது உற்ற தோழிதான். அந்த இரகசியத்தை அவள் தெரிந்து கொள்வதில் தவறு ஒன்றுமில்லை” என்றாள்.

இத்தகைய பதிலைச் சற்றும் எதிர்பார்க்காத கங்காகேத்தன் சற்றுத் தயங்கினான். பிறகு தனது இரு விழிகளையும் முடிக் கொண்டு ஏதோ தியானத்தில் இருப்பதைப் போலப் பாவனை செய்தான். சற்று நேரத்திற்கெல்லாம் அவன் உடம்பு இலேசாக நடுங்கத் தொடங்கிற்று. திடீரென அவனது விழிகள் திறந்தன. புவனவை உற்று நோக்கினான். மறுகணம் பேசத் தொடங்கினான்.

“நாற்புறமும் தீ எரிந்து கொண்டிருக்கிறது. ஐயோ! ஒரு அழகிய குழந்தை அதன் நடுவில் அலறிக் கொண்டிருக்கிறது. அப்போது உள்ளே பாய்ந்து வருகிறான் படைத்தலைவன் ஒருவன். தீயில் பாய்ந்து குழந்தையை மீட்கிறான்.” இவ்வாறு சொல்லிப் பிறகு, கங்காகேத்தன் மறுபடியும் விழிகளை மூடிக்கொண்டான். சற்று நேரம் கழிந்தது. மீண்டும் அவன் பேசத் தொடங்கினான்.

“ஒரு நாட்டின் குலக்கொடி மற்றொரு நாட்டில் வளரத் தொடங்கியது. அதோடு நின்றிருந்தால் பரவாயில்லை. நச்சுமரத்தின் மீது படரத் தொடங்கிவிட்டது” என்றான்.

பூடகமாக அவன் பேசியதின் பொருள் புவனாவிற்கும், அமுதவல்லிக்கும் விளங்கவில்லை. ஆனால் அவனோ “தேவி! இன்று இதற்கு மேல் சொல்ல முடியவில்லை. இன்னொரு சமயம் முழு விவரமும் சொல்லுகிறேன்” எனக் கூறி விடைபெற்றுக் கொண்டான்.

# 61. முத்திரை மோதிரம்

நிமித்திகன் சென்ற பிறகு நெடுநேரம் வரையிலும்கூட புவனாவை ஆட்கொண்டிருந்த திகைப்பு நீங்கியபாடில்லை. அவன் கூறிய மர்மமான வார்த்தைகளின் பொருளைப் புரியாது அவள் திண்டாடிக் கொண்டிருந்தாள்! புவனாவின் திகைப்பு அமுதவல்லியின் கண்களுக்குத் தப்பவில்லை.

"என்னம்மா இது! அவன் ஏதோ உளறிவிட்டுப் போனதை எண்ணி இப்படிக் கலங்குகிறீர்களே" என்றாள் அமுதவல்லி. தான் அழைத்து வந்த நிமித்திகன் இளவரசிக்கு மனக்கலக்கத்தை உண்டு பண்ணிவிட்டானே என்ற கவலை அவளுக்கு.

"அதெல்லாம் ஒன்றுமில்லையடி. இன்று ஏனோ என் மனது நிலைகொள்ளாது தவிக்கிறது. எங்கேயாவது வெளியே போய் வருவோமா "என்றாள் புவனா.

"நல்லது அம்மா! ஆசிரியர் சயங்கொண்டாரைச் சந்தித்து நெடுநாட்களாயிற்று. அங்குப் போய் வருவோமா" என்றாள் அமுதவல்லி.

"அடி கள்ளி! உன் தந்திரம் எனக்குப் புரிந்துவிட்டது. சயங்கொண்டாரைச் சந்தித்து நெடுநாட்களாயிற்றா, அல்லது அவரது மாணவர் குமுதசந்திரரைச் சந்தித்து நெடுநாட்களாயிற்றா?" என்றாள் புவனா.

"நீங்கள் எப்படி வைத்துக் கொண்டாலும் சரிதான். புறப்படுங்கள் அம்மா!" என்றாள் அமுதவல்லி.

அரண்மனைத் தேர் விரைந்து கொண்டிருந்தது. அதில் அமர்ந்திருந்த புவனாவின் சிந்தனை அதைவிட வேகமாகச் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தது.

மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் பேத்தி என உலகம் அவளைக் கருதியது. ஏன் அவளும் அப்படித்தான் கருதிக் கொண்டிருந்தாள். இன்று வரை அவளுக்குத் தனது தாய் தந்தையர் யாரென்பது தெரியாது. அந்த எண்ணமே அவளுக்குத் தோன்றாதபடி அன்பை அள்ளிச் சொரிந்து அவளைப் பேரரையர் வளர்த்து வந்தார். எனவே அவளும் அதைப் பற்றிக் கவலைப்பட்டதில்லை. வயது வந்த பிறகு ஒரிருமுறை அதைப் பற்றிய எண்ணம் அவளுக்கு வந்திருக்கிறது.

ஆனால் பேரரையரிடம் அதைக் கேட்கும் துணிவு வந்ததில்லை. ஈன்ற தாயினுக்கும் மேலாகச் சாலப் பரிந்து தன்னை வளர்க்கும் அவரிடம் அதை எப்படிக் கேட்க முடியும்? அவராகச் சொல்லுவார் என எதிர்பார்த்தாள். அவரும் அதைச் சொல்லுவதாக இல்லை.

ஆனால் நிமித்திகன் கூறிய செய்திகள் அவளது சிந்தையைக் குழப்பிவிட்டிருந்தன. தனது பிறப்பில் ஏதோ மர்மம் இருக்க வேண்டும் என்பது அவளுக்குப் புலப்பட்டது. அதை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்ற துடிப்பும் அதிகமாகிக் கொண்டிருந்தது.

இதற்குள் தமிழ்க் குடில் நெருங்கிவிடவே தனது சிந்தனைக்குப் புவனா அணை போட்டாள். அமைதி தவழும் அந்த அழகிய இடத்தைக் கண்டதும் அவளது நெஞ்சப் புயல் தணிந்தது. ஆனால் அதுவும் சிறிது நேரத்திற்குத்தான் என்பதை அந்தப் பேதை உணர்ந்திருக்கவில்லை.

அவள் அங்கு வந்த நேரம் சரியில்லை போலிருக்கிறது. ஆசிரியரைப் பார்க்கப் பலர் வந்திருந்தார்கள். எனவே அந்தச் சோலையில் சற்று உலவி வரலாம் எனப் புவனனா தீர்மானித்தாள்.

“அமுதா! நீ சற்று இங்கிருந்து ஆசிரியரைப் பார்க்க வந்திருப்பவர்கள் விடைபெற்றுச் சென்றவுடன் என்னிடம் வந்து தகவல் கூறு” என்று கூறிவிட்டு நடக்கலானாள் புவனா.

புள்ளினங்கள் கூவி மகிழ்ந்து கொண்டிருக்கும் அந்த மாஞ்சோலையின் எழிலில் மனதைப் பறிகொடுத்துவிட்டு மெய்ம்மறந்த நிலையில் நடந்து கொண்டிருந்த புவனா, யாரோ அழைக்கும் குரல் கேட்டுத் திரும்பினாள். எதிரில் கோதைமார்பன் நின்று கொண்டிருந்தான். பெண்களை, குறிப்பாக அரச குலத்தவரைக் கண்டால் தலைகுனிந்தவாறே அகன்றுவிடும் கோதைமார்பரா இன்று தன்னிடம் பேசுவதற்காக வந்து நிற்கிறார் என்ற வியப்புடன் நின்றாள் புவனமாதேவி.

“இளவரசி! மன்னிக்க வேண்டும். தங்களைச் சந்தித்துத் தனியாகப் பேச வேண்டும் என்பதற்காகப் பல நாட்கள் காத்திருந்தேன். இன்றுதான் வேளை வாய்த்தது” என்றான்.

“என்னிடம் பேச வேண்டுமா?” எனத் திகைத்தாள் புவனா.

“ஆம் இளவரசி! தங்களின் பிறப்புப் பற்றிய இரகசியத்தை நானறிவேன். அதைத் தங்களிடம் கூறுவதற்காகவே வந்துள்ளேன்” என்றான் கோதைமார்பன்.

புவனாவின் தலை வேகமாகச் சுழன்றது. இதே போல அந்த நிமித்திகன் பேசி ஒரு நாழிகை நேரங்கூட ஆகவில்லை. அதற்குள் இந்தக் கோதைமார்பரும் ஏதோ புதிர் போடுகிறாரே! என எண்ணினாள்.

அவளது திகைப்பை ஓரளவு புரிந்து கொண்ட கோதைமார்பன் “இளவரசி! மன்னிக்க வேண்டும். உங்களைக் கலவரப்படுத்திவிட்டேன் போலிருக்கிறது” என்றான்.

“அப்படியெல்லாம் ஒன்றுமில்லை கோதைமார்பரே! நீர் கூறிய செய்தி..”

“ஆம் இளவரசி! உண்மைதான். உங்கள் தமையனால் அனுப்பப்பட்ட தூதுவன் நான்.”

“என்ன! என் தமையனா!” எனத் திகைத்தாள் புவனா.

“ஆம் இளவரசி! அதையெல்லாம் இங்கே விரிவாகச் சொல்ல நேரமில்லை. யாரோ வரும் சப்தம் கேட்கிறது. தங்களைத் தனியாகச் சந்தித்து ஒரு நாழிகை நேரம் பேச அனுமதி கொடுங்கள். முழு விவரத்தையும் கூறுகிறேன்” என்றான்.

அவன் சொல்லுவதை நம்புவதா வேண்டாமா என ஒருகணம் யோசித்தாள் புவனா. கோதைமார்பனின் முகம் அவன் கள்ளங்கபடமற்றவன் என்பதை எடுத்துக்காட்டியது.

“அப்படியானால் நாளை மாலை அரண்மனை நந்தவனத்துக்கு வாரும்” என்றாள் புவனா.

“இளவரசி! என்னை உள்ளே விடமாட்டார்களே” என்றான் கோதைமார்பன்.

உடன் தன் விரலில் அணிந்திருந்த முத்திரை மோதிரத்தைப் புவனா கழற்றினாள். புலிச் சின்னமும் இரண்டு வாள்களும் அம்மோதிரத்தில் பொறிக்கப்பட்டிருந்தன. சோழப் படையின் மாதண்ட நாயகரான மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் அடையாள இலச்சினை அது.

“கோதைமார்பரே! இந்த முத்திரை மோதிரத்தை உம்மை நம்பி அளிக்கிறேன். உமக்கே நிரந்தரமாக இதை அளிக்கவில்லை, தற்காலிகமாக அளிக்கிறேன். இதைக் காட்டினால் அரண்மனைக்குள் உம்மை அனுமதிப்பார்கள். நாளை மாலை என்னைச் சந்திக்கும் போது என்னிடம் அதைத் திருப்பி அளித்துவிட வேண்டும்” என்றாள் புவனா.

நன்றியுடன் அந்த மோதிரத்தைக் கோதைமார்பன் பெற்றுக் கொண்டான்.

இதற்குள் அமுதவல்லி புவனாவைத் தேடி வரவே, அவள் அங்கிருந்து நகர்ந்தாள்.

இதையெல்லாம் சற்றுத் தொலைவில் இருந்த மரத்தின் பின் மறைந்திருந்த உருவமொன்று பார்த்துக் கொண்டிருந்தது.

# 62. விஷ்ணுவர்த்தனன் ஐயம்

வேர்க்க விறுவிறுக்க வந்து நின்றான் கவி குமுதசந்திரன். மலைப்பாம்பு போலப் பெருமூச்சுவிட்ட வண்ணம் தன்முன் வந்து நிற்கும் அவனை வியப்புடன் ஏறிட்டு நோக்கினான் விஷ்ணுவர்த்தனன்.

“குமுதசந்திரா! இது என்ன கோலம்? ஏன் இப்படி வந்து நிற்கிறாய்?” என்றான்.

இதற்குள் தன்னை ஒருவாறாக ஆசுவாசப்படுத்திக் கொண்ட குமுதசந்திரன் பேசத் தொடங்கினான்.

“இளவரசே! ஒரு முக்கியமான சேதியுடன் வந்திருக்கிறேன்.”

“நீ வந்து நிற்கும் கோலத்தைப் பார்த்தால்தான் புரிகிறதே. செய்தியைச் சொல்லு.”

“இளவரசே! அதை எப்படிச் சொல்லுவது என்றுதான் தயக்கமாக இருக்கிறது.”

“வாயைத் திறந்து சொல்லு குமுதசந்திரா!” என்று கூறிவிட்டு விஷ்ணுவர்த்தனன் கலகலவென நகைத்தான்.

“என்னைக் கேலி செய்வது என்றால் உங்களுக்கு பரம திருப்தி” என்றான் குமுதசந்திரன்.

“சரி! சுற்றி வளைக்காமல் செய்தியைச் சொல்.”

“இளவரசே! தங்கள் ஆணையின்படி ஆசிரியர் சயங்கொண்டாரிடம் மாணவனாகச் சேர்ந்திருக்கும் கோதைமார்பனைக் கண்காணித்தேன்.”

“கண்காணித்ததில் ஏதாவது பயன் இருந்ததா?”

“பயனும் இருந்தது. பயன் இல்லாமலும் போனது.”

“குமுதசந்திரா! என்ன புதிர் போடுகிறாய்?”

“ஆமாம் இளவரசே! கோதைமார்பன் யார் என்பதை அறிய நான் செய்த முயற்சிகள் யாவும் பயனற்றுப் போயின. அவனிடம் நெருங்கிப் பேசிப் பார்த்தும் பயனில்லை. நான் தட்டியில் நுழைந்தால் அவன் கோலத்தில் நுழைகிறான். நான் கோலத்தில் நுழைந்தால் அவன்

தட்டியில் நுழைகிறான். ஆனாலும் என் முயற்சியை நிறுத்தவில்லை. கண்ணையும் காதையும் பயன்படுத்தினேன்.''

"கண்ணையும் காதையும் பயன்படுத்தியதில் என்ன தெரிந்தது?''

"யாரோடும் பேசிப் பழகாத அவனிடம் சோழ வளநாட்டைச் சேர்ந்த இருவர் நெருங்கிப் பழகுகிறார்கள் என்பது தெரிந்தது.''

"நம் நாட்டைச் சேர்ந்தவர்களா?''

"ஆமாம்! அதுவும் பெண்கள்.''

"என்ன? பெண்களா?'' என்றான் விஷ்ணுவர்த்தனன். அவன் குரலில் வியப்பு வெளிப்பட்டது.

"ஆமாம் இளவரசே! அரண்மனையைச் சேர்ந்த இரண்டு பெண்கள்.''

"குமுதசந்திரா, என்ன உளறுகிறாய்?''

"இளவரசே! பதறாதீர்கள். நான் கூறுவது உண்மைதான். அந்தக் காட்சியை நேரில் நான் கண்ட போது என் கண்களே என்னை நம்ப மறுத்தன.''

"அப்படியானால் அந்தப் பெண்கள் யார்?''

இந்தக் கேள்விக்கு விடையளிக்கச் சற்றுத் தயங்கினான் குமுதசந்திரன். பிறகு சுற்று முற்றும் ஒருமுறை பார்த்துவிட்டு மெல்லிய குரலில் குமுதசந்திரன் பேசினான். "இளவரசி வீரமாதேவியாரும், மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் பேத்தி புவனமாதேவியாரும்தான்.''

விஷ்ணுவர்த்தனன் சற்று நேரம் திகைத்துப் போய் அப்படியே உட்கார்ந்திருந்தான். பிறகு "குமுதசந்திரா! நீ கண்டதையும் கேட்டதையும் ஒன்றுவிடாமல் அப்படியே கூறு'' என்றான்.

வீரமாதேவியும் கோதைமார்பனும் மாந்தோப்பில் சந்தித்துப் பேசியதையும் மற்றொருநாள் புவனமாதேவியும், கோதைமார்பனும் சந்தித்துப் பேசியதையும் குமுதசந்திரன் விவரித்தான். ஆனால் சற்றுத் தொலைவில் இருந்து கவனித்ததால் அவர்கள் பேசியது ஒன்றும் தனது செவிகளில் விழவில்லை என்றும் அவன் கூறினான். அடுத்து அவன் கூறிய ஒரு செய்திதான் விஷ்ணுவர்த்தனனைத் திடுக்கிட வைத்தது. ஆம்; புவனமாதேவி தனது முத்திரை

மோதிரத்தைக் கழற்றிக் கோதைமார்பனிடம் அளித்த நிகழ்ச்சியைக் குமுதசந்திரன் கூறிய போது விஷ்ணுவர்த்தனனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"குமுதசந்திரா! அந்தப் பெண் தனது மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்ததை நீ நேரில் கண்டது உண்மைதானே."

"ஆம். இளவரசே!"

"இன்னும் ஏதாவது செய்தி இருக்கிறதா?"

"இருக்கிறது இளவரசே! இதுவரை நான் கண்ணால் கண்டதைக் கூறினேன். இனிமேல் நான் கேள்விப்பட்டவைகளைக் கூறப் போகிறேன். இளவரசே! நான் கூறப் போவதைக் கேட்டு அதிர்ச்சி அடையாதீர்கள். இதை உங்களிடம் கூற என் மனம் ஒப்பவில்லை. நாட்டின் எதிர்காலத்தை முன்னிட்டும், அரசகுடும்பத்தின் நலனைக் கருதியுமே இதை உங்களிடம் கூறுகிறேன்" என்ற பீடிகையுடன் தொடங்கினான் குமுசந்திரன்.

என்னென்ன அதிசயச் செய்திகளையெல்லாம் தான் இந்த குமுதசந்திரன் கொண்டு வந்திருக்கிறான் என உள்ளூர வியந்த வண்ணம் அவன் கூறப் போவதைச் செவிமடுக்க விஷ்ணுவர்த்தனன் தயாரானான்.

"நமது இளைய இளவரசியார் கோதைமார்பரைச் சந்தித்த போது அதைச் சாதாரண சந்திப்பு என எண்ணினேன். ஆனால் அமுதவல்லியிடம் அதைப் பற்றி விசாரித்த போது அவள் சொன்ன செய்தியை என்னால் நம்பவே முடியவில்லை. ஆம் இளவரசே! நமது வீரமாதேவியார் தமது உள்ளத்தைக் கோதைமார்பரிடம் பறிகொடுத்திருக்கிறார்.."

"என்ன? குமுதசந்திரா! நீ உண்மையைத்தான் கூறுகிறாயா? அல்லது விளையாடுகிறாயா" எனக் கொதித்து. எழுந்தான் விஷ்ணுவர்த்தனன். அவன் குரலிலே காணப்பட்ட கடுமை குமுதசந்திரனை நடுங்க வைத்தது.

"ஆம் இளவரசே! இல்லை அமுதவல்லி.. சொன்னது உண்மைதான்" என உளறினான்.

குமுதசந்திரனின் தோளைப் பிடித்து உலுக்கிய வண்ணம் நின்ற விஷ்ணுவர்த்தனன் தனது நிலையைத் திரும்ப அடையச் சிறிது நேரமாயிற்று.

“குமுதசந்திரா! இது என்ன சோதனை. சக்கரவர்த்தி போர்க்களம் போயிருக்கும் வேளையில் இத்தகைய பூகம்பங்கள் தோன்றுகின்றனவே” என்றான்.

“இளவரசே! நிதானத்தை இழக்காதீர்கள். நீங்களே நிதானமிழந்தால் சோழ குலத்தின் கதி என்ன ஆவது? இப்போது ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை. ஏதோ அவர்கள் இருவரும் சந்தித்ததைத் தவிர வேறு ஒன்றும் நடந்துவிடவில்லை.”

“குமுதசந்திரா! நீ கூறுவது உண்மைதான். ஆற அமர யோசித்துத்தான் மேற்கொண்டு நடவடிக்கையில் இறங்க வேண்டும். ஆனால் நீ கூறிய தகவல்களை எண்ணிப் பார்க்கும் போது குழப்பம்தான் அதிகரிக்கிறது. கோதைமார்பனை வீரமாதேவி காதலிக்கிறாள் என்கிறாய். அப்படியானால் புவனமாதேவி எதற்காக அவனிடம் முத்திரை மோதிரத்தைத் தருகிறாள். இவர்கள் இருவருக்கும் அவ்வளவு நெருக்கம் ஏன்?”

“இளவரசே! அதுதான் எனக்கும் புரியவில்லை. இளவரசிகள் இருவரையும் ஏமாற்ற ஏதோ கபட நாடகமாடுகிறானோ கோதைமார்பன் என்ற சந்தேகமும் எனக்கு எழுதுகிறது.”

“ஆம்! கோதைமார்பன் ஒரு வஞ்சக வேடதாரியாகத்தான் இருக்க வேண்டும். ஏதோ உள்நோக்கத்துடன்தான் அவன் இங்கு வந்திருக்கிறான். ஒன்றும் அறியாத இளம்பெண்களை ஏமாற்றித் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளத் திட்டமிடுகிறான்” என்று கூறிய விஷ்ணுவர்த்தனனுக்கு மின்னல் என ஒரு நினைவு பளிச்சிட்டது. துள்ளி எழுந்தான்.

“குமுதசந்திரா! இப்போதுதான் நினவு வருகிறது. ஆம்; சந்தேகமே இல்லை. அவன் குந்தள ஒற்றன்தான்” என்றான்.

“இளவரசே! அது எப்படித் திட்டவட்டமாகக் கூறுகிறீர்கள்?” என்று கேட்ட குமுதசந்திரனுக்கு விடையளிக்கும் வகையில், கோதைமார்பனை முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்த நிகழ்ச்சியை விவரித்தான் விஷ்ணுவர்த்தனன்.

"அங்காடி வீதியில் இவன் அலைந்து கொண்டிருந்ததைக் கண்ட போதே இவன் மீது எனக்கு ஐயம்தான். அதற்கு ஏற்றாற் போல நள்ளிரவில் நகர்ச்சோதனைக்கு நானும் அதிராசேந்திரனும் சென்ற போதும் இவனைச் சந்தித்தோம். பிறகு காட்டில் வேட்டையாடப் போய் இருந்த போது தற்செயலாக ஒரு மரப்பொந்தில் குந்தள சின்னங்கள் பொறித்த வாளினையும், மணி ஆரம் ஒன்றினையும் கண்டேன். அவற்றை எடுக்கலாம் என நான் எண்ணிய போது பேச்சுக் குரல் கேட்டுக் கீழிறங்கினேன். அந்தக் காட்டில் மூன்று பேரைச் சந்தித்தேன். விசாரித்த போது அவர்கள் அளித்த பதில் எனக்குத் திருப்தியளிக்கவில்லை. இந்த நாட்டைச் சேர்ந்தவர்களாகவும் அவர்கள் தோன்றவில்லை. அவர்களுக்கும் கோதைமார்பனுக்கும் ஏதோ தொடர்பு இருக்க வேண்டும் என ஊகித்தேன்" என்றான்.

விஷ்ணுவர்த்தனன் கூறிய விவரங்கள் குமுதசந்திரனைத் திகைக்க வைத்தன.

"இளவரசே! இவ்வளவு தெரிந்திருந்தும் அந்த ஒற்றர்களை இன்னும் உலவவிட்டிருக்கிறீர்களே" என்றான்.

"பொறு குமுதசந்திரா! பொறு. அவர்களுடைய நோக்கம் இன்னதெனத் தெரியும் வரையில் அவர்கள் வெளியில்தான் இருக்க வேண்டும். இனி நாம் மிகக் கவனமுடன் இருக்க வேண்டும். புவனாவின் முத்திரை மோதிரம் அவர்கள் கையில் சிக்கி இருக்கிறது. அதைப் பயன்படுத்தி அவர்கள் அரண்மனைக்குள்ளே கூடத் தங்குதடையின்றி நுழைய முடியும்."

"அப்படியானால் அதைப் பறித்துவிட்டால் என்ன?"

"சே! சே! அப்படிச் செய்யக் கூடாது. புவனாவின் உள்ளம் புண்பட்டுவிடும். கோதைமார்பன் யார் என்று தெரியாமல்கூட அதை அவள் கொடுத்திருக்கலாம். சோழ குலத்தைக் காக்கத் தன் உயிரையே கொடுக்கத் தயாராக இருக்கும் அந்தப் பெண்ணின் மீது நான் சந்தேகப்படவில்லை. அவளையும் ஏதோ அபாயம் சூழ்ந்திருப்பதாகவே நான் உணர்கிறேன். அந்த அபாயத்தில் இருந்து அவளை எப்படியும் காக்க வேண்டும். அதிருக்கட்டும். குமுதசந்திரா! இனித்தான் உனக்கு முக்கியமான வேலையொன்றினைத் தரப் போகிறேன்."

"ஆணையிடுங்கள் இளவரசே, காத்திருக்கிறேன்."

“முத்திரை மோதிரத்தை வைத்துள்ள கோதைமார்பனைவிட்டு ஒருகணம்கூட அகலாது அவனைக் கண்காணிக்க வேண்டும். ஆனால் நீ அவனைக் கவனிப்பது அவனுக்குத் தெரிய வேண்டியதில்லை. ஏதாவது முக்கியமான சேதி இருந்தால் உடனடியாகத் தெரியப்படுத்து” என்றான்.

“அவ்வளவுதானா இளவரசே!”

“இன்னும் இருக்கிறது. நாம் பேசிய விவரங்கள் யாருக்கும் தெரிய வேண்டியதில்லை. இரகசியமாகவே இருக்கட்டும்.”

“அப்படியே இளவரசே!” என்று கூறிவிட்டுக் குமுதசந்திரன் விடைபெற்றான். அவனை அனுப்பிவிட்டு ஆழ்ந்த சிந்தனையில் விஷ்ணுவர்த்தனன் அமிழ்ந்து போனான்.

# ௬௩. ஞாயும் யாயும் யாராகியரோ

கோதைமார்பனைச் சந்தித்துவிட்டு வந்ததில் இருந்து புவனாவின் உள்ளம் நிலைகொள்ளாது தத்தளித்துக் கொண்டிருந்தது. தன் பிறப்பின் இரகசியத்தை அவன் அறிந்திருக்கிறானாமே! அதுமட்டுமல்ல தன் தமையனால் அனுப்பப்பட்ட தூதன் என்று வேறு அல்லவா கூறிக் கொண்டான். இது என்ன வேடிக்கை! விவரம் தெரிந்த நாளில் இருந்து பாட்டனாரைத் தவிர வேறு நெருங்கிய உறவினர் யாரையும் தான் அறிந்தது இல்லையே. அப்படியிருக்கத் தமையன் எங்கிருந்து முளைத்தான்? சே! சே! இந்த நிமித்திகனும் கோதைமார்பனும் சேர்ந்து என்னைப் பைத்தியமாக ஆக்கிவிடுவார்கள் போலிருக்கிறதே! என்றெல்லாம் எண்ணி மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தாள்.

கோதைமார்பன் ஒரு மோசக்காரனோ என்ற ஐயமும் அவளுக்கு எழுந்தது. அவனை நம்பி முத்திரை மோதிரத்தைக் கொடுத்துவிட்ட பேதமையை எண்ணித் தன்னைத்தானே நொந்து கொண்டாள். மறுகணம் மற்றொரு நினைவு எழுந்தது. கோதைமார்பனை இளவரசி வீரமாதேவி காதலிப்பதை எப்படியோ அறிந்து கொண்டிருந்தாள் புவனா. அந்த நினைவு அவளுக்குச் சற்றுத் தெம்பினை அளித்தது. வீரமாதேவியின் காதலரை நம்பி முத்திரை மோதிரத்தை அளித்ததில் தவறு ஒன்றுமில்லை எனத் தன்னைத்தானே தேற்றிக் கொண்டாள். கோதைமார்பனைப் பார்த்தாலும் மோசக்காரனாகத் தோன்றவில்லை. அவன் கண்களில் காணப்பட்ட கனிவும், அவன் பேச்சில் வெளிப்பட்ட அன்பும், புவனாவின் உள்ளத்தை எப்படியோ தொட்டுவிட்டிருந்தன. இனந்தெரியாத ஒருவகை அன்பு அவளுக்குக் கோதைமார்பன் மீது ஏற்பட்டிருந்தது. இதை எண்ணிப் பார்க்கப் பார்க்க அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

இத்தகைய சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் அரண்மனைப் பூங்காவில் மெய்ம்மறந்திருந்த புவனாவிற்குப் பொழுது கழிந்ததே தெரியவில்லை. தன் தோளை யாரோ தொடுவது போன்ற உணர்வு ஏற்பட்டவுடன் திடுக்கிட்டுத் திரும்பினாள். ஆம்; அவளது தோளினைத் தீண்டும் உரிமை படைத்தவன்தான் நின்று கொண்டிருந்தான்.

“கங்க இளவரசியாருக்கு என்ன சிந்தனையோ?” என்றான் இளவரசன் அதிராசேந்திரன். அவன் குரலில் கேலி ததும்பி வழிந்தது. இளவரசனைக் கண்ட புவனா நாணத்துடன் எழுந்து நின்றாள். மெதுவாக அவள் கரம் பற்றிப் பளிங்கு மேடையில் அமரச் செய்து, தானும் அருகில் அமர்ந்து கொண்டான். சற்று நேரம் அமைதியாகக் கழிந்தது.

“புவனா! ஏதாவது பேசமாட்டாயா?”

“இளவரசே! அமைதியில்தான் இன்பம் கிடைக்கிறது. அதுவும் உங்கள் அருகில் அமர்ந்து கொண்டு இயற்கையை ரசிப்பதைவிட வேறு இன்பம் வேண்டுமா?”

“இருந்தாலும் நீ பேசுவதைக் கேட்கும் போது நான் அடையும் இன்பமே வேறு. அதுவும் உன் செங்கனி வாய் திறந்து குயிலினும் இனிய குரலில் பாடுவாயே! அதைச் செவிமடுக்கும் போது நான் இந்த உலகையே மறந்துவிடுகிறேன்.”

“ஐயய்யோ! அப்படியெல்லாம் செய்துவிடாதீர்கள். இந்த உலகை நீங்கள் ஒருகணம் மறந்தாலும் இந்தச் சோழ சாம்ராஜ்யம் நாயகனற்ற அநாதையாகிவிடும். நாடும் நகரமும் என்னைத் தூற்றும். எங்கிருந்தோ வந்தாள்! எங்கள் இளவரசரை எப்படியோ மயக்கிவிட்டாள் என ஏசும்.”

அவள் கூறியதைக் கேட்டு இளவரசன் முகத்தில் புன்னகை மிளிர்ந்தது.

“அதையும்தான் பார்ப்போமே! எங்கே ஒரு பாட்டுப் பாடு” என்றான்.

அப்போது எங்கேயோ ஒரு மரக்கிளையில் அமர்ந்த வண்ணம் குயிலொன்று இனிமையாகக் கூவியது. பேடையைப் பிரிந்த குயிலின் அந்த சோகக் குரல் தீனமாக ஒலித்தது. ஏற்கனவே கலங்கிப் போய் இருந்த புவனாவின் உள்ளம் மேலும் கலங்கியது. அந்தக் கலக்கத்தை இளவரசன் அறிந்துவிடக் கூடாதே என்பதற்காக முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு பாடத் தொடங்கினாள். குயிலின் சோகக் குரலைவிடச் சோகமாக அவள் கீதம் ஒலித்தது.

**“ஞாயும் யாயும் யாரா கியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**நீயும் நானும் எவ்வழி அறிதும்**

**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே.”**

குறுந்தொகைக் கவிதையான இதைப் புவனா பாடிய போது அந்தச் சோலையிலே வாழ்ந்த புள்ளினங்கள் கூவுவதை மறந்தன. துள்ளித் திரிந்த புள்ளிமான்கள் அந்தக் கானத்திலே கட்டுண்டு அப்படியே அசையாது நின்றன. செடிகளும் கொடிகளும் அவைகளிலே பூத்துக் குலுங்கிய மலர்களும் அசைவற்று அந்தக் கானத்திலே கட்டுண்டன. மெல்லென வீசிய தென்றல்கூட அந்தக் கானத்தில் கட்டுண்டு நின்றுவிட்டது போலத் தோன்றியது. இளவரசன் அதிராசேந்திரன் அடைந்த நிலையை விவரிக்கவே முடியாது. அந்த அளவிற்கு அந்த சோக கீதம் அவன் நெஞ்சை ஊடுருவியிருந்தது.

“புவனா! சில நாட்களுக்கு முன்புவரை நீயும் நானும் யாரோ? உன்னுடைய தந்தையும் என்னுடைய தந்தையும் எந்த வகையில் உறவினர்கள்? ஆனால் இன்று நமது நெஞ்சங்கள் இரண்டறக் கலந்துவிட்டன. நம்முடைய நிலைமையை இப்பாடல் அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது” என்றான்.

“ஆம்! இளவரசே! என் தாயையும் தந்தையையும் நீங்கள் மட்டுமல்ல நானே அறியேன். நான் அறிந்ததெல்லாம் என் பாட்டனைத்தான். இளவரசே, நான் ஒன்று கேட்பேன். கோபித்துக் கொள்ளமாட்டீர்களே?”

“புவனா! இதென்ன அசட்டுக் கேள்வி. உன் மனம் என்ன காரணத்தினாலேயோ கலங்கியிருக்கிறது. அதனால்தான் இப்படியெல்லாம் பேசுகிறாய்.”

“இளவரசே! சற்றுமுன் நான் பாடிய குறுக்தொகைப் பாடலுக்கு நம் வாழ்வையே ஒப்பிட்டீர்கள். ஆனால், நான் யார்? எனது தாய், தந்தையர் யார் என்பதை அறிந்த பிறகும் என்னை வெறுக்காது ஏற்றுக் கொள்வீர்கள் அல்லவா?” என்றாள். அந்தப் பேதையின் உள்ளம் அவன் கூறப்போகும் பதிலுக்காக ஏங்கியது.

“புவனா! இதென்ன பேச்சு. நான் யார்? நீ யார்? என்ற வேறுபாட்டிற்கே இடமில்லாத வகையில் நாமிருவரும் ஒன்றாகக் கலந்துவிட்ட பின் நீ இப்படியெல்லாம் பேசுவது என்னை வேதனையில் ஆழ்த்துகிறது.”

“இளவரசே! என்னை மன்னியுங்கள். ஏதோ இனந் தெரியாத அச்சம் என் உள்ளத்தை அலைக்கழித்து வருகிறது. அதன் விளைவாக என்ன பேசுகிறோம் யாரிடம் பேசுகிறோம் என்பதே புரியாமல் ஏதேதோ உங்களிடம் பேசிவிட்டேன்.”

“புவனா! இதோ பார்! உனக்கு எந்த விதமான அச்சமும் வேண்டியதில்லை. நான் அருகில் இருக்கும் போது நீ எதற்காகப் பயப்பட வேண்டும். சோழ குலத்தவர்கள் கொடுத்த வாக்கினை மீறாதவர்கள். அந்தப் பரம்பரையில் வந்த நான் உனக்குக் கொடுத்த வாக்கினை மீறமாட்டேன். என் உள்ளத்தில் உன்னைத் தவிர வேறு யாருக்கும் இடமளிக்கமாட்டேன்” என்றான்.

இளவரசன் உணர்ச்சியுடன் கூறிய வார்த்தைகள் புவனாவின் உள்ளத்தைத் தொட்டன. அதிராசேந்திரனின் மார்பில் தன் முகத்தைப் புதைத்த வண்ணம் “இளவரசே! என்னை மன்னியுங்கள்” எனத் தேம்பினாள் புவனா.

# ௬௪. திட்டம் தயாராகிறது

“நீலகேசி, நீ சொல்வது உண்மைதானா?”

“ஆம்! கோதைமார்பனும் புவனமாதேவியும் சந்தித்துப் பேசியதையும், அவள் தனது முத்திரை மோதிரத்தைக் கழற்றி அவனிடம் அளித்ததையும் நேரில் கண்டேன்.”

“பிறகு என்ன நடந்தது?”

“இன்று மாலை அரண்மனைத் தோட்டத்தில் தன்னைச் சந்திக்க வருமாறு கோதைமார்பனைப் புவனமாதேவி அழைத்தாள். அவனும் வருவதாக வாக்களித்தான்.”

“உம்மைத் தவிர வேறு யாருக்கும் இது தெரியுமா?”

“கவி குமுதசந்திரன் மற்றொரு மரத்தின் மறைவில் இருந்து இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான்.”

“ஆ, அப்படியா!” என ஒருகணம் திகைத்தான் கங்காகேத்தன்.

ஆம். கங்காகேத்தன், நீலகேசி, சயசிங்கன் ஆகிய மூவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். வழக்கமாகச் சந்திக்கும் இடமான அந்த மாபெரும் மரத்தின் அடியில் அமர்ந்த வண்ணம் பரபரப்புடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள். கங்காகேத்தன் பேசத் தொடங்கினான்.

“நண்பர்களே! நாம் வேகமாகச் செயல்பட வேண்டிய காலம் வந்துவிட்டது. இனி ஒருகணம் தாமதித்தாலும் பேரபாயம் நேரிட்டுவிடும். நமது எதிரி நம்மை முந்திக் கொள்வான்.”

“ஆம்! நீலகேசி கொண்டு வந்திருங்கும் செய்தியைக் கேட்ட பிறகு அப்படித்தான் தோன்றுகிறது” என்றான் சயசிங்கன்.

“விக்கிரமாதித்தனின் நோக்கம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. புவனமாதேவியிடம் தன்னை இன்னான் என்பதை அவன் வெளிப்படுத்திக் கொண்டானா என்பதும் தெரியவில்லை. அவளை அவன் இரகசியமாகச் சந்திக்கும் காரணமும் தெளிவாகவில்லை” என்றான் கங்காகேத்தன்

“புவனாவின் பிறப்புப் பற்றிய இரகசியத்தையும், தான் யார் என்பதையும் எடுத்துக் கூறி அவளை அழைத்துச் செல்ல

விக்கிரமாதித்தன் திட்டமிட்டிருக்கலாம் என நான் ஊகிக்கிறேன்” என்றான் நீலகேசி.

“அப்படி இருந்தால் அவளை அழைத்துக் கொண்டு அவன் எங்கு செல்லுவான்? குந்தள நாட்டில் இனி நுழைய முடியாது. சோழ நாட்டில் இருக்க முடியாது. பின் எங்குதான் போய் வாழ அவன் திட்டமிட்டிருக்கிறான்” என்றான் சயசிங்கன்.

“வேறு எங்கு? எமலோகத்தில்தான்” என்றான் கங்காகேத்தன். அதைக் கேட்ட மற்ற இருவரும் இடி இடியெனச் சிரித்தார்கள்.

“சிரிக்க வேண்டாம் நண்பர்களே! நான் கூறுவது விளையாட்டிற்கு அல்ல. உண்மையிலேயேதான் கூறுகிறேன். இன்றிரவு விக்கிரமாதித்தன் எமலோகத்திற்குத்தான் பயணமாகப் போகிறான். அந்தப் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யவே நாம் இங்குக் கூடியிருக்கிறோம்” என்றான் கங்காகேத்தன்.

கொலைவெறி கூத்தாடும் கண்களுடன் இவ்வாறு அவன் கூறியதைக் கேட்ட அவனது நண்பர்களின் உள்ளங்களே சிறிது நடுங்கின.

“அப்படியானால்..” என இழுத்தான் நீலகேசி.

“ஆம்! இன்றிரவு விக்கிரமாதித்தனைத் தீர்த்துக்கட்டிவிட வேண்டியதுதான்” என்றான் கங்காகேத்தன். சற்று நேரம் அமைதி நிலவியது.

“ஆம் நண்பர்களே! இந்த வேளை தவறினால் மறுவேளை வாய்ப்பதரிது.”

“நாற்புறமும் நம்மை அபாயம் சூழ்ந்து வருகிறது. விக்கிரமனின் நடவடிக்கைகளை நாம் மட்டும் கண்காணிக்கவில்லை. கவி குமுதசந்திரனும் கண்காணித்து வருகிறான் என்பது முக்கியமான விஷயமாகும். குமுதசந்திரன் இளவரசர்களின் ஆள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. விக்கிரமனை அவர்கள் அடையாளம் கண்டு கொண்டாலும் கொள்ளலாம்..” இவ்வாறு கங்காகேத்தன் கூறி வருகையில் நீலகேசி குறுக்கிட்டான்.

“அப்படி ஏதாவது நேர்ந்தால் மிகவும் நல்லதாய்ப் போயிற்று. நமது வேலை குறையும் அல்லவா?”

“முட்டாள்தனமாக உளறாதே, நீலகேசி! விக்கிரமனைச் சோழர் கையில் காட்டிக் கொடுப்பதானால் அதைப் பல நாட்களுக்கு முன்பாகவே செய்திருக்கலாம். ஆனால் நமது காரியம் கெட்டுப் போகும். நாம் எதற்காக இங்கு வந்தோம் என்பதை ஒருகணம் நினைத்துப் பாருங்கள். குந்தள அரசச் சின்னங்களை விக்கிரமனிடமிருந்து அபகரித்துச் செல்வதற்காக இங்கு வந்தோம். ஆனால் அவை இன்னும் கைகளுக்குக் கிட்டவில்லை. அப்படியே நாம் விக்ரமனிடம் இருந்து இந்தச் சின்னங்களைக் கைப்பற்றிக் கொண்டு அவனைச் சோழர்களிடம் காட்டிக் கொடுத்துவிட்டு நாம் தப்பினோம் என வைத்துக் கொள்ளுங்கள். சோழர்களிடம் அகப்பட்டுக் கொண்ட விக்கிரமன் நம்மைக் காட்டிக் கொடுத்தால் என்ன செய்வது? இந்த நாட்டின் எல்லையைக் கடப்பதற்குள் நாம் சிறை செய்யப்பட்டுவிடுவோம். நமது காரியம் கெட்டுப் போவது மட்டுமல்ல. விக்கிரமனைச் சோழர்கள் தமது கைவசப்படுத்திக் கொள்ளக் கூடிய அபாயம் நேர்ந்தாலும் நேரலாம். குந்தள அரசுரிமையை விக்கிரமனுக்கு அளிப்பதாக ஆசைவார்த்தை காட்டி நமது இளவரசர் சோமேசுவரருக்கு எதிராக விக்கிரமனைப் பயன்படுத்த முனையலாம். இத்தகைய விபரீதங்கள் நிகழுவதற்கு நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது. விக்கிரமனைத் தீர்த்துக் கட்டிவிட்டுச் செல்வதே உசிதமான செயலாக இருக்கும்” என்றான் கங்காகேத்தன்.

“ஆம், கங்காகேத்தரே. நீர் சொல்வது உண்மைதான். இதையெல்லாம் நான் எண்ணிப் பார்க்கவில்லை!” என்றான் நீலகேசி.

“சயசிங்கரே! இத்தனை நாட்களாக இந்தக் காட்டில் நீர் காத்துக் கிடந்தது முக்கியமல்ல. இனிமேல்தான் நீர் உமது வேலையில் கண்ணுங்கருத்துமாக இருக்க வேண்டும். இன்று மாலைக்குள் எப்படியும் அரச சின்னங்களை எடுத்துக் கொண்டு செல்ல இங்கு வருவான். அவனை நீர் கவனமாகப் பின் தொடர வேண்டும். அரண்மனைப் பூங்காவினுள் நுழையப் பின்புறவாயில் ஒன்று உள்ளது. அதன் வழியாகத்தான் அவன் உள் நுழைவான். அதுவரை அவனைப் பின் தொடர்ந்து வந்து நீர் அந்த வாயிலிலேயே காத்திருக்க வேண்டும். உம்முடன் நீலகேசியும் சேர்ந்து கொள்வான். ஒன்றை மட்டும் கவனமாக வைத்துக் கொள்ளுங்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் விக்கிரமனைத் தடுத்து நிறுத்தாதீர்கள். அல்லது அவனது பொருட்களை அபகரிக்க முயலாதீர்கள். அரண்மனைப்

பூங்காவின் வெளிச் சுவரையொட்டிக் கவனமாக மறைந்திருங்கள். நமது சங்கேதக் குரலை நான் கிளப்பினால் உள்ளே எனக்கு ஏதோ ஆபத்து நேரவிருக்கிறது என்பதை அறிந்து மதிற்சுவரேறிக் குதித்து உள்ளே வாருங்கள். இல்லையேல் வராதீர்கள்" என்றான் கங்காகேத்தன். இடைவிடாமல் பேசியதால் அவனுக்கு மூச்சு வாங்கியது. ஒருகணம் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு மேலே தொடர்ந்தான்.

"இத்தனை நாட்களாகச் சக்திவர்மரின் அரண்மனையில் சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டு வீணில் காலங் கடத்திக் கொண்டிருப்பதாகக் கூட என் மீது நீங்கள் சந்தேகப்பட்டிருக்கக் கூடும். ஆனால் அரண்மனைக்குள்ளே இத்தனை நாள் உலவியதன் விளைவாகப் பல இரகசியங்களைத் தெரிந்து கொண்டிருக்கிறேன். அவற்றிலே சில வேடிக்கையை மட்டும் தரவில்லை. வேதனையையும் தருகின்றன. சோழச் சக்கரவர்த்தி போர்க்களம் நோக்கிப் போயிருக்கும் இந்த வேளையில் அவருடைய இடத்தில் இருந்து காமச் சக்கரவர்த்தியான மன்மதன் ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறான். விஷ்ணுவர்த்தனனும் மதுராந்தகியும் மட்டும் அவனுக்கு அடிமையாகிவிடவில்லை. காமன் கணைகளினால் அடிபட்டோரின் பட்டியலிலே வேங்கி இளவரசனும், எனது அசட்டு எஜமானனுமாகிய சக்திவர்மன், வேடதாரியான விக்ரமன், இளவரசிகளான வீரமாதேவி, புவனமாதேவி ஆகியோரும் உள்ளனர்."

"என்ன? நீர் கூறுவது உண்மைதான?"

"ஆம் நண்பர்களே! வேடதாரியும் நமது பகைவனுமான விக்ரமனுக்கு வந்த ஆசையைப் பாருங்கள். சோழ சக்கரவர்த்தியின் திருமகளை இந்த நாடோடி காதலிக்கிறான். இதுகூட அவ்வளவு வேடிக்கையான விஷயமில்லை. எதிர்காலச் சோழ சக்கரவர்த்தியான அதிராசேந்திரனுக்குப் புவனமாதேவியின் மீது கரைகாணாக் காதல் ஏற்பட்டிருக்கிறது. காதலுக்குக் கண்ணும் காதும் கிடையாது என்பது எவ்வளவு சரியாகப் போயிற்று பார்த்தீர்களா? இந்தக் காதல் நாடகங்களைக் கண்டு களிப்பதோடு மட்டும் நான் நின்றுவிடவில்லை. இவைகளையே பயன்படுத்தி நமது திட்டத்தை நிறைவேற்றவும் ஒருவழி கண்டுபிடித்திருக்கிறேன்" என்றான் கங்காகேத்தன்.

அவன் வாயிலிருந்து இன்னும் ஆச்சரியமான செய்தி வேறு என்ன வெளியாகப் போகிறதோ என்ற ஆர்வத்துடன் நீலகேசியும் சயசிங்கனும் வாயடைத்துப் போய் அமர்ந்திருந்தனர். கங்கா கேத்தன் தொடர்ந்தான்.

“விக்கிரமன் எப்படியும் இன்று மாலை அரண்மனைப் பூங்காவில் புவனாவைச் சந்திப்பான். தான் யார் என்ற இரகசியத்தையும் வெளியிட முயல்வான். அந்தப் பேதைப் பெண் அவன் சொல்வதை நம்பப் போகிறாளோ என்னவோ? அதைப் பற்றி நமக்குக் கவலையில்லை. காதல் போதை தலைக்கேற கிறுகிறுத்திருக்கும் சக்திவர்மனை நமது காரியத்திற்குப் பயன்படுத்தப் போகிறேன். இதோ இந்தச் சிறு கத்தி விக்ரமன் மார்பில் பாய்வதற்காகப் பல நாட்களாகத் துடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் அந்த அருமையான காரியம் சக்திவர்மனின் கரங்களால் சாதிக்கப்படும்” என்றான் கங்காகேத்தன். அவன் கூறிய செய்தி இருவரையும் திடுக்கிட வைத்தது.

“என்ன? என்ன?” என வியப்பு கலந்த குரலில் இரு வரும் கூறினர்.

“நண்பர்களே! சற்று அருகில் நெருங்கி வாருங்கள். நான் கூறப் போகும் இந்த இரகசியம் வேறு யார் காதிலும் விழுந்துவிடக் கூடாது” என்ற பீடிகையுடன் மெல்லிய குரலில் தனது திட்டத்தைக் கூறத் தொடங்கினான் கங்காகேத்தன்.

# 65. தமையனும் தங்கையும்

அந்தி மயங்கிக் கொண்டிருந்தது. மாலை மஞ்சள் வெயிலின் பளபளப்பு, சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டிருந்தது. மரங்கள் அடர்ந்த அந்தச் சோலையை இருள் மெதுவாகச் சூழ்ந்து கொண்டிருந்தது. பளிங்கு மேடையருகே குறுக்கும் நெடுக்குமாகப் புவனா நடந்து கொண்டிருந்தாள். அமைதியற்ற நிலையில் அவள் இருக்கிறாள் என்பதை அவளது முகமே காட்டிற்று. சற்றைக்கொருதரம் அந்தப் பூங்காவின் பின்புற வாயிலை நோக்குவதும் பின்னர்க் கைகளைப் பிசைந்த வண்ணம் நடப்பதுமாக இருந்தாள்.

ஒருவேளை காவலாளி கோதைமார்பனைத் தடுத்து நிறுத்திவிட்டானோ என்ற எண்ணம் அவளுக்கு எழுந்தது. முத்திரை மோதிரத்தைக் காட்டும் இளைஞரை உள்ளேவிடும்படி காவலாளியிடம் ஏற்கனவே கூறியிருந்தது அவள் நினைவிற்கு வரவே அந்தச் சந்தேகம் நீங்கியது. சந்தேகம் நீங்கியதைத் தொடர்ந்து அச்சம் அவளை ஆட்கொண்டது. இந்த நேரத்தில் யாரேனும் தேடி வந்துவிட்டால் என்ன செய்வது? அதிலும் அவர் வந்துவிட்டால்? கோதைமார்பனுடன் தான் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டால் என்ன நினைப்பார்? இந்த நினைவு அவளுக்குப் பெருங் கவலையை அளித்தது.

செய்வது இன்னதென அறியாது அவள் தடுமாறிக் கொண்டிருந்த போது யாரோ வரும் அரவம் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பினாள். எதிரில் கோதைமார்பன் நின்று கொண்டிருந்தான்.

“மன்னிக்க வேண்டும் இளவரசி. எதிர்பாராத கால தாமதமாகிவிட்டது” என்றான்.

“அதனால் பரவாயில்லை, கோதைமார்பரே. இருட்டிக் கொண்டிருக்கிறது. இந்த அகால வேளையில் நாம் இங்குத் தனித்துப் பேசுவது சரியல்ல. எனவே விரைவில் நீர் சொல்ல விரும்புவதைக் கூறும்” என்றாள் புவனா.

“அப்படியே ஆகட்டும் இளவரசி. நான் சொல்லப் போவதைக் கேட்பதற்கு முன் உங்கள் அன்புத் தமையன் உங்களுக்கு அனுப்பிய

ஓலையைப் படித்துப் பாருங்கள்” என்று கூறிவிட்டு ஓலையொன்றினை அவளிடம் நீட்டினான் கோதைமார்பன்.

திகைப்புடன் அதை வாங்கிய புவனா அந்த மங்கிய ஒளியில் அதைப் படிக்கத் தொடங்கினாள்.

“அன்புத் தங்கை புவனமாதேவிக்கு, அண்ணன் விக்கிரமாதித்தன் எழுதிக் கொண்டது. குந்தளக் குலக்கொடியே! பகைவர்பால் வளரும் எங்கள் குலவிளக்கே! உன்னை நீ உணரும் வேளை வந்துவிட்டது. இந்த வரிகள் உனக்கு அதிர்ச்சியைத் தரும் என்பதை நானறிவேன். என்றாலும் உண்மையை என்றாவது ஒருநாள் நீ அறிந்து கொள்ள வேண்டுமல்லவா? குந்தள மன்னரும் நமது தந்தையுமான ஆகவமல்லரிடமிருந்து பகைவர்கள் உன்னைப் பிரித்து எடுத்துச் சென்றார்கள். நீ இறந்துவிட்டாய் என எண்ணியிருந்தோம். ஆனால் நம் தந்தை சாகும் வேளையில் நீ உயிரோடு இருக்கும் உண்மையை என்னிடம் எடுத்துக் கூறினார். உன்னை மீட்டு வரும்படி என்னைப் பணித்தார். நமது பரம்பரை எதிரிகளின் நடுவில் நீ வாழ்ந்தது போதும். தங்காய், உன் அண்ணன் அழைக்கிறான். வா! இந்த ஓலையைக் கொண்டுவரும் கோதைமார்பனை நீ பரிபூரணமாக நம்பலாம். அவனுடன் புறப்பட்டு நீ வரலாம். உன்னை எதிர்கொண்டு வரவேற்க நான் காத்திருக்கிறேன்.”

ஓலையைப் படித்து முடித்த புவனமாதேவியின் தலை கிறுகிறுவெனச் சுற்றியது. தான் காண்பது கனவா அன்றி நனவா என்ற ஐயத்துடன் கோதைமார்பனை ஏறிட்டுப் பார்த்தாள். அதைப் புரிந்து கொண்டவன் போலக் கோதைமார்பன் பேசத் தொடங்கினான்.

“இளவரசி! காலமெல்லாம் தங்களுக்காகக் காத்திருக்கும் தங்கள் தமையனார் இன்று இந்த அரண்மனைக்கு வெளியே தங்களுக்காகக் காத்திருக்கிறார். இனியும் தாமதியாது புறப்படுங்கள்” என்றான்.

“கோதைமார்பரே! நீர் கூறும் விவரங்கள் என்னை வியப்பில் ஆழ்த்தியுள்ளன. குந்தள அரசகுலத்துடன் என்னைத் தொடர்புபடுத்தி ஏதேதோ கூறுகிறீர்கள். எனக்கொன்றும் புரியவில்லையே.”

“இளவரசி! விவரம் அறியாத சிறு குழந்தையாக நீங்கள் இருந்த போது கம்பிலி நகரத்தைச் சோழர் படை முற்றுகையிட்டுத் தாக்கி அரண்மனைக்குத் தீயிட்டது. அந்தத் தீயில் தங்கள் தாய் கருகி மடிந்தார்கள். நீங்களும் இறந்து போனதாகவே அனைவரும்

கருதினோம். ஆனால் சோழர் படைத்தளபதியாகிய மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் தங்களை எடுத்துச் சென்று வளர்த்தார் என்பதை நீண்ட காலத்திற்குப் பிறகு அறிந்தோம்" என்றான்.

இதுவரை புவனாவிற்குப் புலனாகாமல் இருந்த சில உண்மைகள் சிறிதாகப் புலனாகத் தொடங்கின. தனது பிறப்பைப் பற்றி எதுவுமே கூறாமல் தனது பாட்டன் மறைத்ததன் காரணம் இதுதானோ என்ற ஐயமும் அவளுக்கு ஏற்பட்டது. சோழ குலத்தின் பரம்பரைப் பகைவனின் மகளா நான் என்ற எண்ணத்தை அவளால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. அதிலும் இளவரசன் அதிராசேந்திரனை எண்ணிய போது அவளது சித்தம் குழம்பியது. பகைவனின் மகள் என்பதை அறிந்தால் என்னை ஏற்றுக் கொள்வாரா? இல்லை உதறித் தள்ளுவாரா? ஐயோ! இது என்ன சோதனை? இவ்வாறு சிறிது நேரம் பேதலித்த பிறகு அந்தப் பேதை பேசத் தொடங்கினாள்.

"கோதைமார்பரே! நீர் கூறுவது உண்மையாக இருந்தாலும் தற்போது அதை ஏற்றுக் கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன். தயவுசெய்து என்னை மன்னிக்குமாறு எனது தமையனிடம் கூறிவிடுங்கள்" என்றாள்.

"இளவரசி! தாங்கள் வர மறுத்துவிட்டீர்கள் என்ற செய்தியை அறிந்தால் உங்கள் அண்ணனின் இதயம் வெடித்துவிடும். தயவுசெய்து தங்கள் முடிவைப் புனராலோசனை செய்யுங்கள். நீங்கள் யார் என்பதை உங்களின் வளர்ப்புத் தந்தையோ, அல்லது சோழ குலத்தினரோ அறிந்தால் உங்கள் நிலை என்ன ஆகும்? அவர்களால் உங்களுக்கு ஏதேனும் நேர்ந்துவிடுமானால் உங்கள் தமையனின் இதயம் அதைத் தாங்கிக் கொள்ளாது" என்றான் கோதைமார்பன். அவ்விதம் அவன் கூறும் போதே அவன் குரல் தழுதழுத்தது.

"கோதைமார்பரே! குந்தள குலத்திலே நான் பிறந்திருந்தாலும் சோழ குலத்திற்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். என்னை வளர்த்து ஆளாக்கிய எனது பாட்டனுக்குத் துரோகம் இழைக்கமாட்டேன். எனது வாழ்வையும் தாழ்வையும் சோழ நாட்டிலேயே தீர்மானித்துக் கொள்வேன். எது நேர்ந்தாலும் உண்ட வீட்டிற்கு, இரண்டகம் நினைக்கும் துரோகியாகமாட்டேன்" என்றாள்.

அப்போது யாரோ நடந்து வரும் ஒலி கேட்டது. இதற்குள் இருள் முற்றிலும் கவிழ்ந்துவிட்டதால் வருவது யார் என்பதைத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

“கோதைமார்பரே! யாரோ வருகிறார்கள். நீர் உடனே இங்கிருந்து போய்விடும். எனது தமையனிடம் இந்த முடிவைச் சொல்லிவிடும்” எனக் கூறிவிட்டு நகர ஆரம்பித்தாள்.

பரபரப்புடன் கோதைமார்பன் “தங்காய்!” என்றான்.

திடுக்கிட்டுத் திரும்பினாள் புவனமாதேவி.

“ஆம், புவனா! என்னை மன்னித்துவிடு. மாறுவேடத்தில் உன்னிடம் வந்ததற்காக என்னை மன்னித்துவிடு. நான்தான் உன் அண்ணன் விக்கிரமாதித்தன். வா! தங்கையே.. என்னுடன் வந்துவிடு. யாரேனும் வருவதற்குள் இங்கிருந்து தப்பிவிடலாம்” என்றான்.

வியப்பினால் விரிந்த விழிகளுடன் கோதைமார்பனை ஏறிட்டுப் பார்த்தாள் புவனா. அந்த மங்கிய ஒளியில் அவன் விழிகளில் இருந்து பொல பொலவென நீர் வடிந்து கொண்டிருப்பதைக் கண்டாள். அவள் இதயம் இளகியது. உறுதி சுக்குநூறாக உடைந்தது.

“அண்ணா!” என அலறிய வண்ணம் தேம்பினாள்.

“தங்காய்! உன்னைக் காண வேண்டும் என்பதற்காக என் உயிரையும் மதியாது சோழ நாட்டிற்கு மாறுவேடத்தில் வந்தேன். எவ்வளவோ பாடுபட்ட பிறகு உன்னைச் சந்தித்தேன். ஆனால் நீயோ என்னை நம்ப மறுக்கிறாய். என்ன செய்வது?” என்றான்.

“அண்ணா! என்னை மன்னித்துவிடுங்கள். உங்களை நம்பாததினால் உங்களுடன் வர மறுக்கவில்லை. என்னை நம்பியிருக்கும் மற்றொருவருக்குத் துரோகம் செய்ய நான் விரும்பவில்லை” என அழுதவாறு அவன் காலடியில் புவனா விழுந்தாள். அன்புடன் அவளை வாரியெடுத்தான் விக்கிரமாதித்தன். அவள் விழிகளில் பெருகிய நீரைத் துடைத்தான்.

“தங்காய்! நீ என்ன சொல்லுகிறாய் என்றே எனக்குப் புரியவில்லை. ஆனாலும் ஏதோ குழப்பத்தில் நீ சிக்கியிருக்கிறாய் என்பது புரிகிறது. கேள் தங்காய்! இந்த அரண்மனைக்கு வெளியே என்னைத் தொலைத்துக் கட்டுவதற்காகச் சிலர் கொலை வெறியுடன் திரிந்து கொண்டிருக்கிறார்கள். அரண்மனைக்குள்ளேயும் அபாயம் நிறைந்திருக்கிறது. ஆபத்தின் எல்லையில் நின்று கொண்டு பேசுகிறேன். சமாதானம் செய்யவோ, வாதிடவோ இது நேரமல்ல. என்னுடன் புறப்படு” என்றான்.

“அண்ணா! பிறவிக்குருடன் பார்வை பெற்றும் பயனில்லாத நிலை அடைந்தால் எப்படி இருக்குமோ அப்படி நான் இருக்கிறேன். அண்ணனைச் சந்தித்ததும் அவருடன் அளவளாவ முடியாமல் தவிக்கிறேன். என்னை மன்னியுங்கள். அவரைப் பிரிந்து என்னால் எங்கும் வர முடியாது” என்றாள். அழுகையினூடே ஒலித்த அவள் குரலில் உறுதி வெளிப்பட்டது.

அப்போது பூங்காவைச் சுற்றியிருந்த மதிற்சுவருக்கு வெளியே யாரோ “ஆ” என அலறும் சப்தம் கேட்டது. புவனாவின் உடல் அச்சத்தால் நடுங்கிற்று. அவள் கரத்தை ஆதரவுடன் விக்கிரமன் பற்றிக் கொண்டான்.

“அண்ணா! நீங்கள் போய்விடுங்கள். போய்விடுங்கள்..” எனப் பதைபதைப்புடன் கூவிய புவனா தன் கரங்களை மெதுவாக விடுவித்துக் கொண்டு அங்கிருந்து நகரத் தொடங்கினாள். அவள் தலைமறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த விக்கிரமன், அருகில் ஏதோ சலசலப்புக் கேட்டுத் திரும்பினான். எதிரில் பெண்ணுருவம் ஒன்று நின்று கொண்டிருந்தது. திடுக்கிட்டு ஓரடி பின்வாங்கிய விக்கிரமன் தன் உடைவாளில் கை வைத்தான்.

“குந்தள இளவரசரே! பொறுங்கள், பதறாதீர்கள்” என்றது அந்த உருவம்.

“ஆ! நீயா” என்றான் விக்கிரமன்.

“ஆம்! நானேதான். மாறுவேடத்தில் வரவில்லை. சொந்த வேடத்தில்தான் வந்திருக்கிறேன்” என்றாள் வீரமாதேவி.

“இளவரசி..!”

“போதும்! நிறுத்துங்கள். நீங்கள் மாறுவேடத்தில் வந்து என்னை ஏமாற்றியதற்காக உங்கள் மீது கோபம் கொள்ளவில்லை. இந்த நாட்டைவிட்டுத் தப்பி ஓடும் முன்பு உங்கள் அருமைத் தங்கையை அழைத்துப் போக வேண்டும் என்ற துடிப்பு மட்டும் இருந்ததே தவிர காதலியையும் அழைத்துப் போக வேண்டும் என்ற துடிப்பு மருந்தளவுகூட இல்லையே.”

“இளவரசி! அப்படியானால் நாங்கள் பேசிக் கொண்டிருந்தது முழுவதையும் கேட்டுக் கொண்டிருந்தீர்களா?”

“ஆம்! கேட்டேன். கேட்டதினால்தான் உங்கள் துரோகத்தை அறிந்து கொண்டேன்.”

“துரோகமா?”

“ஆம்! எனக்குத் துரோகம் செய்துவிட்டு நீர் தப்பிப் போக இருப்பதை அறிந்து கொண்டேன்.”

“இளவரசி! பகை நாட்டைச் சேர்ந்தவன் தப்பிப் போக முயலுவது இயற்கைதானே.”

“இயற்கைதான். ஆனால் தன்னை நம்பிய பெண்ணைக் கைவிட்டுவிட்டு ஓடுவதை எங்கேயாவது கண்டதுண்டா? அது இயற்கைக்கு எதிரிடையானது அல்லவா?”

“இளவரசி! என்னை மன்னியுங்கள்” என்றான் விக்கிரமன். அதற்குமேல் பொறுத்திருக்க வீரமாதேவியால் முடியவில்லை. அவன் மார்பில் சாய்ந்து கொண்டு தேம்பினாள். அப்போது அருகிருந்த புதர் சலசலத்தது. இருவரும் திடுக்கிட்டுத் திரும்புவதற்குள் விக்கிரமனின் தலையில் ஓங்கி ஒரு அடி விழுந்தது. “ஆ” என்ற வண்ணம் நிலைகலங்கிக் கீழே சாய்ந்த விக்கிரமனைத் தாங்கிப் பிடித்த வண்ணம் ‘ஓ’வென அலறினாள் வீரமாதேவி. புதரில் இருந்து தடியுடன் ஒரு உருவம் வெளிப்பட்டது. வெளிப்பட்ட அந்த உருவத்தின் மீது குத்துவாள் ஒன்று பாய்ந்தது. “ஆ” என அலறிய வண்ணம் அந்த உருவம் கீழே சாய்ந்தது. இவ்வளவும் ஒருகண நேரத்திற்குள் நடந்து முடிந்துவிட்டன.

இரத்த வெள்ளத்தில் கிடந்த விக்கிரமனை அணைத்த வண்ணம் தேம்பிய வீரமாதேவியின் முகத்தைத் துணியால் ஒரு உருவம் மூடியது. அவள் திமிறினாள். கதறினாள். ஆனாலும் பயனில்லை. அவளை அப்படியே தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு அந்த உருவம் ஓட்டமும் நடையுமாகச் சென்றது. தடதடவெனப் பலர் ஓடிவரும் சப்தம் கேட்டது.

# ௬௫. குழப்பம்

அரண்மனைப் பூங்காவில் யாரோ அலறும் சத்தம் கேட்டு இராக்காவலர்கள் ஓடி வந்தார்கள். அதற்குள் இருள் நன்றாகக் கவிழ்ந்துவிடவே எதிரில் இருப்பது ஒன்றும் அவர்களுக்குப் புலப்படவில்லை. அவர்களில் ஒருவன் தீவட்டியுடன் திரும்பி வந்தான். அந்த மங்கிய ஒளியின் துணையுடன் அந்தப் பூங்காவெங்கும் அலசி ஆராயத் தொடங்கினார்கள்.

திடீரென ஒருவன் கூச்சலிட்டான். "அண்ணே! இங்கே இரண்டு பேர் விழுந்து கிடக்கிறாங்க" என்றான். அனைவரும் ஓடி வந்தனர். தீவட்டி வைத்திருந்தவன் அதைச் சற்று உயர்த்திப் பிடித்தான். அந்தச் சிவப்பு ஒளியில் அவர்கள் பயங்கரமான காட்சியொன்றினைக் கண்டனர்.

"அண்ணே! ஒரே இரத்த விளாறாகக் கிடக்கிறது. ஒருவன் மண்டையுடைந்து கிடக்கிறான். மற்றவன் முதுகில் கத்தி பாய்ந்திருக்கிறது."

"உயிர் இருக்கிறதா என்று பாருடா."

"முகத்தைத் திருப்புடா, யாரென்று பார்க்கலாம்."

இப்படிப் பலரும் ஏககாலத்தில் கூக்குரலிட்டார்கள்.

"சற்றுச் சும்மாயிருங்கள்" என அக்காவலர்களின் தலைவன் போலத் தோன்றிய ஒருவன் கடுமையான குரலில் உத்தர விட்டுவிட்டுக் கீழே குனிந்தான். கத்தியால் குத்தப்பட்டுக் குப்புறக் கிடந்தவனைச் சற்றுத் திருப்பினான். தீவட்டியின் ஒளி அந்த முகத்தில் படிந்தது. "ஆ" என அந்தக் காவலர் தலைவன் அலறினான்.

"என்ன? இளவரசர் சக்திவர்மரா? அவருக்கு எப்படி இக்கதி நேர்ந்தது" எனக் கூறியவாறே மூக்கில் கை வைத்துப் பார்த்தான். மூச்சு இருக்கிறதா நின்றுவிட்டதா என்பதை அவனால் ஊகிக்க முடியவில்லை. மண்டையுடைந்து கிடந்த மற்றொருவனைப் புரட்டிப் பார்த்தான். அவனுக்கு மூச்சு வந்து கொண்டிருந்தது.

“நல்லது! இளவரசர்களுக்குச் செய்தி சொல்லி அனுப்ப வேண்டியதுதான்” என்று கூறிவிட்டு அவன் எழுந்தான். அதன் பிறகு பரபரப்புடன் காரியங்கள் நடைபெற்றன.

அருகிருந்த மேடையில் இருவரது உடல்களும் எடுத்துக் கிடத்தப்பட்டன. கோதைமார்பன் மட்டும் ஏதோ முனகினான். ஒரு ஈரத்துணியைக் கொண்டு அவன் தலைக்குக் கட்டுப் போடப்பட்டது. அரண்மனை வைத்தியருக்கு ஒரு ஆள் அனுப்பப்பட்டான். இளவரசர்கள் அதிராசேந்திரனுக்கும், விஷ்ணுவர்த்தனருக்கும் செய்தி சொல்லி அனுப்பப்பட்டது.

சற்று நேரத்தில் இளவரசர்கள் இருவரும் வந்து சேர்ந்தனர். சக்திவர்மன் குத்துண்டு குருதிபெருகக் கிடந்த காட்சியைக் கண்டதும் இருவரும் திடுக்கிட்டுப் போயினர். நடந்த விவரங்களை இளவரசர்களிடம் காவலர் தலைவன் தெரிவித்தான்.

“விஷ்ணுவர்த்தனா! இதென்ன கொடுமை. சக்திவர்மர் இங்கு எப்படி வந்து சேர்ந்தார்? அவரை யார் குத்தினார்கள்? தலை பிளந்து கிடப்பது கோதைமார்பன் போலத் தோன்றுகிறதே! அரண்மனைத் தோட்டத்திற்குள் அவன் எப்படி வந்து சேர்ந்தான்?” என அடுக்கடுக்கான கேள்விகளை அதிராசேந்திரன் அடுக்கினான்.

“அதுதான் எனக்கும் தெரியவில்லை. சற்றுப் பொறு, அதிராசேந்திரா! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. அதைக் கண்டு பிடித்தாக வேண்டும்” என விஷ்ணுவர்த்தனன் கூறிவிட்டுக் காவலர்களை அழைத்து அக்கம்பக்கங்களில் நன்றாகத் தேடிப் பார்க்கும்படி ஆணையிட்டான்.

அவ்வாறே காவலர்கள் நாலாபுறமும் தேட ஆரம்பித்தனர். அரண்மனைத் தோட்டத்தின் பின்புற வாயிலருகே யாரோ முனகும் சப்தம் கேட்டது. அங்குச் சென்று பார்த்த போது அவ்வாயிற் காவலன் கையும் வாயும் கட்டப்பட்டுக் கிடந்தது கண்டு பிடிக்கப்பட்டது. கட்டுக்களை அவிழ்த்து அவனை ஆசுவாசப்படுத்திய பிறகு அவன் கூறியது இதுதான்.

“மாலை வெயில் மங்கிக் கொண்டிருக்கும் போது யாரோ ஒருவன் அரண்மனைக்குள் புக முயன்றான். அவனைத் தடுத்து நிறுத்தினேன். அப்போது அவன் மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் இலச்சனை பொறிக்கப்பட்ட முத்திரை மோதிரம் ஒன்றினைக் காட்டினான். வேறு

வழியில்லாமல் அரைகுறை மனதோடு அவனை உள்ளே செல்ல அனுமதித்தேன். அந்தி மயங்கிய பிறகுகூட அவன் வெளியே வரவில்லை. உள்ளே என்ன செய்கிறான் என்பதையறியும் ஆவலுடன் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தேன். இருட்டில் ஏதோ பேச்சுக் குரல் கேட்டதே தவிர ஒன்றும் புலப்படவில்லை. அப்போது மதிற்சுவருக்கு அப்பால் யாரோ அலறும் சப்தம் கேட்டது. மதிற்சுவரோரமாக விரைந்து சென்றேன். ஒரு திருப்பத்தில் திரும்பினேன். மடார் எனத் தலையில் ஒரு அடி விழுந்தது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். பிறகு மயங்கி விழுந்துவிட்டேன்" என்றான்.

மதிற்சுவருக்கு வெளியில் சுற்றுப்புறங்களில் நன்கு ஆராயும்படி காவலர்கள் ஏவப்பட்டனர். சற்று நேரத்தில், மயங்கிக் கிடந்த ஒருவனைக் காவலர்கள் தூக்கி வந்தனர். அவன் முகத்தினைப் பார்த்த போது இளவரசர்கள் அடைந்த வியப்பிற்கு எல்லையே கிடையாது.

"குமுதசந்திரனா! அடபாவமே! இவனுக்கு என்ன நேர்ந்தது?" என இளவரசன் அதிராசேந்திரன் துடித்தான். எதுவும் கூறாமல் விஷ்ணுவர்த்தனன் மௌனம் சாதித்தான். நடந்தவைகளை ஓரளவு ஊகித்தறிந்தவன் போல அவன் காணப்பட்டான்.

இதற்குள் அரண்மனை மருத்துவர் வந்துவிடவே மயங்கியவர்களைத் தெளிய வைக்கும் முயற்சி ஆரம்பமாயிற்று. குமுதசந்திரன், கோதைமார்பன் ஆகிய இருவருக்கும் தலையில் பலமான அடி விழுந்திருப்பதால் அவர்கள் அறவே நினைவிழந்து கிடந்தனர். அவர்களின் தலைகளுக்கு மருந்துகட்டிய பின்னர்க்கூட அவர்கள் நினைவு பெறவில்லை. சக்திவர்மனைப் பொறுத்த வரையில் மருத்துவர் கைவிரித்துவிட்டார். சக்திவர்மன் உடலில் நீலம் பாய்ந்திருந்தது. அதன் காரணத்தைக் கவனமாக ஆராய்ந்த போது சக்திவர்மன் மீது பாய்ந்திருந்த கத்தி நச்சுத் தோய்ந்த கத்தி என்பது வெளியாயிற்று. எனவே அக்கத்தி பாய்ந்த சில வினாடிகளில் அவன் உயிர் துறந்துவிட்டான். என்னதான் துரோகம் செய்தவனின் மகனாக இருந்த போதிலும் சக்திவர்மனின் கோர முடிவு சுற்றியிருந்தோரின் உள்ளங்களைப் பெரிதும் கலக்கிற்று. அதிலும் இளவரசர்கள் இருவரும் பெரிதும் உள்ளம் நெகிழ்ந்து போயினர். அடைக்கலம் என வந்து அண்டியவனின் முடிவு இப்படியா ஆக வேண்டும் என வருந்தினர்.

அதன் பின் நடக்க வேண்டிய காரியங்கள் துரிதமாக நடந்தன. சக்திவர்மனின் உடல் அரண்மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டது. கோதைமார்பனைச் சிறையில் வைக்கும்படி விஷ்ணுவர்த்தனன் ஆணையிட்டான். நினைவிழந்த நிலையிலேயே அவன் சிறைக்குக் கொண்டு போகப்பட்டான். கவி குமுதசந்திரனைத் தனது அரண்மனைக்கு எடுத்துச் செல்லும்படி விஷ்ணுவர்த்தனன் ஆணை பிறப்பித்தான்.

பிறகு வேறு ஏதேனும் தடயங்கள் கிடைக்கின்றனவா என ஆராயும்படி காவலர்களை அனுப்பிவிட்டு விஷ்ணுவர்த்தனன் அதிராசேந்திரனை அழைத்துக் கொண்டு தனது அரண்மனைக்குப் புறப்பட்டான்.

# 67. குமுதசந்திரன் கூறிய கதை

“விஷ்ணுவர்த்தனா! இதெல்லாம் என்ன குழப்பம்? எனக்கொன்றும் புரியவில்லையே” என்றான் அதிராசேந்திரன். தந்தை இல்லாத வேளையில் இப்படியெல்லாம் நடந்துவிட்டதே என்ற கவலை அவன் குரலில் தொனித்தது.

“அதிராசேந்திரா! எந்தக் காரியங்கள் நடக்கக் கூடாது எனத் தடுக்க நினைத்தேனோ அந்தக் காரியங்கள் எப்படியோ என்னை மீறி நடந்துவிட்டன.”

“என்ன? இப்படி கடக்குமென்று உனக்கு முன்னமேயே தெரியுமா?”

“இப்படி நடக்குமென்று எனக்குத் தெரியாது. ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்பதைச் சற்று ஊகித்தேன். அதைத் தடுக்க எவ்வளவோ முயற்சி செய்தேன். எனினும் காரியம் மிஞ்சிவிட்டது.”

“விஷ்ணுவர்த்தனா! சற்றுப் புரியும்படியாகச் சொல்லேன்.”

“அதிராசேந்திரா! முன்பொரு தடவை நள்ளிரவில் மாறுவேடத்தில் நாம் சென்றது நினைவிருக்கும் என நம்புகிறேன். அப்போது நகர வீதியில் கோதைமார்பனைக் கண்டோம். வழி தெரியாது அலைவதாக அவன் சொன்னான். பிறகு அவனுக்கு வழிகாட்டி அனுப்பிவிட்டுச் சென்றோம். ஆனால் அவனை இதற்கு முன்பு எங்கேயோ சந்தித்த நினைவு எனக்கு இருந்தது. நன்றாக நினைவுபடுத்திப் பார்த்த போது உண்மை தெரிய வந்தது. அன்று மாலை நகரத்தின் அங்காடி வீதியில் அவனைப் பார்த்த நினைவு வந்தது. நம்மைப் பார்த்ததும் அவன் அருகிலிருந்த கூட்டத்திற்குள் மறைந்து கொள்ள முயன்றான். அவனுக்குச் சற்றுத் தள்ளி நின்ற மூன்றுபேர்களும் அவ்வாறே செய்தார்கள். அப்போதே எனக்குச் சந்தேகம் தட்டியது. பிறகு கோதைமார்பனை ஆசிரியர் செயங்கொண்டாரின் இல்லத்தில் பார்த்தேன். யாருடனும் அவன் பழகவில்லை என்பதை அறிந்தேன். அவனைக் கண்காணிக்கும்படி குமுதசந்திரனை நியமித்தேன். அன்றொருநாள் காட்டில் வேட்டையாடச் சென்ற போது ஒரு அதிசயத்தைக் கண்டேன். மரப்பொந்து ஒன்றில் அபூர்வமான சில பொருட்கள் மறைத்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டேன். குந்தள அரச சின்னம் பொறிக்கப்பட்ட மணியாரம் ஒன்றும், அழகிய

வேலைப்பாடமைந்த வாள் ஒன்றும் அம்மரப் பொந்தில் இருந்தன. அவைகளை அப்படியே விட்டுவிட்டுத் திரும்பினேன். சற்றுத் தொலைவில் மூன்று மனிதர்களைச் சந்தித்தேன். யார் என விசாரித்த போது ஏதோ மூலிகை தேடி அலைவதாகக் கூறினார்கள். அன்று அங்காடி வீதியிலே நம்மைக் கண்டு மறைந்த அதே ஆட்கள் என்பதைப் புரிந்து கொண்டேன். மூலிகை தேடி அலைவதாக எனக்குத் தோன்றவில்லை. இந்த மணியாரத்தினையும், வாளினையும் தேடி அலைவதாகவே எனக்குப்பட்டது. எனவே மறுநாளே சென்று அம்மணியாரத்தினையும் வாளினையும் எடுத்து வந்தேன். நமது அரண்மனைப் பொற்கொல்லர்களைக் கொண்டு அதைப் போலவே போலியான மணியாரம் ஒன்றினையும் வாளினையும் தயாரித்து அதே மரப்பொந்தில் வைக்கச் செய்தேன். இதற்கிடையில் என்னை நானே நம்ப முடியாத செய்தியொன்றினைக் குமுதசந்திரன் கொண்டு வந்தான்" எனக் கூறி விஷ்ணுவர்த்தனன் நிறுத்தினான்.

அடங்காத ஆர்வத்துடனும் வியப்புடனும் அவன் கூறுவதைக் கேட்டு வந்த அதிராசேந்திரன் "என்ன நிறுத்திவிட்டாய்! மேலே கூறு" என்றான்.

"அதிராசேந்திரா, இப்போது நான் கூறப் போகும் செய்தியைக் கேட்டு அதிர்ச்சி அடைந்துவிடாதே. பொறுமையாக நிதானம் இழக்காமல் நீ அதைக் கேட்க வேண்டும்" என்ற பீடிகையுடன் விஷ்ணுவர்த்தனன் மறுபடியும் தொடர்ந்தான்.

"கோதைமார்பனை நமது அரண்மனையைச் சேர்ந்த ஒரு பெண் சந்தித்துப் பேசியதாகவும் அவனிடம் அவள் முத்திரை மோதிரம் ஒன்றினை அளித்ததாகவும் குமுதசந்திரன் செய்தி கொண்டு வந்தான். அந்தப் பெண் யார் என்பதை அறிந்த போது நானே திடுக்கிட்டுப் போனேன்."

"அந்தப் பெண் யார்?"

"வேறு யாருமல்ல. மதுராந்தகத் தமிழ்ப்பேரரையரின் பேத்தி புவனமாதேவிதான்."

"என்ன!" எனத் திடுக்கிட்டு எழுந்தான் அதிராஜேந்திரன். அவன் தலை சுழன்றது. அப்படியே தலையைப் பிடித்துக் கொண்டு அமர்ந்தான்.

“பார்த்தாயா.. அதிராசேந்திரா! இதற்குத்தான் உன்னிடம் எதுவும் கூறாமல் மறைத்து வைத்திருந்தேன். நான் கூறுவதை முழுவதும் கேள். கோதைமார்பன் யார் என்பதைத் தெரியாமலேயே புவனா அதைக் கொடுத்திருக்க வேண்டும் என நான் சந்தேகப்பட்டேன். எனவே கோதைமார்பனைக் கவனமாகக் கண்காணிக்கும்படி குமுதசந்திரனை அனுப்பினேன். குமுதசந்திரன் மயக்கம் தெளிந்து எழுந்தால் மேலும் பல உண்மைகள் புலனாகும்” என்றான் விஷ்ணுவர்த்தனன்.

இதற்குள் அதே அறையின் ஒரு மூலையில் கிடத்தப்பட்டிருந்த குமுதசந்திரனின் விழிகள் மெதுவாகப் படபடத்தன. அதைக் கவனித்த இளவரசர்கள் இருவரும் அவன் அருகே சென்றனர். அவனுக்கும் மெதுவாக மயக்கம் தெளிந்தது.

விஷ்ணுவர்த்தனனைப் பார்த்ததும் “இளவரசே! இளவரசே!” என முனகினான்.

அன்புடன் அருகே அமர்ந்து கொண்ட விஷ்ணுவர்த்தனன் “குமுதசந்திரா! இந்தக் கொடுமையைச் செய்தவர்கள் யார்?” என்றான்.

அவன் கேட்ட கேள்விக்குப் பதில் கூறும் முறையில் திக்கித்திணறிக் குமுதசந்திரன் கூறிய கதை இதுதான்.

விஷ்ணுவர்த்தனனின் ஆணைப்படி கோதைமார்பனைக் குமுதசந்திரன் கவனமாகக் கண்காணித்தான்.

அன்று பிற்பகலில் குதிரை மீது கோதைமார்பன் எங்கேயோ பயணமானதைக் குமுதசந்திரன் கண்டான். இவனும் ஒரு குதிரை மீது அவனைப் பின்தொடர்ந்தான். நகரை அடுத்த கானகத்தின் நடுவே ஒரு பெரிய மரத்தின் அடியில் குதிரையை நிறுத்திவிட்டுக் கோதைமார்பன் கீழிறங்கினான். பிறகு மரத்தின் மீது ஏறி, அதில் இருந்த பொந்து ஒன்றில் இருந்து ஏதோ பொருளை வெளியேயெடுத்துக் குதிரைச் சேணத்துடன் இறுகக்கட்டிக் கொண்டு புறப்பட்டான். குமுதசந்திரனும் அவனைப் பின்தொடர்ந்தான். அப்போது யாரோ பின்தொடருவது போலத் தோன்றியது. திரும்பிப் பார்த்த போது மற்றொரு மரத்தின் மறைவில் இருந்து இரு உருவங்கள் எட்டிப் பார்த்ததைக் கண்டான். கோதைமார்பனைப் பின்தொடர்வதே முக்கியமென்று கருதியதால் இரு உருவங்களையும் பற்றி அவன் அதிகம் கவலைப்படவில்லை.

அரண்மனை மதிற்சுவருக்கு வெளியே சற்றுத் தள்ளி ஒரு மரத்தின் மறைவில் குதிரையை நிறுத்திவிட்டுப் பின்புற வாயிலை நோக்கிக் கோதைமார்பன் சென்றதைக் குமுதசந்திரன் கண்டான். தானும் பின்தொடர்ந்து செல்லலாம் எனத் தீர்மானித்த போது பின்னால் இரு குதிரைகள் வரும் ஒலி கேட்டது. எனவே பின்னால் தொடர்ந்து வருபவர்கள் யார் என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என ஆவலுடன் தயங்கி, ஒரு மரத்தின் மறைவில் நின்றான். இரு குதிரைகள் விரைந்து வந்தன. அவற்றின் மீது இருவர் அமர்ந்திருந்தனர். இருவரையும் பார்த்தால் வெளிநாட்டார் போலத் தோன்றியது. குமுதசந்திரனைக் கடந்து செல்வதைப் போலப் போக்குக் காட்டிய அவர்கள் கீழே குதித்து மரத்தின் மறைவில் நின்ற குமுதசந்திரன் மீது பாய்ந்தார்கள். குமுதசந்திரனும் அவர்களை எதிர்த்து வீராவேசமாகப் போராடினான். அந்த வஞ்சகர்களில் ஒருவன் குமுதசந்திரனின் பின்புறமாக வந்து ஒரு கல்லைத் தூக்கித் தலையில் போட்டான். ‘ஆ’ என அலறிய வண்ணம் குமுதசந்திரன் மயங்கிக் கீழே விழுந்தான். பிறகு என்ன நடந்தது என்பது அவனுக்குத் தெரியாது.

அவன் கூறுவதைக் கவனமாகக் கேட்டு வந்த விஷ்ணுவர்த்தனனுக்குச் சில மர்மங்கள் விளங்கின. ஆனால் இன்னும் சில புரியாத புதிராகவே இருந்தன.

அவன் இவ்வாறு சிந்தனையில் ஆழ்ந்ததைக் கண்ட அதிராசேந்திரன், “விஷ்ணுவர்த்தனா! என்ன யோசனை?” என்றான்.

“அதிராசேந்திரா! நடைபெற்ற நிகழ்ச்சி முழுவதையும் சொல்லக் கூடியவள் புவனமாதேவிதான்” என்றான்.

“அப்படியானால் இப்போதே சென்று கேட்டுவிடுவோம்.”

“வேண்டாம்.. வேண்டாம்! பொழுது விடிந்ததும் விசாரித்துக் கொள்ளலாம். இந்த நள்ளிரவில் அவளைத் திகிலடையச் செய்ய வேண்டாம்” என்றான் விஷ்ணுவர்த்தனன்.

ஆனால் மற்றொரு பெரிய விபத்து சோழ குலத்திற்கு ஏற்பட்டுவிட்டது என்பதை ஒருவரும் அப்போது உணரவில்லை.

# ௭௭. மதுராந்தகியின் குழப்பம்

மறுநாள் காலை அரண்மனையே அல்லோ கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. வேங்கி இளவரசன் சக்திவர்மன் கொலை செய்யப்பட்ட நிகழ்ச்சி இதற்குள் அரண்மனை எங்கும் பரவிவிட்டது. அந்த அப்பாவிக்கு இந்தக் கதியா நேரிட வேண்டும் என அனைவரும் பரிதாபப்பட்டனர். சக்திவர்மனைக் கொலை செய்தது யாராக இருக்கலாம் என்ற பேச்சும் பலவிதமாக அடிபட்டது. குந்தள ஒற்றர்கள் கொன்றுவிட்டதாகச் சிலரும், கோதைமார்பன் கொலை செய்ததாக மற்றும் சிலரும் கூறினார்கள். கோதைமார்பனைப் பற்றிய சர்ச்சையும் எழுந்தது. கோதைமார்பன் குந்தள ஒற்றனாக இருக்க வேண்டும் எனச் சிலர் அபிப்பிராயம் தெரிவித்தார்கள். மற்றும் சிலர் அவன் பாண்டிய ஒற்றன் எனக் கூறினார்கள். ஆனால் அவன் ஏன் சக்திவர்மனைக் கொலை செய்ய வேண்டும் என்பதை யாராலும் கூற முடியவில்லை.

இப்படி இந்தப் பேச்சுக்கள் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க மறுபுறம் அந்தப்புரத்தில் ஏதோ கலவரம் நடந்து கொண்டிருந்தது. ஆம், இளவரசி வீரமாதேவி திடீரென மாயமாக மறைந்துவிட்டிருந்தாள். விடிந்து நெடுநேரமாகியும் இளவரசி எழுந்து வராததைக் கண்ட தாதியர் உள்ளே சென்று பார்த்த போது அறை காலியாக இருந்ததைக் கண்டார்கள். அரண்மனைத் தோட்டத்தில் உலவச் சென்றிருப்பாளோ என்று தேடிய போது அங்கும் காணோம். தாதிகளின் பதைப்பு அதிகமாயிற்று. இளவரசி மதுராந்தகிக்கும், அரசி அருள்மொழிக்கும் செய்தி சொல்லி அனுப்பப்பட்டது. அவர்களும் விரைந்து வந்தனர். எதற்கும் கலங்காத உள்ளம் படைத்த மதுராந்தகி தனது தங்கையைக் காணோம் என்றதும் பெரிதும் கலங்கிப் போய்விட்டாள். வீரமாதேவியின் படுக்கையறை சோதனையிடப்பட்டது. இளவரசி படுக்கும் மஞ்சம் அப்படியே இருந்தது. அதன்மேல் விரிக்கப்பட்டிருந்த விரிப்புகள் சற்றும் கசங்கியதாகக் காணப்படவில்லை. இதிலிருந்து இளவரசி இரவு படுக்கையில் படுக்கவே இல்லை என்பது புலனாயிற்று. அப்படியானால் முதல்நாள் மாலையே அவள் காணாமல் போயிருக்க வேண்டும் என்பதை அறிந்த போது மதுராந்தகிக்குத் திகில் ஏற்பட்டது. இரவு சாப்பாட்டிற்கு இளவரசி வரவே இல்லை எனத் தாதியர் கூறியதும் இந்த ஐயத்தை மேலும் வலுப்படுத்தியது.

விளையாட்டுத்தனம் மாறாத தனது தங்கை ஒருவேளை சயங்கொண்டாரின் இல்லத்திற்குச் சென்றிருப்பாளோ என்ற ஐயம் மதுராந்தகிக்கு எழுந்தது. உடனே அங்கு ஆள் அனுப்பப்பட்டது. ஆனால் அங்கு அவள் செல்லவில்லை என்ற தகவல்தான் கிடைத்தது.

தனது மகளைக் காணோம் என்பதை அறிந்ததுமே அரசி அருள்மொழி மூர்ச்சையடையும் நிலைக்கு வந்துவிட்டாள். அவளை ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்த மதுராந்தகிக்கு மின்னல் வெட்டுப் போல ஒரு எண்ணம் எழுந்தது. அரண்மனையே இவ்வாறு அமளிதுமளிப்படும் போது புவனா எங்கே போனாள்? ஒருவேளை அவளுக்கும் ஏதாவது ஆபத்து நேர்ந்துவிட்டதோ? இந்த எண்ணம் எழுந்ததும் உடனடியாக அரசியைக் கவனித்துக் கொள்ளுமாறு கூறிவிட்டுப் புவனாவின் அறை நோக்கி மதுராந்தகி விரைந்தாள். அங்கே கண்ட காட்சி அவளைத் திடுக்கிடச் செய்தது. மஞ்சத்திலே புவனா நிலைகுலைந்து கிடந்தாள். அருகில் நெருங்கிப் பார்த்த போது கடுமையான சுரத்தினால் அவள் நினைவிழந்து கிடப்பது தெரிய வந்தது.

'சோழ குலத்திற்கு இன்று என்ன நேர்ந்தது? ஆபத்துகள் அடுக்கடுக்காகத் தொடர்கின்றனவே' எனப் பதைபதைத்த வண்ணம் தனது தோழியின் அருகில் அமர்ந்து கொண்ட மதுராந்தகி அவளுக்குப் பணிவிடை செய்யலானாள். அரண்மனை வைத்தியர் உடனடியாக வரவழைக்கப்பட்டார். புவனாவைப் பரிசோதித்த அவர் ஏதோ அதிர்ச்சியினால் சுரம் கண்டிருப்பதாகக் கூறிவிட்டு மருந்துகளைக் கொடுத்தார். சற்று நேரத்தில் புவனாவின் விழிகள் மெதுவாகத் திறந்தன. எதிரில் கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்த மதுராந்தகியைப் பார்த்தன. "அக்கா!" என்ற தீனமான குரல் அவள் வாயிலிருந்து எழுந்தது.

"என்னடி! என் கண்ணே! உனக்கு என்ன நேர்ந்தது?" என மதுராந்தகி அன்பொழுகக் கேட்டாள். அதற்குப் பதில் எதுவும் கூற முடியாது புவனா திணறினாள். ஏதோ பேச அவள் முயன்றாள். ஆனால் வார்த்தைகள் வெளிவர மறுத்தன. அவள் படும் துன்பத்தினைக் கண்ட மதுராந்தகி "புவனா! உன்னைச் சிரமப்படுத்திக் கொள்ளாதே. ஒன்று மட்டும் கேட்க விரும்புகிறேன். அதற்கு மட்டும் பதில் கூறு" என்றாள்.

புவனாவின் இதயம் படபடவென அடித்துக் கொண்டது.

“புவனா! வீரமாதேவியைப் பற்றி உனக்கு ஏதேனும் தெரியுமா?” என்றாள் மதுராந்தகி.

திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள் புவனா. “என்ன? வீரமாதேவிக்கு என்ன நேர்ந்தது?” என்றாள்.

“புவனா! பதறாதே. நேற்று அரண்மனைத் தோட்டத்தில் அசம்பாவித நிகழ்ச்சிகள் பல நடைபெற்றுவிட்டன. சக்திவர்மரை யாரோ கொலை செய்துவிட்டார்கள். கோதைமார்பனையும், குமுதசந்திரனையும் அடித்துப் போட்டுவிட்டார்கள். இந்தக் குழப்பங்களுக் கிடையே வீரமாதேவியையும் காணோம்” என்றாள் மதுராந்தகி.

புவனாவின் தலை கிறுகிறுவெனச் சுற்றியது. மறுகணம் மயங்கி விழுந்தாள்.

&&&

குமுதசந்திரன் தாக்கப்பட்ட செய்தியறிந்த அமுதவல்லி ஓடோடி வந்தாள். மயங்கிக் கிடக்கும் தன் காதலனைக் கண்டு கண்ணீர் வடித்தாள். இனிமேல் எந்த உண்மையை மறைப்பதிலும் பயனில்லை. தனக்குத் தெரிந்த செய்திகளை இளவரசி மதுராந்தகியிடம் தெரிவித்துவிட வேண்டியதுதான் என அவள் முடிவு செய்தாள்.

கண்ணீரும் கம்பலையுமாக இளவரசியிடம் அவள் கூறிய செய்தி இதுதான்:

“முதல் நாள் மாலை அரண்மனைப் பூங்காவின் ஒரு பகுதியில் வீரமாதேவியும் குமுதவல்லியும் ஏதோ பேசியவாறு மலர் தொடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது வேங்கி இளவரசன் சக்திவர்மன் அங்கு வந்தான். அவன் ஏதேனும் பிதற்றுவான் என்பதை எதிர்பார்த்த பெண்கள் இருவரும் அங்கிருந்து அகலத் தொடங்கினர். ஆனால் சக்திவர்மனோ விட்டபாடில்லை. வீரமாதேவிக்கு முன்னால் வந்து வழியை மறித்துக் கொண்டான்.

“மாதேவி! என்னை நீ வெறுப்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் உன் இதயக் கோவிலில் யாரை வைத்து வழிபடுகிறாயோ, அவன் மற்றொருத்தியுடன் கொஞ்சிக் கொண்டிருக்கிறான்” என்றான்.

அவனைச் சுட்டெரித்துவிடுவது போல வீரமாதேவி ஒருகணம் பார்த்தாள். அந்தப் பார்வையின் வெம்மையைத் தாங்க முடியாத சக்திவர்மன் ஓரடி பின் வாங்கினான். பிறகு "மாதேவி! எனது நிமித்திகன் இவ்வாறு சொன்னான். வேண்டுமானால் இதே அரண்மனைப் பூங்காவின் மறுபுறத்தில் போய்ப் பார். நான் கூறியதின் உண்மை புலப்படும்" என்றான்.

இதைக் கேட்ட மாதேவி அப்பூங்காவின் மறுகோடியை நோக்கி விடுவிடுவென நடந்தாள். அவளைப் பின் தொடர்ந்து சக்திவர்மன் சென்றான். இதைக் கண்டு ஒருகணம் திகைத்து நின்ற அமுதவல்லி தனது காதலனைத் தேடிக் கொண்டு விரைந்தாள். ஏனெனில் கோதைமார்பனைக் கண்காணிக்கக் குமுதசந்திரனை விஷ்ணுவர்த்தனர் நியமித்திருப்பதை அவள் அறிவாள். எனவே இச்செய்தியை அவனிடம் அறிவிக்க ஓடினாள். ஆசிரியரின் இல்லத்தை அவள் அடையும் போது இருட்டிவிட்டது. அங்கே குமுதச்சந்திரன் இல்லை. எனவே விடிந்தவுடன் அங்கிருந்து புறப்பட்டு அமுதவல்லி வந்தாள். நகருக்குள் அடியெடுத்து வைத்ததும் அவள் கேள்விப்பட்ட செய்திகள் அவளைக் திடுக்கிட வைத்தன. எனவே தான் அறிந்தவற்றைக் கூற இளவரசியிடம் ஓடோடி வந்தாள்.

இதுதான் அமுதவல்லி கூறிய செய்தி. இதைக் கேட்ட மதுராந்தகிக்கு இதுவரை புலனாகாத சில விவரங்கள் புலனாகத் தொடங்கின. இன்னும் புலனாக்காத விவரங்கள் விஷ்ணுவர்த்தனருக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள்.

# ௭௭. சிறையில் சந்திப்பு

ஒருவாறாக மயக்கம் தெளிந்து எழுந்த விக்கிரமாதித்தன் சுற்றும் முற்றும் பார்த்த போது நாற்புறமும் நெடிதுயர்ந்த சுவர்களுக் கிடையில் தான் இருப்பதைப் பார்த்தான். திடுக்கிட்டு எழுந்து நின்றான். பூட்டிய சிறைக் கதவு அவனை நோக்கிச் சிரித்தது.

தான் எப்படி இங்கு வந்தோம் என்பதை எண்ணிப் பார்க்கவே அவனுக்குச் சற்று நேரம் பிடித்தது. வீரமாதேவியுடன் பேசிக் கொண்டிருந்த போது தனது தலையில் இடிவிழுந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டதையும் அதைத் தொடர்ந்து தான் நினைவிழந்ததும் அவன் நினைவிற்கு வந்தன. தன்னை அவ்விதம் மறைந்து தாக்கியவன் யாராக இருக்கக் கூடும்? சோழ நாட்டில் நமக்கு எதிரி கங்காகேத்தன்தான். ஆனால் அவன் அரண்மனைப் பூங்காவிற்குள் எப்படி வந்தான்? இளவரசிக்கு ஏதேனும் தீங்கிழைத்துவிட்டானோ? இந்த நினைவு அவனைப் பெரிதும் வாட்டியது. சோழரின் சிறையில் எதிர்பாராதவிதமாகச் சிக்கிக் கொண்ட தான் இன்னான் என்பது வெளிப்பட்டால் என்ன நேரும்? என்ற சிந்தனையும் அவனுக்கு எழுந்தது.

இவ்வாறு சிந்தனையில் அவன் மூழ்கி இருந்த போது யாரோ வரும் அரவம் கேட்டது. திடுக்கிட்டு நிமிர்ந்தான். கதவுகளுக்கு வெளியில் நிற்பது யார்? அவனால் அவன் விழிகளையே நம்ப முடியவில்லை. கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு மறுமுறை பார்த்தான். எதிரில் இளவரசி மதுராந்தகி நின்று கொண்டிருந்தாள். தனது கருவிழிகளால் அவனை ஊடுருவிவிடுவது போலப் பார்த்தாள். அந்தப் பார்வையின் கூர்மையைத் தாங்க முடியாமல் அவன் தலை குனிந்து கொண்டான்.

“கோதைமார்பரே! ஏன் தலையைத் தாழ்த்திக் கொள்கிறீர்? உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்தோமே என்ற வெட்கமா?” என்றாள்.

“இளவரசி! தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?”

“சரியாகத்தான் கூறுகிறேன். எங்கிருந்தோ வந்த வேற்று நாட்டவரான உமக்கு இடம் கொடுத்து ஆதரித்த சோழ குலத்திற்கு இப்படித் துரோகம் செய்யலாமா?”

“இளவரசி! தாங்கள் கூறுவது ஒன்றுமே புரியவில்லை. சற்றுப் புரியும்படி பேசுங்கள்.”

“நான் பேசுவது உமக்குப் புரியாது. ஆனால் அரண்மனைச் சுவரேறிக் குதிக்கத் தெரியும்; ஒன்றுமறியாத அப்பாவி சக்திவர்மரைக் கொலை செய்யத் தெரியும். எல்லாவற்றுக்கும் மேலாக அப்பாவிப் பெண்களின் மனதைக் கெடுக்கத் தெரியும்.. இல்லையா கோதைமார்பரே?”

சரங்கள் போல வார்த்தைகள் சீறிப் பாய்ந்தன. மதுராந்தகியின் சீற்றத்தைக் கண்ட விக்கிரமன் திகைத்துப் போனான்.

“இளவரசி! தாங்கள் ஏதேதோ கூறுகிறீர்கள்! சக்திவர்மர் கொலை செய்யப்பட்ட நிகழ்ச்சியையே உங்கள் மூலமாகத்தான் கேள்விப்படுகிறேன்.”

“நல்லது கோதைமார்பரே! இளவரசி வீரமாதேவிக்கு நேரிட்ட கதியைப் பற்றி ஏதேனும் தெரியுமா?” என்றாள். இப்படிக் கூறிவிட்டு மதுராந்தகி விக்கிரமனை உற்றுப் பார்த்தாள். எதை எதிர்பார்த்து அவள் இதைச் கூறினாளோ அது அந்தக் கணமே நடந்தது.

துடித்தோடி வந்த விக்கிரமன் சிறைக் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு “வீரமாதேவிக்கு என்ன நேர்ந்தது?” எனப் பதறினான்.

கோதைமார்பனை வீரமாதேவி காதலிக்கிறாள் என்ற உண்மையை அமுதவல்லி கூறிய போது அதை அவ்வளவாக நம்பாத மதுராந்தகி இப்போது அதை நம்பினாள். வீரமாதேவிக்கு ஆபத்து என்றதுமே அவன் துடித்த துடிப்பு அவளை நம்ப வைத்தது.

“இளவரசி! ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? மாதேவிக்கு என்ன நேர்ந்தது? எனக்குக் சொல்லமாட்டீர்களா?” எனப் புலம்பினான்.

அவனது துடிப்பும் பதைபதைப்பும் மதுராந்தகியைச் சிந்திக்க வைத்தன. வீரமாதேவிக்கு இவனால் சற்றும் ஆபத்து நேர்ந்திருக்காது என்பதை அவள் உணர்ந்து கொண்டாள்.

“கோதைமார்பரே! அதை உமக்குக் கூறுவதற்கு முன்பு உம்மைப் பற்றிய சில உண்மைகள் எனக்குத் தெரிந்தாக வேண்டும்” என்றாள்.

அதைக் கேட்ட கோதைமார்பன் சற்று நேரம் மௌனம் சாதித்தான். பிறகு “இளவரசி! இந்த ஏழையிடம் எதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்கள்?” என்றான்.

“நீர் யார் என்பதை முதலில் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்” என்றாள்.

“இவ்வளவு காரியங்கள் நடைபெற்றுவிட்ட பிறகு நான் எதையும் மறைக்க விரும்பவில்லை. நான்தான் குந்தள நாட்டு இளவரசன் விக்கிரமாதித்தன்” என்றான்.

இதைக் கேட்ட மதுராந்தகி ஒருகணம் திகைத்து நின்றாள். விக்கிரமனை உற்று நோக்கினாள். கூண்டில் அடைபட்ட சிங்கம் போல அஞ்சாநெஞ்சத்துடன் நிமிர்ந்து நிற்கும் அவனைப் பார்த்தாள். கள்ளம், கபடு, சூது எதையும் அறியாதவன் என்பதை அவனது முகமே எடுத்துக் காட்டிற்று.

“ஐயா, அப்படியானால் நீர் எதற்காக இங்கு வந்தீர்? உளவறியவா?”

“இளவரசி! அதற்காக நான்தான் வர வேண்டும் என்பதில்லை. அதைவிட மிகப் பெரிய காரியம் ஒன்றுக்கு வந்தேன். எனது தங்கை, குந்தள குலவிளக்கு இங்கே வாழ்ந்தாள். அவளைப் பார்க்க வந்தேன். வந்த இடத்தில் எப்படி எப்படியோ நிகழ்ச்சிகள் நடைபெற்றுவிட்டன” என்று தொடங்கிய விக்கிரமன் தான் வந்த நோக்கத்தினையும், அதற்கு ஏற்பட்ட தடைகளையும் விவரித்துக் கூறினான். இடையில் வீரமாதேவியும், தானும் கொண்டிருந்த காதல் பற்றியும் சாடையாகக் கூறினான். அவன் கூறிய வரலாறு மதுராந்தகியின் நெஞ்சினை உருக்கியது.

“குந்தள இளவரசே! வாழ்க்கையில் எத்தனையோ சோகங்களைத் தாங்கியிருக்கிறீர்கள். எனவே இப்போது நான் சொல்லப் போகும் செய்தியையும் உங்களால் தாங்கிக் கொள்ள முடியும். ஆம்! இளவரசே! எனது அருமைத் தங்கை வீரமாதேவியைக் காணோம்” என்றாள்.

“என்ன?” என அலறினான் விக்கிரமன். “இளவரசி! கங்காகேத்தன்தான் அவளைச் சிறையெடுத்துச் சென்றிருக்க வேண்டும். இப்போதே என்னை வெளியில்விடுங்கள். வீரமாதேவியை மீட்டு உங்களிடம் கொண்டு வந்து சேர்த்து என் மீதுள்ள பழியைத் துடைத்துக் கொள்கிறேன்” என்றான்.

"குந்தள இளவரசே! அதற்காகத்தான் உம்மைத் தேடி வந்தேன். எனது தங்கையை எப்படியும் மீட்டுக் கொண்டு வாருங்கள். இல்லையேல் என் உயிரும் விரைவில் பிரிந்துவிடும்" என்றாள் மதுராந்தகி. அவள் விழிகளில் நீர் பெருகியோடியது. விழிகளைத் துடைத்த வண்ணம் மதுராந்தகி வெளியேறினாள்.

அவள் வெளியேறி சற்று நேரத்திற்கெல்லாம் சிறைக் கதவுகள் திறந்தன. வெளியே வந்த விக்கிரமாதித்தனிடம் வேகமாகச் செல்லக் கூடிய குதிரையொன்றும், புலி இலச்சனையொன்றும் ஒப்படைக்கப்பட்டன. மறுகணம் விக்கிரமன் குதிரை மீது தாவியேறினான். அவனது மனவேகத்தை உணர்ந்து கொண்டது போல அந்தக் குதிரையும் காற்றினும் கடுகி விரைந்தது.

# 70. புவனாவின் போராட்டம்

சுரவேகத்தினால் பிதற்றிக் கொண்டிருந்த புவனாவின் அறையில் மதுராந்தகி கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்தாள். எதை எதையெல்லாமோ எண்ணி அவள் குழம்பிக் கொண்டிருந்தாள். குந்தள இளவரசன் விக்கிரமாதித்தன் மாறுவேடத்தில் வந்து சோழ இளவரசி வீரமாதேவியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அதிசயமும் அதே வேளையில் குந்தள இளவரசி புவனமாதேவி சோழர் தளபதியின் வளர்ப்பு மகளாகத் திகழ்ந்து சோழ இளவரசனின் இதயத்தைக் கொள்ளை கொண்ட பேரதிசயமும் அவளை அலைக்கழித்தன. இந்த அதிசயங்கள் ஆறாத் துயரமாகவும் மாறியது கண்டு அவள் மனம் வெதும்பினாள். தன் தங்கைக்கு என்ன நேரிட்டிருக்குமோ என்ற எண்ணம் அவளை வாட்டி வதைத்தது. கோதைமார்பனாக மாறுவேடம் பூண்டிருந்த விக்கிரமனைக் கொல்ல முயன்ற சதிகாரர்கள் தவறுதலாகச் சக்திவர்மனைக் கொன்றுவிட்டு, புவனாவைக் கடத்திச் செல்வதற்குப் பதிலாக வீரமாதேவியைக் கடத்திச் சென்றுவிட்டதை எண்ணும் போது அவள் துயரம் பன்மடங்காகப் பெருகியது.

'இப்போதுதான் என்ன? தம்பி அதிராசேந்திரனும், வேங்கி இளவரசரும் சதிகாரர்களைப் பிடிக்க இப்போதே புறப்படத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். சோழ வளநாட்டின் எல்லையைத் தாண்டுவதற்கு முன்பு சதிகாரர்கள் பிடிபட்டுவிடுவது திண்ணம். இன்றோ! நாளையோ! வீரமாதேவி 'அக்கா!' என அலறிய வண்ணம் நம்முன் வந்து நிற்பாள்' எனத் தன்னைத் தானே மதுராந்தகி தேற்றிக் கொண்டாள்.

இதற்குள் புவனா ஏதோ பிதற்றத் தொடங்கினாள். "இளவரசே! இள..வர..சே!" என முனகினாள்.

அப்போது யாரோ தடதடவென நடந்து வரும் சப்தம் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பிய மதுராந்தகியின் முன் போர்க்கோலத்துடன் இளவரசர்கள் இருவரும் நின்றார்கள்.

"தம்பி! புறப்பட்டுவிட்டாயா?"

"ஆம் அக்கா! குதிரைப் படையொன்றுடன் இப்போதே கடுகிச் செல்லவிருக்கிறோம்."

“நல்லது! எப்படியும் தங்கையைப் பத்திரமாக மீட்டு வாருங்கள்.”

“அதோடு நிற்கப் போவதில்லை அக்கா! வஞ்சக குந்தளரின் படைகளைப் பூண்டோடு அழிக்கும் வரை திரும்பப் போவதில்லை” என்றான் அதிராசேந்திரன்.

பேச்சுக்குரல் கேட்டுப் புவனா மலர மலர விழித்தாள். எதிரில் நின்ற அதிராசேந்திரனின் முகம் மட்டும் அவளுக்குத் தெரிந்தது. அவ்வளவுதான். மறுகணம் “இளவரசே! நான் நிரபராதி! என்னை நம்புங்கள்” என அலறிய வண்ணம் மஞ்சத்தில் இருந்து கீழே விழுந்தாள். பதறிப் போன இளவரசன் அவளைப் பூப்போல வாரியெடுத்துத் தன் அக்காவின் மடியில் கிடத்தினான். அவன் விழிகளில் நீர் கசிந்தது.

“தம்பி! இவளைக் குறித்து நீ கவலைப்படாதே. பேதைப் பெண். நடந்து போன நிகழ்ச்சிகளுக்குத் தானே காரணம் என எண்ணிக் கொண்டிருக்கிறாள்” என்றாள் மதுராந்தகி.

அமைதியாக விடைபெற்ற வண்ணம் அதிராசேந்திரன் வெளியேறினான். அவன் நெஞ்சத்தில் கணத்திற்குக் கணம் சுமையேறிக் கொண்டிருந்தது. புவனாவை மறுபடியும் உயிருடன் காண்போமா என்ற வேதனையும் அவன் உள்ளத்தில் எழுந்தது.

புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த விஷ்ணுவர்த்தனனிடம் “அத்தான்! என் தம்பி உலகமறியாப் பிள்ளை. முரட்டுத்தனமான காரியங்களில் முன்பின் யோசியாது ஈடுபட்டுவிடுவான். அவனைப் பத்திரமாகக் காத்து வாருங்கள்” என்றாள் மதுராந்தகி.

“கவலைப்படாதே! இந்தத் துன்பமெல்லாம் பகலவனைக் கண்ட பனி போல விரைவில் மறைந்துவிடும்” என்றான் விஷ்ணுவர்த்தனன்.

அன்று இரவு நெடுநேரம் வரை புவனாவின் மயக்கம் தெளியவில்லை. அவள் அருகிலேயே இரவெல்லாம் கண் விழித்தபடி மதுராந்தகியும் அமுதவல்லியும் அமர்ந்திருந்தனர். சுரவேகத்தில் ஏதேதோ கனவுகள் கண்டு இடையிடையே புவனா பிதற்றிக் கொண்டிருந்தாள்.

நடுச்சாமத்திற்கு மேல் மதுராந்தகியும், அமுதவல்லியும் சற்றுக் கண்ணயர்ந்தனர். அதிகாலைப் பொழுதில் அவர்கள் கண் விழித்த போது திடுக்கிட்டுப் போனார்கள். ஆம்! புவனாவின் படுக்கை காலியாகக் கிடந்தது. சுரவேகத்தில் எங்கேயும் எழுந்து போய்த்

தடுமாறி விழுந்து கிடக்கிறாளோ என அரண்மனை எங்கும் தேடினார்கள். எங்கு தேடியும் புவனா அகப்படவில்லை. மாயமாக மறைந்துவிட்டிருந்தாள்.

# 71. பாழடைந்த மண்டபம்

நள்ளிரவிலே கடுகிச் சென்ற குதிரைகள் பொழுது புலரும் வேளையில் அந்தப் பாழடைந்த மண்டபத்தினை அடைந்தன. கங்காகேத்தன் தனது குதிரையைச் சடாரென நிறுத்தினான். மற்றக் குதிரைகளும் நிறுத்தப்பட்டன.

“விடிவெள்ளி முளைத்துவிட்டது. இனிப் பயணம் செய்வது ஆபத்து. எனவே இந்தப் பாழடைந்த மண்டபத்தில் இருட்டும் வரை தங்கிவிட்டுப் புறப்படுவோம்” என்றான் கங்காகேத்தன்.

“அப்படியே செய்யலாம்” என்றான் நீலகேசி.

“அப்படியானால் இதோ இளவரசியை மெதுவாகப் பிடித்துக் கீழே இறக்குங்கள்” என்றான் கங்காகேத்தன்.

தனது குதிரையின் மேல் மயங்கிக் கிடந்த இளவரசியை மெதுவாகப் பிடித்துக் கீழே இறக்கினான். நீலகேசியும், சயசிங்கனும் அவளைத் தாங்கிப் பிடித்தனர். மலர்க்கொடி போல வாடிக் கிடந்த இளவரசியை மெதுவாகத் தூக்கிச் சென்று அந்த மண்டபத்தின் பின்கட்டில் ஒரு இடத்தில் கிடத்தினர். அவள் முகத்தினை முடியிருந்த துணியை அகற்றினர். அப்போதும் அவளின் மயக்கம் நீங்கியபாடில்லை. குதிரைகளும் பின்கட்டில் கொண்டு வந்து கட்டப்பட்டன.

இடைவிடாத பயணத்தினால் சோர்ந்து போய் இருந்த மூவரும் அமர்ந்தனர்.

“மூலிகை நல்ல வேலை செய்திருக்கிறது போலிருக்கிறது. இன்னும் இளவரசியின் மயக்கம் தெளிந்தபாடில்லையே” என்றான் நீலகேசி.

“அது கிடக்கட்டும்! கங்காகேத்தரின் போக்கு எனக்குச் சற்றும் புரியவில்லையே” என்றான் சயசிங்கன். இதைக் கேட்ட கங்காகேத்தனின் முகத்தில் புன்னகை அரும்பியது.

“என்ன சயசிங்கரே! ஏதோ குற்றம் சுமத்துவதாகத் தெரிகிறதே?” என்றான்.

“குற்றச்சாட்டு ஒன்றுமில்லை. நாம் வந்த வேலை என்ன? இப்போது செய்கிற வேலை என்ன என்று யோசித்தேன். எனக்கொன்றும் புரியவில்லை” என்றான் சயசிங்கன்.

“சயசிங்கரே! இதைக் கேளும். நாம் வந்த வேலையும் கெட்டுப் போகவில்லை. பூரணமாக நிறைவேறி இருக்கிறது. அத்துடன் நாம் நினைக்காத ஒன்றும் நடந்திருக்கிறது” என்ற பீடிகையுடன் கங்காகேத்தன் தொடங்கினான்.

“நண்பர்களே! விக்கிரமாதித்தனைத் தொலைத்துக் கட்டிவிட்டு, குந்தள அரச சின்னங்களை அவனிடமிருந்து அபகரித்துச் செல்வதற்காக நாம் வந்தோம். அதன்படியே விக்கிரமாதித்தனை இந்தக் கையாலேயே கொன்றேன். இதோ! குந்தள அரச சின்னங்கள் இருக்கின்றன. இதைவிடப் பெரிய வெற்றி வேறு என்ன வேண்டும்” என்றான் கங்காகேத்தன்.

“உள்ளே நடந்தது என்ன? விக்கிரமாதித்தனை எப்படி நீங்கள் கொன்றீர்கள் என்பதைச் சற்றுத் தெளிவாகச் சொல்லுங்கள்” என்றான் நீலகேசி.

“வரும் வழியிலேயே உங்களிடம் சொல்ல விரும்பினேன். ஆனாலும் முடியவில்லை. இப்போது சொல்லுகிறேன். பித்துக்குளியான சக்திவர்மனிடம் நான் போய்ச் சேர்ந்தது உங்களுக்குத் தெரியும். அந்த அப்பாவி சக்திவர்மன் சோழ இளவரசியான வீரமாதேவியின் மீது அடங்காத காதல் கொண்டிருந்தான். தன் காதலை எப்படியாவது நிறைவேற்றித் தருமாறு நிமித்திகனான என்னை ஓயாது நச்சரித்துக் கொண்டிருந்தான். அதற்காக நான் எது சொன்னாலும் செய்ய அவன் ஆயத்தமாக இருந்தான். எனவே அவனை நமது நோக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டேன். ஆம்! விக்கிரமனைக் கொலை செய்துவிட்டு அந்தப் பழியை அவன் மீது சுமத்திவிட முடிவு செய்தேன். இதற்கிடையில் புவனாவும், விக்கிரமனும் அரண்மனைப் பூங்காவில் சந்திக்கவிருக்கும் விவரத்தை அவனிடம் தெரிவித்தேன். புவனாவை விக்கிரமன் காதலிப்பதாக வீரமாதேவியிடம் கூறும்படி செய்தேன். விக்கிரமனின் மேல் கரைகாணாக் காதல் கொண்டிருக்கும் வீரமாதேவியின் கோபம் அவன் மேல் திரும்பும். இருவரும் பூங்காவிற்கு வருவார்கள். அதற்குள் நாம் விக்கிரமனைத் தீர்த்துக்கட்டிவிட்டுப் புவனாவைத் தூக்கிச் சென்றுவிட்டால் அந்தப்

பழி சக்திவர்மன் மீது விழும். தப்பிச் செல்லும் நம்மை ஒருவரும் தொடரமாட்டார்கள் எனத் திட்டமிட்டேன். திட்டமிட்டபடியே யாவும் நடந்தன. மரத்தின் மறைவில் இருந்து விஷக் கத்தியைக் குறிபார்த்து விக்கிரமன் மேல் எறிந்தேன். ஆனால் அதற்குள் இருட்டிவிட்டது. அந்த அவசரத்தில் புவனாவின் முக்கில் மூலிகையை வைத்து அமுக்கி அவளை மயக்கமடையச் செய்து தூக்கிக் கொண்டு ஓட்டம் பிடித்தேன். வெளியே நீங்கள் தயாராகக் காத்துக் கொண்டிருந்தீர்கள். உடனடியாக நாம் புறப்பட்டு இங்கு வந்து சேர்ந்தோம்'' என்றான் கங்காகேத்தன்.

“இதெல்லாம் சரிதான் கங்காகேத்தரே! இந்த பேதைப் பெண்ணைக் கடத்திக் கொண்டு வர வேண்டிய அவசியம் என்ன என்பது எனக்குப் புரியவில்லை.''

“நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். சோழ நாட்டின் பட்டத்து இளவரசன் புவனாவின் மீது அடங்காத ஆசை வைத்திருக்கிறான். அவளோ குந்தள குலத்தைச் சேர்ந்தவள். அந்த உண்மை நம்மைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. இந்த நிலையில் அவள் நம் கைவசம் இருந்தால் எத்தனையோ காரியங்களைச் சாதிக்கலாம். நமது இளவரசர் சோமேசுவரரை அரியணையில் அமர்த்தத்தானே இவ்வளவு பாடுபடுகிறோம். சோமேசுவரரின் ஆட்சி ஆரம்பக் கட்டத்திலேயே பெரிய பகைவனைச் சந்திக்க வேண்டுமா? சோழரின் படை பலத்திற்கு முன்பு நாம் எம்மாத்திரம்? அவர்களுடன் சமாதானம் செய்து கொண்டு நமது ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ளுவதே புத்திசாலித்தனமான காரியம். சோழருடன் நாம் சமாதானம் செய்து கொள்ள ஒரு கருவியாகப் புவனா பயன்படுவாள்'' என்றான் கங்காகேத்தன்.

அளவு கடந்த வியப்பினால் நீலகேசியும், சயசிங்கனும் வாயடைத்துப் போயினர்.

இதற்குள் பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. படுத்திருந்த இளவரசியின் கதி என்ன ஆயிற்று என்பதைப் பார்க்க மூவரும் சென்றனர். அப்போதுதான் அவள் மயக்கம் தெளிந்து மலர மலர விழித்துக் கொண்டிருந்தாள். விழுங்கிவிடுவது போலத் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்த அம்மூவரையும் கண்டதும் திடுக்கிட்டு எழுந்து விலகி நின்றாள். அவளின் முகத்தை உற்றுக் கவனித்த கங்காகேத்தன் பேயறைந்தவன் போலானான்.

“பெண்ணே நீ..” எனத் தடுமாறினான்.

“நான்தான் சோழ இளவரசி வீரமாதேவி! நீங்கள் யார்? எதற்காக என்னை இங்குத் தூக்கி வந்தீர்கள்?” என்றாள் வீரமாதேவி.

இதைக் கேட்ட மூவருக்கும் தலை கிறுகிறுவெனச் சுழன்றது. கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதை போலப் புவனமாதேவி என நினைத்துத் தூக்கி வர அவள் வீரமாதேவியாக இருப்பது கண்டு கங்காகேத்தன் தடுமாறிப் போனான். இந்தத் தவறு எப்படி நிகழ்ந்தது என்பதையே அவனால் ஊகிக்க முடியவில்லை. முகத்தினைத் துணியால் மூடிக் கொண்டு வந்ததாலும் நள்ளிரவாதலாலும் அவள் யார் என்பதை முதலிலேயே அறிந்து கொள்ள முடியாது போயிற்று எனத் தன்னையே நொந்து கொண்டான். சற்று நேரம் இவ்வாறு திணறிய பிறகு “நல்லது! பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று” என்றான்.

பிறகு தனது தோழர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு ஒதுக்குப்புறமாகப் போய் ஏதோ ரகசியம் பேசினான். பிறகு மறுபடியும் திரும்பி வீரமாதேவியிடம் வந்தான்.

“இளவரசி! உங்களுக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டோம். உங்களை இரகசியமானதொரு இடத்திற்குக் கடத்திச் செல்லுகிறோம். பயணம் முடியும் வரை நாங்கள் சொல்லுகிறபடி நடந்து கொண்டால் உங்களுக்கும் சிரமமில்லை; எங்களுக்கும் சிரமமில்லை. நாங்கள் யார் என்பதை அறியவோ, வழியில் தப்பிச் செல்லவோ எந்தக் காரணத்தினை முன்னிட்டும் நீங்கள் முயலக் கூடாது. அப்படி ஏதேனும் செய்தால் மறுபடியும் உங்களுக்கு மயக்கமூட்டி எடுத்துச் செல்ல வேண்டியதாயிருக்கும்” என்றான் கங்காகேத்தன்.

தன்னைக் கண்டதும் அவர்கள் திடுக்கிட்டுப் போனதில் இருந்து ஒரு உண்மை வீரமாதேவிக்குப் புலனாயிற்று. அதாவது வேறு யாரையோ சிறைப்பிடித்துச் செல்லுவதற்குப் பதிலாகத் தன்னைச் சிறைப்பிடித்து வந்துவிட்டார்கள் என்பதை அவள் புரிந்து கொண்டாள். வேறு யார்? ஆம்! அப்படித்தானிருக்க வேண்டும். புவனாவைத்தான் இந்தப் பாவிகள் சிறைப்பிடிக்க வந்திருப்பார்கள். இவ்வாறு எண்ணிய போது அவளுக்குத் திடீரென முதல்நாள் நடைபெற்ற நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. ஆ! கோதைமார்பரை யாரோ தாக்கினார்களே! அவர் கதி என்ன ஆயிற்று?

“இளவரசி! என்ன யோசிக்கிறீர்கள்” என்றான் கங்காகேத்தன்.

“ஐயா! நீங்கள் கூறியபடியே நடந்து கொள்கிறேன். அதற்கு முன்பு ஒன்றைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்” என்றாள் மாதேவி.

“கேளுங்கள் இளவரசி! தங்களுக்கு என்ன வேண்டும்?”

“கோதைமார்பரின் கதி என்ன ஆயிற்று?” அவள் குரலில் காணப்பட்ட துடிப்பு, கங்காகேத்தனைச் சிரிக்கச் செய்தது.

“அவனா! அவன் அப்போதே தீர்ந்துவிட்டானே” என்றான்.

“ஆ” என வீறிட்டலறிய வண்ணம் மறுபடியும் மாதேவி மயங்கி விழுந்தாள்.

# 72. தடயம் கிடைத்தது

காற்றினும் கடுகி அந்தக் குதிரை சென்று கொண்டிருந்தது. குதிரை மேல் அமர்ந்திருந்தவளோ தலைவிரி கோலமாக இருந்தாள். நீண்டு வளர்ந்திருந்த அவள் கூந்தல் காற்றில் உல்லாசமாகப் பறந்து கொண்டிருந்தது. ஆனால் அவள் உள்ளமோ அளவு கடந்த வேதனையினால் குமுறிக் கொண்டிருந்தது. நடைபெற்ற நிகழ்ச்சிகளை எண்ணி எண்ணி அவள் மருகிக் கொண்டிருந்தாள். தன்னை வளர்த்த சோழ குலத்திற்கு அடுக்கடுக்காக ஏற்பட்டுவிட்ட துயர்களும், அவைகள் ஏற்படத் தானே காரணமாக அமைந்துவிட்டது குறித்தும் அவள் வருந்திக் கொண்டிருந்தாள். அதிலும் அவளது அருமைத் தோழி வீரமாதேவியைப் பகைவர்கள் கடத்திக் கொண்டு போன நிகழ்ச்சி அவள் இதயத்தினைக் குடைந்து கொண்டிருந்தது. பகைவரின் மகள் என்பதை இளவரசர் அதிராசேந்திரர் அறிந்து கொண்டதால் அவர்தான் தன்னைப் பற்றி என்ன நினைப் பார்?

'இத்தனை நாட்களாக இல்லாத சொந்தம் கொண்டாடி அண்ணன் விக்கிரமாதித்தன் ஏன் இங்கு வந்தான்? அவன் வந்து என்னைச் சந்தித்ததனால் அல்லவா இவ்வளவு துயரும் விளைந்தது. பிறருடைய சந்தேகக் கண்களுக்கு நானும் இரையாகும்படி ஆயிற்று. ஆனாலும் பாவம்! அண்ணன்தான் எவ்வளவு பாசத்துடன் என்னைப் பார்க்க வந்தான். தன் உயிரைக்கூடத் திரணமாக மதித்து என்னைப் பார்க்க வந்த அருமை அண்ணனை நொந்து கொள்வதா? சே! சே.. பாவம்! என்னைப் பார்க்க வந்து அடிபட்டுச் சிறையில் கிடக்கும் அவனையா நொந்து கொள்வது.' இப்படியெல்லாம் புவனாவின் சிந்தனை ஓடிக் கொண்டிருந்தது.

திடீரென அவளுக்குத் தன் பாட்டனின் நினைவு வந்துவிட்டது. பகைவன் நாட்டுக் குழந்தை என்று தெரிந்திருந்தும் அதை வெளியில் கூறாது எவ்வளவு அன்புடன் தன்னை வளர்த்தார். தன் மீது அவர் சொரிந்த அன்பிற்கு, ஈடு இணையேது? அவருக்கு இச்செய்தி தெரிந்தால் எவ்வளவு வருத்தப்படுவார்? இறந்து போன தந்தை ஆகவமல்லரே வந்தழைத்தாலும் போகக் கூடாது. மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர்தான் தனக்குத் தாய் தந்தை எல்லாமே! நமது வாழ்வில் இப்படியும் ஒரு சோதனையா?

வீரமாதேவியை மீட்பது தனது கடமை. அப்போது தான் தன் மீது ஏற்பட்டுள்ள பழி மறையும் எனப் புவனா எண்ணினாள். இவ்வாறு சிந்தனையில் மூழ்கிய அவள் அந்தி மயங்கிக் கொண்டிருந்ததையும் கவனிக்கவில்லை. எதிரில் அந்தப் பாழடைந்த மண்டபம் தட்டுப்பட்டதும்தான் அவளுக்குச் சுய உணர்வு வந்தது. சுய உணர்வுடன் தனது உடல்நிலையைப் பற்றிய நினைவும் அவளுக்கு வந்தது. சுரவேகம் இன்னும் தணியவில்லை. பயணத்தின் விளைவாக அதிகமாகிக் கொண்டிருந்தது. எங்கேயாவது சற்று நேரம் படுத்தால் போதும் என அவளுக்குத் தோன்றியது. குதிரையும் களைத்துப் போய்த் தள்ளாடிக் கொண்டிருந்தது. எனவே வேறு வழியின்றி அந்த மண்டபத்திற்குள் புகுந்தாள்.

மாலை வெயில் மண்டபத்திற்குள் புகுந்து பளீரென மின்னிக் கொண்டிருந்தது. மண்டபத்தின் பின்கட்டில் குதிரையை மேய விட்டுவிட்டு அருகிலிருந்த மேடையில் படுத்தாள். தாகத்தினால் நா வறண்டிருந்தது. சுற்று முற்றும் பார்த்தாள். உடைந்த மண் கலயங்கள் கிடந்தன. ஆவலுடன் அருகில் சென்று பார்த்தாள். ஒரு கலயத்தில் சிறிது தண்ணீர் இருந்தது. சமீபத்தில் இங்கு யாரோ தங்கியிருக்கிறார்கள். அவர்கள் வைத்துச் சென்ற தண்ணீராகத்தான் இது இருக்க வேண்டுமென ஊகித்த புவனா அதை எடுத்துப் பருகினாள். பிறகு அருகிலிருந்த மேடையில் படுத்தாள். முதுகில் ஏதோ உறுத்துவது போலிருந்தது. திடுக்கிட்டு எழுந்து தடவிப் பார்த்தாள். கணையாழி ஒன்று கிடந்தது. கரத்தில் எடுத்து அதைக் கவனித்தாள். என்ன ஆச்சரியம்? அதில் புலி இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது. மறுபடியும் அக்கணையாழியை உற்றுப் பார்த்த போது பளிச்சென ஒரு உண்மை அவளுக்குப் புலனாயிற்று. ஆம்; சந்தேகமே இல்லை. இது மாதேவி அணிந்திருந்த கணையாழிதான். கடந்த இரவு இங்குதான் தங்கி இருந்திருக்கிறாள். தன்னைத் தேடி வருபவர்களுக்குத் தடயமாக இக்கணையாழியைவிட்டுச் சென்றிருக்கிறாள். இன்னும் ஏதேனும் அடையாளம் வைத்துவிட்டுப் போயிருக்கிறாளா? என நாற்புறமும் புவனா ஆராய்ந்தாள். எதிர்ப்புறமிருந்த சுவரில் கதிரவனின் ஒளி படிந்து கொண்டிருந்தது. அச்சுவரில் ஏதோ மின்னியது. யாரோ செங்கல்லால் ஏதோ கிறுக்கி இருக்கிறார்கள்! அருகில் சென்று பார்த்தாள். ‘துங்கபத்திரைக்கு அப்பால் பகைவர் பாசறை’ —என்ற சொற்கள் காணப்பட்டன.

திடுக்கிட்டுப் போன புவனா மறுபடியும் உற்றுக் கவனித்தாள். துங்கபத்திரைக்கு அப்பால் பகைவர் பாசறை என்ற வார்த்தைகளுக்கு அடியில் மாதேவி என்ற எழுத்துக்கள் காணப்பட்டன. புவனாவின் நெஞ்சம் படபடவென அடித்துக் கொண்டது. சந்தேகமே இல்லை! மாதேவிதான் எழுதியிருக்கிறாள். பகைவரிடம் சிறைப்பட்ட நிலையில் அவசர அவசரமாகக் கிறுக்கி இருக்கிறாள்! இனி ஒருகணமும் தாமதிக்கக் கூடாது. உடனே புறப்பட வேண்டியதுதான் என முடிவு கட்டினாள் புவனா. தனது சுரம் அதிகமாகிக் கொண்டிருப்பதையும் அவள் பொருட்படுத்தவில்லை. களைத்துப் போய் இருந்த குதிரையைத் தட்டிக் கொடுத்தவாறு வெளியே கொண்டு வந்தாள்.

அப்போது வெகுதொலைவில் ஏதோ ஒலி கேட்டது. காதைக் கூர்மையாக்கிக் கொண்டு புவனா கவனித்தாள். குதிரையொன்று விரைந்து வரும் ஒலி கேட்டது. இனி தாமதிப்பது அபாயமாகிவிடும் என எண்ணிய புவனா குதிரை மீது தாவி ஏறி அதைச் செலுத்த ஆரம்பித்தாள். பின்னால் குதிரையொலி தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தது. களைத்துப் போயிருந்த புவனாவின் குதிரையோ மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. பின்னால் வந்து கொண்டிருந்த குதிரையைக் கண்ணுக்கெட்டிய தொலைவு வரை காணோம். ஆனால் ஒலிமட்டும் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது. நள்ளிரவு வரை இந்த விசித்திரப் பயணம் தொடர்ந்து நடந்தது.

தூர தொலைவிலிருந்து குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது. துங்கபத்திரையை நெருங்கிவிட்டோம் என்பதைப் புவனா உணர்ந்து கொண்டாள். குதிரையை வேகமாகச் செலுத்தத் தொடங்கினாள். பின்னால் வந்த குதிரையின் ஒலியும் வேகமாகியது. பின்னால் வருபவர் யாராக இருப்பினும் அவர் கையில் சிக்கிக் கொள்ளப் புவனா விரும்பவில்லை.

துங்கபத்திரையின் கரையை அணுகிய போது கரையோரத்தில் சோழர் படைகளின் நடமாட்டம் அதிகமாக இருப்பதைக் கவனித்தாள். அவ்வீரர்களின் கண்ணில் படாமல் விலகிச் சென்று ஆற்றைக் கடக்க முடிவு செய்தாள். அவ்விதமே ஆற்றைக் கடக்க எண்ணிக் குதிரையை ஆற்றில் இறக்கினாள். சிறிது தொலைவு சென்ற பிறகு வெள்ளத்தின் வேகத்துடன் போட்டி போட முடியாமல் குதிரை தத்தளித்தது. ஆற்றுப் போக்கில் குதிரை செல்லத் தொடங்கியது. இனிமேல் குதிரை மேல் இருப்பது ஆபத்து என எண்ணிய புவனா

வெள்ளத்தில் குதித்து நீந்தத் தொடங்கினாள். அவள் வெள்ளத்தில் குதித்து நீந்தத் தொடங்கிய அதே வேளையில் மற்றொரு குதிரை வேகமாக வந்து ஆற்றில் இறங்கியது.

# 73. சுரங்கப்பாதை

ஆற்று வெள்ளத்தில் நீந்திக் கரையேறிய புவனாவின் உடல் குளிரினால் வெடவெட என நடுங்கியது. ஏற்கனவே அதிகமாகிக் கொண்டிருந்த சுரத்தின் கொடுமை பெருகியது. அவளால் நிற்கவே முடியவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்தாள். நன்றாக நனைந்திருந்த தனது ஆடையைச் சற்றுப் பிழிந்து கட்டினால் தேவலை போல் இருந்தது அவளுக்கு. அதற்காக ஒதுக்குப் புறமான ஒரு இடத்தை அவள் தேடியலைந்தாள். அந்தக் காரிருளில் கானகத்தில் அவள் தடுமாறினாள். அரண்மனையைவிட்டு வெளியே தனித்து நடந்திராத அவளது மலர்ப் பாதங்களை கல்லும் முள்ளும் வருத்தின. இந்தத் தடைகள் எல்லாம் அவள் உறுதியைக் குலைத்துவிடவில்லை. மேலும் நடந்தாள்.

சில நாழிகைகள் சென்ற பிறகு ஒரு பாழடைந்த கட்டிடம் தென்பட்டது. காட்டின் நடுவே இப்படியொரு மாளிகை பாழடைந்த நிலையில் இருப்பதைக் கண்டு புவனா அதிசயித்துப் போனாள். பாவம் அவளது முப்பாட்டனாரான தைலப மன்னர் கட்டிய மாளிகை அது என்பது அவளுக்கு எப்படித் தெரியும்? ஆனால் அதைப் பற்றியெல்லாம் யோசிக்க அவளுக்கு அவகாசமில்லை. அந்த மாளிகையில் இடிபாடுகளுக் கிடையே வசதியான இடம் ஒன்றினைத் தேர்ந்தெடுத்தாள். தனது ஆடையைப் பிழிந்து சற்று உலர்த்திவிட்டு மீண்டும் அணிந்து கொண்டாள். களைப்பும், சுரவேகமும் அவளை அயரச் செய்து கொண்டிருந்தன. இனியும் ஓரடி கூட எடுத்து வைக்க முடியாது என்பதை அவள் உணர்ந்தாள். விடிந்த பிறகு பயணத்தைத் தொடர முடிவு செய்து கொண்டு அப்படியே ஒருபுறமாகக் கண்ணயர்ந்தாள். விரைவில் ஆழ்ந்த உறக்கத்தில் அமிழ்ந்து போனாள்.

வானத்தில் விடிவெள்ளி முளைத்துக் கொண்டிருந்தது. ஆனால் இன்னும் இருள் நீங்கவில்லை. புள்ளினங்கள் கூவிக் கொண்டிருந்தன. அப்போது ஏதோ குரல் கேட்டுப் புவனா விழித்துக் கொண்டாள். யாரோ பேசும் ஒலி கேட்டது. இந்தக் காட்டில் யார் பேசுகிறார்கள்! பழகிய குரல் போல ஒலிக்கிறதே என அதிசயித்தவளாக, சரேலென எழுந்து அருகிருந்த தூண் ஒன்றின் பின் மறைந்து கொண்டு கவனித்தாள்.

அப்போது ஆச்சரியமான நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. சற்றுத் தள்ளி இடிபாடுகளுக்கு நடுவே இருந்து ஏதோ ஒளி பரவி வந்தது. சற்று நேரத்தில் பூமிக்குள் இருந்து ஒரு தீவட்டி தலை நீட்டியது. அதைத் தொடர்ந்து ஒரு கை தெரிந்தது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக ஒரு மனிதன் வெளியே வந்தான். தீவட்டியின் வெளிச்சத்தில் அம்மனிதனின் முகம் நன்றாகத் தெரிந்தது. ஆ! கங்காகேத்தன்! இந்தப் படுபாவி எங்கிருந்து முளைத்தான் எனப் புவனா திகைத்துக் கொண்டிருந்த போதே மற்றொருவன் வெளியே தோன்றினான். அரச குலத்திற்குரிய ஆடை அணிகலன்களை அணிந்திருந்த அந்தப் புதிய மனிதன் யார் எனப் புவனாவிற்குப் புரியவில்லை. தீவட்டி வெளிச்சம் தன் மீது படிந்துவிடாதபடி இன்னும் நன்றாக மறைந்து கொண்டாள்.

"இளவரசே! பார்த்தீர்களா?"

"பார்த்தேன்! பரவசமடைந்து போனேன்! இத்தகைய பேரழகியை என் வாழ்நாளில் நான் கண்டதே இல்லை. கங்காகேத்தா! எனக்காக நீ கொண்டு வந்திருக்கும் பரிசு அற்புதமானது. ஈடு இணை இல்லாதது! உன்னை எப்படிப் பாராட்டுவது என்றே எனக்குத் தெரியவில்லை."

"இளவரசே! நான் திட்டமிட்டுள்ளபடி எல்லாக் காரியமும் தொடர்ந்து நடைபெறுமானால் விரைவில் குந்தள அரியாசனத்தில் அந்தப் பேரழகியுடன் நீங்கள் அமர்வீர்கள்."

இவ்வாறு பேசிக் கொண்டே அவர்கள் மெதுவாக அவ்விடத்தைவிட்டு அகன்றனர். அவர்கள் வெகு தொலைவு செல்லும் வரை புவனா காத்திருந்தாள். கங்காகேத்தனுடன் வந்தவன் இளவரசன் சோமேசுவரன் என்பது அவளுக்குப் புரிந்துவிட்டது. அதைப் போலவே வீரமாதேவியை அவர்கள் இந்த மாளிகையில்தான் எங்கேயோ ஒருபுறத்தில் சிறைப்படுத்தி இருக்கிறார்கள் என்பதையும் அவள் உணர்ந்து கொண்டாள்.

மெதுவாக கடந்து அந்த இடிபாடுகளுக்கு அருகில் சென்று உற்றுக் கவனித்தாள். சுரங்கவாயில் ஒன்று காணப்பட்டது. நெஞ்சம் படபடக்க அதற்குள் காலையெடுத்து வைத்தாள். படியொன்று தென்பட்டது. கீழ் நோக்கிச் சென்ற அந்தப் படிகளில் இறங்கினாள். அந்த இருளில் தட்டுத்தடுமாறித்தான் செல்ல வேண்டியிருந்தது. அந்தச் சுரங்க வாயிலின் வழியாகச் சிறிது தூரம் சென்றதும்

விசாலமான கூடம் ஒன்றில் புவனா நுழைந்தாள். கன்னங்கரிய இருள் அவளை வரவேற்றது. சற்றுத் தொலைவில் மினுக் மினுக் என ஏதோ வெளிச்சம் தெரிவதைக் கண்டாள். வெளிச்சம் தெரிந்த திக்கை நோக்கிச் சென்றாள். கூடத்திலிருந்து பிரிந்த மற்றொரு பாதை வழியாக அவள் போக வேண்டியிருந்தது. அந்தப் பாதை ஒரு அறை முன் போய் முடிந்தது. இந்த அறையின் கம்பிக் கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. அந்த அறைக்குள் அகல் விளக்கு ஒன்று மங்கலான ஒளிபரப்பிக் கொண்டிருந்தது.

அந்த ஒளியில் புவனா கண்ட காட்சி! அவளை ஆனந்தக் கூச்சலிடச் செய்தது.

ஆம்! அந்த அறையின் ஒரு மூலையில் மாதேவி சுருண்டு கிடந்தாள்.

# 74. பிரிந்தவர் கூடினர்

புவனாவின் குரல்கேட்டு மாதேவி விழித்துக் கொண்டாள். அந்த மங்கிய ஒளியில் புவனாவைக் கண்ட மாதேவிக்குத் தான் காண்பது கனவா அன்றி நனவா என்பது புரியவில்லை. எழுந்தோடி வந்து உற்றுக் கவனித்தாள். புவனாவேதான். “புவனா! புவனா!” எனக் கூச்சலிட்டாள். இருவரும் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொள்ளத் துடித்தனர். இடையில் இருந்த கம்பிக்கதவு அவர்களைத் தடுத்தது. அதிலிருந்த பலமான பூட்டு அவர்களைப் பார்த்துச் சிரித்தது.

“புவனா! நீ எப்படி இங்கு வந்து சேர்ந்தாய்?” என வியப்புடன் வினவினாள் மாதேவி.

“அது பெரிய கதை! அதைப் பேச இப்போது நேரமில்லை. எப்படியும் இங்கிருந்து தப்பிச் செல்ல வேண்டும்” என்றாள் புவனா.

பிறகு அந்த இருளில் தட்டுத்தடுமாறி வெளியில் வந்து பெருங்கல் ஒன்றைத் தேடி எடுத்துக் கொண்டு திரும்பினாள். பூட்டின் மீது அந்தக் கல்லால் பல முறை அடித்தாள். இறுதியாகப் பூட்டும் திறந்து கொண்டது. கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்த புவனா அப்படியே மாதேவியைக் கட்டிப்பிடித்த வண்ணம் தேம்பினாள். புவனாவின் உடல் கொதிப்பதைக் கண்ட மாதேவி திடுக்கிட்டுப் போனாள்.

“புவனா! என்ன உன் உடல் இப்படி அனலாய்த் தகிக்கிறது?” என்றாள்.

களைப்பும், சோர்வும், காய்ச்சலும் புவனாவை ஆட்கொண்டிருந்ததால் அவளால் பேசவே முடியவில்லை. பூட்டை உடைத்ததால் ஏற்பட்ட களைப்பும் இத்துடன் சேர்ந்து கொண்டது. தட்டுத் தடுமாறிப் பேசத் தொடங்கினாள்.

“மாதேவி! நீ போய்விடு. எப்படியாவது தப்பிவிடு” என்றாள்.

“புவனா! உன்னை இந்த நிலையில் விட்டுவிட்டு நான் மட்டும் தப்பிச் செல்வதா? முடியாது புவனா.. முடியாது.”

“மாதேவி! என்னால் இனி ஓரடி கூட எடுத்து வைக்க முடியாது. உன்னை எப்படியும் பார்த்துவிட வேண்டும் என்ற ஆத்திரத்தில் இவ்வளவு தூரம் வந்தேன். உன்னைப் பார்த்த பிறகு என் உடம்பில் இருந்த சக்தி போய்விட்டது. மாதேவி நீயாவது தப்பிச் செல்.”

“புவனா! இதென்ன பிதற்றல்! இதற்காகவா இவ்வளவு தூரம் வந்தாய். வா! மெதுவாகப் போகலாம்” எனக் கூறி அவளைக் கைத்தாங்கலாக அழைத்துப் போக வீரமாதேவி முன் வந்தாள்.

இதற்குள் பொழுது புலர்ந்துவிட்டது. காலைக் கதிரவனின் ஒளி அந்தப் பாதாள அறையிலும் மெதுவாகப் பரவியது. இரண்டு இளவரசிகளும் ஒருவரையொருவர் பிடித்த வண்ணம் மெதுவாக நடக்கத் தொடங்கினர். சுரங்க வாயிலை அவர்கள் அணுகிய போது தடதடவெனக் குதிரைகள் வரும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு நின்றனர். குதிரை மீதிருந்து யாரோ குதிக்கும் சப்தமும் அதைத் தொடர்ந்து சுரங்கப்படிகளில் இறங்கி வரும் சப்தமும் கேட்டது.

திடுக்கிட்டு நின்ற இளவரசிகள் பின்வாங்கிச் சென்று மறைந்து கொள்ளவும் நேரமில்லை. அப்படியே திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தனர். சுரங்க வாயிலின் வழியாக உள்ளே நுழைந்த சோமேசுவரனும் கங்காகேத்தனும் திடுக்கிட்டுப் போனார்கள். அறையில் வைத்துப் பூட்டப்பட்ட இளவரசி வீரமாதேவி எப்படி வெளியே வந்தாள்? அவளுக்கு அருகில் நிற்பது யார்? எனத் திகைத்தார்கள். கங்காகேத்தன் புவனாவை அடையாளம் கண்டு கொண்டான். அவனைக் கண்டதும் தாய்ப்புலி போலச் சீறியெழுந்தாள் புவனா. உடல் சோர்வினையும், காய்ச்சலையும் கூட ஒருகணம் மறந்து போனாள். வீரமாதேவியை மறைத்த வண்ணம் முன்னால் வந்து நின்றாள்.

“துரோகி! நல்லவன் போல நடித்து இளவரசியைக் கடத்திக் கொண்டு வந்த நயவஞ்சகன் நீதானா?” என்றாள். அவள் குரலில் காணப்பட்ட கடுமை கங்காகேத்தனை நடுங்கச் செய்தது.

“இளவரசி..!” என ஆரம்பித்தான்.

“சீ! மூடு உன் வாயை! இப்போது ஒழுங்காக வழிவிடப் போகிறீர்களா இல்லையா?”

“கங்காகேத்தா! இதென்ன புதுக் குழப்பம்? இந்தப் பெண் யார்?” என்றான் சோமேசுவரன்.

“இளவரசே! இந்தப் பெண்தான் உங்கள் காணாமற் போன தங்கை. வர வேண்டிய இடத்திற்குத்தான் வந்து சேர்ந்திருக்கிறார்” என்றான் கங்காகேத்தன்.

“ஓ! அப்படியா! தங்காய்! நீயாகவே என்னைத் தேடிக் கொண்டு வந்துவிட்டாய். உன்னைக் காண வேண்டும் என நான் எப்படித் துடித்தேன் தெரியுமா?”

“ஐயா! என்னை உமது தங்கையாக நீர் ஏற்றுக் கொள்வது உண்மையானால் முதலில் எனது வேண்டுகோளுக்கு இசையும்” என்றாள்.

“தங்காய்! இதென்ன வேடிக்கை? அண்ணனிடம் வேண்டுகோளா? ஆணையிடு. உடனே செய்கிறேன்” என சாமர்த்தியமாகப் பேசினான் சோமேசுவரன்.

“நல்லது! அப்படியானால் இதோ நிற்கும் என் ஆருயிர்த் தோழி வீரமாதேவியை விடுதலை செய்யும்” என்றாள் புவனா.

இதைக் கேட்ட சோமேசுவரனின் முகம் சிறுத்தது. “பெண்ணே! நீ உன் நிலைமையை மறந்துவிட்டுப் பேசுகிறாய். வீரமாதேவியைப் பற்றி எதுவும் பேசாதே! அது என் சொந்த விஷயம். அதில் தலையிட யாரையும் அனுமதிக்கமாட்டேன். வேறு ஏதாவது இருந்தால் கூறு” என்றான்.

“உம்முடன் பேசுவதற்கு எனக்கு எதுவும் இல்லை. அபலைப் பெண்களைச் சிறையிலடைத்து வதைக்கும் ஒருவன் எனக்கு அண்ணன் என்பதை எண்ணும் போதே நெஞ்சம் கசக்கிறது. இத்தனை நாள் இருந்தது போலவே இருப்போம்!” என்று கூறிவிட்டு மாதேவியுடன் ஓரடி முன் வைத்தாள்.

“கங்காகேத்தா! மயிலே மயிலே இறகு போடு என்றால் போடாது. இழுத்து இவளைச் சிறையில் பூட்டு” என உறுமினான் சோமேசுவரன்.

“பொறு! அண்ணா! பொறு! யாரைச் சிறையில் அடைக்கப் போகிறாய்?” என்ற எகத்தாளமான குரலொன்று சுரங்க வாயிலில் எழுந்தது. அனைவரும் திடுக்கிட்டு அத்திக்கை நோக்கித் திரும்பினர். உருவிய வாளும் கையுமாக விக்கிரமாதித்தன் நின்று கொண்டிருந்தான்.

# 75. தங்கையின் வேண்டுகோள்

திடீரென அங்குத் தோன்றிய விக்கிரமாதித்தனைக் கண்டதும் எல்லோருமே திடுக்கிட்டுப் போயினர். அங்கிருந்த ஒவ்வொருவரும் ஒவ்வொருவித மனநிலையை அடைந்தனர்.

குத்துப்பட்டுச் செத்துப் போனதாகச் சொல்லப்பட்ட தனது காதலனை உருச்சிதையாமல் உயிரோடு பார்த்த போது வீரமாதேவியின் விரிந்த விழிகள் இன்னும் அகலமாக விரிந்தன. தான் காண்பது கனவா அன்றி நனவா என்ற ஐயம் அவளுக்கு எழுந்தது. மகிழ்ச்சி மிகுதியினால் அவள் தலைசுற்றியது. கீழே விழுந்துவிடாமல் இருக்கப் புவனாவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

புவனாவும் ஏறத்தாழ அதே நிலையைத்தான் அடைந்திருந்தாள். சிறைப்பட்டுக் கிடந்த தனது அண்ணன் தப்பி வந்த அதிசயம் அவளுக்குப் புலப்படவில்லை. அப்போது பளிச்சென ஒரு நினைவு அவளுக்கு வந்தது. முன் இரவு தனது குதிரையைப் பின்தொடர்ந்து யாரோ வந்ததும், துங்கபத்திரையாற்றில் குதிரையுடன் இறங்கியதும் அவள் நினைவிற்கு வந்தது. மெல்ல மெல்ல எல்லாம் புரியத் தொடங்கியது.

வீரமாதேவியைத் தப்புவித்து உரியவனிடம் சேர்த்துவிட்டோம் என்ற திருப்தி இதயத்தில் தோன்றி முகத்தில் பரவியது. "அண்ணா!" என அழைத்தவாறு ஓரடி முன் வைத்தாள். மறுகணம் தடுமாறிக் கீழே விழுந்தாள்.

"ஐயோ!" என அலறியவாறு வீரமாதேவி அவளை வாரியெடுத்துத் தன் மடியில் கிடத்திக் கொண்டாள். இதைக் கண்டு பதை பதைத்தவனாக விக்கிரமாதித்தன் புவனாவை நோக்கி ஓரடி எடுத்து வைத்தான். மறுகணம் இரண்டு வாள்முனைகள் அவனைத் தடுத்து நிறுத்தின.

"விக்கிரமா, இது என் சொந்த விஷயம். இதில் தலையிடாதே. உயிர்பிழைக்க விருப்பமிருந்தால் இப்போதே இங்கிருந்து ஓடு" எனச் சோமேசுவரன் உறுமினான்.

சோழர் அரண்மனைத் தோட்டத்தில் தன்னால் குத்திக் கொல்லப்பட்ட விக்கிரமாதித்தன் எப்படி உயிர் பிழைத்து இங்கு வந்து சேர்ந்தான் என்பது புரியாமல் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த

கங்காகேத்தனத் தற்போது நடுக்கம் ஆட்கொண்டது. ஏனெனில் விக்கிரமாதித்தனின் வலிமையை அவன் நன்கு அறிந்தவன். பத்துப்பேர்கள் கூடித் தாக்கினாலும் வெல்ல முடியாத விக்கிரமாதித்தனை இருவர் மட்டும் எப்படிச் சமாளிப்பது என்ற திகில் அவனுக்கு ஏற்பட்டது. அவன் இவ்வாறு நடுங்கிக் கொண்டிருக்கும் போதே விக்கிரமனின் வாள் சுழலத் தொடங்கியது.

கோபாவேசத்தால் கொதித்துக் கொண்டிருந்த சோமேசுவரன் சீறிப் போரிட்டான். ஆயினும் விக்கிரமனின் வாள்வீச்சுக்கு இணைகொடுக்க முடியாமல் திணறினான். தைலபச் சக்கரவர்த்தியின் அந்தப் பாழடைந்த மாளிகையில் வாள்கள் ஒன்றோடு ஒன்று மோதிய ஒலி பயங்கரமாகி எதிரொலித்தது.

இந்த ஒலியையும் மீறிக் கொண்டு வெளியே பேரொலி ஒன்று எழுந்தது. குதிரைகள் விரைந்து வரும் சப்தமும், தடதடவென ஆட்கள் ஓடும் சப்தமும், ஆயுதங்கள் ஒன்றோடு ஒன்று மோதும் சப்தமும் கேட்டன. சோமேசுவரனும் கங்காகேத்தனும் அதைக் கேட்டுத் திடுக்கிட்டதைக் கண்ட விக்கிரமன் எகத்தாளமாகச் சிரித்தான்.

“அண்ணா! எதற்காகப் பயப்படுகிறாய்? சோழர் படைகள் ஆற்றைக் கடந்து இக்கரை வந்து நமது படைகளைத் தாக்கிக் கொண்டிருக்கும் சப்தம்தான் அது. குந்தளம் படைகளுக்குத் தலைமை வகித்துப் பகைவரை வேட்டையாட வேண்டிய நீ நம் முப்பாட்டனின் மாளிகையில் கன்னியரை வேட்டையாடிக் கொண்டிருக்கிறாய். குலப்பெருமைக்கே தீராத களங்கத்தைத் தேடிவிட்டாய்” எனக் கூவியவாறே ஆத்திரத்தோடு வாளை வீசினான்.

சோமேசுவரனின் வாள் அவன் கையிலிருந்து விலகி அப்பால் போய் விழுந்தது. இதைக் கண்ட கங்காகேத்தன் போரை நிறுத்திவிட்டு நழுவி ஓட முயன்றான். ஆனால் விக்கிரமன் அவ்வளவு இலகுவில் அவனைத் தப்பிச் செல்லவிடவில்லை.

வாள் முனையில் அவனைத் தடுத்து நிறுத்தினான். “ஏனடா கோழை போல ஓடுகிறாய். எனது தந்தையைக் கொல்லச் சதி செய்தாய். என் தமையனின் உள்ளத்தைக் கெடுத்தாய். என்னையும் கொல்ல முயன்றாய். எனது ஆருயிர்த் தங்கையையும், சோழ இளவரசியையும் கடத்திவர முயற்சி செய்தாய். வேங்கி

இளவரசனைக் கொன்றாய். இத்தனையும் செய்துவிட்டு இன்று தப்பியோட முயல்கிறாய்” எனக் கூறியவாறே வாளை வேகமாக வீசினான். அவ்வளவுதான் மறுகணம் கங்காகேத்தனின் உடல்வேறு தலைவேறாகியது. அடியற்ற நெடுமரம் போல அவன் உடல் கீழே சாய்ந்தது.

எதிரில் நின்ற சோமேசுவரனை ஆத்திரத்துடன் விக்கிரமாதித்தன் பார்த்தான். மறுகணம் அவனது கால்களை யாரோ பிடிப்பதை உணர்ந்து குனிந்தான். ஆம்! சற்று முன் மயக்கம் தெளிந்து எழுந்த புவனா மெதுவாக நகர்ந்து அவன் அருகில் வந்திருந்தாள்.

“அண்ணா! அண்ணா!” என அரற்றினாள். அவளை அந்த நிலையில் கண்ட விக்கிரமன் மனம் பதைத்து மண்டியிட்டு உட்கார்ந்தான். “தங்காய்! என்ன வேண்டும்?” என்றான்.

“அண்ணனை மன்னித்துவிடு. உன் தங்கை உன்னிடம் விடுக்கும் முதல் வேண்டுகோள் இதுதான் அண்ணா! இதை நிறைவேற்ற மறுக்காதே” எனக் கெஞ்சினாள்.

விக்கிரமாதித்தனின் விழிகள் பொலபொலவென நீரைச் சிந்தின. “மன்னித்தேன்! தங்காய் மன்னித்தேன்!” எனப் புலம்பினான் விக்கிரமன்.

“அண்ணா! இங்கிருந்து இப்போதே போய்விடு. சோழர் படைகள் நாற்புறம் சூழ்ந்துவிட்டன. நமது படையணிகளைக் காக்க ஏதாவது முயற்சி செய்கிறேன். நீ போ! உடனே இங்கிருந்து போய்விடு” என்றான்.

தொங்கிய முகத்துடன் பின்பக்கம் நோக்கிச் சோமேசுவரன் விரைந்தான்.

# 76. வியப்பு வெள்ளம்

அதிகாலைப் பொழுதில் சோழர் படைகள் துங்கபத்திரையைக் கடந்து எதிரியின் மீது திடீர்த் தாக்குதலைத் தொடர்ந்திருந்தன. இதைச் சற்றும் எதிர்பாராத குந்தளப் படைகள் முதலில் நிலைகுலைந்தாலும் சற்று நேரத்திற்குள் சமாளித்துக் கொண்டு எதிர்தாக்குதல் தொடுத்தன. ஆனால் இளவரசன் அதிராசேந்திரனின் தலைமையில் இயங்கிய குதிரைப் படையின் மின்னல் வேகத் தாக்குதலைச் சமாளிக்க முடியாது குந்தளப் படைகள் திணறின. இந்த அமளியில் இளவரசன் சோமேசுவரன் திடீரென மறைந்துவிட்ட நிகழ்ச்சி குந்தள வீரர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியிருந்தது. ஏற்கெனவே தங்கள் மன்னரையும், அன்பிற்குரிய இளவரசன் விக்கிரமாதித்தனையும் இழந்து கலங்கிப் போய் இருந்த அவர்களால் இந்தப் பேரிடி போன்ற தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியவில்லை.

களத்திலே போரிட்டுக் கொண்டிருக்கும் போதே இளவரசன் அதிராசேந்திரனின் மனம் அலைமோதிக் கொண்டிருந்தது. தன் தங்கைக்கு என்ன கதி நேர்ந்ததோ என அவன் கலங்கிக் கொண்டிருந்தான்.

அப்போது திடீரெனப் போர்க்களத்தின் ஒரு பகுதியில் இருந்து "இளவரசர் விக்கிரமாதித்தர் வாழ்க!" என்ற முழக்கம் எழுந்தது. போரிட்டுக் கொண்டிருந்த குந்தள வீரர்கள் திடுக்கிட்டுத் திரும்பினர். ஆம்! அவர்களின் அன்பிற்குரிய இளவரசன் விக்கிரமாதித்தன்தான் வந்து கொண்டிருந்தான். அடலேறு போல நடைபோடும் அவன் அன்று அமைதி தவழ வந்து கொண்டிருந்தான். அவன் மட்டும் வரவில்லை. அவன் தன் கைகளில் யாரையோ ஏந்திய வண்ணம் நடந்து வந்தான். அவன் அருகில் சோகம் கப்பிய முகத்துடன் இளங்கன்னி ஒருத்தி நடந்து வந்து கொண்டிருந்தாள். இந்த அபூர்வமான காட்சி இருதரத்துப் படை வீரர்களிடமும் எதிர்பாராத மாறுதலை ஏற்படுத்திற்று. தங்களின் ஆருயிர் போன்ற இளவரசனைக் கண்டதனால் குந்தள வீரர்களும், தங்கள் இளவரசி குந்தள இளவரசனுடன் இணைந்து வரக் கண்டதனால் சோழ வீரர்களும் பெரும் திகைப்பிற்கு உள்ளாயினர். வியப்பு வெள்ளத்தில் மூழ்கியிருந்த அவர்களை ஊடுருவிய வண்ணம் விக்கிரமன் நடந்தான்.

போர்க்களத்தில் அமைதி குடிகொண்டது. அனைவரும் அவனையும் சோழ இளவரசியையும் சூழ்ந்து கொண்டனர். சற்று நேரத்திற்கெல்லாம் அந்தக் கூட்டத்தை விலக்கிய வண்ணம் அதிராசேந்திரனும், விஷ்ணுவர்த்தனனும் வந்து சேர்ந்தனர். அதிராசேந்திரனைக் கண்ட வீரமாதேவி "அண்ணா!" என அலறிய வண்ணம் ஓடிச் சென்று அவனை அணைத்துக் கொண்டாள்.

"இளவரசே! உங்கள் தங்கையைப் பத்திரமாக உங்களிடம் சேர்த்துவிட்டேன். இனி என் தங்கையின் உயிரைக் காக்க நான் முயற்சி செய்ய வேண்டும். அவள் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிறது" என்றான் விக்கிரமன்.

தழுதழுத்த குரலில் அவன் இவ்வாறு கூறியதும், "ஆம் அண்ணா! நமது வைத்தியரை உடனே வரவழையுங்கள். புவனாவின் உயிரைப் பேராபத்து சூழ்ந்திருக்கிறது" என்றாள் வீரமாதேவி.

வெயிலில் வாடிய அல்லிக்கொடி போல விக்கிரமனின் கரங்களில் புவனா துவண்டு கிடந்த காட்சி அதிராசேந்திரனின் உள்ளத்தை உருக்கிற்று.

"ஐயோ! கங்க இளவரசிக்கு என்ன நேர்ந்தது?" எனப் பதைபதைத்தான் அதிராசேந்திரன்.

"அண்ணா! அதையெல்லாம் பிறகு பேசிக் கொள்ளலாம். இவளை முதலில் கூடாரத்திற்குக் கொண்டு போக ஏற்பாடு செய்யுங்கள்" என்றாள் மாதேவி.

அதன்படியே கூடாரமொன்றிற்குப் புவனா கொண்டு செல்லப்பட்டாள். உடனடியாகச் சோழர் படையின் தலைமை மருத்துவரும், குந்தளப் படையின் தலைமை மருத்துவரும் வரவழைக்கப்பட்டனர்.

போர்க்களத்தில் மற்றொருபுறத்தில் இருந்த மதுராந்தகத் தமிழ்ப்பேரரையருக்குச் செய்தி சொல்லியனுப்பப்பட்டது. செய்தியையறிந்ததும் அவர் திடுக்கிட்டு ஓடி வந்தார். அவ்வாறே வீரராசேந்திர சோழரும் அங்கு வந்து சேர்ந்தார்.

புவனமாதேவிக்கு மருத்துவம் தொடர்ந்து நடந்தது. ஆனால் சுரவேகம் சற்றும் தணிந்தபாடில்லை.

# 77. செம்புலப் பெயல்நீர்

பன்னெடுங்காலமாகப் பகைவர்களாகப் போரிட்டுக் கொண்டிருந்த அந்த இரு நாடுகளின் படை வீரர்கள் பகையை மறந்து கலந்து உறவாடிக் கொண்டிருந்தனர். குந்தள குலத்தைச் சேர்ந்த இளவரசி புவனா, சோழ மாதண்ட நாயகரின் வளர்ப்புப் புதல்வியாகத் திகழ்ந்து, இறுதியில் சோழ இளவரசரின் இதயராணியாக மாறிய அதிசய சம்பவத்தைக் கூட்டம் கூட்டமாகக் கூடிப் பேசினர். அதோடு மட்டுமல்ல. குந்தள இளவரசன் விக்கிரமாதித்தனுக்கும் சோழ இளவரசி வீரமாதேவிக்கும் இடையே முகிழ்ந்து எழுந்துள்ள காதலினைப் பற்றியும் சாடையாகப் பேசிக் கொண்டனர்.

குந்தள குலத்திற்கும் சோழர் குலத்திற்கும் இடையே நின்று நிலவிய பகை மறையக் காரணமாக இருந்தவளின் உயிரோ ஊசலாடிக் கொண்டிருந்தது. கடந்த இரு நாட்களாகவே புவனமாதேவி நினைவிழந்த நிலையிலேயே இருந்தாள். அவள் படுக்கையைச் சுற்றி அரசகுலத்தினர் அனைவரும் இருந்தனர்.

இளவரசன் அதிராசேந்திரன் துக்கம் தோய்ந்த முகத்துடன் புவனாவின் தலைமாட்டருகே அமர்ந்திருந்தான். நீர் ததும்பும் விழிகளுடன் மதுராந்தகத் தமிழ்ப்பேரரையர் மற்றொருபுறம் அமர்ந்திருந்தார். பற்றியெரியும் குந்தளர் அரண்மனையில் சின்னஞ்சிறு குழந்தையாக அவளைக் காப்பாற்றிய நிகழ்ச்சியில் இருந்து இன்று புவனா நினைவிழந்து உயிருக்காகப் போராடிக் கொண்டிருக்கும் நிகழ்ச்சிவரை ஒன்றன் பின் ஒன்றாகக் கனவு போல அவரது உள்ளத்தில் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

இளவரசி மதுராந்தகிக்குச் சொல்லியனுப்பப்பட்டது. அவளும் ரதத்தில் விரைந்து வந்து சேர்ந்தாள். குறுகிய நாட்களே பழக நேர்ந்த போதிலும் எல்லோர் உள்ளத்தினையும் கொள்ளை கொண்டுவிட்ட புவனாவை எண்ணும் போது அவள் உள்ளம் நெகிழ்ந்தது.

குந்தள மன்னன் ஆகவமல்லனின் புதல்வி என்பது தெரிந்த பிறகும், அண்ணன் விக்கிரமாதித்தனே வந்து அழைத்த பிறகும் சோழ குலத்தைப் பிரிந்து செல்ல மறுத்த புவனாவின் பண்பினை எண்ணி எண்ணி அவள் உருகினாள்.

வீரமாதேவியைப் பகைவர் தூக்கிச் சென்றுவிட்ட செய்தி அறிந்ததும் துடிதுடித்து, அவளை மீட்கும் பணியில் தன்னைத் தியாகம் செய்யத் துணிந்த அவளது திண்மையை எண்ணி வியந்தாள். எல்லாவற்றுக்கும் மேலாகத் தனது தம்பியின் நிலையை எண்ணி மதுராந்தகி மிகவும் கலங்கினாள்.

திகைப்பையும், துன்பத்தினையும் தந்துவிட்ட அடுக்கடுக்கான நிகழ்ச்சிகளை எண்ணி வியந்த வண்ணம் வீரராசேந்திர சோழர் அமர்ந்திருந்தார். மற்றும் இளவரசன் விஷ்ணுவர்த்தனன், வீரமாதேவி ஆகிய அனைவரும் கவலை தோய்ந்த முகத்துடன் அங்குக் குழுமியிருக்தனர்.

இராஜ வைத்தியர்கள் புவனாவிற்கு மருத்துவம் பார்த்துக் கொண்டிருந்தனர். புவனாவின் மலர் விழிகள் சிறிது படபடத்தன. கூடியிருந்தோரின் இதயங்களும் படபடத்தன. சிறிது நேரத்தில் புவனாவின் விழிகள் திறந்தன.

எதிரில் கண்ணீர் சிந்திய வண்ணம் அமர்ந்திருந்த தன் பாட்டனைக் கண்டாள்.

“அம்மா! குழந்தாய் புவனா!” எனத் தேம்பினார் அந்தப் பெரியவர்.

“தாத்தா! எதற்காக அழுகிறீர்கள்! எனக்கு ஒன்றுமில்லை. நான் பிழைத்துவிடுவேன்” என மெல்லிய குரலில் முணுமுணுத்தாள் புவனா. பிறகு அவள் விழிகள் நாற்புறமும் சுழன்று இறுதியில் அதிராசேந்திரனின் முகத்தைக் கண்டதும் அங்கேயே தங்கிவிட்டன. மெல்ல அவளது தலையைத் தூக்கித் தனது மடியில் அதிராசேந்திரன் கிடத்திக் கொண்டான். அவன் விழிகளில் பெருகிய நீர் சொட்டுச் சொட்டாக வடிந்து புவனாவின் முகத்தில் பட்டுத் தெறித்தது. இந்தக் காட்சியைக் கண்ட அனைவருமே துயரக் கடலில் அமிழ்ந்தனர். இருவரும் சற்றுத் தனியே பேசட்டுமே என எண்ணி ஒருவர் பின் ஒருவராக அந்த அறையைவிட்டு வெளியேறினர்.

தனியே விடப்பட்ட நிலையில் அதிராசேந்திரனால் தனது துக்கத்தினைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. அவன் விழிகளில் நீர் ஆறாகப் பெருகியது. அவன் நிலையை உணர்ந்த புவனா “இளவரசே! எதற்கும் கலங்காத மாவீரரான நீங்கள் இந்த அபலையின் பொருட்டு இப்படிக் கலங்கலாமா?” என்றாள்.

“புவனா! புவனா!” எனத் தேம்பினான் இளவரசன்.

“இளவரசே! பகைவனின் மகளாகிய என் பொருட்டு நீங்கள் இவ்வளவு கலங்கலாமா?”

“புவனா! இதென்ன பேச்சு. நீ குந்தளக் குலக்கொடி மட்டுமல்ல. எங்கள் குலத்தின் தன்மானம் காத்தவள். நீ சோழகுலவல்லி. எனது உள்ளத்தில் மட்டுமல்ல, சோழரின் அரியாசனத்திலும் என்னுடன் அமரப் போகும் பட்டத்து அரசி” என்றான்.

“இளவரசே! நான் அவ்வளவு பாக்கியசாலியல்ல. உங்கள் பொன்னான உள்ளத்தில் இடம்பெற்ற பெருமையே எனக்குப் போதும். வேறொன்றும் வேண்டியதில்லை” என்றாள் புவனா.

சற்று நேரம் காதலர் இருவரும் அமைதியில் இன்பம் கண்டனர்.

“இளவரசே! அன்று அரண்மனைத் தோட்டத்திலே ஒரு பாடல் பாடினேனே நினைவிருக்கிறதா?” என்றாள் புவனா.

“ஆம்! கண்ணே! நினைவிருக்கிறது.”

“அந்தப் பாடலை மறுபடியும் பாட வேண்டும் என ஆசையாக இருக்கிறது. பாடட்டுமா?”

“புவனா! இந்நிலையில் நீ பாட வேண்டுமா?”

“இளவரசே! என்னைத் தடுக்காதீர்கள்” என்று கூறி நிறுத்தினாள். அவளுக்கு மூச்சு வாங்கியது, சிறிது தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்ட பிறகு மெல்லிய குரலில் புவனா பாடத் தொடங்கினாள்.

**“ஞாயும் யாயும் யாரா கியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே.”**

அந்த அறையில் சூழ்ந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு அந்தச் சோக கீதம் பரவி, வெளியே கூடியிருந்தோரின் இதயங்களை ஊடுருவிக் காற்றில் கலந்தது.

“அன்புடை கெஞ்சந்தாங் கலந்தனவே” என்ற கடைசி வரிகளை அவள் பாடிய போது அதிராசேந்திரனின் விழிகளில் பெருகிய நீர் புவனாவின் கன்னத்தில் விழுந்து அவள் விழிநீருடன் இரண்டறக் கலந்து பெருகியோடியது. அத்துடன் அப்பெண்ணில் நல்லாளின் தலையும் சாய்ந்தது.

# கதையின் முடிவுரை

கதைகளுக்கு முன்னுரை எழுதப்படுவதுதான் வழக்கமேயொழிய முடிவுரை எழுதப்படுவதில்லை. ஆனால் 'குறிஞ்சி' இதழில் இது தொடர்கதையாக வெளிவந்து முடிந்த போது ஏராளமான வாசக நண்பர்கள் கடிதங்கள் மூலம் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். புவனாவின் மறைவிற்குப்பின் இளவரசன் அதிராசேந்திரனின் கதி என்ன ஆயிற்று? விக்கிரமாதித்தன்—வீரமாதேவி காதல் நிறைவேறியதா? மதுராந்தகி விஷ்ணுவர்த்தனனை மணந்தாளா? கவி குமுதசந்திரன்—அமுதவல்லி கதி என்ன? தப்பியோடிய சோமேசுவரன் என்ன ஆனான்? குந்தளர்—சோழர் பகை தீர்ந்ததா? அவர்கள் கேட்டிருந்த கேள்விகளில் முக்கியமானவை இவைதாம்!

இக்கதைக்கான முன்னுரையில் "குந்தள குலத்திற்கும் சோழ குலத்திற்குமிடையே ஏற்பட்ட பகையைத் தீர்க்கப் பிறந்தாள் புவனமாதேவி. தீராத வெம்பகை தீர, நாட்டில் அமைதி நிலவ அந்தத் தியாகவல்லி தந்த விலை மிகப்பெரிது! மிகப்பெரிது!" எனக் குறிப்பிட்டிருந்தேன். புவனா தன் இன்னுயிரைத் தியாகம் செய்தது வீண் போகவில்லை. அறுபதாண்டு காலமாக நடைபெற்று வந்த போர் முடிவடைந்தது.

குந்தளர்—சோழர் பரம்பரை பகை தீர்ந்தது மட்டுமல்லாமல் புதிய உறவும் மலர்ந்தது. குந்தள இளவரசன் விக்கிரமாதித்தனுக்குத் தனது அருமைச் செல்வி வீரமாதேவியைக் கடிமணம் செய்து கொடுத்தார் வீரராஜேந்திர சோழர். குந்தள அரசுக்கட்டிலில் விக்கிரமாதித்தனும் வீரமாதேவியும் அமர்ந்து இனிது அரசோச்சுகின்றனர். அவ்வாறே வேங்கி இளவரசன் விஷ்ணுவர்த்தனனுக்கும், மதுராந்தகிக்கும் திருமணம் நடைபெறுகிறது. கவி குமுதசந்திரனுக்கும் குமுதவல்லிக்குமிடையே மலர்ந்த காதல் இனிது நிறைவேறியது என்பதை நாம் சொல்லவே வேண்டியதில்லை.

இந்நிகழ்ச்சிகள் நடைபெற்ற சிறிது காலத்தில் வீரராசேந்திர சோழர் காலமாகிறார். அவருக்குப் பின் சோழப் பேரரசின் அரியாசனத்தில் அதிராசேந்திரன் ஏறுகிறான். ஆனால் புவனாவைப் பிரிந்த துயர் அவனைனேவிட்டு நீங்கவில்லை. அதே துக்கத்தினால்

சூழப்பட்டு ஆண்டு ஒன்று கழிவதற்குள் அவனும் புவனாவைத் தேடிச் சென்றுவிடுகிறான். விஜயாலயச் சோழனின் பெருமை மிகு பரம்பரை, வாரிசு இல்லாமல் இவ்விதம் முடிவடைகிறது.

எனவே சோழ நாட்டுப் பெருமக்கள் கூடி வேங்கி அரசனும், இராசேந்திர சோழரின் பெண்வழிப் பேரனுமான விஷ்ணுவர்த்தனனுக்கு முதலாம் குலோத்துங்கன் என்ற பெயருடன் முடிசூட்டி வைக்கிறார்கள். அவன் காலத்திலே சோழப் பேரரசு மகோன்னத நிலை எய்துகிறது. 'சுங்கந் தவிர்த்திருள் நீக்கி உலகாண்ட ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்' எனக் கல்வெட்டுக்கள் அவனைப் புகழுகின்றன.

பரணிபாட வேண்டும் என்ற செயங்கொண்டாரின் விருப்பம் அவரின் மாணவனான விஷ்ணுவர்த்தனனின் காலத்திலே இனிது நிறைவேறுகிறது. பரணி இலக்கியங்களில் சிறந்த '**கலிங்கத்துப் பரணி**' என்ற அமர காவியம் பிறக்கிறது. செயங்கொண்டாரும் கவிச்சக்ரவர்த்தி என்ற புகழைப் பெறுகிறார்.

விஷ்ணுவர்த்தனனின் இணைபிரியாத தோழனான கவி குமுதசந்திரன் '**குலோத்துங்க சோழ சரிதை**' என்ற காவியத்தை இயற்றி அழியாப் புகழைப் பெறுகிறான்.

குந்தள மன்னனான விக்கிரமாதித்தனை எதிர்க்க அவன் அண்ணனான சோமேசுவரன் படை திரட்டுகிறான். அவன் முயற்சி முளையிலேயே கிள்ளப்படுகிறது. விக்கிரமாதித்தன் ஆட்சியில் குந்தள நாடு இழந்த பெருமையை மீண்டும் பெறுகிறது. அவனது அவைக்களப் புலவரான பில்ஹணர் 'விக்கிரமாங்கதேவ சரிதம்' என்ற காவியத்தை வடமொழியில் இயற்றுகிறார்.

மேலே கண்ட நிகழ்ச்சிகள் யாவும் கல்வெட்டுக்களிலும் காவியங்களிலும் இடம் பெற்றுவிட்ட சரித்திர நிகழ்ச்சிகளாகும்.